## தஞ்சை ப்ரகாஷ்

# கரமுண்டார் வூடு



டிஸ்கவரி புக் பேலஸ்

# க ர மு ண் டா ர் வூ டு

தஞ்சை ப்ரகாஷ்

மின்னூலாக்கம்
முரளிதரன்

டிஸ்கவரி புக் பேலஸ்
கே.கே.நகர் மேற்கு, சென்னை - 600 078.
(பாண்டிச்சேரி கெஸ்ட் ஹவுஸ் அருகில்)
Ph: 044-6515 7525 Mobile: +91 87545 07070

கரமுண்டார் வூடு (நாவல்)
ஆசிரியர்: தஞ்சை ப்ரகாஷ்
மங்கையர்க்கரசி ப்ரகாஷ்©

**Karamundaar Voodu (Novel)**
**Author: Thanjai Prakash**
**Mangayarkarasi Prakash©**

Discovery B
1st Edition: June - 2016
2nd Edition : Jan - 2018

Pages: 328
ISBN: 978-93-84301-83-5
Cover Design: Manikandan
Book Design: Discovery Team

**Discovery Book Palace (P) Ltd,**
# 6, Mahaveer Complex, Munusamy Salai,
K.K.Nagar West,Chennai-600 078.
Ph: +91 - 44-6515 7525
Mobile: +91 87545 07070

E-mail: **discoverybookpalace@gmail.com,**
Website: **www.discoverybookpalace.com**

**Rs. 300**

# நாவல் முகூர்த்தம்

**வா**ழ்க்கையை விடப் பெரிதும் உயர்ந்ததும், அழகியதும் வேறு ஏதுமில்லை எனகிற நம்பிக்கை எனது அடி நாட்களிலிருந்தே உருவாகி என் உடலோடும், உள்ளத்தோடும் கலந்துவிட்டது. எனது இந்த நாவலும் இதனையே சொல்ல வந்திருக்கிறது. வாழ்க்கையை அனுபவித்து அறிவதும், உணர்வதும் அதில் தோய்வதும், தோய்ந்தவற்றில் கற்பதும், கற்கும்போதே துய்ப்பதும், துய்க்கும்போதே விடுதலும், விலகுதலும் விடுதலை. விடுதலை அடைவதிலும் பெரியன என்பது ஏது? அல்லது எது? இந்தக் கரமுண்டார் வூடு வாழ்ந்து வீழ்ந்த கதை அல்ல. வீழ்ந்து உதிர்ந்த வாழ்வும் அல்ல. பெரும்பாலும் நமது தமிழ் நாவல் இப்படித்தான் வாழ்ந்த கதையாகவே இருந்து வருவதை, கூர்ந்து நவீன தமிழ் நாவல் இலக்கியம் படித்து வருபவர்கள் அறிந்து கொண்டிருப்பார்கள். ஆனால் வாழ்ந்த கதை மட்டும் அல்ல, வாழ்ந்து கொண்டிருக்கும் கதையையும், வாழப் போகும் வாழ்வையும் சித்திரித்துக் காட்ட பெரிய தைரியமும், உரமும் தேவையாக இருக்கிறது. பலரும் அறியாததும் கூட.

வாழ்க்கை அடியோடு மாற வேண்டும். உண்மைதான். பூரணமானதாகவும் ஆக வேண்டாமா? வாழ்க்கையை மாற்ற வேண்டி கனவுகளை எழுதிக் கொண்டிருக்கும் உத்தமர் பலர் தமிழில் உண்டு. கனவு மெய்ப்பட வேண்டும் என்றானே ஒரு கவிஞன். எனவே, நானும் கனவுகளில் மட்டும் லயிக்கவே விரும்பவில்லை. வாழ்க்கை, கனவுகளைப் போல சுகமானதோ, சலபமானதோ அல்ல என்பதை நமது எழுத்துக்கலை விற்பன்னர்கள் ஏனோ புரிந்து கொள்வதே இல்லை. கம்பன் காலத்திலிருந்து ராம ராஜியக் கனவு ஓஷோ வரை நீளுமா இல்லாமல்? எல்லாரும் ஒவ்வொருவருமே சுருதி சுத்தமான உலகம் மலரக் கனவு காண்பதில் பித்தாகவே இருக்கிறார்கள். இன்றைய கனவு, இன்றைய கனவாக இருப்பதில்லை. இன்றைய கனவு நாளை மலர்வதில்லை. வாழ்க்கை எல்லா தர்மங்களுக்கும், எல்லா நியாயங்களுக்கும் எல்லாப் புரிதல்களுக்கும் "பெப்பே" காட்டிவிட்டுப் புதியதாய் வெடித்து மாறிக் கொண்டிருப்பதை எப்படிச் சொல்லாமல் ஓடுவது?

இந்த எனது கரமுண்டார் வூடு நாவல், எனது கண்டுபிடிப்பு அல்ல. கண்முன்னே நிகழ்ந்த, நிகழ்ந்துகொண்டிருக்கும் ஊத்தையும், உடைசலுமாகிப் போன கனவுகளுமல்ல. வெறும் வாழ்க்கையின் கரடுமுரமான உடைசல்கள் உருவம் பெற முடியாத, கரடு தட்டிப்போன நேற்றும், இன்றும், நாளையும் ஆன எங்கள் வாழ்க்கை. இவை ஓர் ஒழுங்கான தத்துவத்துக்குள்ளோ, ஜாதிக்குள்ளோ, நம்பிக்கைக்குள்ளோ, சிந்தனை குறிக்கோளுக்குள்ளோ அடங்கவில்லையே என்ற அங்கலாய்ப்பு எனக்கும் உண்டு. இந்த வாழ்வின் இந்த அம்சங்களை என் முகத்தில் அறைந்து சொன்ன சத்தியங்களை உங்கள் முன் வைக்கவே இந்த நாவலை எழுதியிருக்கிறேன். இவற்றில் கற்பனைகளை நிஜமாக்கிக் காட்ட நான் முயலவில்லை. இரண்டு நூற்றாண்டுகளாய் சிதிலமடைந்துபோன ஒரு ஜன சமூகத்தின் சரிவை நேரடியாகவும், செவி வழியாகவும், உணர்வின் வாசல்கள் வழியிலும் நான் அறிந்து கொண்ட உணர்வுகளை, உங்களுக்கும் மனசுக்குமாய் இடமாற்றம் செய்தது மட்டுமே எனது பணியாக இருந்தது.

இந்த நாவலை நான் எழுதியபோது என் அருகே இருந்து ஒவ்வோர் அத்தியாயமாக நான் எழுத எழுத வியப்புடனும், பயத்துடனும் அவற்றையும், என்னையும் படித்துக் கண்ணீர்விட்டுக் களைத்து என்னுடன் கூடவே எழுத்தில் பங்கு காட்டிய என் தாயார் இன்று இல்லை. நூற்றாண்டுகளுக்கு முன் கரமுண்டார் கோட்டை என்ற எனது பூர்வீக கிராமத்தை விட்டு ஓடிவந்த எனது தந்தையாரின் தந்தை பற்றி என் பாட்டியும், பூட்டியும் சொல்லி அழுத ஓலங்கள் இன்றும் எனக்குள் இருந்தாலும் இவற்றுக்கு சாட்சியாய் இருந்து கதை காவியமாய் சொன்ன எனது அப்பாயிகள் சமாதானத்தம்மாள், துரச்சியம்மாள், மங்களத்தம்மாள் ஆகிய கிடைத்தற்கரிய மனுஷிகள் இன்று இல்லை. இவற்றின் கனவுத்தன்மைகளை முறித்து எறியக் கற்றுத்தந்து எனது கனவுகளை நிஜமாக்க இவற்றை மறுக்கவும், துறக்கவும், ஏற்கவும் (.) கற்றுத்தந்த என் தந்தை எட்வர்டு கார்டன் கரமுண்டார் என்கிற முரட்டுக் கள்ள ஜாதி மனுஷனும் இன்று இல்லை.

ஆனால் கரமுண்டார் வூடு இருக்கிறது. காய்ந்து போன காவிரி இருக்கிறது. கனவுகளை நிஜமாக்கிய வாழ்வு இருக்கிறது. காவிரி எப்பொழுதும் எனக்குள் ஓடிக் கொண்டிருக்கிறது, வெளியே வறண்டு விட்டாலும்... எதையும் அடங்கிய குரலில் சொல்வது பெரிய இலக்கிய உத்தியாக இருக்கலாம்; எனக்கு அவை பெரிய பொய்களாகத் தோன்றும். வாழ்க்கையை அப்படியே பார்ப்பதற்கு

வெறும் இலக்கிய தைரியம் மட்டும் போதாது. அதனைப் புரிந்து கொள்வதற்கு கேள்வி ஞானமும் தேவை.

இந்த நாவலை எழுதிப் பதினோர் ஆண்டுகளுக்குப் பின்னர் இது அச்சு முகம் காண்கிறது. நண்பர்கள் உதவியால் இது சுலபமாகியது. இப்போது நானும் உங்களைப் போல் தூர இருந்து, பார்த்து, படித்துப் பார்க்கிறேன். எனக்கு ஜாதி இல்லை, மதம் இல்லை, இனம் இல்லை, நான் ஓருலக மனிதன்–அனைத்துலக மனிதன்–என்றெல்லாம் சொல்லிக் கொள்ள எனக்கும் சந்தோஷம்தான். இந்நாவலில் வரும் இந்த வழக்குகளையெல்லாம் நான் ஒத்துக்கொண்டதாக அர்த்தம் இல்லை. எதிர்ப்பதாகவும், மறுப்பதாகவும் பொருள் கொள்ள வேண்டாம். நான் பார்த்த பழகிய உலகம் அது. நான் அதைத் தான்டி வந்து விட்டேன். நான் எதையோ ஆதரிப்பதாக, எதையோ எதிர்ப்பதாக, எதற்காகவோ வக்காலத்து வாங்குவதாக எண்ண வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். இந்த நாவலில் வரும் மனிதர்கள் பலர் இன்றும் இல்லை. சிலர் இன்றும் இருக்கிறார்கள். சிலர் என்றும் இருப்பார்கள் என்று இந்த ரகசியத்தையும் இங்கு சொல்லி வைக்கிறேன். தஞ்சை மாவட்டத்துக் கள்ளர்கள் என்ற குறுகிய இனத்தினரை இலக்கியத்திலே கொண்டுவந்து நிறுத்துகிற வேலையை ஏன் செய்தேன் என்றால், அவர்களோடு வாழ்ந்தேன் என்பதால்தான். ஏற்கனவே வெளிவந்த 'கள்ளம்' நாவலில் தஞ்சையில் வாழ்ந்த தெலுங்கர் இனமான ராஜுக்களைப் பற்றி நான் எழுதியதை பலர் குறைபட்டுக் கொண்டதற்கும் இதே காரணத்தைத்தான் நான் சொன்னேன். சோழமண்டலக் கரையில் வாழும் பல இனத்தினரும், ஜாதியினரும் எனக்கு ஊட்டம் தரும் விஷயங்களாகவே இருக்கின்றனர். இந்த நாவலில் நான் எழுதிக் காட்டியிருக்கும் வாழ்க்கை பழையதும் அல்ல. புதியதும் அல்ல. இரண்டும் கலந்ததுமல்ல. நாளையும் இது தொடர்ந்து கொண்டிருக்கிறது என்பதைச் சொல்லவே இன்னும் எனக்குப் பல நாவல்கள் தேவைப்படும். நேற்று நடந்தது என்று புறங்கையால் தள்ளவோ, இன்றில்லை அப்படி என்று மறுக்கவோ, பலர் முன்வரும்போது இது நாளையும் இப்படித்தான் என்று சொல்லும் உரம் எனக்கு எப்போதும் உண்டு. சொல்லப் போனால் இந்த நாவலைப் படித்த பின் எனது நண்பர் ஒருவர் கேட்டார். "ஏன் நீங்கள் இத்தனை வலியுறுத்தி இந்தப் பழைய விஷயங்களை மீண்டும் சொல்ல வேண்டுமா? இது இப்படித்தான் இருக்கிறது என்று தெரிந்திருக்கிறதே. இதற்கு ஒரு எழுத்து தேவையா?" என்று. "ஆமாம். இது இப்படித்தான் இருக்கும் இருக்கிறது என்று

சொல்ல இன்னும் தேவை" என்று சொன்னேன். அதையே இங்கும் சொல்லி வைக்கிறேன்.

இந்த நாவலை உங்கள் முன் சமர்ப்பிக்கும்போதுகூடவே இருந்து துணைநின்ற நண்பர்களை சொல்லாமல் முடியாது. சுந்தர்ஜி, என் நண்பன் முதலில் ஞாபகம் வருகிறான். ஒவ்வொரு முறையும் சளைக்காமல் பிரதியெடுத்துக் கொடுத்த பரமி, சுமதி என்கிற எனது இரண்டு அலுவலக உதவியாளர்கள். ஒவ்வொரு முறை ஒவ்வொரு பத்திரிக்கைக்கும் போய் மீளும்போது என்னை ஊக்கப்படுத்திய என் மனைவி மங்கையர்க்கரசி, தங்கை கண்மணி, ஜெயந்தி, சென்னைக்கு எடுத்துச் சென்று பல எழுத்து மூலவர்களிடம் கொண்டுபோய் பார்வை பெற வைத்த ஆ.செல்லத்துரை. கடைசியில் இந்த நாவலை என்னைவிட அதிகமாக தலைக்கு மேல் வைத்துக் கொண்டாடிய கா.விஜயராகவன், அச்சுக்கு, பதிப்புக்கு போவதற்கான முயற்சிகளை எடுத்துக் கொண்ட என் நண்பர் கவிஞர் யுகசிற்பி. வேறு ஒரு கோணத்தில் இந்த நாவலை பிரதியெடுத்துக் கொடுத்துக் காப்பாற்றித் தந்த மாஷாஜோதி ஆகிய எல்லாரையும் நன்றியுடன் வாழ்த்துகிறேன்.

இந்த நாவல் வெளிவரும் முன்பே பூரணமாகப் படித்து நான் எதிர்பார்த்த நேரத்தில் பாராட்டி, நான் கேட்காமலேயே இலக்கிய விமரிசனம் ஒன்றை கடித வடிவில் எனக்கு அளித்து என்னை கௌரவப்படுத்திய எழுத்தாளர் வ.சா.நாகராஜன் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகிறது,

சிவசக்தி நேஷனல் புக் பப்ளிகேஷன் இயக்குநர் எழுத்தாளர் ஆர்.கே.ரவி அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதை வெளியிட அவர்கள் ஏற்றுக் கொண்டதை ஒரு நல்ல தொடக்கமாகவே நான் எண்ணுகிறேன். நல்ல இலக்கிய ரசிகர்களாகிய உங்களுக்கு ஒரு வார்த்தை. சமீபகாலத்தில் படைப்புகளைவிட படைப்பாளிகளைப் பற்றிய வெறும் பேச்சு சளசளப்பு அதிகமாகிவிட்டது தமிழ் இலக்கிய உலகில். இந்த விரசம் தமிழர்களால் புரிந்து கொள்ளப்படாமலே இருந்து வருகிறது. நல்ல படைப்பு பேச்சற்ற மௌனத்தை உண்டாக்க வேண்டும். அந்த மௌனத்தை எட்டுவதில் நானும், ரசிகர்களாகிய நீங்களும் ஒன்றிணையும் தருணம்தான் இந்த நாவல் முகூர்த்தம். எனது சளசளப்புகூட அவசியமில்லைதான்.

வாழ்க்கையை இலக்கியத்திலும் தேடும் உன்னதமான கணங்களுக்காக உங்களை வாழ்த்தி விடைபெறும்,

**தஞ்சை ப்ரகாஷ்.**

# கரமுண்டார் வூடு - 1

மேல் ஆளோடியிலிருந்து கீழே குனிந்து வீதியை எட்டிப் பார்த்தாள் காத்தாயம்பா. கீழ் ஆளோடி இருபுறம் திண்ணை மேவிக் கிடந்தது. கடல்போல் பரந்து கிடந்த திண்ணையில் கோட்டை கோட்டையாய் நெல் குமிந்துக் காயக் கிடக்கும் முன்பெல்லாம். வூடு உள்ளடங்கிக் கோட்ட போல் எழுந்து நின்றது. தெருவோ வெறிச்சிட்டிருந்தது. திண்ணையும் ஹோவென்று கிடந்தது.

*மாமனைக் காணும். வருவான் என்றாரே அப்பாரு.*

எட்டுக்கட்டு வூடு. இரண்டு புறமுமாய் நாலு முற்றம். முற்றத்தை சுத்திச்சுத்தி ஆளோடியும் முற்றத்தின் மேல் காத்துப் பந்தலும். முற்றம் ஒவ்வொன்றிலும் பந்தலிட்டு படர்ந்து கிடக்கும் முல்லைச் செடிகள்தான். இப்போ இத்தனாம் பெரிய வூடு எதுக்காம்? தினமும் கூட்டியள்ளித் தள்ளவே குறுக்கு வலிக்குது. மீண்டும் கீழ் திண்ணையில் இறங்கி வீதியை—கோடியை—எட்டிக் கொண்டு பார்த்த போது பயந்தது போல் ஆச்சு. சிங்காரச்சாரி மாமா.

சிங்காரச்சாரியார் தெருவில் வழித்த வேட்டியும், பருத்த தொடைகளைத் தடவியபடியுமாய் அவளைப் பார்த்துவிட்டு நேரே வந்து கொண்டிருந்தார்.

*ச்சீ. ஒத்தை ப்ராமணன். மாமன் வர்றேன்னுதாமே. காணும்ல்ல?*

ஒரு நிமிஷம் திண்ணையில் காத்தாயம்பாளைக் காணும். சிட்டுதான். வூட்டை நோட்டம் விட்டபடி

துடையில் தனக்குத்தானே நிமிண்டி விட்டுக் கொண்டு ஸ்வாரஸ்யமாய் கனைத்தபடியே வந்தார் சிங்காரச்சாரி.

காத்தாயம்பா மேல சிங்காரச்சாரிக்கு எப்பவுமே ஒரு கண்.

அதென்னவோ காத்தாயம்பாளெக் கண்டாப் போதும் "எப்படி பொண்ணே என்னெக் கட்டினுடப் போறே? நீ கட்டிக்கலேன்னா நான் விட்றதா இல்லெ, ப்ராம்ணன்னு பாக்கறயா. அட சாஸ்த்துரத்துலெ இதுக்கெல்லாம் இடம் விட்ருக்கான்டி. நாலு ஜாதிப் பொண்ணையும் சாஸ்த்ரப்படி ப்ராம்ணன் ரமிக்கலாம். பிள்ளெ பெத்துனுடலாம். தாலிகூட சார்த்தலாம். சேந்துதான் சகதர்மணியா வெச்சுக்க முடியாது. அதாவது, எங்காத்துலெ வெச்சுக்க முடியாது உன்னெ. ஆனா உங்காத்துல நான் உன்னெ வெச்சுக்கலாம் டீ. எப்ப கல்யாணம் வெச்சுக்கலாம். சொல்லு" என்பார்.

காத்தாயம்பா பத்தாயத்துக்குப் பின்னாலே போய் மறைஞ் சுக்குவா. அது யாரும் போக முடியாது. பெரிய காரைக்கட்டு. அதுவே தனி அறையா இருக்கும். மேல ஜன்னல் ஜன்னலா இருக்கும். பத்து ஜன்னல் பெரிசு பெரிசா அடுக்கடுக்கா பத்தாயம் கட்டியிருக்கும. அறை முழுசும். நல்லா வாழ்ந்த காலத்தில பத்தாயம் முழுசும் நெல் கொட்டி மேல் ஜன்னல் எல்லாம் மூடி பத்தாயமே இருண்டு கிடக்கும். நெல்ல மேல மாடில ஏத்தி ஒவ்வொரு ஜன்னலா தெறந்து நெல்ல கொட்டுவாங்க. அப்புறம் அடுத்த ஜன்னல். முன்னூறு வேலி கண்டு முதல் பண்ணின வூடு கரமுண்டார் வூடு. இப்ப பத்தாயம் எல்லாம் காலி. பத்தாயம் மட்டுமா காவிரியும்தான் காலி. காவிரி மட்டுமா? மனுஷாளும் காலி.

சிங்காரயர் வந்து பத்தாயக் கட்டுக்குள்ள வந்து காத்தாயம்பாளெக் கூப்பிடுவார். வரவே மாட்டா. அம்மா கத்தும்.

"எட்டீ காத்தாயிக்குட்டி சாமி கூப்புட்றாங்க. வெளீல வாடி. மரியாதெ இல்லாம என்னது வெளயாட்டு உனக்கு."

"அந்த மனுஷனெப் போச்சொல்லும்மா. வந்தா, கையப் புடிச்சி இளுப்பாரு." பத்தயாக் கட்டுக்குள் இருந்து பதில் வரும். நிஜம்தானே அதுவும்?

சிங்காரயர் மட்டும் அது பண்ண முடியும். கள்ள வூட்டுப் பொண்ணெ யாரு தொட முடியும்? சிங்காரயருக்கு அதுக்கு யாரும் ஒண்ணுஞ் சொல்லிட முடியாது, அவர் தூக்கி வளர்த்த

பொண்ணுல்லெ அது? பத்து வயசுக் குட்டியா இருந்த வரைக்கும் அவர் வூட்டுப் பொண் மாதிரி தூக்கித் திரிஞ்சவரு தானே?

அதென்னவோ சிங்காரயர் தொட்டா இப்ப காத்தாயம்பாளுக்கு புடிக்க மாட்டெங்கிது. மாமனெ தொட்டப்பறம் அப்பன் தொட்டாலும் புடிக்கத்தான் மாட்டேங்குது. கட்டுக் குடுமியும், நாமமும், பன்னிரெண்டு பட்டை நாமமும் உடம்பெல்லாம் நரைமுடி சுருள் கரக்குட்டி மாதிரி உருண்டையா இருக்கிற சிங்காரச்சாரி மாமாவும் தொடப்படாதுதான். நல்லால்லெ.

, தொடுறதுன்னா என்ன சும்மாவா? காத்தாயம்பாளெத் தொடுற மாமன் எப்ப எடுத்துக் கொண்டு போகப் போறானாம்? தெரியலை, தெரியலையா? பத்தாயக் கட்டுக்குள்ள இருட்டுத்தான் மீதி. அது காத்தாயம்பாளுக்குப் போதும். எட்டுக்கட்டு வூடு முழுசும் ஆளுதான். இப்பமும் ஆளுதான். ஆண்டு அனுபவிச்ச விடு. தரையெல்லாம் கால் தேச்சு தேச்சு எங்க பார்த்தாலும் குண்டும் குழியுமா வூடு. சின்ன சித்தப்பாவும், நடு சித்தப்பாவும், மூணாவது திண்ணையில் யாரோடு பேரம்பேசிகிட்டு நிக்கிதுவ. திண்ணை முழுக்க ஆளு சாஞ்சி கெடக்கும். அப்பா திண்ணையில கெடக்காரு. சித்தப்பா கீழ்த்திண்ணையில சாஞ்சு கெடக்காரு. திண்ணை முழுக்க ஆளு சாஞ்சு கெடக்கும் மிந்தி. இப்ப?

அப்பா பேருகூட பழசுதான். சந்த்ராசக் கரமுண்டாரு.

ஒரு கெட்ட பழக்கம் கெடையாது. அம்மாதாஞ் சொல்லும் உங்கப்பா மாதிரி ஒரு கள்ளனெ இந்த அஞ்சு நாட்டுலெயும் பாக்க முடியாதுன்னு. ஆனா அப்பா தலையெடுத்துத்தான் நெலம் எல்லாம் போச்சாம். சித்தப்பா ராமுக் கரமுண்டாரு, நடுசித்தப்பா ராஜவேலு கரமுண்டாரு, சின்ன சித்தப்பா சுப்புக் கரமுண்டாரு யாரும் ஒருத்தருக்கொருத்தர் பேசிக்கவே மாட்டாங்க. பேசிப் பாத்ததேயில்லெ'

"சின்னி பெருசாய்ட்டுதாம்ல்ல". நடுச் சித்தப்பா சொல்லும். பொண்டாட்டி கனகம்பாளெப் பாத்து. கனகம்பா சித்தி ஒடையாளுரு. லேசா அம்மாளெப் பாக்கும். அம்மா திரி சின்னுதான் பேரு. திரிசிம்பான்னு சொல்லுவாங்க. கண்ணெல்லாம் மனுஷியா எல்லாரையும் பாக்கும். பேசாது. கொள்ளாது. சோத்தெ வடிச்சுக் கொட்டும். ஒரு வார்த்தெ பேசாது. தஞ் சாவூர்ல அந்தக்காலத்து கந்துராட்டு ராமசாமி கரமுண்டாரு பொண்ணாம். தஞ்சாவூர்ல இப்ப இருக்குற எல்லா கட்டடமும் கந்துராட்டு பண்ணி கட்டுனது தாத்தாதானாம்ல்ல.

"சின்னி சின்னின்னு அதென்ன பேரு எனக்கு? ஏம்மா?" சின்னின்னா சின்னதுடாம்பாரு அப்பாரு.

காத்தாயம்பா கண்ணு நெரம்பீடும். அதென்னமோ அப்பாரு கூப்ட்டு பேசுனாலே அழுதுகிட்டு அப்பாரு மேல உளுந்து பொரளனும்ன்னு பொம்பளைக்கி இப்டி ஒரு ஆச வரலாமா? வருது.

அப்பாரு ஒண்ணும் வேலை கண்ணிக்கிப் போறதில்ல. வேல செஞ்ச மாதிரி எப்பமும் தெரிஞ்சதேயில்ல. காத்தாயம்பாளுக்கு எட்டு வயசு இருக்கப்பவே, அப்பாருக்கு முடியெல்லாம் நரைச்சுத்தான் இருந்தது. அறுபது வயசாம் அப்பாருக்கு. சின்ன சித்தப்பாவுக்கு அப்ப இருவத்தெட்டு வயசாம். அப்பாரோட மார்லியே கமுந்து படுத்துதான் காத்தாயம்பா தூங்குவா அப்ப. விடியறதுக்கு மிந்தியே அப்பா ஏந்திரிச்சிடும். தரதரன்னு காத்தாயம்பாளெ தூக்கிட்டேதான் காவிரிக்குப் போவும். அப்பல்லாம் காவேரின்னா இப்டி வறண்டா கெடக்கும். திமுதிமுன்னு தண்ணி வரப்பெ கரைச்சிக்கிட்டு ஓடும். தண்ணிக்குள்ள நேர எறங்க வேண்டீதுதான். படித்துறையில நின்னுகிட்டு காத்தாயம்பாள தண்ணீல வீசிப் போடுவாரு அப்பாரு. கக்கக்கன்னு தண்ணி குடிச்சிகிட்டே காத்தாயம்பா தண்ணிக்குள்ற போவா. சிங்காரயர் ஒத்தெ லாவல்லெயே மசுத்தெப்புடிச்சு தூக்கிடுவாரு.

"அடேயப்பா அய்யீரே ஏந்தூக்கி வுட்றே?"

"முண்டம்... கொழந்தைய்யா அது. ஆத்தோட போய்டுத்துன்னா?"

"நீய்யிறதுக்கு முந்தி பயம் போவுணும்யா. தானா நீய்யணும்ல்ல அது?"

"ராட்சசப் பிறவிகள்ங்காணும் நீரும், உம் பொண்ணும். அதுவும் தாங்கறது பாரேன்."

"நீ மட்டும் என்ன பாப்பான்? கள்ள வூட்டுக்கு கார்வாரு பண்ணிப் பண்ணி நீயம் கள்ளப்பய வாசென புரிஞ்சவனாச்சே. உம்மேல கள்ளந்தான் இருக்கான்."

"திரும்பியும் ஏன்யா தண்ணீல காத்தாயம்பாளெ முக்றீம்? சொல்றேனோ? வயிறு நிறைய தண்ணி. ஆத்து மணலோட காவிரித் தண்ணி வயத்துக்குள்ள சுழலும். வயிறு பானை மாதிரி தள்ளிக்கும், அழகா."

எட்டு வயசிலேயே ஆறு குறுக்க கிழிச்சு நீந்தி எதிர்க்கரை ஏறுவா காத்தாயம்பா. எப்படியாம்? எல்லாம் அப்பாரு திகிரியம்தான். இப்டித்தான்.

திருவிழாவுக்கெல்லாம் அப்பாரோடதான் போவா.

வூடு நெறைய ஜனம் குமிஞ்ச கெடக்கு... ஞாபகம் வருது... காத்தாயம்பா பெருசானதுக்கு சடங்கு. எட்டுகட்டு வூடு முழுசும் ஆளு. அப்பாரு சுத்திச் சுத்தி வராரு. எஞ்சப் பார்த்தாலும் ஜனம் உருண்டு கெடக்கு. சாதி சனம் முச்சூடும் இஞ்சதான் இருக்கு. பெரிய தலையாச்சே. பத்து பதினாறு நாளும் வெளிய தெருவ வரமுடியலெ காத்தாயம்பாளுக்கு. கொல தெய்வம் காத்தாயம்பா கோயிலு கரமுண்டாங்கோட்டையில இருக்கு. வண்டிகட்டி, கட்டுச்சோறு கட்டி, பண்டபாத்தரத்தோட நாப்பது வண்டியோட எல்லாம் கரமுண்டாங்கோட்டை போச்சுதுவ.

ராத்திரியெல்லாம் வண்டில ஆடி ஆடி வரமுடியாதுன்னு மன்னார்குடி பஸ் ஏத்திவிட்டது சித்தப்பா நடுவு.

"ஏன்னா நெனெச்சிக்கிட்டு இப்டி செலவு பண்றாரு உங்கப்பா. பெரிய ராசா வூட்ல கூட இப்டி அழியாது. என்னால வாயெத் தொறக்க முடியலெ."

"நீங்களே கேக்குறதுதானே சித்தப்பா?" காத்தாயம்பா சொல்வா.

"யாரு அவங்கிட்டியா?" நேரில் பேசமாட்டாங்கதான் பின்னாலெ பேச்சு இப்படித்தான். அவங்கெடக்கான், தள்ளு இன்னைக்கு நேத்தைக்கா இப்டி? பயமாயிருக்கு. பாவம். பொட்டுன்னு ஏதாச்சும் சொல்லீட்டா, அப்றம் தாங்காது குட்டி.

"என்னெ குட்டி குட்டின்னு கூப்டாதீங்க சித்தப்பா."

"ஏன்டி குட்டி?"

"நாயிகுட்டி, பூனெகுட்டி நானும் குட்டியா?"

"சின்னிக்குட்டிடா நீயி."

ஆமா காத்தாயம்பான்னா எல்லாருக்கும் உசிருதான்.

அப்பாருக்கு நாலு பொண்டாட்டி. திரிசியம்பா, மாணிக்கவல்லி, நாகலெட்சுமி, ராதெ. நாலு பேருக்கும் காத்தாயம்பா ஒருத்திதான் பொண்ணு. புள்ளெ, ஆணு குட்டி எல்லாம். அப்பாரு எந்த பொண்டாட்டிகிட்டவும் பேசமாட்டாரு. எப்பமும் பேசுனதேயில்லை. வூட்டுள்றயும் அனாவசியமா வரமாட்டாரு.

தம்பியகிட்ட பேச்சு கெடயாது. கட்டுனவ மூத்தவ மட்டும்தான் பொண்டாட்டியான்னு ரொம்பப் பேரு. கேட்டிருக்காங்க. திரிசிகிட்ட மட்டும் எப்பனாச்சும் பேசுறது உண்டு.

மாணிக்கவல்லி காத்தாயம்பாளெ இடுப்புலியே தூக்கிச் சொமக்கும். எல்லாரும் காத்தாயம்பாளெ ஒரு ஒரு பேரு சொல்லிக் கூப்பிடுவாவோ. அப்பா சின்னிம்பாரு, திரியம்பா "எட்டி"ன்னுதான் கூப்பிடும். பெரிய சித்தப்பா காத்துங்கும். நடுச்சித்தப்பா குட்டிங்கும். நாகலஷ்மி மம்முன்னு கூப்பிடும். ராதெ கூப்டவே கூப்டாது. ரொம்ப அழகாயிருக்கும். அப்பாரெ கட்டிக்க மாட்டேன்னுதாம். அப்பாரு இளுத்துகிட்டு வந்துட்டாராம். இப்ப அதுனால என்ன. அப்பாரோடேயே இருந்துட்டுதாம்.

அப்பாரு ராதெகூட இப்பமும் படுத்துக் கெடப்பாரு. எப்டி அது? ஆம்ம்பா. விடிய காலையில நாலு மணிக்கு கோலம் போட கையில வெளக்கோட வாசக் கட்டு திண்ணைக்கு வெளிய போறப்ப காத்தாயம்பா பாத்திருக்கா அதெ.

அப்பாருக்கு வயசு அறுபதுக்கு மேலம்பாங்க. அம்மாளோட திண்ணையில கிடக்குறது, விடிய இருட்டுல ஒண்ணும் தெரியாட்டியும், மல்லியப்பூ நசுங்கி வாசிக்ற வாசனை திண்ணையிலயிருந்து சுத்திக்கிட்டு இருக்கும். ராதெ மட்டும்தான் இஞ்ச தேங்காண்ணெ வெக்கியறது. அதுவே காச்சி எடுக்கிற தேங்கா எண்ணெ. கோலம் போட்டு முடிக்கிறப்போ வெளுத்துடும். திண்ணையில ராதெ இருக்காது. காத்தாயம்பா மெல்ல தூண்கிட்ட நின்னு உள் முத்தத்துல மூஞ்சி அலம்பிக்கிற அம்மா ராதெயப் பாப்பா. பூரிப்பாயிருக்கும்.

சித்தப்பாவுக்கு கல்யாணம் ஒண்ணு ரெண்டு மூணும் காத்தாயம்பாளுக்குத் தெரியும். மூத்த சின்னம்மாவெ சித்தப்பா அடிச்சு தொரத்திட்டுது. ஒடையாளூர்ல கட்டிகிட்ட கனகம்பாளும் மன்னார்குடிலயே கெட்டி கூட்டிக்கிட்டு வந்த பார்வதியும் காத்தாயம்பா மேல ரொம்ப ஆசையாயிருப்பாங்க. நடுச்சித்தப்பாவுக்கும் மூணு சின்னம்மா. லெக்ஷ்மி, வெள்ளையம்மா, ருக்கு. குட்டிச் சித்தப்பாவுக்கு மட்டும்தான் ஒண்ணே ஒண்ணு. உமாமகேஸ்வரி. திருமக்கோட்டையிலருந்து வந்த பொண்ணு. காத்தாயம்பா வயசுக்கு ஒரு வயசு கம்மின்னு சொல்லிக்கிட்டாங்க. யாரு பாத்தா அதெல்லாம்? உமாமகேஸ்வரியெக்கூட காத்தாயம்பா அம்மான்னுதான் கூப்பிடுவா. யாரையும் சித்தின்னு சின்னம்மான்னு கூப்பிட்டதில்லெ. எல்லாருக்கும் காத்தாயம்பா 'மவ'தான்.

அப்பாரு இவங்க யாருகிட்டேயும் பேசமாட்டாரு.

எல்லாத்துக்கும் காத்தாயம்பாதான் வேணும்.

ஆயிரக்கணக்கா நெல்லுமூட்டை வந்து எறங்கும். "ஆயியெக் கூப்டுங்கம்மோவ்"ன்னுதான் கொல்லையிலிருந்து பள்ளன் சத்தம் கேக்கும்.

திண்ணையெ விட்டு எறங்க மாட்டாரு, அப்பாரு.

இப்ப பத்து வருஷமாத்தான் எறங்கி வெளீல எங்கியோ போறாருங்கறாங்க. அதுவம் காத்தாயம்பாளுக்கு மட்டும் தெரியும். காலை ஆறு மணிக்கு முந்தி நடந்து போறாரே எதுக்கு? ஒரு மணி நேரத்துக்கு அப்புறம் நடந்து வந்து திண்ணையில ஏறினா கண் சிவந்து இருக்கும். சாராயம் குடிச்சிருக்காருன்னு யாரும் சொல்லவே முடியாது.

திரிசியம்பாதான் வந்து சொல்லும்: "உங்கப்பாரெ சாப்புட வரச் சொல்லுடீ"

"யப்போவ் சாப்பிடப் போலியா?"

"இஞ்சியே எடுத்தாரச் சொல்லும்மா." ம்பாரு அப்பாரு. அப்றம் எல்லாம் திண்ணையிலியேதான். பெரிய வெள்ளித் தட்டுல இட்டிலி–சட்டினி, லோட்டால காப்பி. பன்னண்டு ஒரு மணிக்கு திண்ணைலியே சோறு, கொழம்பு, கறி, நெய், பழம். சாயங்காலம் திண்ணையிலேயே காப்பி லோட்டா ரெண்டு. ஒண்ணு சாப்புட்டா, அடுத்தது. ராத்திரிக்கி திண்ணையிலே மெச்சகொட்டெ கருவாட்டுக் கொழம்பு. வடவம். ஒன்பது மணிக்கு ராதெம்மா பாலு ஒரு லோட்டாவோட திண்ணைக்குப் போவும். ராதெயெ யாரும் திலும்பிக் கூட பாக்கமாட்டாங்க.

சின்னம்மா எல்லாம் உத்து உத்துப் பாப்பாங்க. நடுச்சித்தப்பா பொண்டாட்டி ருக்குமினிதான் கேக்கும்.

"எப்புடித்தெ பெரியவரெ கட்டிக்கிட்டீங்க." எல்லாரும் முழிப்பாங்க. ராதெம்மா சொல்லும். "நீ எப்டி உம் புருசனெ கட்டிக்கிட்டியாம்? போடி சர்த்தாம்?" அதுக்கு மேல பேச முடியாது யாரும்.

காத்தாயம்பா கண்ணு நெரம்பிருக்கும். சொல்லுத் தாங்காது.

"அடி நீ ஏன்டி கண்ணு அழுவுறே? அவ கெடக்கா எதுனாச்சியும் ஒளறுவா?"

"என்னெ செறெயெடுத்துல்ல ஓங்கப்பாரு கொண்ணாந்தாரு. சும்மாவா?"

"நானும் நூத்தம்பது பவுனோடல்ல ஓடியாந்தேன்."

கண்ணில் நீரு வடிய காத்தாயம்பா கேப்பா?

"நீ ஏம்மா ஓடியாந்தே. அப்பாரெத்தான் ஒன்குப் புடிக்கலீல்ல?"

"ஆம்மா. புடிக்கல்லென்னா உட்டுடுவாரா? இளுத்துப் போட்டு கைகாலெக் கட்டி தூக்யாந்தாருல்ல. பஞ்ஞாநாட்டுப் பக்கமெல்லாம் இப்பக்கூட கதையாச் சொல்லுவாங்களே. காலெ புடிச்சிக்கிட்டு கெஞ்சினேன். கோயில்ல வெச்சு தாலியக் கட்டுனாரு. எவன் வந்து காப்பாத்துனானாம்? எவன் மறிச்சானாம்? தெரியும் ஒரு பய வரமாட்டான்னு. முப்பது வருஷம் உங்கப்பாரோட குப்பெ கொட்டியாச்சு. ஓடிப் போய்றலாம்னு சொல்லிக் குடுத்தாளுவ. என்னன்னமோ மூடுமந்தரம் பண்ணாளுவ. மந்திரிச்சு கட்டுனாளுவ. நான் தொலைவனான்னுதாம் பாத்தாளுவ. ஓங்கப்பாரு உட்டாத்தானே? நீ பொறந்ததுக்கப்புறம்தான் எல்லாம் அடங்குனாளுவ. இப்ப என்னா எல்லாம் போச்சு. நிலம் நீச்சு எல்லம் ஒஞ்சிது. வூட்டுக்கு வெள்ளையடிக்கணும்னாக்கூட எதுனாச்சும் நகையெ விக்ய வேண்டியிருக்கு. ஆச்சு எனக்கும் தள்ளாடுது. கண்ண சரியா தெரியல்லெ."

"அப்டீல்லாம் சொல்லாதம்மா."

"அழாதடி மம்மும்மா. நீதான் எனக்கு எல்லாம். தெரியுதா? ந்த தஞ்சாவூருப் பயலெயே எனக்குப் புடிக்கலெ. உனக்குப் புடிச்சிருக்கு. என்னெ மாதிரி நீ அடியோட பொதஞ்சி போய்டாத. புடிச்சவனெ கட்டிக்கிட்டு தொங்கத்தொங்க தாலியும், பூவுமா நீ இருக்கணும்டீ."

கட்டித் தழுவிக் கொண்டாள் ராதெ. எவ்வளவு மிருது. சிலை மாதிரி உடம்பு. நீளமா கத்தையா சுருள் சுருளா தலைமுடி. நாப்பத்தஞ்சு வயசு மாதிரியா இருக்கு. காத்தாயம்பா இறுக்கி கட்டிக்கிட்டா. ராதெயும் கட்டிக்கிச்சு. ராதெ ஒடம்பெ இப்டி கட்டிக்கிட்டாலே இந்த சுகமா இருக்கே... மணமணமா. அந்த வூட்லயே உசிலம்பொடி போட்டு கூந்தலெ தேச்சு கழுவி சாம்பிராணி போட்டு வளத்துறது ராதெ மட்டுந்தானே? பெரிய வூட்டுப் பொண்ணு.

அப்பாருக்கு அம்மா என்னென்னமோ குடுத்திருக்கு. பாவம்ன்னு தோணுது காத்தாயம்பாளுக்கு. ஆனா அப்பாரெப்

புடிக்கல்லெ. புடிக்கல்லென்னு எல்லாருக்கிட்டியுமா பேசுதே இது. நல்லாவா இருக்கு? அப்பாரு மோசமா? அதென்னமோ யார் கேட்டாலும் ராதெ இளுத்தாந்துட்டாருல்ல அப்டித்தான், அப்டீன்னுதான் பேசும். தூக்கியாந்துட்டாரு. செறயெடுத்துட்டாரு ஆமா.

திரிசியம்பாகிட்ட கேப்பா காத்தாயம்பா குட்டி:

“அப்பாரு இளுத்தாந்துட்டாருன்னே பேசுதேம்மா அம்மா. அப்பாரு இளுத்தாந்தாரா?”

தலை முழுக்க சுருள் சுருளா தலைமுடி அவுத்துப் போட்டு, காலெ நீட்டி ரெண்டாங்கட்டுல உக்காந்து, முத்தத்துல முடியெ அடிச்சு கொண்டை போட்டுக்கிட்டே திரிசி சொல்லும், நரை பூத்து வெள்ளை முடிதான்.

“அவரு இளுத்தாந்தாரு. இவ என்ன செஞ்சிகிட்டாளாம்? போய்த் தொலையிறது தானே? கூடயே ஓடியாந்தாளே? எப்பேர்பட்ட செறுக்கி”

“அப்பாரெ புடிக்கல்லியாமே, புடிக்காதாம்ல்ல? அட. ஆமாமா. புடிக்காது. அவளுக்கும் அம்பது வயசால்லியா? தெனம் திண்ணையில என்னடி திண்ணாராம் வேண்டியிருக்கு? உனக்கும்தான் தெரியும். கேளுவி கேக்குறா கேளுவி.”

மாணிக்கவல்லி சமயல் வூட்டுள்ளயிருந்து சொல்லும் மிந்தியெல்லாம்...

“எட்டி கண்ணு, அதெல்லாம் ஒனக்கெதுக்குடாம்மா? நீயி படிச்சி கலைட்டராயி அம்மா எல்லாரையும் தலை மேல வெச்சு கொண்டாடணும்டா. இந்தப் பேச்செல்லாம் ஒனக்கு வாண்டாம். அப்பாரு ஒன்னெ படிக்க வெக்கும்.”

கரமுண்டார் வூட்லயே ரொம்ப படிச்சிருந்தது மாணிக்கவல்லி அம்மாதான். மிஷன் ஸ்கூல்ல படிச்சி அந்தக் காலத்திலேயே எஸ்.எஸ்.எல்.ஸி பாஸ் பண்ணினது.

சந்திரஹாச கரமுண்டார் அத்தெ பொண்ணு, மாணிக்கவல்லி. கொண்ணாந்துட்டாரு.

வூட்டெ கரமுண்டானுவ ஆத்துக்குள்ற கட்டல்லெ, ஆமா. கரமுண்டான் வூட்டெ அடிச்சிகிட்டுப் போவ வெள்ளம் வந்துட்டுன்னு எல்லா ஜனமும் பயப்புடுதுவ. அஞ்சினியெச் சுத்திகிட்டு ஓடுன காவிரியாறு வெள்ளம் வந்து ஊரையே

அடிச்சிகிட்டுப் பெய்டுச்சி. ஆமா மேட்டுத் தெருவு முழுசம் வேத்துகிட்டுப் பெய்டுச்சாம். பறத்தெருவும் கங்கான் தெடலும் – பள்ளக்குடி முச்சூடும் – சாலியத் தெருவும் ஆத்து வெள்ளத்தோட போனதுதானாம். இப்ப பள்ளனுவ ஊருக்கு மேக்காலயில்ல தனியா வயலுக்கு நடுவுலல்ல குடிபோட்டு குடுசைகுடுசையா ஏத்திக் கட்டியிருக்கானுவ? வெள்ளம் என்னமோ வருசா வருசம்தான் வருது. பத்து வருசத்துக்கு ஒரு வெச பலமாவே புயலும், காத்தும், சூறாவளியுமா வருது. மார்கழியில ஒரு மழையோட அப்டித்தான் குளுரோட ஒரு மழையும் புயலுமா ஐம்பது வருசத்துக்கு மிந்தி வந்த வெள்ளத்துலதான் அஞ்சினி முளுக்க வெள்ளத்துல முழுவுச்சாம். அப்பாயி சொல்லீருக்கே, ஆமா... தொரச்சியப்பாயி இன்னுந்தான் உசிரெப் புடிச்சிகிட்டு இருக்குல்ல. வெள்ளம் சமுத்துரமா வந்து ஏறிடிச்சாம். காவேரி பொங்குனா என்னா ஆவும்? அப்பாயி கரமுண்டாத்தீல்ல. பயப்படுமாக்கும்? வூட்டு மாடி மேல ஏறி மொட்டை மாடியில சாமானை எல்லாம், ஏத்துதாம். பள்ளனுவ எல்லாம் தோள் மாத்தித் தோள் மேல ஏறி வூட்டு சாமானை எல்லாம் வூட்டு சனங்களை எல்லாம் மூணாவது மொட்டை மாடிக்கி ஏத்திவுடுவானுவளாம். பள்ளனுவ இல்லென்னா யாருடி மிஞ்சியிருக்க முடியும்? பள்ளனுவ கள்ளன் இல்லடி. ஆனா கள்ளன் எல்லாம் பள்ளன் சொந்தந்தான்டி. என்னடி முளிக்கிறயாம்ங்கும் அப்பாயி.

ஆறு ஹோன்னு நாலா பக்கமும் பாயிதாம். தொரச்சியப்பாயியும் சந்தானப்பாயியும் மேல மூணாவுது மாடீல நின்னுகிட்டு கார்வாரு பண்ணுதுவ. வெள்ளம் எறிகிட்டேயிருக்காம்.

டேயப்பா என்னா தண்ணி. எட்டுன வரைக்கும் சமுத்திரம். நாயி மாடு எல்லாம் மெதக்குதாம். செத்துப் போன மாடுவளோட பன்னிக்கூட்டம் நீந்திக்கிட்டுப் போவுதாம். எஞ்ச. மாடிக்கு மேல. ஆமா தொரச்சியப்பாயி சொல்லும். இப்பல்லாம் ஏதுடி வெள்ளம்? கரமுண்டாரு வூட்டு மேல வழிஞ்சிதே, அது தான்டி வெள்ளம்.

"ஏப்பாயி அப்ப தாத்தாவெ எங்க வுட்டு வெச்சிருந்தியாம்?"

"ஓங்க தாத்தாதான் வெள்ளம் எகுறுதுன்னு கண்ட ஓடனே பாஞ்சிட்டாரே பள்ளக்குடிக்கு. நம்ம கரமுண்டாரு வூட்டு மூணாவது மாடிலதான் பள்ளக்குடி முச்சூடும் விடிய விடிய நின்னுதுவளே"

"அத்தன பேரையுமா தாங்குனுது இந்த கரமுண்டார் வூடு."

“அடிப்போடி பைத்தாரீ, இன்னைக்கும் நாளைக்கும் கரமுண்டார் வூட்டெ தொட்டுக் கும்புட்டுட்டு போற ஜனங்களைப் பாக்கல்லியா நீயி. ஹும்.”

“ஆமா, இப்ப யாரு அதெல்லாம் ஞாபகத்துல வெச்சுக்கிட்டிருக்காங்க”

“கரமுண்டார் வூடு ஒரு கடல் மாதிரிம்பாங்க. அத்தாம் பெருசு மட்டுமில்ல, அந்தப் பேயி வெள்ளத்துக்கும் பொசகாத்துக்கும் நிண்ணு நெலைச்சுது பாரு? வானெத்தெத் தொட்றாப்ல வந்த வெள்ளமும் கரமுண்டார் வூட்டு மாடியில வழிஞ்சுதே... இண்ணைக்கி வார வெள்ளத்தல்லாம் நாணல் காட்டுக்கு மேல ஏறி கரையெத் தொட்டே முப்பது வருஷம் இருக்கும்டி.

“வெள்ளம் வடியிற வரைக்கும் வூட்டுக்கு ஒரு சேதமில்லயாப்பாயி?”

“அடிபோடி, வெள்ளம் வந்து ஊரே அஞ்சினியே எகிறிப் போச்சு. துலுக்கத் தெரு கௌக்கே போச்சு. வாணியஞ் செக்கெல்லாம் மெதந்து போனதோட வாணியத் தெருவும் தூரப் போச்சு.

பஞ்சாயத்து, பண்டாபீஸ் எல்லாம் குப்புறச் சாஞ்சு குமிஞ்சுதுடா... ஆனா கருமுண்டார் வூடு மட்டும் நின்னு நெலைச்சுப் போச்சு. ஆனா வெள்ளம் ஊருக்கே வடிஞ்சிது. கரமுண்டார் வூடு மட்டும் தண்ணிக்கு நடுவுலியேதான் நின்னுது. புரியிலியா? ஆறு இப்ப கரமுண்டாரு வூட்டுக்கு நேரதான் ஓடுது. வெள்ளம் வடிய ஒரு வாரம் ஆனுது. ஒங்க தாத்தாவெ கலட்டரு தெரை ஸ்டாலின் எல்லாம் வந்து பாத்தானுவ. ஒங்க தாத்தா கரமுண்டாரு பேசாம பாத்துகிட்டு நின்னாரு. என்னா ராகுநாதக் கரமுண்டாரே வூட்ட வேற எடத்துல கட்டிக்கிட்டா உங்களுக்கு நல்லதாச்சேன்னான் கலட்டரு தொரெ. ஊரே வந்து கூடி நிக்கிதுவ அஞ்ச. யாரும் ஒரு வார்த்தெ பேசலாமா? ஒங்க தாத்தா ஒரே வார்த்தைதாஞ் சொன்னாரு. முடியாதுன்னுட்டு. கலட்டரு பெய்த்தாரு. வந்தானுவ பாரு... ஆப்பீஸ்லருந்து ஆப்பீசரு ஆப்பீஸரா வந்து பாத்துக்கிட்டேயிருந்தானுவ. ஓலை மேல ஓலை. நோட்டீசு நோட்டீசு. ஒண்ணும் நடக்கல்லெ”

தொரச்சிப்பாயி லேசுபட்ட கெழவியா? எல்லாம் அச்சாவா அப்டியே ஞாபகம் வெச்சிருக்கும். கண்ணு செவப்பு நரம்போடி பெருசா உயிரே கண்லதான் இருக்கும் போல இருக்கும். இதெல்லாம் சொல்லும்போது கண்ணலருந்து தண்ணி ஊத்தும்.

“அப்புறம் என்னாச்சப்பாயி”

"அடிப்பாவி மவளே கதையா கேக்குற கதெ. உங்க தாத்தா ஆத்துக்கு எடத்தெ வுடமாட்டேன்னு கோர்ட்டுல வாதாடுனாரு. தாயில்தாரு மேஸ்ரட் எல்லா பயலுவளும் கெஞ்சனானுவ. அது என்னமோ ஆறு இவனுவ சொத்துன்னு சொன்னானுவ. கவுண்மேந்து சொத்தாம். உட்டுடுன்னானுவ. உங்க தாத்தா இந்த வூடு மேலதான் காவேரியாறு ஓடிச்சு. நான் எங்கப்பம் பாட்டம் பூட்டங் காலத்து வூடு இது. இதெ உட்டுட்டு எஞ்சியும் நாம் போவ மாட்டேன்னு சொல்லிட்டாரு. அடேயப்பா எல்லம் ஆப்பீஸரும் வந்து நம்ப வூட்டு கீழ் முத்தத்துல திண்ணையில ஒக்காந்துதான் லாப் பேசுவானுவ"

"அதெப்புடிப்பாயி ஆத்துக்குள்ள அம்ப வூடு திலும்பிக்கிச்சு." "வூடு எப்டி களுதெ திலும்பும்? ஆறுதான் மேடேறி கரமுண்டாரு வூட்டு மேல பாஞ்சிடுச்சி. அன்னைக்கி போனதுதான் நம்ப பெருமெயெல்லாம். வர்றவன் எல்லாம் வந்து நாயம் பேசி நம்ப வூட்ல தின்னுட்டுத் தின்னுட்டு போயி மேல் அதிகாரியையெல்லாம் அனுப்பிக்கிட்டேயிருந்தானுவ. கேசு, வாய்தா, கோர்ட்டுன்னு ஒங்க தாத்தா அலைஞ்சுகிட்டேயிருந்தாரு. அந்த பாப்பான் இருக்கானே சிங்கராயன்? அவன் அப்பன் ரங்கசாமி ஐயங்காரு. இவனெ மாதிரியே ஒங்க தாத்தாகூடவே அலைவான். ஊரே திரும்பி மேட்டுக்குப் பொய்ட்டுது. கருமுண்டாரே நீங்க மட்டும் மேட்டுக்கு வர்றதுக்கு ஏம் பயப்புடறீங்கன்னு கேட்டான்டி அந்தப் பாப்பான். ஒங்க தாத்தா பேசவே மாட்டாரு. பேசத் தெரியாது. பேசுனா ரத்தம் தெறிக்கும். தலை உருளும், ஊரே மாஞ்சு போவுண்டி பொண்ணே. சொன்னாரு:

"எல்லாம் மேடேறிப் போங்க. கரமுண்டானுவ கீலியே இருந்துட்டுப் போறோம்." பணம் தண்ணியாப் போச்சு. வெள்ளக்காரன் கேஸெவிடலெ. சீமைக்கே கொண்டு போனான். ஒங்க தாத்தா வுட்டாரா? தெனம் திருவிழாதான். வூடு பூரா சனம்தான். இதே பேச்சுதான். ஒண்ணும் பலிக்கலை. பதனஞ்சு வருஷம் கச்சேரி ஏறி ஆடி அவரக்கா அறுத்தாரு உங்க தாத்தா."

சீமையில 'PRIVACY COUNCIL' கவுஞ்சல்ல கேசு நடந்ததுக்குகூட உங்க தாத்தாவை கூப்பிட்டானுவ. இப்ப இவன் ங்கொப்பன் திண்ணையிலியே உக்காந்துட்டானே, அது மாறி உங்க தாத்தா எப்பவும் மாடியில திண்டுலதான் கெடப்பாரு. ரங்கசாமி ஐய்யங்காரு ஓடி வந்தான். அம்மா மஹாலக்ஷ்மீ, ஒங்க கேசு ஜெயிச்சிடிச்சு பிரிவி கவுன்சல்ல. உங்களுக்கு சாதகம் பண்ணிட்டார் பெருமாள். இனிமே நம்ம வூட்டெ இடிக்க எவனும் வர முடியாதும்மான்னு

அலறிகிட்டே மாடிக்கு ஓடுனான். மாடில ஏராளமா கூட்டம் எகிறிப்போச்சு. கரமுண்டாரு அளுவுறாருன்னு கசுமுசன்னு பேச்சு கேக்கச்செ பதறிப் போய் ஓடுனேனா, மாடிக்கிப் போயி எட்டிப் பாத்தா உங்க தாத்தா அளுவுறாரா சிரிக்கிறாரான்னே தெரியலடி. மலமலையா கண்ணால கொட்டுந் தண்ணி. ஐஞ்ஞூறு அறுநூறு வேலியும் போன எடந்தெரியலெ. யாரு கணக்குப் பாத்தா? அய்யிங்காரு வக்கீலு எல்லாம் நூறுதரம் சீமைக்கிப் போயிட்டு வந்தானுவளா? யாருக்கு கணக்கு குடுக்க?"

, "அப்றம் வூட்டெ கட்டினியா அப்பாயி?"

"ஆமா கோட வெய்யல்ல ஆத்துத் தண்ணி பாதியா வத்துனப்போ கிராம முனுசுப்பு. வரஞ்சுரம் கர்ணம், கண்ட நாயி எல்லாம் வந்து அளந்து எல்லக் கல்லு நட்டானுவ. ஓங்க தாத்தா போட்டதுதான் கோடு. இப்ப ஆத்துக்குள்ள நிக்கிது நம்ம வூடு. முக்காவாசி வூடும் ஆத்துக்குள்ள கரமுண்டானுவ எல்லாப் பயலும் பெருமாளு சொத்துடிம்பாரு உங்க தாத்தா." இப்ப அப்பாயி கண்ணுலருந்து மலைமலையா கொட்டுது. அப்பாயிக்கு நூத்திப்பதுனஞ்சி வயசுன்னு சொல்லுது. ஆனா அதுக்கே அது தெரியுமா? தெரியாது. கெளவி லேசுப் பட்டதில்லெ கண்ணு பட்டுடுமாம். வயசு மட்டும் சொல்லாது.

பின்கட்டு முத்தத்துலதான் எப்பமும் கெடக்கும். பக்கத்திலயே சின்னப்பாயி சந்தானமுங் கெடக்கும். அதுக்கும் வயசு எகிறிப் போச்சு. எல்லாம் காத்தாயம்பாளெக் கட்டிக்கும். சித்தப்பா எல்லாம் சாப்பாட்டுக்கு சந்தனப்பாயிகிட்ட வருவாங்க. தனியாத்தான் சமையல். பள்ளுபறைகிட்ட வரக்கூடாது. என்ன? என்ன? அதுவளை வுட்டா யாரு இருக்கா கரமுண்டார் வூட்டுக்கு?

மாமன் வூட்ல சீராளூர்ல ஓரே தடவை பாத்தாரு. அவ்வளவுதான் கேட்டதும் தூக்கி குடுத்துட்டாங்க. இப்ப அறுவது வயசு. மூணு தடவை பிள்ளை பேறு. கொழந்தையெல்லாம் பறி குடுத்தாச்சு. மிச்சம் காத்தாயம்பாதான். எல்லாருக்குமே வாரிசு அவதான்.

அஞ்சினிலயிருந்து காத்தாயம்பாளெ வில்லு வண்டியில கூட்டிகிட்டு காவிரியாத்தெ பரிசல்ல ஏறிக் கடந்து திருக்காட்டுப்பள்ளி பள்ளியூடத்து மரத்தடி புங்கமரத்து நெழல்ல குந்தி மத்தியானம் காத்தாயம்பாளுக்கு சோறு ஊட்டி, இருட்ட மிந்தி பள்ளங் காடு தான்டி வண்டியில வந்து ஆத்தங்கரையில தனியா அஞ்சினிக்கி பேக தனிய்யா காத்துக் கெடக்கும் பரிசல். எல்லாம் மாணிக்கவல்லி ஏற்பாடு.

ஏஸ்.எஸ்.எல்.ஸி., ல காத்தாயம்பா நெறையா மார்க் எடுத்துப் பாசானதுக்கு சந்திரஹாச கரமுண்டார்கிட்ட காத்தாயம்பாளெ மேல படிக்கணும்னு கேட்டு மல்லுக்கு நின்னதும், அம்மாளையும் பொண்ணையும் வூட்டு உள்ளயே மூடி முடக்கிப் போட்டதும் எல்லாம் 1980ல்தான். புதுசுதான்.

காத்தாயம்பா வூட்டுக்குள்றயே முடங்கிப் போனதும் முட்டி தேஞ்சதும் உள்ளதான்.

மாணிக்கவல்லி இந்த அம்பத்தஞ்சு வயசிலும்கூட ஒண்டிதான். சந்திரஹாசக் கரமுண்டார் நாப்பது வருஷத்துக்கு மிந்தி கட்டி கொண்டாந்து அஞ்சினியில பூட்டினதில இருந்து ஒரு வருஷம்தான் சந்திரஹாச கரமுண்டாரோட திண்ணையில படுத்தக் கிடந்தா. அப்பறம் முக்கி தக்கி மூணு வருஷம், அவ்வளவுதான். ஒண்ணுமில்லே.

இப்பமும் சந்திரஹாச கரமுண்டார் கெஞ்சிகிட்டுத்தான் இருக்கிறார். காத்தாயம்பா ஒருநாள் கொல்லையில ரொம்ப நேரம் வெண்டப் பிஞ்சு பறிச்சுக் கூடையில அள்ளிக்கிட்டு இருந்தாளா பாத்துட்டா. பாவம். கெனத்தடி இஞ்சின் அறையிலருந்து என்னமோ கெஞ்சுற சத்தம்...

குரல்கூட பழக்கம்தான். அப்பாரு.

தொட்டிசொவத்து மேல ஏறி ஜன்னல் வழியா உள்ற பாத்தா...

மாணிக்கவல்லியும் சந்திரஹாச கரமுண்டாரும். ஆ.

"துத்தேறி. உங்களுக்கு என்ன கெப்புறு? இஞ்ச வந்து முந்தியெப் புடிச்சு இளுத்து அவுக்குறிங்களே. வயசென்ன ஆச்சு? இன்னும் என்ன கவுச்சி எளவு?" கண்களில் வெறி.

"போதும். யாராவது பாத்தா?..."

"அடிபோடி. அறுபத்தஞ்சு வயசு ஒரு வயசா?... நீ ஆரு? எம்பொண்டாட்டி."

"ஆமா. இப்பத்தான் கண்டுபிடிச்சிருக்கிங்களாக்கும் பொண்டாட்டின்னு?"

"ஏய் எத்தினி வருஷமாச்சு? தொட்டேனா?"

"எனக்கு முடியல்லய்யா. சாமி உட்ரு. அசிங்கமாயிருக்கு. சாவலாம்ன்னு வருது"

"எனக்கு... எனக்கு..."

படீரென்று சத்தம் கேட்டது. கதவை ரோசத்தோடு அடித்து திறந்து வெளியே வந்தார் சந்திரஹாச கரமுண்டார் ஒண்ணுமேயில்லாத மாதிரி. பத்தினியும் வெளிய வந்து மாடுகளுக்கு புல் கட்டைப் பிரித்து உதறினாள். காத்தாயம்பாளுக்கு எல்லாம் தெரியும். பசுக்கள் புல்லை முகர்ந்தன.

சின்ன சித்தப்பா கேக்கும். சுப்பாக் கரமுண்டாரு.

"என்ன அண்ணி. அண்ணன் என்ன சொல்றாரு?"

"போ தம்பி. இதெ வந்து எட்டிப் பாக்கிறியாக்கும்?"

உமா ஓடி வருவாள். லேசாக கண் சிவக்கும் பொண்டுவளுக்கு. ஒரே வேகம்தான். அதென்னமோ மாணிக்கவல்லி போக்கே தனிதான். வுட்டா புடிக்கமாட்டா. ஆனா யாரு போக்குலயும் தலைய உடமாட்டா.

அஞ்சினிக்கு வந்தப்போ எல்லாரும் பயந்தாங்க. காத்தாயி அப்ப கைக் குழநதை. இந்த சீராளூர்காரியெ ஏதுக்கு புடிச்சிட்டு வந்தாரு சந்திரஹாசக் கரமுண்டாருன்னு எல்லாருக்கும் ஒரே இது. காரணம், மாணிக்கவல்லி அத்தனைக்கு அருமையான ஜோடி. சந்திரஹாச கரமுண்டாரு ஆறடி ஒசரம். நல்ல தாட்டிகை மேலசட்டை போடமாட்டாரு. தோள்ல ஒரு துண்டு கிடக்கும். ஆசையா. உடம்பு அப்டியே கருங்காலிக் கட்டையில மழமழன்னு தேச்சு மெருகு போட்டமாதிரி பளபளன்னு இருக்கும். பதினாறு நாட்டு கள்ளர் குடும்பங்களிலேயே பெரிய தலக்கட்டு குடும்பமாச்சே கரமுண்டார் வூடு. அப்படித்தான் இருக்கும் எல்லாம். இப்பக்கூட அறுபத்தஞ்சு வயசுக்கு மேலன்னு யாரும் நம்பமாட்டாங்க. இன்னும் திருக்காட்டுப்பள்ளிக்கு நடந்தே போயி திலும்பியும் நடந்தே வந்துடுவாரு. தோளும் மாரும் பாறைபாறையா படைபடையா பயமுறுத்தும். அவங்க தாத்தா ரகுனாத கரமுண்டாரு வாகு அது. இன்னமும் ஒடுங்கல்லெ... ஆமா. எல்லாம் ஒடுங்காது. ஆலை மாதிரி வூடு. அஞ்சினி கிராமத்துலியே மலை மாதிரி தூரத்துலியே கரமுண்டார் வூடு தெரியும். ஊரெ வளச்சுகிட்டு காவிரி ஓடுது. கரமுண்டார் வூடு ஆத்துக்குள்ற பாதி வூடு நிக்கும். ஆமா ஆத்துக்குள் வூட்டு பின் கட்டு முழுசும் நிக்கிது. முப்பது நாப்பது வருஷத்துக்கு மிந்தி பெரியவெள்ளம் காவிரியையே கரைச்சுகிட்டு மேடேறி கடலாப் பாஞ்சிது. பின்னால தொழுவத்துல நூறு மாடு கட்டிக் கிடந்த இடம். அதுக்கும் பின்னால காவிரி இப்பமும் நுங்கும் நுரையுமா வூட்டெ இன்னும் நனைக்கிது. மோதிப் பாஞ்சு ஓடுது. வெறும்

காரைக் கட்டுதான் நூறு வருஷ வூடு. முட்டையும் கடுக்காவும் கருப்பட்டியும் அறைச்சக் கட்டுன வூடு. வூட்டுக் கொல்லையில நின்னு பாத்தா ஆறுதான் எந்தப் பக்கமும். அது கொல்லை இல்லெ. ஆறு. வூட்டு செவுரு எல்லாம் ஆத்துக்குள்ள எப்பமும் முங்கிமுங்கி பாசி ஏறி கறுப்படிச்சு மறுபடி பாசி ஏறி கரமுண்டார் வூட்டு செவுரு மேல வீசுற தண்ணிச் சத்தம் வூட்டுக்குள்ற சளப்புசளப்புன்னு கேக்கும். ராத்திரியிலகூட எப்பமும் தண்ணிச் சத்தம். தவளை கூக்குரல்.

கரமுண்டானுவ எப்பமுமே அடங்குனவனுன்னும் கரமுண்டாத்திய எப்பமுமே எகுறுனவளுவன்னு சொல்வாங்க. உண்மையாத்தான் இருக்கும் போல இருக்கு. பத்து தலைமுறைக்கி அழிச்சாலும் அழியாத சொத்து, மூணு தலைமுறைகூட தாண்டலல்லெ. இப்ப கரமுண்டார் வூடு மட்டும்தான் மிச்சம். எரநூறு வேலியும் தேஞ்சு நூறு வேலியாச்சு. சந்திரஹாசக் கரமுண்டாரு தலெயெடுத்தோடனயே. வூடு பூரா இன்னமும் ஆள் கூட்டந்தான். யாருன்னு சொல்ல முடியாது. எப்பப் பாத்தாலும் அடுப்புல ஒலெ கொதிச்சிகிட்டே கெடக்கும். யாரையும தப்புச் சொல்லபடாது, சந்திரஹாசக் கரமுண்டாருக்கு. எட்டுகெட்டு வூடு இப்பமும் எதுக்கு. இடிச்சிட்டு சின்னச் சின்னதா வூடு கட்டிகிட்டா இந்த சத்திரக் கூட்டமும் வெளியே போவுங்கும் நடுச்சித்தப்பா. மூணு சித்தப்பால கடைசி சித்தப்பா இப்பமும் மைனர்தான். யாரும் ஒண்ணும் சொல்ல முடியாது. கருமுண்டாத்திய எல்லாம் கரமுண்டாரு உட்டுள்ள ஒரு பெரிய ராஜ்ய பாரமே பண்ணிகிட்டுத்தான் இப்பமும் இருக்காளுவ. சுப்புக் கரமுண்டாரு இருக்காரான்னு வாசல்ல சத்தம் கேக்கும். அவ்வளவுதான் கேணிப்பட்டறையோட கௌம்பீடும் சித்தப்பா. வாசல்ல ரெண்டு குதுரெ பூட்டுன கேணிப்பட்டறையிலெ சின்னத்தம்பி நாட்டாரும். இன்னோரு கேணிப்பட்டறையில தம்பி ராசு வன்னியரும் ஒக்காந்திருப்பாங்க. வூட்டுக்கு சைடுல குதுரெ லாயம். இப்ப ரெண்டுதான் நிக்கிது. மிந்தில்லாம் நெறைய குதுரெ. குதுரெ பாக்க, பணிக்கம் பண்ண ஆளு எல்லாம் இருந்துதாம். லாயம் முழுசம் எப்பமும் சத்தமும் எடுபிடியும் இருக்கும்.

சுப்புச் சித்தப்பா சேணத்தை எடுத்து பில்ட்டுக்கட்டி கேணிப்பட்டறையெ தயாராக்குது. பின்னாலியே வந்து நிக்கிறா காத்தாயம்பா.

“உங்கிட்டதான் மோட்டாரு பைக்கு இருக்கே, அப்றம் இதெல்லாம் இன்னும் ஏதுக்காம்? போனா வர்றதுக்கு பத்து

நாளு ஆவுது ஒனக்கு. சின்னம்மா அழுதுகிட்டேயிருக்கு."

"சின்னிப் பொண்ணே. ஒனக்கு இதல்லாம் புரியாது. மூச்சு உடாதெ ஆமா?"

"மோட்டாரு பைக்கெ எடுத்துட்டு போனின்னா சீக்கிரமா வந்துடலாம்ல்ல."

"சீக்கிரமா ஏன் வரச்சொல்ற? வந்து என்னா பண்ண?"

"உமா சின்னம்மா உன்னெ தேடிட்டேயிருக்குல்ல சித்தப்பா?"

"கண்ணு. ஒனக்கு ஒண்ணுந் தெரியாது. தெரியவும் வாண்டாம்.

"அப்பாரு திண்ணெயெ வுடமாட்டாரு. நீயி ஊரு சுத்தி அலையிறதெ நிறுத்தமாட்டெ. நாங்க அளுது மாஞ்சு போவணும்."

"ச்சீ. நாயி. பெரிய பேச்செல்லாம் பேச ஆரமிச்சிட்டயே நீயி, ஆம்மா. பெரிய கழுதையால்லெ வளந்து நிக்கிரெ? உனக்கு தெரிய வேண்டியதுதான். இஞ்ச யாருக்குடி வேல இருக்கு? பெரியவரு யாரெ உட்டாரு வேலை செய்ய? படிச்சிட்டு வந்த என்னையும் படிக்க உட்டாரா? பெரியவரு கார்வாரு பண்ற அய்யருவளோட தஞ்சாவூர்ல சுத்துறாரு. வெள்ளாமெ பண்ற நடண்ணன் எப்பமும் தண்ணியில் மெதந்து கிட்டு பள்ளக்குடியில சுத்திக்கிட்டு கெடக்கு. எனக்கு என்ன பண்ணணும் தெரியல்லெ. கண்ணு உட்டெறியிற எடம்ல்லாம் நம்ம நெலமாயிருந்து தேஞ்சுகிட்டே வந்துருச்சி. வூடு முழுசும் ஒறெ மொறெ கூட்டம். எப்பமும் இப்பமும் உக்காந்து தின்னா என்ன ஆவும் சொல்லு? பெரியவருகிட்ட யாரும் சொல்லமாட்டாங்க. மோட்டார் பைக்குல ஏறி ஓட்டிகிட்டு எங்க போறது? தெரியாது. வரத்தெல்லாம் நின்னு போச்சு. பெரியண்ணி இப்பமும் கோயிலு கோயிலா அவுசேகம் பண்ணிகிட்டு கோவில் கோவிலா கட்டளை உட்டுகிட்டேயிருக்கு. அதென்னமோடி சின்னிக்குட்டி, நம்ம வூடு உளுவாது போல இருக்கு. வூடு உளுந்தாலாவுது அந்தண்டை போகலாம். புரியுதாடி ஒனக்கு. ஏட்டிப் பொண்ணே."

"ஆமா. அதுக்கு எங்கப்பாகிட்ட சொல்ல வேண்டியதுதானே?"

"கரமுண்டாத்தியாடி நீய்யி? இஞ்ச யாரு யாருகிட்ட என்ன கண்டிச்சுக் கேக்க முடியல. பெரியவருகிட்டெ யாரு பேசுறது? பெரிய பெரிய கள்ளன் வூடுவள்ளாம் உளுந்து பெய்ட்டுதுடி. கரமுண்டார் வூடு மட்டும்தான் இப்டி செங்குத்தா நிக்கிதுன்னு புரியமாட்டேங்கிது. வூட்டுள்ள இருந்தா மூச்சு முட்டுது. ஒவ்வொரு அறையும் நெல்லு மில்லு மாதிரி ஹோன்னு கெடக்கு. உங்கிட்ட

சொல்லாம யாருகிட்டச் சொல்ல? வூட்ட வுட்டு ஓடணும் போலவே தோணுது. என்னடி இது? யாரு கூடெயும் பேசாமெ, எப்பப் பாத்தாலும் யாரு கூடெயும் மூச்சு விடாமெ, அவங்களும் பேசாமக் கொள்ளாமெ... உம்முன்னு..."

"உன்னெ யாரு பேச வாண்டாம்ன்னாங்க? உமா சின்னம்மா அளுவுது. அதுகிட்ட பேசு.....

"...வூட்டுக்குள் வர்ற மாதிரியா இருக்கு? கோவிலுக்குள்ள வர்ற மாதிரி... எப்பப் பாத்தாலும் திரிசியண்ணி பூஜெ... எங்கப் பாத்தாலும் சாம்புராணி பொகையிது. ஊது பத்தி... எப்பப் பாத்தாலும் வூடு முழுக்க ஜனம். ஆணு பொண்ணு, யாராவது ஏதாவது செஞ்சிகிட்டும், தொடச்சுகிட்டும், மெருகு போட்டுகிட்டும் இருக்காங்க... ஆனா புதுசா ஏதும்இல்லெடி கண்ணு. எல்லாம் சரியா நருவுசா நடந்துகிட்டே இருக்கு. எங்களை எல்லாம் பெரியண்ணெ இப்டியே வளத்துரிச்சி. தப்பிச்சுக்கவே முடியாது. எளங்காடு பெரியண்ணெ சுந்தர வாள்சுத்தியாரு வூடு எங்க இப்ப? குதுரெப் பந்தயத்துலியே எல்லாத்தையும் அழிச்சாரு. ராஜய்யன் சேனாவரையரு பண்ணை என்ன ஆச்சுதோ? திருக்காட்டுப்பள்ளியிலியே பெரிய குடும்பம் நாசமாப் போச்சு. காங்கிரஸ் கச்சி கச்சின்னு அழிச்சாரு, தியாகியாயி சொதந்திரப் போராட்டம்ல்லாம் பண்ணுச்சே அண்ணன் சேதிராயிரு? தெரியும்ல்ல?ஒனக்கும் தெரியும்ல்லன்னேன். என்ன ஆச்சுடி பொண்ணே? குடும்பமே தெருவுல நிக்கிது? திருவாளூருக்கும் தஞ்சாவூருக்கும் தேவிடியா வூட்டுக்குமா அழிச்சாரு. பெரியண்ணனுக்கு ஒரு கெட்ட வளக்கம் உண்டுமா? ஒரு தேவிடியா வூடு தெரியுமா? ஒரு பீடி சிகரெட்டுக் குடிக்குமா? ஒரு கச்சி தெரியுமா? ஒரு தீம்பு புரியுமா?..."

"சித்தப்பா, எங்க போறெ நீ இண்ணைக்கி ஒன்னெ வுடமாட்டேன். ஆம்மா."

"போடி, சின்ன செறுக்கி. எனக்கு ஒரு கெட்ட சங்கதி வளக்கம் இருக்குமா? அண்ணி என்னெ அப்டி வளத்துடுச்சி, கரமுண்டாணுவ எல்லாம் கரமுண்டாத்தியகிட்ட அடக்கம்ன்னு பேச்சே இருக்கு, தெரியும்ல்ல? நம்ம வூட்ல எப்பமும் பெம்புளைவ ராச்சியம்தான். பெரியவருகூட ஒளிஞ்சிகிட்டேதானே வெடியாலம்பற போயி குடிச்சிட்டு வர்றாரு. தைரியமா குடிக்கத் தெரியுமா?"

"ஏய், சித்தப்பா நீ குடிப்பியா?"

"அதான் தெரியுதே என்னால முடியாதுன்னு. நடண்ணன் பள்ளக் குடிக்குள்ள குடும்பம் பண்றாருன்னு சொல்றாங்க. யாரு பாத்திருக்கா? யாருக்குத் தெரியும்? நம்ம ஒரு தப்பும் பண்ணல்லெ. ஆனா நம்ம வூட்டு சொத்தும் காஞ்சிதான் போச்சு. எல்லாம் உன் கல்யாணத்துக்குத்தான் காத்துகிட்டு நிக்கிறோம். ஒங்கல்யாணம் ஆச்சுன்னா அப்புறம் எல்லாம் சரியாயிடும். ஆமா."

"அதுக்கு ஏஞ்சித்தப்பா இந்தப் பயலுவளோட சேந்து கேண்ணிப்பட்டறையெ எடுத்துகிட்டு கோலிக் கோலிச் சுத்துறே? சுத்தி சுத்திப்புட்டு இஞ்சதானே வர்றே?"

"உமாவுக்குப் புரிஞ்சுதா? உனக்குப் புரிய? வூட்டுக்குள்ள முந்தானையெப் புடிச்சிகிட்டு இருப்பான் கரமுண்டான்னு கேலி பண்றாங்க ரொம்ப நாளா. நம்ப வூட்டு பொம்பளைகள் எல்லாம் எல்லாம் பண்ணும். எல்லாம் எதுக்கும் பயப்படாது. நம்ம தாத்தா ரகுநாதக் கரமுண்டாரோட அப்பாரு வய்யாபுரிக் கரமுண்டாரு ஒரு சாமியாரு. அவுங்கப்பா சுப்பாக் கரமுண்டாரு. அவப்பாரு ராஸமாணிக்க கரமுண்டாரு ரஸவாதம் பண்ணாராம்.அதுலியே அழிஞ்சாருன்னு சொல்லும் அப்பாயி. எல்லாம் பொம்பளை ராஜ்யம். நீயிகூட அதுல சேத்திதான். கரமுண்டாத்திய எல்லாம் எஞ்சயும் இப்படித்தான். ஆம்பளைக்கி சொந்தம் கள்ளன் எல்லாம் கரமுண்டாத்தியனைப் பாத்துத்தான் கத்துக்கணும்ங்கும் நடப்பாயி. ஒனக்குப் புரியாதுடி குட்டி சின்னி, கரமுண்டாத்தியுவ ஆம்பளையளெ வளக்குறதே அப்படித்தான். கரமுண்டாத்தி ரத்தத்தெ ஊட்டித்தான் ஆம்பளைவளெ வளக்குறாளுவளாம். மவனுக்கு அதுதான், புருசனுக்கும் அதுதான். வெச்சுகிட்டா அவனுக்கும் அதே ரத்தந்தான்டாங்கும் அப்பாயி. நூறு நூத்தம்பது வருஷமா எந்த ஊடாவுது நிக்குதா? நிக்குமா? அட பாரேன் கரமுண்டாரு வூடு மட்டும் உளமாட்டேங்கிதே."

"ஏன் ஒனக்கு இந்தப் புத்திச் சித்தப்பா?கரமுண்டாரு வூடு வுளுவணுமாக்கும்?"

"நூறு நூத்தம்பது வருஷண்டி குட்டி. என்னைக்கி உத்திரம் எல்லாம் கீழ கழட்டிகிட்டு உளுவப் போவுதோ தெரியாது. ஆனா உளுவும் அதுக்கும் மிந்தி ஓடணும்."

"ஒனக்குப் பைத்தியம்ன்னு உமா சின்னம்மா சொல்றது சரிதாஞ் சித்தப்பா"

"நான் ஒர்த்தந்தான்டி பேசிகிட்டிருக்கவன். அம்ப வூட்ல வேற யாரு பேசுவா? இஞ்ச எல்லா ஆம்பளையும் ஊமைதான்.

உங்கிட்டெ எனக்கென்ன வீண் பேச்சு. வெளிய அவனுவ காத்துகிட்டிருப்பானுவ."

"வாண்டாஞ் சித்தப்பா. ஊரெ சுத்தாதே. இதுவும் போதைதான். இதுவும் கெடுதிதான்"

"சரிய்யா கரமுண்டாத்தியா வந்துட்டெடி நீயும். இப்படியே ஊட்டி உங்க வெச்சு... அங்க இஞ்ச போவாதெ, அதெ இதெப் பாக்காதென்னு சொல்லிக் கொடுத்து... வூட்டுக்குள்ளயே போட்டு, வெந்தயக் கொழம்பு. வெறாமீன் பொரியலு சுக்கு ரசம்ன்னு ஒடம்புக்கு வூட்டம்ன்னு ஏத்தி கடைசியா முந்தாணியில இறுக்கிட வேண்டியதுதான் போ"

"ஆம்மா உன்னெ உமா சின்னம்மா இறுக்கித்தான் வெச்சுருக்கு ஏஞ்சித்தப்பா? நீ வேற?"

"வெளிய ஆளு நிக்கிது. போகணும். நீயி இப்ப என்னெ இறுக்கி நிறுத்திகிட்டில்லியா? நிதம் சோத்துல நெய் ஊத்தக் குனியும் போது உமா இதே தாஞ் சொல்றா. எட்டாங்கட்டுல கெடக்கே தொரச்சியப்பாயி அதுகிட்ட பலவாரம் சாப்பிடப் போனாலும் அதுவும் இதேதாம் பொலம்புது. கேணிப்பட்றெ பந்தயத்துக்குப் போவாதடா பேராண்டின்னு."

"போவாமெத்தான் இரேஞ் சித்தப்பா."

"வூடு தலைக்கி மேல கனக்குதுடா சின்னி. ஒண்ணுமே சுயமா பண்ண முடியாது. கரமுண்டார் வூடு. அடேய்ங்கப்பாங்கிறாங்க. உமா எப்பவும் அவ அம்மா வூட்டுக்கு போயிட்டு வந்துட்டேயிருக்கா அஞ்ச இந்த வயணமில்லாம் ஒண்ணுமில்லெ. எல்லாரும் ஒழைக்கிறோம். யார் யாரோ தெரியாது. உழைக்கிறாங்க. ஆலை மாதிரி எல்லாரும் சாப்புட்றாங்க. எது யாருக்குப் போவுது? தெரியவே தெரியாது. நெறைய பேரு என்ன வுறவு? யாருன்னே எனக்குக்கூட தெரியாது. நூறு மரக்கா அரிசி தினமுமா வேவுது. உமா கையக் காட்டுறா. நூறு தேங்கா ஒடைச்சி துருவுறாங்க. பாலு பீச்சி வரமுந்தி அண்டாவுல காப்பி இறக்குறாங்க. தலைக்கி மேல மட்டுமில்லெடி சின்னி கரமுண்டாரு வூட்டு தரை தளம் எல்லாம் மேல எழும்பி அமுக்குது. தப்புச்சுக்கவே முடியாதுன்னு உமா கண்ணாலேயே உருட்றா. தெரியுமா உனக்கு? யார் யாரோன்னு ஏன்டா நெனைக்கிறேங்கிறாரு பெரியவரு. வூட்டுக்கு முந்தி நெய் ஊத்தாம கொடத்துலதான் இன்னும் உருக்கி எடுக்குது. திரிசியண்ணி. இன்னும் கையில வாங்கித்தான் பெரியண்ணன்

உறிஞ்சிது. அப்ப உமா என்னெ கொடையிற மாதிரி பாக்குறாடா. உன்னாலெ என்ன முடியும்னு ஒரு பார்வெ. எகத்தாளம்.

எஞ்சியாவுது தொலைஞ்சு போகணும்டா. காத்தாயம்பா, நீ மட்டும் கல்யாணம் பண்ணிகிட்டு இஞ்ச இருந்துடாதெ ஆமா, ஓடிடு. ஓடியே போய்டு. நானும் ஓடித்தான் போகணும்.

உமாமஹேஸ்வரி காத்தாயம்பா தோளைப் பிடிச்சிகிட்டு நிக்கிறா பின்னாலியே... கேணிப்பட்டறை பளபளன்னு நிக்கிது. தோல் ஜேணம். அதுல வெள்ளில ரெண்டு கிளி ஒண்ணெ ஒண்ணு பாத்துகிட்டு. வெள்ளிப்பட்டன் மின்னுது. வண்டிச் சக்கரத்துலகூட வெள்ளி வளையம் பதிச்சிருக்கு.

"என்னடியிது? இன்னைக்கி காத்தாயம்பாளெ கெளப்பி உட்டுட்டெ. ராத்திரீல பொலம்பல் போதாதா? கேணிப்பட்டறையின் மேலேறி உக்காந்து சின்னச் சித்தப்பா.

"பாரு சின்னட்டி மாமாவெ? நானு எதுனாச்சியும் உங்கிட்ட பேசுனனா?" மான்போல் மருண்டு கேட்ட உமாவை கேணிப்பட்டறையில் இருந்தபடியே திலும்பிப் பார்த்த சுப்பாக் கரமுண்டாரு அசந்து போனது, காத்தாயம்பாளுக்கும்கூடப் புரிஞ்சுது. வூட்டுக்குள்ளன்னா இதுகூடப் பேசமாட்டாங்க யாரும். அத்தனை வேகம் இதுக்கு. எட்டுகட்டு வூட்டுல ரெண்டாங்கட்டு முழுசும் சின்ன சித்தப்பாவுக்கும் சின்னம்மாவுக்கும்தான். உமா சின்னப் பொண்ணுதானே? பயம். எங்கே மாமன் இன்னும் ரெண்டு பொண்டாட்டி கொண்டு வந்துருவானோன்னு உதறல். எப்போதும் காவல்.

சின்னச்சித்தப்பா நல்ல அழகுதான். கரமுண்டாரு வூட்டுப் பையன்னு எல்லாருக்குந் தெரியும். நல்ல உசரம். தாட்டிகை. நல்லாப் படிச்சிதாம். பாதில நிப்பாட்டிட்டாங்க. சந்தன நிறம். பவுன்மாதிரி உடம்பும், கருகருன்னு மீசையுமா கருக்குவாள் மாதிரி இருக்கும் சுப்புச் சித்தப்பா. ஆத்துக் குளியல் மாதிரி அஞ்சினிக்குள்றயே தோட்டத்து எறை கெணத்துக்குளியலுக்கு காத்தாயம்பாளும் சுப்புக் கரமுண்டாரும் தாம் போவாங்க. சுத்திலியும் மாமரம், பலாத்தோப்பு, நடுவுல பெரிய கெணறு கெணத்தக்குள்ள குளம் மாதிரி, பால் மாதிரி தண்ணி. தொமீர் தொமீர்ன்னு காத்தாயம்பாளும் குதிச்சு நீய்யுவா. நெல நீச்சு கோடையில அபார சுகம். அப்பாயி காத்தாயம்பாளெக் காணோம்னு செத்த நேரத்துல தேடிட்டுவந்து கத்தும். 'தொமீர். தொமீர்' இப்பமும் காத்தாயம்பா குதிப்பா தண்ணில.

பொண்ணுங்க ரொம்ப கருக்கு. கரமுண்டாத்திய முறுக்குறது ஒண்ணுமில்லெ. கிணத்துல குளிக்க எல்லாருமா கட்டு சாத மூட்டையோட வந்துடும். பொண்ணுவ வந்தா ஆம்பளைவ என்ன பண்ணும், வேட்டைக்கி கௌம்பீடும் எல்லாம். தோப்பு தோப்பா எறங்கீடும். நாகலக்ஷ்மியோட பத்து பொம்பளைவ வரும். நாகலெக்ஷ்மி சந்திரஹாச கரமுண்டாருக்கு மூணாந்தாரம். அவ்வே வூட்டு ஜனம் எல்லாமே இஞ்ச கரமுண்டாரு வூட்லதான் வாசம். முப்பது நாப்பது வருஷத்துக்கு மிந்தி மதாரத்துல இருந்த ராஜாளி வாத்தியார் பொண்ணு நாகலக்ஷ்மி. பத்து பொண்ணோட பொறந்தது. கொஞ்சம் அள்ளுண்ட குடும்பம். சொத்து பத்து இல்லெ. ஆனா வாட்ட சாட்டமாயிருக்குமாம். இப்ப நாப்பத்தெட்டு வயசு. இப்பமும் தலை ஒண்ணும் நரையில்லாம, நூறு பேருக்கு தெனம் வடிச்சுக் கொட்டுது. குனிஞ்சு நிமிர்ந்து நின்னா இப்பக்கூட அசராது. எட்டு பெத்து எடுத்து எட்டையும்–எல்லாமே ஆம்பளப்புள்ளெதான்–பறி குடுத்து அப்டியே படுக்கையில விழுந்து ரொம்ப கஷ்டப்பட்டுத்தான் தேறுனது.

காத்தாயம்பாளுக்கு இப்பமும் அப்பாரு எப்ப நாகலக்ஷ்மியம்மாள தேடிகிட்டுப் போவாருன்னு தெரியும். மத்த கள்ள வூடு மாதிரியில்லெ கரமுண்டாரு வூடு. ஆம்பளை எல்லாமே அடங்குன சரக்குதான். சுத்தமான ஆம்பளைவ, வேற பொம்பளை தேடுறது இஞ்ச வளக்கமேயில்லெ. அப்ப? பெம்பளை போதாது. ஆம்பளை வெளிய போறது, மேயுறது, இல்லென்னா உள்ளியே மேஞ்சுதானே ஆவுணும்? கரமுண்டானயெல்லாம் கெட்டின பொம்பளைவ ஏன் பின்னெ கரமுண்டாத்தியளப் போல, ஆயிரப்போறாளுவளாங்கும் தொரச்சியப்பாயி. நாகலக்ஷ்மி, இருட்டோட நடு விடிய ராத்திரி வேளையில திண்ணைக்கி போறது, ரொம்ப நேரம் ராதெ ஒரு பக்கம், நாகலக்ஷ்மி மறுபக்கமா, ஒரே நேரத்துல கட்டிகிட்டு கெடக்குறது, காத்தாயம்பாளுக்குத் தெரியும். யாரும் பாத்துடக்கூடாதுன்னு பெருமாளுக்கு நேந்துக்குவா சின்னிகுட்டி. நாகலக்ஷ்மியெல்லாம் பொம்பளையேயில்லெ. அதுவளுக்கு என்ன வேணும்? வெளிய தெருவ போகுமா? என்ன வாண்டாம்? அதுவளுக்கு கோவந்தான் வருமா? விக்ரகம் மாதிரி அப்டி ஒரு அழகு. தாட்டிகை. சேர்க்கை. அடுக்கடுக்கா நகை பூட்டிக்கும். இப்பக்கூட மஞ்சளை அப்பி பூசிக்கும் தெய்வம் மாதிரித்தான். யாரு தும்பத்துக்கும் போவாது. நல்லா திங்கும், நல்லா ஓயாம மாடு மாதிரி ஓழைக்கும், வூடு வௌங்க வந்த லக்ஷ்மி, அதெல்லாம் மனுஷியே இல்லெ. பட்டு சீலெதான் கட்டும், எல்லாம் ஜரிகைப்புட்டா. நாள் முச்சூடும்

சமையல் வூட்டுள்ள அரைச்சு கரைச்சு காச்சிச் சுண்டவெச்சு எடுத்த வார்ப்பு செலை மாதிரி சுத்திகிட்டேதான் இருக்கும். திருவிழா ஏதாவது வந்தா சாமி பாக்கக்கூடப் போவாது நாகலக்ஷ்மியம்மா. காத்தாயம்பாளுக்குத் தெரியும். எல்லாரும் பொய்ட்டா வூட்ட யாரு பாத்துக்கிறது?ன்னு சொல்லும். எல்லாரும் போய்டுவாங்க. வெடிய வெடிய கூத்து லாவுணி எல்லாம் கோயில்ல நடக்கும். ஒண்ணும் பாக்காது நாகலக்ஷ்மி. ஊரு பூரா தெப்பத்துல காவேரிக் கரையில் நிக்கும். பெருமாளு தெப்பத்தில ஏறினதும் சந்திரஹாசக் கரமுண்டாரு பொறப்ட்டுடுவாரு. ஏதுக்காம்?

அதென்னமோ யாரும் கேக்கமாட்டாங்க. வூட்டுலதான் இருப்பாரு. தெரியுமே. அடுத்த நாளு நாகலக்ஷ்மியம்மா வேண்டுதலுக்கு ஆத்தெத்தான்டி தில்லஸ்தானம், பட்டீஸ்வரம், திருவையாறுன்னு போயிட்டுவரும். "இது மட்டும் எதுக்குப் போறே?"ன்னு எல்லாரும் கேப்பாங்க.

காத்தாயம்பாவுக்காக பெருமாள வேண்டிக்கும். இந்தப் புள்ளையாவது தக்கணும் தக்கணும்ன்னு வேண்டிக்குவாங்க எல்லாரும். புள்ளை உண்டாவும். எல்லாச் சடங்கும் நடக்கும் என்னமோ. எல்லா வெரதமும் பூஜையும் கல்பனையும் ஏராளமா நடக்கும். ஆயிரம் பத்தாயிரம்னு செலவு பண்ணி யாகம் கழிப்புன்னு என்னென்ன மாயமில்லாம் பண்ணுவாங்க. மந்திரமா?

ஐம்பத்தஞ்சு வயசுலகூட நாகலக்ஷ்மி ஒரு கொழந்தையெப் பெத்து ஒடனே வாரிக் குடுத்தது. ஒண்ணு தக்கல்லெ. தக்காதுன்னு எப்டியோ தெரிஞ்சுடும். அப்றம் ரெண்டு மாசம் துக்கம்தான். சனியந்தான். சாவு வூடுதான். ஒரே அளுவை மயந்தான். திரிசியம்மா அழுவ ஆரமிச்சுதுன்னா மாரியம்மன் ஒப்பாரி முளுசும் பாடி ஒட்டாரம் போட்டுட்டுத்தான் அடங்கும். அதென்னமோ நாலுகுடி பொம்புளைவளும் நெறையத்தான் பெத்துதுவோ. ஒண்ணுந்தக்கல. திரிசியம்பா பெத்ததெல்லாம் ஆணாம். வாரி வாரிக் குடுத்துட்டு இப்ப அடுத்த தலக்கட்டுக்காரி பெறமாட்டாளான்னு ஒப்பாரிக்கத்தான் காத்துக் கெடக்கு. நல்ல பறங்கிப் பழமாட்டம் இருக்கே தொரிச்சியப்பாயி. அது சொல்லும்: "போங்கடி போக்கத்தவளுவளா. எம்மவன் பெத்துக் குடுப்பாண்டி இன்னும் பத்து குழிப் புள்ளய நோண்டி எடுத்து மடியில போட்டுகிட்டுல்ல அளுவுறாளுவோ." நடப்பாயும் கத்தும். இப்டியே...

எத்தினி சோசியம்? எத்தினி கணக்கு? எத்தினி குறி? எத்தினி மறிமாயம்ல்லாம் பண்ணியாச்சி? ஆம்பளப் புள்ளெ மட்டும்

தக்கவேயில்லெ. அதுனாலியே ஒடமொற கூட்டம் கூடிப்போச்சி. தம்பியளுக்காவுது ஆண் வாரிசு இருக்கான்னா... அஞ்சியும் கோளாறுதான். ராமுக் கரமுண்டாரு பெத்ததெல்லாம் நாலு பொண்ணு. எல்லாம் கட்டிக் குடுத்து வடிச்சாச்சு. அடுத்தது ராஜவேலு. ஒரே ஒரு பொட்டை. எல்லாம் ஆகி கல்யாணம் முடிஞ்சி போனது, திரும்பிக்கூடப் பாக்கல்லெ. சிங்கப்பூர்ல இருக்கு. ரொம்ப நாளைக் கல்யாணமே வாண்டான்னு இருந்தது. சுப்புக் கரமுண்டாரு சின்ன பொண்ணு ஒண்ணு வந்து வூட்டக்குள் தலைக்கு மேல ஏறும்ன்னு எதிர்பார்க்கவேயில்லை. சிங்காரயரு கொண்டாந்த சம்பந்தம். உமாமஹேஸ்வரின சோழகரு வூட்டுப் பொண்ணு. சுப்பு அப்பக் கூட வாண்டாம்ன்னுது. தொரச்சியப்பாயி நாள் முச்சூடும் திட்டுச்சின்னு சரின்னு ஒப்புத்துக்கிச்சு.

இப்ப வூடு தங்கமாட்டேங்கிது. ஒரு தப்புத்தண்டா கெடையாது. ஒரு சோக்கு ஒரு ஆட்டம்பாட்டம் ஒண்ணுக்கும் போவாது. ஊரு சுத்தும். மோட்டாரு பைக்கு மூணு நாலு கெடக்கு. எதுனா ஒரு வண்டில 'புடுபுடு' ன்னு போய்ட்டேயிருக்கும். மைனருன்னு சந்திரஹாச கரமுண்டாரு சொல்லுவாரு. ஆனா மைனர்த்தனமே தெரியாது. திருவியாத்துல அசோகா அல்வா வாங்கித் திங்கும். தஞ்சாவூர்ல சினிமா கொட்டாய்க்குப் போவும். நாலு கள்ளவூட்டுப் புள்ளைகளோட கோலிக் கோலி ஊர் காடு சுத்தும். ஆனால அதுவ ஊர்மேயறப்போ இது தனியா ஊருக்குத் திரும்பிப் பாஞ்சுடும்.

ராத்திரி பதினோரு மணிக்கு வூட்டு வாசலெ இடிக்கும் போதுதான் உமாமஹேஸ்வரி ஞாபகம் வரும். கோட்டைக் கதவு தெறந்து அம்பாள் உள்ள அழைக்கும் போது திண்ணையில மேல் திண்ணையில... எப்போதும் சந்திரஹாச கரமுண்டாரு பொரண்டு கெடப்பாரு பொண்டாட்டியளோட. அதென்னமோ அப்டி ஒரு திண்ணைச்சுகம் அவருக்கு. யாரும் கேக்க முடியாது. அவரும் பேசமாட்டாரு. கீழ் திண்ணை வெளி முத்தத்தில பத்து இருபது பள்ளனுவ படுத்துக் கெடப்பானுவ. அவனுவளுக்கு அவனுவ வூட்ல பொண்டாட்டிய இருக்கத்தானே இருந்தாளுவ. ஆனா அவனுவ படுக்க, காவலுக்கு கரமுண்டாரு வூட்டு வாசக்கட்டுலதான் எடம்...

நசுங்கின மல்லியப் பூ வாசனை நெருடும். உள்ள வந்ததும் உமா சாப்பிடக் கூப்புடும். மாப்பிள்ளை சுப்பு போமாட்டார். ஊர் பூரா சுத்தி என்னன்னமோ தின்னு வந்திருப்பார். வேண்டாம்பார். உமாவுக்கு ஆரம்பத்துல இது சகஜமா இருந்து. அப்றப்பறம் வெளி

வர ஆரம்பிச்சிடுச்சி. வயசுக்கு மேல 20 வயசு வித்யாசம் வேற. சின்னப் பொண்ணுதான். என்ன பண்ண? காத்தாயம்பாளுக்கு இதும் தெரியும். சித்தப்பா சின்னமாளை அழத்தான் வெக்யும்னு தெரியும். உமாமஹேஸ்வரி காத்தாயம்பாவிட ஒரு வயசு சின்னவதான். சின்ன சித்தப்பாவுக்கு வயசு நாப்பத்தஞ்சு. காத்தாயம்பா வயசு இருபது. உமாவுக்கு பத்தொம்பது. ஆனா திருமக்கோட்டை சோழகருவாகு வழி. நல்ல சந்தனம் குங்குமம் கலந்து பால்ல அறைஞ்சு செலையா ஊத்தி மெருகு போட்டாப்ல இருப்பா உமா. பவுன்ல பண்ணின விக்ரமாயிருக்கும் காத்தாயம்பா. ரெண்டும் சேந்தா அக்கா மாதிரி இருக்கிறது காத்தாயம்பாதான். உமாவுக்கு காத்தாயம்பான்னா உசிருதான்.

அடுத்த நாளு அழுதுகிட்டு இருக்குற உமாவுக்கு ஆறுதல் பேசத் தொணை எல்லாமே காத்தாயம்பாதான். பேச்சு இப்டித்தான்.

“என்ன சின்னம்மாது? நீங்க அழுதுகிட்டு கெடந்தா யாராவது எதுனாச்சும் சொல்லப் போறாங்க. ஏந்திரிங்க. சித்தப்பாவெ தெரியாதாக்கும்.”

“ஆமாடி, உங்க சித்தப்பனுக்கு நீயி வக்காலத்து வாங்கு... ஆம்மா.”

“ஆமா. சித்தப்பா என்ன தப்பு பண்ணுனது. சொல்லுங்களேன்.”

“ஒனக்கென்னடி கன்னிப்பொண்ணு. ஒரே வாரிசு. ஏங்கஷ்ட்டம் என்னோட.”

“என்னன்னுதான் கேக்றன்ல்ல, சொல்ல மாட்டிங்களா?”

“என்னாத்தச் சொல்ல?”

“நீங்க சொல்றபடி கேக்கமாட்டேங்கிதா சித்தப்பா? சொல்றதெ கேக்க மாட்டேங்கிறாங்களா?”

“சொல்லவே நேரமில்லியேடி.”

அப்டியே சின்னமாவெக் கட்டிக்கும் காத்தாயம்பா. ரெண்டு போரும் கண்கலங்க அப்டியே நின்னுகிட்டேயிருப்பாங்க. என்னமோ ஒரு அவதி, சொல்ல முடியாத ஊனம், வெளித்தெரியாத புடுங்கல். இதுக்குள்ள இருந்து ரெண்டு பேரையும் அலங்க மலங்க அடிக்கும். கரமுண்டாரு வூட்ல சோளகருவூட்டுப் பொண்ணு இருந்தாலும், ராஜாளியாரு வூட்டுப் பொண்ணாயிருந்தாலும், சேண்டப்பிரியர் வூட்டுப் பொண்ணாயிருந்தாலும் சரி, எல்லாம் கரமுண்டாத்தியாயிடுவா. ஆயித்தான் தீரணுங்குமே அப்பாயி

தொரச்சி. அது உண்மையாத்தாம்போல இருக்குன்னு தோணும் காத்தாயம்பாளுக்கு.

என்ன கோளாறு? ஏன் உமா இப்டி? இத்து இத்து எலையாப் போறாளாம்? அது கெடக்கு. அந்தண்டெ திண்ணையில இப்பமும் அப்பாரு கிண்ணாரம் கொட்றாரு. இதென்ன இப்டித் தேஞ்சு போறா உமா?

காத்தாயம்பாளுக்கு நெஞ்சு 'படக் படக்'குன்னு துடிக்கிது. மேல அங்கணத்துல அறைவாசல்ல தல வெச்சுப் படுத்துக் கெடக்கா... முத்தமெல்லாம் முல்லை படந்து கெடக்கு. நடையில எங்கும் ஆளுவ படுத்துக் கெடக்கு. ராஜியக்கா, அப்பம்மா, சந்திராத்தெ, நாகு அத்தாச்சி, ஒடையாலூர்த் தெசுந்தாம்பா. புள்ளையும் குட்டியுமா இப்பமும் வூடு கரமுண்டார் ஊடாவே நிக்குது. சின்னப் புள்ளைவ மட்டும் பத்து இருக்காது? காச்சு மூச்சுன்னு கொரட்டை சத்தம் வேற, ஆறாங்கட்டு முத்தத்துலகூட அளுவ நெறஞ்சுதாங் கெடக்கு. யாரென்னு போவச் சொல்ல? யாரென்னு வெரட்ட? பத்து நூறு வருஷமா இதே மாதிரி இருந்ததுவ. தின்னு தீக்க முடியல்லியே...

காத்தாயம்பா நெஞ்சு 'திக் திக் திக்'ன்னு அடிச்சுக்குது. வூட்டு பின்னால காவேரி சித்தலையா சித்தலையா கரமுண்டாரு வூட்டு சொவத்து மேல கெத்துகெத்துன்னு வீசுற சத்தம் 'சளப் சளப்'ன்னு, எங்கோ தூரத்லருந்து கேக்ற மாதிரி கேக்குது.

யாரே கூப்புட்ற மாதிரியிருக்கு – இருட்டு – யாருன்னே தெரியலை. யாரு? அன்னிக்கி காத்தாயம்பா பெருசானாளே அண்ணைக்கி வந்த மாதிரி ஜொரம். ஒடம்பு பூரா ஒரு காந்தல். கொல்லையில பள்ளத்திக்கி எலையில சோறு வெச்சுக் குடுக்கச் சொன்னுச்சு திரிசியம்பா. பள்ளத்தியெப் பார்த்தா எஞ்சியோ பாத்தாப்ல ஒரு சாயல். பள்ளத்தி மாதிரியே இல்லெ. பத்து இருபது வயசு இருக்கும். நல்ல கருகருன்னு முடி. பாரமா தொங்குது. காலையில இருந்தே ஒரு மயக்கமா வேற இருக்கு காத்தாயம்பாளுக்கு. கேட்டா

"ஒம் பேரென்னடி?"

"செவத்தெ."

"செவத்தெயா?"

"ஆமாம்மா."

'பள்ளத்தி கட்டு' கட்டுனு ஆளுக்கு பொடவை. பெரிசா பிதுக்கிட்டு மாரு. புஸுபுஸுன்னு ஒடம்பு. அழகா மாரு ரெண்டும் முந்தி வந்திருக்கு... ஆ...

"சாம்பப் பய தானே ங்கொப்பன்?"

"ஆமாங்கம்மா"

"நீ ஏன் இஞ்சல்லாம் வர்றதேயில்லியாம்?"

"அக்கரைக்கிப் போயிட்டேம்மா"

"ஏன்டி அக்கரைக்கிப் போனே? நம்ப வூட்டு கரமுண்டாரு பள்ளத்திதானே நீயி?"

"அதெ ஏம்மா கேக்குற? பொண வாசல் பள்ளன் ஒத்தனோட ஓடிப் போய்ட்டேன்"

"அடிப்பாவி, வுடுவானுவளா? என்னா செஞ்சானுவ? நீயாவா ஓடுனெ?"

"நம்ப கரமுண்டாரய்யா பத்து பள்ளனுவளோட வந்து தூக்கிப் பொட்டு மறிச்சு, அவனெ கொன்னு எடுத்து, என்னெ கிட்டியில போட்டு இளுத்தாந்துட்டாங்க"

"யாரு பெரிய சித்தப்பாவா?"

"நாலு நாளா கொட்டுல்ல கட்டிப் போட்ருந்தாங்க. அப்றமா அவுத்துவுட்டாங்க"

"திலும்பி அக்கரைக்கி ஓடிப் போவுணும்ன்னு தோணல்லியா? அவன் வுட்டுப்பிட்டானா?"

"எஞ்சென்னு ஓடுவம்மா நானு? எஞ்சேன்னு ஓட? கரமுண்டாரு வூட்டுப்பள்ளத்தின்னு எஞ்சியும் தெரியும். இளுத்துகிட்டு ஓடுன பாவி உட்டுட்டுத்தான் ஓடிட்டானே"

"ஓடாமெ என்னடி பண்ணுவான்? ஒனக்கில்லெ இருந்துருக்கணும் நல்லபுத்தி. ஆம்புட்டா இடுப்பெ முறிச்சுடுவானுவளே பள்ளனுவளே" கண்ணீர் வடிய இலையில் போட்டதை வழித்துத் தின்னபடியே உட்கார்ந்திருந்த செவத்தெயெப் பார்த்தா 'பகீர் பகீர்'ன்னுது. செவத்தெ சிவப்பா அழகா பெரிசா... எல்லாருஞ் சொல்றாங்களே சித்தப்பா பள்ளத்தியள கோலிகிட்டுத் திரியுதுன்னு. இவ கிட்ட கேக்கலாமா? காத்தாயம்பாளுக்கு இதுவும் வேணும் தெரியணும். அப்பாரு மட்டுமில்ல, பெரிய சித்தப்பாவும் குடிக்குமே... இது மட்டும்...

“ராமுக்கரமுண்டாரா வந்து இளுத்துட்டு வந்து கொட்டடியுல போட்டது? ஏன்டி?”

“ஆமாம்மா”

“நாலு நாளா கொட்டடியில ஒன்னெப் போட்டு... ஒதச்சாங்களா?”

“... ... ... ”

“என்னடி வாயிலெ? சொல்லு. யாரு என்னா பண்ணாங்களாம்?”

“... ... ... ”

நிலை குத்திய செவத்தெயெ பார்க்க பயமாயிருந்தது. கொட்டடியெ காத்தாயம்பாளும் பாத்திருக்கா. தலையில ரண்டாள் ஆழத்துக்கு பெரிசா ஒரு குழி தோன்டி மேல மூங்கில் பரண்கட்டி மூடிடுவாங்க. எட்டடி அகலம் இருளோன்னு கெடக்கும். யாரும் பாக்க முடியாது. மேல மரத்தழை எல்லாம் போட்டு மூடிக் கெடக்கும். உள்ளெ ஆளுவள கட்டிப் போடுவாங்க.

“வாயில என்னடி முண்டெ? கொழுக்கட்டையா? யாரு? யாரு அது?”

“... ... ... ”

“யாருடி?”

“கரமுண்டாரய்யாதாம்மா.”

“யாரு?”

“கறுப்புக் கரமுண்டாருதான்” பெரிய சித்தப்பாதான்.

“என்னடி பண்ணாரு?”

“பத்துரூவா காசு குடுத்தாரும்மா”

கருப்புக் கரமுண்டாருன்னு ஏன் பேரு? வூட்லியே கறுப்பு பெரிய சித்தப்பாதான். நெலம் எல்லாம் பாக்குறது அவருதானே? பள்ளத்தி சவகாசம் இன்னைக்கி நேத்தா? செவப்பா கறுப்பா? பள்ளனும் கள்ளனும்? வெளியே தெரியாது அவ்வளவுதான். தப்பா, சரியா யாருக்குத் தெரியும். இப்டியே பெரிய சித்தப்பா பள்ளக்குடிக்கே போய்டுமோ? பயமாயிருந்தது காத்தாயம்பாளுக்கு. பாவமா, தெரிய என்ன இருக்கு?

“நாலு அறை வெச்சு வெரட்டக் கூடாது நீயி?”

“யோய்யா நல்லாச் சொன்னிங்க... அத்தெ பெரிய ஆம்பளையெ... நானு? ஆ”

“மடியில போட்டு கொஞ்சினியாக்கும்? தாயழிமுண்டெ.”

செவத்தெ தலை குனிஞ்சி மூச்சு விட்டு மூச்சு விட்டு முனகினாள்.

“நான் என்னா செய்ய... ஓடிப்போறவாள இளுத்துகிட்டு வந்து... போட்டு”

கூர்ந்து பார்த்தாள் காத்தாயம்பா. வயசு ரொம்ப இருக்காது. பள்ளத்தியளுக்கே உள்ள ஒரு புது நிறம். அப்பாயி தொரச்சி சொல்ற மாதிரி வழிச்சு எடுத்த மாதிரி ஒடம்பு. அனாவசியமா ஒரு இணுக்கு சதை இல்லை. ஆனா எல்லாம் பெரிசு. எவ்வளவு பெரிய மாரு. கரமுண்டாரு வூட்டுப் பொண்ணுவளுக்கு இருக்காது இத்தம் பெரிசு. தோள் ரெண்டும்கூட பெரிசுதான். கறுப்புமில்லாத சிவப்புமில்லாத ஒடம்பு வாகு. புழுதியும் சேறுமா இருந்தாக்கூட தொடை வரைக்கும் கொழுப்பா திமுதிமுன்னு இழுத்துக் கட்டின மாதிரி தோலும் மெருகுமா செவத்தை நல்ல வாகு.

காத்தாயம்பா கால் பெரு வெரல்ல சூடா ஒரு சொட்டு...

கால்வழியே நெருப்பு துடை வழியே மேலேறி காத்தாயம்பாளோட இருட்டு முக்கோணம் தீ கலந்து கொப்புளித்து வழிய... ஆ...

“எம்மா... யம்மாவ்... என்னம்மா ஆச்சி... மஹமாயீ.” செவத்தெ கத்துனா... கொல்லையில பசங்க தொமீர். தொமீர்னு காவேரியாத்துல குதிக்கிறானுவளா பசங்க... ‘தொமீர் தொமீர் தொபக்கட்டீர்’ தெறிக்கிது தண்ணி? கரையோரமாவே ஓடிப் போய் பசங்க கரமுண்டாரு வூட்டுப் பின் பக்கம் தான்டி ஆத்து மடுவுல பாத்து சுழுச்சுகிட்டு ‘சொருவு’ அடிக்கிறானுவ.

“தொரச்சியப்பாயீ, அப்பாயீ.”... கத்தியபடியே விழுந்தா காத்தாயம்பா. ஆத்து மடுவுள்ளயிருந்து ஒருத்தன் பாஞ்சு ஏந்திரிச்சு மேலே எழும்புறது தெரியுது. கால்வழியே பாஞ்சு ஒழுகிப் பரவுது பச்சை ரத்தம்.

“ஆயி பெருசாய்ட்டுது தொரசியம்மாவ். ஓடியாங்க ஓடியாங்க...” இரண்டு கால்களின் நடுவில் ரத்த வெள்ளத்தில் தொமீரெனப் பாய்ந்து எழுந்தான் ஒருவன். ஆ. காத்தாயம்பா சரிஞ்சு கீழ விழுந்தான் அவன் யார்? தெலகராஜு. அவளை வாரி எடுத்துக் கொண்டு...

# கரமுண்டார் வூடு - 2

தெலகராஜு தஞ்சாவூர்க்காரன். காத்தாயம்பா மாமன்தான்... ஒறவு என்னமோ நெருக்கம்தான் காத்தாயம்பாளுக்கு. தெலகராஜுன்னா சின்னக்குட்டியா இருந்தப்பவே பயம். என்னாச்சும் பண்ணி உட்டுடுவான். எப்பனாச்சு அஞ்சினிக்கு வருவான். மாமன் வூடு. மாமன் ஒரே மகள். அவன் வந்தாலே திமிலேகப்படும் வீடே. முரடன்.

பாட்டத்துப் பள்ளச்சிவ எல்லாம் அவனை கொஞ்சுவாளுவ. பள்ளியூடத்தில படிச்சிட்டு இருக்கானாம். ப்பூ. டவுன் பள்ளியூடமாச்சே. நீல கால்சராய் போட்டுகிட்டு பூடிஸ் போட்டு லேஸ் கட்டிகிட்டு வெள்ளை சட்டை போட்டு கால்சராய்க்குள்ள இழுத்து விட்டுகிட்டு தொரச்சியப்பாயி கிட்ட நடந்து காட்டுவான் தெலகராஜு. பள்ளச்சிவ எல்லாம் அவனை கட்டித் தூக்கிக் கொஞ்சுவாளுவ.

தெலகராஜுன்னா தெலகராஜுதான். பன்னிரண்டு வயசு. ராஜா மாதிரியிருப்பான். அப்பாயிவ ரெண்டு அவனெ தலைக்கி மேலதூக்கிக்கிட்டு ஆடும். பன்னிரண்டு வயசு தடியனை தூக்கி தட்டாமாலை சுத்தும். 'ச்சீ'ன்னு வரும். அப்பாருகூட ஒக்காந்து அப்பாரு மாதிரியே பாத்துப் பாத்து சாப்புடுவான் தெலகராஜு.

நடப்பாயி சந்தானஞ் சொல்லும்...

"எப்படாப்பா காத்தாயம்பாளெ கட்டிக்கப் போற? ஏ பேராண்டி" தெலகராஜு சளைக்கவே மாட்டான்.

"எனக்கு இவ வாண்டாம். நானு படிச்சு பெரிய ஜட்ஜ் ஆவணும் மாய்யி" அப்போதெல்லாம் அவனைக் காணவே பயப்படுவா காத்தாயம்பா. தஞ்சாவூர்ல பெரிய எடத்துப்புள்ளை. இவன் இஞ்ச வர்றதே ஆச்சர்யம்.

ஆனா... தனியா வந்தா இன்னது செய்வான்னே சொல்ல முடியாது. அத்தனைக்கு முரட்டுப் பயல். ஆறு காவிரியாறு. சுற்றிலும் பசங்க சொருக்கடிக்கிறாங்க. தோப்புக்கு போகலாம்னு இழுத்துகிட்டுப் போய்ட்டான் தெலகராஜு. அஞ்சினி கிராமத்துப் பசங்களுக்கு எப்பமும் தெலகராஜுன்னா போட்டிதான்.

"ஏய் மாமரம் ஏறுவியாடா?"

தெலகராஜு ஓடனே மேல பாஞ்சு ஏறி காயும் பழமுமா உலுக்குவான்.

"ஹோ. இதென்னாது? வெண்ணாவ மரத்துல ஏறுடா பாப்பம்?"

பிரம்மாண்டமான வெண்ணாவல் மரம் கிளை முறியும்.

தெலகராஜு பசங்களோட இப்ப ஆரம்பிப்பான்.

"எம்.ஜி.ஆர். புடிக்குமா? சிவாஜி புடிக்குமா? ல்லெ தேவானந்து புடிக்குமா?"

"எம்.ஜி.ஆரு தான்டா..." எல்லாரும் ஹோவென்று கத்துவார்கள்.

"அப்ப கிரகரிபெக் புடிக்குமா? சாஸ்ட்டன் ஹோஸ்ட்டன் புடிக்குமா?"

"... ... ... " பதில் செல்ல முடியாது. அஞ்சினி பசங்களாலே, காத்தாயம்பா நின்னுகிட்டே கேப்பா.

"மாமா ஒனக்கு நீய்யிறதுக்குத் தெரியுமா?"

"நீய்யிறதுன்னா?" தஞ்சாவூர்ச் சரக்கு வெறியாகும். தலை சொறிவான்.

"நீஞ்சறதுடா"... பசங்கள் சொல்லிட்டு 'ஹோ'ன்னு கூச்சல் போடுவார்கள்.

"நீஞ்சறதுன்னா...?" மறுபடியும் தெலகராஜுக் கேட்டதும் புரிஞ்சிடும் பையனுக்கு நீய்ய வராதுன்னு எல்லாருக்கும் குஷி. 'ஹோ'ன்னும் மறுபடியும் பசங்கள் கூச்சல் போடுவானுவ. போட்டி ஆரம்பிச்சிடுச்சி, தெரியும்.

காத்தாயம்பாளுக்கு ரோஷம்...

ஆறு நெறய்ய தண்ணி அழிச்சுகிட்டு ஓடுது. நுங்கும் நொரையுமா தண்ணி கலங்கலா வேற இருக்கு. புதுவெள்ளம், இழுப்பு ஜாஸ்த்தி. கரமுண்டாரு வூட்டு மதில் மேல அடிச்சு மோதி கிட்டு வெள்ளம் பாயிறது 'ஹோ'ன்னு கேக்குது. பசங்க வூட்டு மதிலு மேல ஏறி சவால் விட்ட மாதிரி சொருக்கடிக்கிறானுவ. 'தொபக்கடீர் தொபக்கடீர்'ன்னு குதிக்கிற சத்தம். அமைதலா தண்ணிப் பரப்பு மேலயே பாத்துகிட்டு அசையாம நிக்கிறான் தெலகராஜு... பசங்க கொங்காணி காட்டிகிட்டே கேலிக் கூத்தடிச்சிகிட்டே குதிக்கிறானுவ. எல்லாருக்குமே தெரியும் தெலகராஜு ஒரு நாளும் ஆத்துல குளிக்க வரமாட்டான். தெலகராஜு வந்தாலே முத்தத்துக்குள்ள ஒரு குளியல் சார்ப்பு கீத்து மொடஞ்சு போட்டுவுடும் சந்தானப்பாயி. பெரிய வூட்டுப் புள்ளை. டவுன் பையன்...

"இவன் எஞ்சடா ஆத்துல குதிக்யறதாம்? போக்கத்தவனுவளா"

"தெலகராஜு சோதாப் பயடா. இங்ளீசு தான்டா படிப்பான். ஆத்து மடுவுல உளுந்தா எம்பி நீய்யிறதுக்கு எப்டிடா தெரியும்?"

'தொமீர்.' அவ்வளவுதான்.

யாரும் நினைக்காத அந்தக் காரியம் உடனே எதிரொலித்தது. ஆற்றோடு சுழலில் சுழண்டு போகிறான் தெலகராஜு. இரண்டு சுற்று சுழட்டியடித்து காவேரியலை. அப்புறம், குமுக்... தெலகராஜுவைக் காணோம். தண்ணிப் பரப்புமேல சுழிசுழியா அலை... அலை... 'திடும்... திடும்... திடும்... திடும்...' யாரும் சொல்லாமலேயே அங்கே நின்ன பள்ளனுவ பத்துபேர் தண்ணியில் பாஞ்சு குதிச்சு நீஞ்சிப் போறானுவ...

"மாமா."... கத்தியபடியே பாஞ்சு குதிச்சுது யார்?

காத்தாயம்பாதான்... அப்புறம் கேக்கணுமா? கொல்லையில நின்ன ஆளுவ அத்தனையும் 'தொமீர் தொமீர்'ன்னு தண்ணியில பாயுதுவ.

ஆமா. ஆளு குத்தி கால்வாயி மதகுல இருந்து தெலகராஜுவை தூக்கி எடுத்தப்பகூட நின்னது, தூக்குனது எல்லாம் காத்தாயம்பாதான். அவளுக்கு பத்து வயசுதான் அப்ப. அஞ் சினி பொண்ணுவ எல்லாமே மூக்கு மேல் வெரல் போட்டு ஹான்னுதுவ. பத்து வயசு குட்டியா அவ? அஆ. அதுக்குள்ற தொரச்சியப்பாயிக்கி சேதி பெய்ட்டு. ஓடியாருது அப்பாயி. 'திங்கு திங்கு'ன்னு மாரு ரெண்டு ஆட தலையில அடிச்சிகிட்டு

அது ஓடியாறுதே... இப்பமும் அப்டியே கண்ணுல நிக்கிது காத்தாயம்பாளுக்கு.

பத்து பள்ளனுவளும் தூக்கிகிட்டுல்ல வந்தானுவ தெலகராஜுவை. அன்னைக்கி விட்டுது தெலகராஜுக்கு தண்ணி பயம். அப்புறம் தெனேய்க்கும் தண்ணியிலேயேதான் கெடப்பான். நீச்சல்தான். பசங்களோட கவுண்டி வில்லு வுட கத்துக்கிட்டான்... தினமும் ஏதாவது வேட்டை அடிச்சுகிட்டுத்தான் வூடு திரும்புறதே. மொயலு, குழிப்புறா, பழந்தின்னி வவ்வா, வுள்ளாங் குருவி, மயிலு கூடவே அந்த பசங்க கரமுண்டாரு குடிப் பள்ளனுவ எல்லாம் போவும். தெலகராஜுதான் தலைவரு. அவனே சொல்லிக்குவான்... “நாந்தான்டா ஒங்களுக்குத் தலைவன்”

தொரச்சிய்ப்பாயிதான் கத்திக்கிட்டேயிருக்கும்.

“காளியாயி கோயிலுக்கும் மேக்க ஆண்டாரங்காட்டுக்குள்ள போவாதங்கடா பயலுவளா. அஞ்ச போனா பாம்பு புத்துவ கெடக்குடா. ஆம்மா. புடுங்கிப் புடுச்சின்னா மருந்து இல்ல. நேர பரலோகந்தான்”

“ஏம்மாயி மருந்து இல்லெங்குற? தஞ்சாவூருக்கு வா... எந்தப் பாம்புக் கடிச்சாலும் ஊசி போட்டே ‘சரி’ பண்ணி உட்ருவாங்க தெரியும்ல்ல?” தொராச்சியப்பாயி தெலகராஜுவெ இழுத்து மடியில போட்டுக்கும். ஒண்ணும் பண்ண முடியாது அவனாலெ. காத்தாயம்பாளுக்குத் தாங்காது. ஒட்டி நின்னுகிட்டு ‘யப்பாயி, யப்பாயி’ன்னு சிணுங்குவா. அவ்வளவுதான் காத்தாயம்பாயும் இழுத்து மடியில போட்டுக்கும் தொரச்சியப்பாயி. மிருதுவான நூறா நம்பர் நூல் புடவையிலிருந்து அப்பாயி வாசனை ரொம்ப அபாரமாயிருக்கும். எல்லா கெழவிகள் கிட்டேயும் கிழ வாசனை தோலுக்கே உண்டு. ஆனால தொரச்சியப்பாயி ஆண்டு அனுபவிச்சது. இப்பமும் ஒடம்பு ஒடம்புதான். கட்டிப் புடிச்சா பெரட்ட முடியாது. மெது மெதுன்னுதான் சதை. ஆனா ஒரு கெட்டிப் பழம்தான். கற்பூரம் வாசிக்கும்... நம்பவே முடியாது. தேன் மாதிரி ஒரு இனிப்பு. அப்பாயி. அப்டியே கட்டிக்கிட்டு கெடப்பான் தெலகராஜு. இன்னொரு பக்கம் காத்தாயம்பா. கட்டிகிட்டு பொரளுவா.

அப்பதான் அவன் சின்ன பய்யன் இல்லென்னு, காத்தாயம்பாள அவளுக்கு மட்டும் புரியிற மாதிரி, ஒரு நிமிண்டு நிமிண்டி உட்டான் தெலகராஜு.

அதை யாருகிட்டேயும் எப்பமும் எப்டின்னு சொல்லவே முடியாது. பன்னண்டு வயசிலேயே அது இன்னதுன்னு அந்த

ஒரு 'பிடி'யிலேயே அவன் அவளுக்கு புரிய வெச்சதும்... இப்பமும் பயம்தான்... எப்பமும் அவன் மட்டும்தான் அவன் மட்டும்தான்னு... எப்போதும் நெஞ்சுக்குள் ஒரு 'ஓ'ன்னு அலையடிக்கிற சத்தம்? அவன் கள்ளப் பயல்ங்கிற பயம். நீ தனி. நீ தனி தான்டின்னு உச்சியில் அடிச்சு ஞாபகப்படுத்துற உலுக்கல். வாரிச் சுருட்டிகிட்டு அன்னைக்கி ஏந்திரிச்சவதான் காத்தாயி. அதுக்கப்பறம் எந்த ஆம்பளையும் தூர நிக்க வேண்டியதாயிப் போச்சு அவளுக்கே. எந்த ஆம்பளையும் அவ்வளவுதான்னு தெரிஞ்சுப் போச்சு. அப்பாயி மடியில ரெண்டு புள்ளைவளும் படுத்துக் கெடக்குன்னு எல்லாருக்கும் நெனப்பு.

ஆனா... தெலகராஜு அப்பவே ஆம்பளைதான். இது காத்தாயம்பாளுக்கு மட்டும் தெரிஞ்சி போச்சு. ஆனா அப்ப அவ பெரிசாகூட ஆகல்லெ. மூணு நாள் ஜொரம். வுட்டுவுட்டு அடிச்சிது. கனகாம்பா சின்னம்மா போயி மாரியம்மங் கோவிலுக்கு பத்து கோழி வாங்கி உட்டுட்டு வந்தது. ஒடம்பு வணங்கல்லியாம் திப்பிலி ரசம் வெச்சு குடுத்தது நடப்பாயி.

என்ன ஆம்பளை அந்தச் சின்னப் பயல்.

அப்பாயி பாத்திருக்குமோ?

யாருக்காவது தெரிஞ்சிருக்குமோ?

பிடிச்சு ஒரு திருவு. அஞ்சதான் ஒண்ணுமில்லியே.

அப்ப... ஒண்ணுமில்லியா?

காத்தாயம்பா அதுக்கப்பறம் ஓட முடியல்லெ. குதிக்க முடியல்லெ. அதென்னது? தனியா புங்க மரத்து நெழல்ல... யாருமில்லாத வூட்டுப் பின்னால, தொறையில,ஆத்துத் தண்ணி வூட்டுள்ள வந்து அமஞ்சு ஓடுமே அஞ்ச துணிய அவுத்து அவனைத் தேடு தேடுன்னு தேடுனாளே. யாருக்குத் தெரியும்.

சின்னச் சின்னதா எழும்பி கூர்முனையா வட்டமா எலுமிச்சம்பழம், இப்ப பத்தே நாளையில நாரத்தம்பழம் பெரிசுக்கு ஒரு சாம்பல் பச்சை பூசிகிட்டுதே எப்படியாம்? குப்புறப்படுத்துக் கிடக்கும்போதெல்லாம் தன் உடம்புலயிருந்தே ஒரு தேன் மண வெறி வருதே. கையெத் தூக்கி உசத்திப் பாத்துப் பாத்து... அதை தனியா பாக்கற மாதிரி ஒடம்புலயிருந்து வெளியே முட்டுதே... ஏதோ ஒண்ணு இதெல்லாம் அவனுடையது. அவனுது, அவன் குடுத்ததுன்னு ஒரு நெனைப்பு முண்டுதே... யாருக்காச்சும் இந்தப் பத்து வருஷத்துல இந்தப் பாடு புரியுமா?

வெடிய வெடிய நாகலக்ஷிமியம்மா அப்பாருகூட இப்பக் கூடப் படுத்துப் பொரளுதே எதுனாச்சும் அசிங்கியமா இருக்கா? பத்துப் பன்னண்டு கல்யாணம். பத்துப் பதுனஞ்சு பெருசான பொண்ணுவ. இருபது இருபத்தஞ்சு புருசம் பொண்டாட்டிவ, பத்து முப்பது அப்பாம்மா. கௌவியுவ, கொழந்தை குட்டியுவ. எப்பப் பாத்தாலும் புள்ளக்கவுச்சி. பால் குடுக்கிற பள்ளச்சிவ. எப்பப் பாத்தாலும் அவனோட இவன் போனான், இவ அஞ்ச புாத்தா, இஞ்ச நோண்டுனா, வேலி ஓறம் பறயனுவ, வேலியோட வேலியா பறக்குட்டிவளோட மணல் மேட்டுல... ஆத்துலகூட. அதது அததுவளோட எஞ்சப் பாத்தாலும் இதேதான். நேரா... மறஞ்சு. ஒளிஞ்சு... அப்டி... இப்டி...

காத்தாயம்பாளுக்கு மட்டும் அது முடியாது... கூடாது... வேண்டாம். சின்னக் குட்டி அவ. என்ன வயசாச்சு கல்யாணத்துக்கு. இருக்கட்டுமே இவ இப்டியே.

தங்கமுத்து அத்தான் சீராளூர்லயிருந்து அத்தையோட வந்து பொண்டு கேட்டுது. "என்ன ஆயி. என்னெ கட்டிக்க இஷ்ட்டந்தானே"ன்னுகூட கேட்டுது. தங்கமுத்து வாட்டசாட்டமா காளை மாதிரி பாய்ச்சல்தான். ம்ஹூம்... காத்தாயம்பா பத்தாயத்துக்குப் பின்னால போயி ஒளிஞ்சவ திலும்பி வரவேயில்லெ.

மதாரத்துலருந்து சுப்புரமணி மாமா பொண்ணு கேட்டுது. இஞ்ச அஞ்சினிக்கி வந்தா பத்து பதனஞ்சு நாளு இஞ்சியே கெடக்கும். ஏராளமா சொத்து நகையும் பட்டுமா பளபளன்னு இருக்கும். அதுவுந்தான் அதே பேச்சு பேசிக்கிட்டு இப்பக்கூட சுத்துது. தொடுறதுக்கு ஆசை. கிட்ணமூர்த்தி மாமாவுக்கு காத்தாயம்பான்னா ஆசைதான். அது அள்ளண்டாங்கோட்டையில பள்ளியூடத்து எட்மாஸ்ட்டருதான். அஞ்சியே நெலம் நீச்சு சொத்து பத்து எல்லாம் இருக்கு. சிவப்பு நெறம். அம்மாள வந்து பாத்து பத்து வருஷமா பொண்ணு கேக்குது.

காத்தாயம்பா ஓடிப்போயி அந்தக் பத்தாயக் கட்டு அறைக்குள்ளதான் பூந்துக்குவா. ஒரு நாளு முச்சூடும் வெளிய வரமாட்டா. யாரும் உள்ள போகவும் முடியாது. எட்டு மாமனுவ... என்ன பண்ணுவானுவ ந்தக் கள்ளப் பயலுவ? சொத்து ஏராளம் எல்லாம் பொசுங்கி எல்லாம் கரைஞ்சாலும் இப்பமும் பெரிய வூட்டுக்கு ஒரே வாரிசு அவ. அத்தானுவளும் மாமனுவளும் சொந்தங் கொண்டாட கேக்கணுமா?

காத்தாயம்பாளெ யாரும் கேட்டதில்லெ... யாரு தான்டி உனக்கு வேணும்?... உனக்கு யாரு புடிக்கிதும்மா? யாரும் கேட்டதில்லெ.

மொறைமாமனுவ வந்தப்ப எல்லாம் சம்பரம்மா சாப்பாடு போட்டு பேசினாங்க. கல்யாணம் எப்ப? எப்டி? எஞ்ச வெக்கியறதுன்னு ஓயாமெப் பேசினாங்க. மாமனுவ வந்தாலே கரமுண்டாரு வூடு இன்னும் திமிலோகப்படும்.

எல்லாம் காத்தாயம்பாளெப்பாக்க சுத்திச் சுத்தி வருவாங்க. தெலகராஜு வரமாட்டான். வரலெ.

எல்லா மாமனுவள்ளயும் தெலகராஜு மட்டுந்தான் திரும்பி வராத மாமன். ஆமா பதினஞ்சு வருஷமா திரும்பி வரவேயில்லெ. கரமுண்டார் வூட்டுக்குள்ளயேகூட மூணு மாமனுவ இருக்கான். அதுவள்ளாம் மூச்சு உடாது. அதுவளுக்கே தெரியும், ஒண்ணும் பலிக்காதுன்னு. பவுனு இல்லியே. தெலகராஜு படிக்கிறானாம். பெரிய படிப்பு. பட்டணத்துல போயி படிக்கிறானாம்.

தங்கமுத்து அத்தான் இப்ப வரத்து நின்னு போச்சு. பத்து வருசத்துக்கு மிந்தி ஓயாம வரும். வாரத்துக்கு ரெண்டு மட்டம் வரும். அப்பாயிகிட்ட வந்து ஒக்காந்து பேசிகிட்டேயிருக்கும். போய்டும். வேற ஒண்ணும் கேக்காது... சின்னம்மா, பெரிய சின்னம்மா எல்லாம் சிரிப்பாங்க. எட்டி எட்டிப் பாத்துப்பேசும்.

"ஏன்டி சின்னப் பொண்ணே அவங்கிட்ட ரெண்டு வார்த்த பேசுனா என்னவாம்?"

"... ... ... "

"சொட்ட வாழக்குட்டி மாதிரி எப்படியிருக்காம் பாத்தியா? உட்றாதெ ஆமா."

"நூத்தம்பது வேலி நெலம். தஞ்சாவூரும் பக்கத்துலதான். சினிமா ஒண்ணு வுடாமெ பாக்கலாண்டி. தங்கமுத்து நீ சொன்னதெக் கேப்பான்."

நிஜம்தான். தங்கமுத்து அத்தான் புதுக் குதுரெக்குட்டி மாதிரி... சின்னச் சித்தப்பா வளக்குற குதுரெக் குட்டிவ மாதிரி துள்ளாட்டம் போடுறதுதான். ஆனா... அதுகிட்ட பேச முடியுமா? என்னமோ ஒரு இது... கண்கலங்கிய ஆண்பிள்ளை அவன்." ஆமா இதையெல்லாம் தெலகராஜு வந்து ஒரே போடு போட்டு செதறச் செதற அடிச்சுட்டனே.

அவன் வராதப்போ யாரும் கேக்கல. வந்தப்பறம் யாருமேவிடலெ. வூடே திரும்பிகிச்சு. கரமுண்டாரு வூட்டு

பொண்ணுங்க எல்லாருக்கும் அவனோட தான் பேச்சு. அப்பாருகூட தெலகராஜுவோடதான் ரொம்ப நேரம்... விடாமெ பேசுறது. சித்தப்பா எல்லாருக்கும் தெலகராஜுதான் உசிரு. அப்பாயிவ ரெண்டும் இப்ப தெலகராஜுவொடயே சுத்தும். பள்ளத்திவ ஒருத்தி விடாமெ தெலகராஜுவை மொச்சுக்குறாளுவ. தெலகராஜும் பள்ளக்குடிக்குப் போவுதாம். பள்ளக்குடி போவாத கள்ளன் யாரு?

ஆறடி ஒயரம் இருக்கும். இப்டி, வாட்டசாட்டமான ஒடம்பு. ஓட்ட வெட்டியும் திமிறிகிட்டு சுருண்ட தலைமுடி. தெலகராஜு இப்ப சின்ன சித்தப்பாவோட மோட்டார் பைக்குல சுத்திகிட்டே இருக்கும். எல்லா பரிக்ஷையிலியும் நெறைய மார்க் வாங்கி, ஏகமா பாஸ் பண்ணி, நெறைய படிச்சு, எல்லாத்துலயும் மொதல் மொதல்ன்னு ஜெயிச்சு, அதே புடிவாதமா வெளையாட்டு, ஓட்டம் சாட்டம் எல்லாத்திலியும் ஓயாம போட்டி போட்டு இவ்வளவு பெரிசா ஆகும்ன்னு யாரும் நம்ப முடியாது. எல்லாருக்கும் ஒரே நெனைப்புதான். தெலகராஜு காத்தாயம்பாளக் கொண்டு போய்டுவான்னுட்டு ஒரே குசு குசுன்னு பேச்சுதான். அப்பாருகூட சொல்லியாச்சு... "எப்படா ஏம் பொண்ணெ கட்டிக்கிட்டு போப் போறே? ஓங்கம்மாளெ வரச்சொல்லு. இனிமே காத்தாயம்பாளெ இஞ்ச வெச்சிகிட்டு இருக்கப்படாதுடா பயலே."

அவன் பதில்: "நான் ரெடி எப்பவும்"

காத்தாயம்பா அதுக்கப்புறம் எதுக்க வர முடியுமா? பேச முடியுமா? அவன்தான் தேடிப் போகணும், பேசணும். ஆனா முந்தியிருந்த மொரட்டுத்தனம் அப்டியே இருக்காம். சின்னம்மால்லாம் சொல்றாங்க... ஆனா... ஆனா... அவன் காத்தாயம்பாளோட பேச... எட்டிப் பார்க்க... தூரத்ல இருந்துகூட திரும்பிப் பார்க்க... திருட்டுத்தனமா பளிச்சின்னு ஒரு பார்வைகூட இல்லியே?அதென்ன மாமன் அப்டி? ஹ.

தெலகராஜுவோட அப்பாரு தஞ்சாவூர்ல பெரிய டாக்டர். பெரிய பட்டம் வாங்கி பெரிய சம்பாத்யம்... பேரு பெத்த வைத்தியம்ல்லாம் பண்ணவரு. ஏகத்துக்கு சொத்து... ஒரே பையன். படிப்பு முக்யம்ன்னு பையனெ தயார் பண்ணி, அதையே முதலாக்கி எடுத்துட்டாரு. அந்த அமைச்சல். எதிலுமே ஒரு ஆழம். நிதானம். இதெல்லாம் இப்ப தெலகராஜுகிட்டகூட அப்டியே இருக்கு. தெலகராஜு அம்மாளுக்கு இஞ்ச அஞ்சினியில நூறு வேலி நெலம் இருக்கு. எல்லாம் கரமுண்டாரு வெள்ளாமைதான். சந்திரஹாசக் கரமுண்டாருக்கும் ரொம்ப வீச்சா அமஞ்சு போச்சு அது. சொத்து ஒரே எடத்துக்குள்ளயே சுத்தி திரும்பி அவருகிட்டியே இந்த

நெலம் எல்லாம் சேந்து போச்சு. இப்ப காத்தாயம்பா வழியில திரும்பியும் எல்லாம் அவுங்களுக்கே திரும்பிப் போவுது, தங்கச்சி மவளுக்கே. தங்கச்சி வடுவாம்பா அப்புடியே திரிசியம்பா அச்சு வாத்தாப்ல இருப்பா. சரசி அம்மன் எழுந்து வர்றாப்லதான் இருக்கும். அவ புள்ளைதான் தெலகராஜு. அப்பா மாதிரியும் அம்மா மாதிரியும் கலந்த சாயல் அவன்.

சின்ன வயசிலேயெ சந்திரஹாச கரமுண்டாரோட ஒட்டிக்குவான். அவன் இங்கிலிபீஸ்ல பேசுறது கரமுண்டாருக்கு பெரிய ஆச்சரியம். எல்லாருமே இங்கிலிபீஸு பேச முடியுமான்னு ஆஞ்சு போய்டுவானுவ. வேலைக்கி வார பள்ளத்திவ எல்லாம் அவனை இடுப்புலியே தூக்கிட்டு அலைவாளுவ. இங்கலிபீஸுல திட்டச் சொல்லுவாளுவ.

இப்ப காலேஜ் எல்லாம் போயி படிச்சி பெரிய பட்டம்ல்லாம் வாங்கிட்டு வந்திருக்கானே. ஒண்ணுவிடலியாமே. எல்லாத்துலயும் மொதமொதலா பாஸாமே.

அப்ப ஒரு நாள் இப்புடித்தான் காத்தாயம்பா பத்தாயக் கட்டுக்குள்ற போயி ஒளிஞ்சிகிட்டா. வேணும்னே ஒளிஞ்ச மாதிரி தொரத்திகிட்டே வந்துட்டான் பாவி. என்ன பண்ண? பன்னிரெண்டு வயசுங்கிறாங்களே? இருக்காது. மேல இருக்கும். பொய்யி. பெரிய ஆம்பளையாம் அவன். உடம்பு தெரிஞ்சுது அவனாலதானே?

திரிசியம்பா தேடிகிட்டு வருது. அட.

"காத்தாயம்பா. யேய். காத்தாயி." ஆமா கோவம் பந்த இப்படிதாங் கூப்டும்.

"தோ வந்துட்டேன்" பத்தாயக் கட்டுக்குள்ளறதான் ரெண்டு பேரும் நிக்க...

"எட்டி அவந்தான் தொரத்திட்டு வர்றான்னா நீயி ஏன் இப்டி ஓடி வந்து ஒளியிற? இவனல்லாம் ஒரு ஆம்பளைன்னு ஒளியப்படாதுடீ. முன்னாலெ நிமுந்து நிக்கணும்டீ. என்னா பண்ணிப்புடுவான், இத்தத் தண்டிப்பய."

"நீ போ. நான் வர்றேன்"

"நீ வா."

"போங்கிறேனில்ல... போயேம்மா."

"சரி வா நீயி."

பத்தாயக் கட்டுக்குள் அவளோடு அவனும்தான் நின்றுகொண்டிருந்தான். ஆஹா. திரிசியம்பா சொன்னதெல்லாம் கேட்டுக் கொண்டுதான் நிக்கிறான். தெரியும். காத்தாயம்பா காட்டிக் கொடுக்கவில்லை... தெலகராஜூம் வெளிய வராம நிக்க...

கொலுசு சத்தம் கேட்டபோது இரண்டு பத்தாயங்களின் மடக்கிலிருந்து வெளியே வந்த தெலகராஜு அவள் ஜடையைப் பிடித்து ஒரு இழுப்பு இழுத்துவிட்டு "யாருகிட்டியாவுது சொன்னெ முளி ரெண்டையும் தோன்டிப்புடுவேந்தோன்டி." என்றபடியே ஓடினான். குத்துப்பிடி. அப்டியே நின்னு போனாளே அந்த பத்து வயசுலியே.

இப்ப... இப்ப... அந்த தெலகராஜுவா இவன்? இருவத்தஞ்சு வயசு மேச்சல்.

ஆறடி ஓயரம். ஆ! மனசுக்குள் பயம். இப்பமும் காத்தாயம்பா பெருசான அண்ணைக்கி இடுப்புக்கு கீழ்ழே வலி. முழுசுக்கும் சொந்தம் அவன். பதிநாறு நாளும் வூடே ஜனக் கூட்டம் நெரம்பி வழிஞ்சுதே. தெலகராஜு மட்டும் காணும். அட, பதினாறு நாளும் அப்புறம் பத்து நாளும், நீராட்டு, மஞ்சத் தண்ணி, மஞ்சனம்ன்னு சடங்கு. ராத்திரியெல்லாம் உடம்புக்குள்ளே ஒரு கெறக்கம். ஆ, என்னது? அவன்... அவன்தான். யாரு கண்ணுலயும் படாமெ நெல்லே இல்லாத பத்தாயக் கட்டுக்குள்ள ஓரமா கெடந்தாளே காத்தாயம்பா. ரத்தம். அதோடதான் அனல். அதுக்குள்ள அவன். ஆ! குளூரத் தண்ணி விட்டு குளிச்சு பதினாராம் நாள் எல்லா சடங்குக்கும் மாமங்காரனுவ எல்லாம் அலங்காரம் பண்ணிஅவளெ பூவிட்டு, பின்னி, நகையெல்லாம் வாரிப்போட்டு, ஒக்காத்தி நலுங்கெல்லாம் பாடுனாங்களே அப்பக்கூட தெலகராஜு வரலியே.

இப்பல்ல வந்திருக்கான்... வந்து என்ன பண்ண?

சந்திரஹாசக் கரமுண்டாரு அவுங்க நெலத்தையும் சேத்து கண்டு முதல் அனுப்புறாருல்ல. அதுக்கு வாவு வழி பண்ணல்ல வந்துருக்கானாம். அடப்பாவி.

"ஏன்டி குட்டி? மாப்ளெ வந்துட்டான். இனிமே உன்னோட ஆட்டம்பாட்டம் ஓஞ்சுடுத்து. இனிமே ஆவும்ன்னா நேர பத்தாயக் கட்டுக்குள்ற ஓடப்டாது ஆம்மா சொல்லீட்டேன். ஓட முடியாது வுட்டுடுவானா தெலகராஜு?"

"போங்க... கணக்கெளுதுறதெ வுட்டுப்புட்டு கார்வாரு பண்ண ஏன் வர்றிங்க அய்யிங்காரெ."

"இல்லென்னா என்னைக் கட்டிக்கோடி."

"சீ. நீல்லாம் அய்யிங்காரா? சேய் மேல வந்து பாயறதப் பாரேன்."

அப்படியும் ப்ராம்ணனுக்கு ஆசை வுடாது.

காத்தாயம்பா கை ரெண்டையும் சேத்து புடிச்சுக்குவார் சிங்காரச்சாரியர். மார்புகள் ரெண்டும் ஒன்றை ஒன்று நசுக்கித் தள்ளிக் கொண்டு வெள்ளை ஜாக்கெட்டில் வியர்வையோடு ஊற கோடு உள் பிரிய, அவள் தவிக்கிற தவிப்பை ரசிக்க தெலகராஜு இருக்கமாட்டான். ஒடம்பு வளந்து திமுறுது. அட, அய்யங்காரே.

"சீ வுடு." பாய்ந்து ஓடுவாள் காத்தாயம்பா. கொலுசு மணி சத்தம் எப்பவும்.

தெலகராஜுவும் வந்து ஒரு வாரத்துக்கு மேலாச்சு. காத்தாயம்பா கல்யாணத்தெப் பத்தி பேசாதவங்க யாருமில்லெ. திரிசியம்பா... காலையில ஆப்பம் சுடும் திரிசியம்பா, அன்னபூரணி, தெலகராஜு சமையல் வூட்டுள்ள வந்து உக்காரும்போது பெரிய சித்தப்பாவுக்கு பெரிய சின்னம்மா கனகாம்பா ஆப்பம் பரிமாறிகிட்டு இருக்கும். குளிச்சு, வெறும் ஒடம்போட, மினுமினுன்னு தலை சீவி, ஈரம் சொட்ட, ஒத்தை வேட்டியோட, வருவான் தெலகராஜு... அப்பப்பா.

"எட்டீ, காத்து... சின்னிம்மா. மாமாவுக்கு ஆப்பம் வெச்சு பால ஊத்து." திரிசியம்பா கூப்பாடு போடும். அஞ்சதான் இருப்பா காத்தாயம்பா. காது கேக்காது. தோட்டத்து மல்லிகை முழுசும் உமாமஹேஸ்வரி சின்னம்மா தொடுத்துக்கட்டி எடுத்துச் சூடிவிட்டு இருக்கும். பட்டுப்பாவாடையும் சித்தாடையுமா சலசலக்க, கால்சலங்கை கொலுசு சில்சில்ன்னு பேசப் பேச ஆப்பம். ஆவி பறக்க வெள்ளை வெளேர்ன்னு வட்ட வட்டமாய் பச்சை எலையில தங்கம் பாவின விரலாலே பரிமாறி, வளையல் பவுன் கனம் கனமாய் சத்தம் எழுப்ப, தேங்காப் பாலு நனைய நனைய காத்தாயம்பா பரிமாறுறதெ பாத்துகிட்டு, மூணு அம்மாளுவளும் ஒவ்வொரு தூணெப் பிடிச்சிகிட்டு, பாத்துகிட்டு நிக்கிறதப் பாத்தா சாப்பிட முடியுமா தெலகராஜுவுக்கு? தோளெல்லாம் வேர்வை பொடியப் பொடிய அவன் தயங்கினாப்பல சாப்புட்ற அழகே அழகுதான். இல்லேங்க முடியுமா? வெச்ச கண்ணெ எடுக்க முடியாது காத்தாயம்பாளுக்கு.

நாகலக்ஷ்மி ரெண்டு அதுருசம் கொண்ணாந்து தெலகராஜு எலையில போடும். "நெய் அதுருசம் தம்பி. நல்லாருக்கும்

சாப்டு"ன்னும் ராதெம்மா. உள்ளருந்து நெய் உருக்குற வாசனெ கும்முன்னு கெளம்பும். சமயல் வூட்டுக் குள்ளயிருந்து மாணிக்கம்பா கையில நெய் கிண்ணத்தோட வரும். அபிஷேகம்தான். ஆப்பம் நெய்யோட சேராமெ மினுங்கும்.

தகதகன்னு காப்பி கள்ளிச் சொட்டு மாதிரி போட்டு எடுத்துகிட்டு வரும் சின்னம்மா. நடுச்சின்னம்மா. காப்பி வாசனை அள்ளும்.

"போதும். போதும். போதும்"ன்னு சொல்லிகிட்டே சாப்புடுவான் தெலகம்.

"அவளெப் பரிமாற உடுங்கடி...."ன்னு கத்தும் திரிசியம்பா. "இன்னும் ஒரே ஒரு ஆப்பம்." ம்பா உமாமஹேஸ்வரி. தெலகராஜு முனகுவான். ரெண்டு சின்னக்குட்டிவ விசிறி எடுத்து வீசிக்கிட்டு நிக்கும்.

"சாப்பாடு ஆயிகிட்டு இருக்காக்கும்"

அப்பத்தான்... திரும்பிப் பாத்தா பெரிய சித்தப்பா வந்து நிக்குது.

அட...!

"ஒக்காருங்க சித்தப்பா நான் பரிமார்றேன்" என்பாள் காத்தாயம்பா.

"ஓங்க சின்னம்மாள வரச்சொல்லு. என்னய்யா இன்னும் ஒக்காந்து தின்னுகிட்டு இருக்கெ... நீயி வரல்லியா?"

"என்ன? நானும் வர்றேம் மாமா. நானு பள்ளத் தெருவுல கல்யாணம் ஒண்ணும் பாத்ததில்ல. வர்றேன்"

"ஏஞ் சித்தப்பா. நீங்கதான் பள்ளக் குடியளுக்குப் போவணும். போறிங்க. அவரெ ஏன் அஞ்சல்லாம் இளுத்தடிக்கிறிங்க? களிமண்ணுல மிறிச்சு நேத்து செறுப்பெல்லாம் அந்து போயி கய்யில தூக்கிட்டுல்ல வந்தாரு?" பளிச்சின்னு கொட்டிட்டா காத்தாயம்பா. சிரிக்கிது சித்தப்பா.

"சின்னிம்மா இன்னும் ஒனக்கு அவம் புருசன் இல்லெ, தெரியும்ல்ல."

தூணுக்குத் தூண் சிரிப்பொலியும் கேலியும் எழுந்தது. பெரிய சித்தப்பா பொண்டாட்டிவ எல்லாம் மூணும் வந்து நிக்கிதுவ. பார்வதி, லக்ஷ்மி... பொம்பளை ராஜியம்ல்ல. கொல்லுன்னு சிரிக்கிதுவ. பொம்பள ராஜ்ஜியம்ல்ல.

"மாப்ளெ, எங்க பொண்ணு கருசனத்தெப் பாத்தீங்களா?" கேட்டவளும் ஒரு பொண்ணுதான். சிரிப்பு அலையடித்தது. பெரியத்தை துண்டால் மாரைத் துடைத்துக் கொண்டே எழுந்திரிச்சி வேகமா மௌனமாய் வெளியே போய்க் கொண்டே,

"தோ வந்துட்டேம் மாமா. கெளம்புங்க" என்றான் தெலகராஜு. காளவாய் மாதிரி நாலு அடுப்பு. நாலு அடுப்புலயும் பெரிய பெரிய ஆப்பச்சட்டி. நுண்மையான புளிப்பும் தேங்காய்ப்பால் வெறியுமா அந்தப் பெரிய அடுப்பறை குமுகுமுத்தது. கரமுண்டார் வூட்டுப் பொண்ணுகள். அண்டா குண்டா. சாமான்...

தெலகராஜு போன வழி பெரிய வழி.

கேணிப்பட்டறையில பெரிய சித்தப்பா ராமுவும் தெலகராஜும் போனா... கரமுண்டாரு வூடு இப்பமும் நிக்கிது. நெலந்தேஞ்சு ஒடுங்கிப் போச்சு. மாடுவ முச்சூடும் பாக்கப் பாக்க போச்சு. குதுரெ லாயம் இப்ப காலிதான். சின்ன சித்தப்பா கேணிப் பட்டறைக்கு நாலு குதுரே மாத்தி மாத்திப்போவுது. பள்ளனுவ கூட்டம் மட்டும் ஓயல்லெ. அஞ்ஞாறு வேலிகண்டு முதல் பண்ணுன கூட்டம்ல்ல. இப்ப நூறு வேலியாத் தேஞ்சு தோட்டமும் கொல்லையுமா பாதியா நிக்கிதுவளே. எஞ்ச போவும் இந்தக் கூட்டம்? அப்பாரு வாயெத் தெறந்து யாருகிட்டியும் பேசமாட்டாரு. நடந்து வயவரப்போட நடந்தா, பத்து பள்ளனுவகூட நடப்பானுவ பின்னாலியே...வூட்டுக்குள்ள இப்பக்கூட ஒரு ஆம்பள வாரிசுக்கு பொண்டு காத்துகிட்டு இருக்கு. காத்தாயம்பா நெஞ்சு வேகுது. வூடு பூரா சத்தரத்துக் கூட்டம். ஓயாத வேலை. அட எத்தினி பொண்ணுவ. குஞ்சும் குளுவானுமா எத்தினி புள்ளகுட்டி. எல்லாம் ஓடி ஓடித்தான் ஒழைக்கிதுவோ, ஆரு தப்பு சொல்லி, கரமுண்டானுவளெ ஆரு எய்த்து ஒண்ணு பண்ண? ஆனாலும் எந்தக் கூட்டத்திலியும் எந்த தப்புலியும் எந்தத் தவறுலியும் கரமுண்டானுவளெப் பாக்க முடியாதுல்லெ? துமுரடியா பேச்சு கூடல்ல எளும்பாது. எட்டுகட்டு வூடு இப்ப எஞ்ச இருக்கு? அட இருந்தாக்கூட இப்பமும் மனுஷங்க அப்டி வூட்டுல வாழ முடியுமா? ஆ.

காத்தாயம்பாளுக்குத் தெரியும், விடிய காலம்பற இருட்டோட கோலம் போட ஒரு வெளக்கோட போயி சாணி தெளிச்சு வாச கூட்டி ஒதுக்கி ஆவல்லெ?

அந்த காலை காத்தோட அவனையும்ல்ல எழுப்பி வுடுவா.

உள் முத்தத்துலதானே மாமன் தூங்கும். காலெத் தொட்டு எழுப்புவா. கோலம் போடுறதெ பாக்கணும்ன்னு சொல்லி கேட்டானே தெலகராஜூ அது எப்ப? பதுனஞ்சி வருஷம் ஆவல்லெ? நாலு தாப்பாளையும் சத்தப்படாம இழுத்துவுட்டு கதவெத் தள்ளித் தெறக்கவே அஞ்சு நிமிஷம் ஆவாது? ஹா... கதவா அது? சொவுரு மாதிரி கனம். முப்படை தேர் மாதிரி அட்டேயப்பா ஏகமா கருவாளிச்சு குங்குமமும் பட்டையும் நாமமும் சக்கரமுமால்ல இருக்கும். இதே மாதிரி கதவு திருவாரூரு கோயில்லதான் இருக்கு.

இப்பக்கூட காத்தாயம்பா எழுப்பறதுக்கு பயப்புடுறது இல்லெதான். தொரச்சியப்பாயியோட எட்டாங்கட்டுல முத்தத்துலதான் கெடக்கான். ராத்திரில இப்ப தொரச்சியப்பாயிகூட பேசிகிட்டேதான் தூங்குறான் தெலகம். வெடிய காலம்பற இருட்டுல அன்னிக்கி எழுப்பிவிட்டா ஈரமான விரல்களோட அவன் காலெப் புடிச்சப்போ, திடுக்குன்னு ஏந்திரிச்சிடுவானோன்னு பயமாக்கூட இருந்துதே காத்தாயம்பாளுக்கு. ஆமா பூ கொட்டுனாப்லதான் எந்திரிச்சான்.

மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள்... பெருமாள் கோவில் ரேடியோவில இருந்து பாட்டு கௌம்புது... இருட்டுப் பாட்டு.

"என்ன வேணும்?" கரகரத்த ஆம்பளக் கொரல். ஆம்பளை வாசனை. தெலகராஜூதானா இது? முப்பது வருஷம், அம்பது வருஷம், நூறு வருஷமானாப்ல இருக்கே?

"என்னடி வேணும்? கேக்றனில்ல?" ... ... 'டி' யாமே டி. ஜிர்ருங்குதே எஞ்சியோ.

"ஏந்திரி மாமா. கோலம் பாக்கலியா? கோலம் பாக்குணும்பியே?"

"ஏந்திரிச்சு வருணுமா? கோலம் பாக்கவா?" ... கேள்வி கேட்ட அவனை புதுசா உத்துக்கிட்டுப் பாத்த காத்தாயம்பாளெ கையெப் புடிச்சு இழுத்தான் தெலகம்.

"ச்சீ வுடு. குளிக்காமெ கொள்ளாமெ கையெப் புடிக்கிறியே ஒரு ஆம்பளயாட்டம்"

வெடுக்கென்று அப்பமும் விடாமல் இழுத்து... காத்தாயம்பா வுடல்லெ. நடு முத்தத்துல தொளசி மாடம் இருக்கு. வாசல்லயிருந்து பாத்தா எப்பமும் தொளசி மாடத்து வெளக்குத் தெரியும். விடிஞ்சா... விடியுமுன்னெ தொளசிமாடத்துல வுளுந்து

கும்புட்டுட்டுத்தான் வேற வேல காத்தாயம்பாளுக்கு. சின்ன மங்காத்தாயாரு ஏந்திரிச்சி வர்றாப்புலதான் இருக்கும்.

"வெடியாலம்பற அவகிட்ட என்னடா லூட்டியடிக்கிறே?" சந்தனப்பாயிதான். கெழவி தூங்காது. கொட்டு கொட்டுன்னு முளிச்சுகிட்டுத்தான் இருக்கும். எப்படி மறந்து போனது? எல்லாம் தெரிஞ்சதுவுளாச்சே? தெய்வம் மாதிரில்ல இதுவ. காத்தாயம்பாளுக்குத் தொண்டையடைச்சுது. மூக்கு மேல சுருசுருன்னு அழுகெ முட்டுது. கண்ணுல தண்ணி பூறுது. சொட்டு சொட்டா அவன் மேல. ஆ! என்னது? கண்ணீரு. மூச்சுபுடிச்சு அழுகையெ அடக்கி கண்ணெத் தொடச்சிகிட்டு பாத்தா... முத்தத்து கட்டுல்ல தெலகராஜெ காணும்... சந்தனப்பாயிதான் ஏந்திரிச்சு எச்சிக் காளாஞ்சில புளிச்சின்னு வெத்தலெயெ போயலெ கொதப்பலோட துப்பிகிட்டு நிக்கிது. இருட்டுல ஒண்ணுந் தெரியலெ. முத்தத்துல இன்னும் நெறைய ஆளுவ தூங்குது.

"நான் தொடக்கூடாதாக்கும்?"

"... ... ..." அவ செலயா நின்னா.

தெலகராஜு, "தொடுவேன் என்ன செய்வியாம்? இப்பப் பாரு..." என்ன நடந்ததுன்னு அவளுக்கே தெரியாது. இருட்டுக்குள்ள புரண்டு விழுந்தான் தெலகராஜு. அப்பா... என்ன பலம்? என்ன முரட்டுத்தனம்? அவனும் முதல்ல நம்பவேயில்லெ. என்ன வேகம் தூக்கித்தான் எறிந்தாள் காத்தாயம்பா.

"ச்சி. ஒரு மனுஷனாட்டம்."

"என்னடா தெலகராஜு அஞ்ச சத்தம்?" தொரச்சியப்பாயி கேட்டுது.

"அதெல்லாம் பள்ளக்குடியில வெச்சுக்கணும். தெரியும்ல்ல? இது வூடு. இஞ்ச நடக்காது மாமா. தொடாம பேசு. ல்லெ..." பொருமினாள் காத்தாயம்பா. மூசுமூசுன்னு காத்தாயம்பாளுக்கு மூச்சு எகுறுது. கிழ கோலப் பொட்டி வுளுந்து கொட்டிப்பேச்சு. வேகமா கோலமாவெ அள்ளி திரும்பியும் உள்ளே போற காத்தாயம்பாள பாத்துகிட்டே, இருட்டுல இருந்து தொரச்சியப்பாயி வருது.

"ஏன்டா அவகிட்ட போயி கலம்பற லூட்டியடிக்கிறியாம்? என்னமோ சத்தம் போட்டுக்கிட்டுப் போறாளே முண்டெ?"

"ஒண்ணுமில்லம்மாயி. கோலம் போட்றாளாம் கோலம்... பாக்க வரணமாம்ல்ல?"

“ஆமாடா ராஜா. மணி நாலாச்சு. அத்தெவள்ளாம் ஏந்திரிக்க இன்னும் ரெண்டு மணியாவும். கோலம் போட்டு இவ காத்தாயி முடிக்கவும் நேரமாவும்மல்ல... ஒனக்கத்தான் தெரியுமே? வூடு பூரா வரிவரின்னு வரிஞ்சுடுவாளே நம்ம காத்தாயி. தேரு, தாம்பாளம், முட்டாயிப் பொட்டலம், ஊஞ்சலுன்னு பெருசு பெருசாப் போட்டு வரியுவாளே, பாத்ததில்லெ. அந்தக் காலத்துல நாந்தான் இந்த வேலைக்கி போட்டி போடுவேன். கரமுண்டாரு வூட்டு பொண்ணுவள்ளாம் போயி பெருமா கோவில்ல கோலம் போடுவாளுவளே? காலம்பற யாரு முந்தி ஏந்திரிக்கிறாளுவளோ அவ அண்ணைக்கி கோலம் போடலாம். பாரேன்டா. ரெண்டு மணிக்கே முந்திகிட்டு நிப்பாளுவ... இப்ப காத்தாயிதான்டா தனியா நிக்கிறா. நம்ப வூடு நெறையத்தான் இப்பமும் பொட்டக் கழுதயுவ ரொம்பிக் கெடக்கு. ஆனா எல்லாம் குப்புற கெடந்து தூங்குதுவ. ஒங்க பெரிய மாமனுக்கு இன்னைக்கும் கல்யாணந்தான், சோபனந்தான். யாரு கேக்க? திண்ணையிலேயே பள்ளியறெ. விடிஞ்சாக்கூட யாராவுது சொல்லணும். அதுக்கு காவல்தான்டா இவ. தெரியிதா? வுட்றாதடா இப்டியே. காத்தாயம்பா காத்துகிட்டு கெடக்கு. கோலம் போட்டுப் போட்டு சாணி மெறிச்ச தரைகூட வெள்ளையாய் போச்சுடாங்குது” தொரச்சியப்பாயி.

தோள்களில் லேசான எரிச்சல். காத்தாயம்பாளோட நகம். பள்ளக்குடிக்கில்ல போச் சொல்றா. தெலகராஜு இப்ப சின்னப் பய்யனா? மழவராயருன்னுதான் பேரு போடலெ... ஆனா தோளு நிமுந்து பேச்சு. ஒரே ஒரு பொரட்டல்லெ தள்ளிவுட்டுட்டாளே.

“ஏன்டா தம்பி, என்னா சொல்றா அம்ம காத்தாயீ?” சந்தனப்பாயி லேசுபட்டதில்லெ. பேச்சே சிரிக்கிறாப்ல இருக்கு. புரியாமலா இருந்திருக்கும்?



“அவ தங்கம்டா தம்பி. பயப்புடாத. கரமுண்டாத்தியுவகிட்ட இதான் பெரிய எளவு. விருதம்பாளுவ, பூஜெம்பாளுவ, ஆனா கட்டிகிட்டா போச்சு. தொன்டியில முடிஞ்சுக்குவாளுவ. என்னங்குற நீயி? நடுப்பயலோட பள்ளக் குடிக்கிப் போயி என்னா பண்ணுனெ? காச்சு மூச்சுன்னு இப்பிடிக் கத்துறாளே களுதெ, எதுனாச்சியும் பண்ணிப்புட்டு வந்தியா? என்னடா?”

“ஒண்ணுமில்லம்மாயி. ராமு மாமாகூட பள்ளக்குடியில நம்ம பள்ளன் ஒருத்தன் கல்யாணத்துக்குப் போயிருந்தேனா. அதுக்குத்தான் புடிச்சு தள்ளிவுட்டா இந்தக் கழுதெ. பள்ளக் குடி போனா என்ன?”

"அட போனா ஒண்ணுமில்லடா. பள்ளத்தியுவ எல்லாம் கொத்திப் புடுங்கிடுவாளுவடா. தொட்டுப்புட்டா ஒட்டிக்குவாளுவ, தெரியும்ல்ல. சாதி ஜனம் முச்சூடும் பேச்சாப் போவும். எடங்கண்ட எடத்துல படுக்கப்புடாதுடா தம்பி. உங்கவும் திங்கவும் எடம் வேணும்டா. நேத்து பள்ளத்தியுவ எல்லாம் இஞ்ச வந்து நீயும் ந்தகறுப்பனும் பண்ணுனது எல்லாத்தியும் கும்மாளம் போட்டுகிட்டு சொன்னாளுவல்ல... அதான் காத்தாயிக்கு மூச்சு முட்டுது. கரமுண்டாத்தியுவ தலவிதியே இதான்டா. வெளியவும் போவ முடியாது. உள்ளியும் நிக்க முடியாது... போ."

சந்தனப்பாயி புளிச்சின்னு காளஞ்சில எச்சி துப்புது. கரமுண்டாரு வூடு பூரா அமைச்சலா கெடக்கு. வேற சத்தமேயில்ல சிள்ள்ள்ன்னு செவுத்துப் பூச்சி சத்தம்தான் கேட்குது. ஒண்ணும் பேச முடியலெ. தொரச்சியப்பாயி கை ஒரல்ல வெத்தல இடிக்கிது. மூணு ஒரல் கெடக்கு... முறுக்கு சீடெ இடிக்க ஒண்ணு, இனிப்பு பலவாரம் இடிக்க இன்னொண்ணு. பல்லு போச்சின்னு ஒண்ணையும் வுட்டு வெக்யல்லெ தொரச்சியப்பாயி.

லங்கு லங்குன்னு வெத்தலை பாக்கு இடிஞ்சு, நசுங்கி அந்த வெடியாலம்பற வேளையில இருட்டோட சுண்ணாம்பும் கலந்து தொவையிற வாசனை... சுர்ருன்னு எஞ்சியும் வெத்தலை காரம், மணம், போயிலை வாசிக்கிது.

"என்னடா தம்பி. ஒண்ணும் பேசமாட்டேங்கிற"ன்னு சந்தனப்பாயி.

என்ன பேச? கரமுண்டார் வூடு பயமுறுத்துது. காத்தாயம்பாளும் மெரட்டுறா. கௌவிகளும் உருட்டிப் பாக்குது. என்னது இது? ஏன் இஞ்ச வந்தோம் இத்தினி வருஷத்துக்கப்புறமா? ஏன் வந்து இது...

ஆமா. பள்ளக்குடி அஞ்சப் போனது தப்புதான். தப்பு. தப்புங்கிறது தப்பு. அந்தப்பொண்ணு மாஞ்சி. அதென்ன பேரு மாஞ்சி. என்னா அழகு. அழகா? என்ன சொன்னா அவ? "ஆண்டெ என்னெ ஒண்ணும் பண்ணிப்புடாதிங்ய" ஆண்டெயா? ஆண்டென்னா?...

பட்டப்பகல் வேளையில கொஞ்சமா விஸ்க்கி. ராமு மாமாதானே குடுத்துது? அட பயலே, ஏன்டா அளுவுறெ? ம்? என்னத்துக்குடா பயம்? யேய். கரமுண்டானுவள்ள நாந்தான், நான் ஒருத்தந்தான்டா வெளிய வந்த தைரியசாலி. கரமுண்டாத்தியுவ எல்லா பயலுவளையும் சுருட்டிடுவாளுவ, அப்டியே அமுக்கிப் போட்டுடுவாளுவோ, தெரியுமா? ஆ."

"ஏலா..எங்கடா ஓம்பொண்டாட்டி?"

"யாரெக் கேக்கிறிங்க மாமா?"

"அட போடா. காத்தாயிச் சின்னியெத்தான்டா கேக்குறேன்?"

"இஞ்ச கேட்டா? ஊருலருந்து வந்ததுலருந்து பாக்கவே இடியல்லியே."

"அதான்டா கரமுண்டாத்தியுவ. அதான். எப்பமும் தொஙகல்லியே உட்ருவாளுவ. எனக்கு மூணுடா. மூணு தெரியுமா? வாண்டாம் வாண்டாம்ன்னு கெஞ்சுனென். பெரியவரு முன்னூறு கோட்ட வெதப்பாருன்னு சொல்லி மூணையும் ஏந்தலையில கட்டுனாரு. இப்ப பள்ளக்குடி சாராயந்தான்டா ஒஸ்த்தி. தெரியுமா? காத்தாயி பெரிய கரமுண்டாத்திடா. வேற வழியுமில்லெ. கட்டிகிட்டுத்தான் ஆவணும். ஒனக்குன்னே ஆய்ட்டா சின்னி. ஆனா கரமுண்டானுவ மாதிரி நீ ஆவாதெ. பொண்டாட்டியாத்தா பெரியாத்தாளுவளாவே இருக்கட்டும். எத்தனையோ கள்ள வூடுவ நாசமாப்போய்டுச்சி. ஆனா கரமுண்டாச்சிவ முதுவ அண்டக்குடுத்து கரமுண்டாரு வூட்ட நிறுத்திருக்காளுவொ தெரியுமாடா ஒனக்கு? ஆமா புருசனெ தூக்கிகிட்டு ஆடிகிட்டே கடைசி வரைக்கும் போவாளுவோ... சொமந்து தீப்பாளுவடா. அதனாலதானே அம்ம வூடு இன்னும் அசையாம நிக்குது.

"போதும் மாமா ஓவரா குடிச்சிருக்கீங்க வூட்டுக்குப் போவலாம்."

"ப்பூ. இவ்வளவுதானா நீய்யி? படிச்சப் பயன்னாங்களே? எல்லாந் தெரிஞ்ச பயன்னாங்களேன்னு பாத்தேன். ஒண்ணுமில்லியா அஞ்சயும்? கரமுண்டாத்தியகிட்ட படுக்க முடியாதுடா பயலே... பொரள முடியாது. கும்புடலாம், பூஜை பண்ணலாம், புள்ளெ பெத்துக்கலாம். ஆனா படுத்துப் பொரள முடியாது. ஹ."

"ஒளராதீங்க மாமா. நானும் போட்டுத்தான் இருக்கேன். புதுசா ஒண்ணுமில்ல. கரமுண்டாத்தியுவளும் புதுசு இல்ல. எனக்கு கரமுண்டாத்தி போதும். காத்தாயம்பா போதும். வாங்க வூட்டுக்குப் போவலாம், காத்துகிட்டு இருப்பாங்கல்ல?"

"காத்துக்கிட்டு இருப்பாங்களா? அடப்போடா லூசுப் பயலே. காத்தாய்தான் காத்துகிட்டு இட்டியோட இருப்பா. பொம்பளைன்னா சிரிக்கணுண்டா. கோவிக்கணும், அழணும், கத்தணும், எம்பி ஒதக்யணும்டா பயலே. கரமுண்டாத்தியுவ அழகா அமைப்பா இருப்பாளுவ, அம்மன் மாதிரி. கோயில்ல இருக்கே,

பெருந்திருப்ராட்டியாரு, அங்காளம்மன், ஒலகநாயகின்னு எத்தினி சாமி? அதுமாதிரி சின்ன இடுப்பு, பெரிய மாரு, அகலமா தொடை, தண்டுவம் தண்டுவமா காலு. பெரிய குட்டின்னு கோயில்ல இருக்க வேண்டியதுவடா. இதுவளோட கரமுண்டானுவதான்டா குடும்பம் நடத்தலாம். எஞ்சியோ கோளாறுடா. நீ சின்னப்பய. கரமுண்டாரு வூட்டு ஒரே மாப்ளெ. அப்பறம் நீயி ஏமாந்திட்டெம் மாமான்னு நெனைச்சிறப்புடாதுடா. சின்னி இருக்காளே அப்டியே திரிசியம்பா அச்சுல... தொரச்சி இருக்கே கெழம் அது புத்தியெ உருக்கி ஊத்துன சரக்குடா. ஆசெ வெச்சாளுவன்னா... ஆசையக் கட்ட மறந்துடுவாளுவடா. ஆனா கரமுண்டாங் குடிய உடமாட்டாளுவ. அதுசேரி... நீயி பொட்டெ தொரத்தியிருக்கியா? காலேஜில என்னத்தடா படிச்சே... 'இது' தெரியுமா ஒனக்கு...?" கையால் சைகையில் காட்டிக் கேட்டாரு.

"வாண்டாம் மாமா. வாங்க வூட்டுக்குப் போலாம். ஏறிடிச்சு ஒங்குளுக்கு." தூரத்தில் பறக்குடியிலிருந்து தமுக்கு காச்சற சத்தம் தமுக்... தமக்...ன்னு கேக்குது. நல்ல வெய்யில் தலைக்கு மேல மதமதன்னு மின்னல் ஓடுது. தொண்டையில அந்த நாட்டு நாரத்தை கசப்பு ஊறுகாய் புளிக்கிது. கசப்பு புளிக்குமா. ஆமா சாராய வெடுப்பு. பள்ளக்குடி ஊருக்கு மேக்க வந்துட்டுச்சி. நெறைய குத்து குத்தா தென்ன மரம். எஞ்சப் பாத்தாலும் பச்சுன்னு வயல் நெறைய பயிரு. வயல்ல பள்ளனுவ. வாய்க்கால் எல்லாம் தண்ணி பாயிது. ரெண்டு பக்கம் சரிவுலயும் குடுசை. நடுப்புர ஒத்தையடிப் பாதை. குடுங்கலா நெருங்க எதுரெதுரா வூடு. குடுசை வூடு.

"போலாமா?" அவனை எதிர்பாராமல் நடந்தார் ராமுக் கரமுண்டாரு. ரெண்டு பேரும் பள்ளக்குடிக்குள்ள போறதைப் பாத்துட்டு திண்ணை ஒண்ணுலருந்து ஏந்திரிச்சு ஒரு பள்ளன் வெளிய போயி திரும்பிப் பாத்துகிட்டே திரும்பி வாய்க்கால்ல எறங்கி அதுலயே நடந்து தூரத்துல போயி வயக்காட்டு உள்ள காணாமப் போனதெ திரும்பித் திரும்பி பாத்துகிட்டே, தெலகராஜுவும் நடந்து ஒத்தையடி பாதை மாறி திரும்புற எடம் வந்ததும், நாலு பக்கமும் குடுசையா இருக்கிற எடம் வந்ததும் ரெண்டு பேருமா மோதிகிட்டாங்க. என்ன எடம் இது? வயல்லருந்து 'சிள்ள்ள்'ன்னு பூச்சி சத்தம்தான். வேற சத்த ஏது? குடுசெ வூடுவள்ளயும் யாரும் இருக்கக் காணும். எல்லாம் வயலுவள்ள நிக்கிதுவ போலருக்கு. இடுக்கு முடுக்கா மூணு குடுசை. அதுக்கப்பால திரும்புனா பெரிய பள்ளம். கீழ காவிரி

ஓடுது. தண்ணி ததும்ப ததும்ப ஓடுது. கிளுவை செடி போட்டு முள்ளு வேலி பின்னியிருக்கு. கூரை மேல சொரக்கா ஒண்ணு கொடியோட எலையோட படுத்துக் கெடக்கு. குளுகுளுன்னு புங்க மரத்து நெழலு.

"வாடாங்கிறன்ல்ல?"

திடுக்கிட்டு திரும்பிப் பாத்தா ஏதோ ஒரு குடுசைக்குள்ளருந்து சத்தம் மட்டும் வருது. பின்னாலெ எஞ்சியோயிருந்து சத்தம் திரும்பியும். ராமுக்கரமுண்டாரு கொரலு.

"மாஞ்சீ. ஏ... மா... ... ஞ்சீ. மாஞ்சியோவ்." இது பொம்பளை கொரலு.

"தோ வர்றக்கா? ஏங்கத்துறெ?" திடுதிடுன்னு யாரோ ஓடியார்ற சத்தம். எதிரே தெரிஞ்ச குடிசைக்குள்ள ஏறும்போது பயம் அப்பியது. பட்டணத்துல மூணு நாலு தடவை காலேஜ் பசங்களோட 'இது'க்கு போயிப் போயி தோத்துப் போன அசிங்கம் எல்லாம் ஞாபகம் வந்தது. வூட்டுக்குள்ள யாருமில்லெ. வூடேயில்லெ... மூணடி நாலடி நீளம், அகலம் ஒரு கணக்கும் தெரியலயே முக்கா இருட்டு. ஆனா குளுகுளுன்னு சுத்தமா இருக்கு. நல்லா சாணியும் கரியும் கலந்து கல்லு தேச்சு மழமழன்னு தரை குளுகுளுப்பாத்தான் இருக்கு. மாமனைக் காணும். எதிர குடுசெயிலிருந்து தலை நீட்டி "அஞ்சியே இர்றா மாப்ளெ, பயப்புடாதெ. உன்னெ மாதிரி 'இது'ம் இவளுக்கு புதுசுதான். ஓடியாந்துடாதெ. அப்றம் அவளையும் நானு 'போட்டாவ' வேண்டிவந்துடும். இருபதும் இருபதுமா நூறு ரூவா போச்சின்னு ஆய்டும். அஞ்சியே இரு. வருவா. ஏய் எஞ் சடி அவ? போச் சொல்லுடி." ஒரு கணம்தான். இருட்டுக்குள்ள வெளிச்சம் வந்தாப்ல... இதென்ன? வாசல்ல மாஞ்சி நிக்கிறா. பதினஞ்சு வயசு இருக்குமா? மெரள மெரள பாத்துகிட்டு நிக்கிது வாசல்ல. மணல் நிறம் உடம்பு. வெய்யல்ல பளிச்சின்னு ஆச்சரியமாயிருக்கும். அவ நிக்கிற நிம்புலியே நிக்ய முடியல்லெ. கால் பெரு வெரல் மேலியும் கீழுமா அசையிது. கை ரெண்டும் ஒண்ணெ ஒண்ணு பெசையிது. இன்னம் கொஞ்சம் பெண்ணம் பெரிய வடிவத்தில் ஒருத்தி வந்து "போயண்டி முண்டெ. உள்ற நிக்கிறாவள்ளெ?"ன்னு கத்துனா. மாஞ்சியின் உதடுகளுக்கு மேலே பொன் போல மீசை வரைந்தாற்போல. உடம்பு மணல் மாதிரி நிறம் மினுங்க, ஆ. கறுப்பு ஜாக்கெட்டில் இடுப்புக்கு கீழே பாவாடை விளிம்பில் ஒரு மச்சம். துடைகளின் பருமையை மறைக்காத சீட்டிப் பாவாடை, அமுக்குதான். மாஞ்சி... மாஞ்சி... சொல்லிப் பார்த்துக் கொண்டான் தெலகராஜு.

உள்ளே நிழலடித்ததும்தான் மாஞ்சி உள்ள வந்துட்டான்னு ஞாபகம் வந்தது. யோசிக்கவே நேரமில்லெ. தூரத்துல பறக்குடியிலிருந்து, கூச்சலும் சத்தமும் கேக்குது. கோவில்ல வேட்டு தீக்கற சத்தம் வேற 'டபீர்'ன்னு கௌம்புது... நேரம் போவுது... மாஞ்சி நிக்கிறா... பாதிதான் தெரியுது... என்ன பண்றது... புரியலெ. திடீர்ன்னு ஓடம்புக்குள்ள என்னமோ ஒரு வேகம் பூந்துகிட்டு எழும்பிகிச்சு... கண்மண் தெரியாத வெறி, அவளை அப்டியே அள்ளிக் குத்தி...

"என்னெ ஒண்ணும் பண்ணிடாதீங்க ஆண்டெ"

அவள் நெஞ்சிலிருந்த அவள் கைகளை விலக்கி... கட்டியிறுக்கி...

"ஆண்டெ ஒண்ணும் பண்ணிடாதிங்ய ஆண்டெ..."

மாராப்புச் சீலையை உருவி... நெருங்கி... கட்டிப்பிடித்து குமுக்கி... அவுத்து... "மாஞ்சி. ஏய்..."

"மாஞ்சி"

"... ... " புங்கமரத்து நெழலும் உச்சி வெயிலும் இருட்டு எங்கே போச்சாம்? தூரத்தில் பறக்குடியில் மாட்டுத் தோலை உரித்துக் கொண்டிருந்தார்கள்.

'டண்டணக்கு. டண்டணக்கு.' தப்பு கொட்டுகிற ஓசை மட்டும். ஆடிக்கொண்டே தப்பு வாசித்தார்கள் பறையர்கள் 'டண்டணக்கு டணக்கு டணக்கு' ரொம்ப நேரம் புங்கமரத்து நிழலும் அசையலெ.

"ஏய் மாஞ்சி."

"ம்."

"அது யாரு உங்கக்காவா?"

"என்ன புடிச்சிருக்காடி?" என்ன பைத்தியக்காரத்தனமான கேள்வி அவனுக்கு.

"ம்."

"ஒன்னெ வேறா யாராவுது....." மறுபடி பித்தம் ஏறுது பைத்தியம் பண்ணுது.

"ம்ஹும்"

"நெஜம்மாவா?"

"ஆமா. உங்களுக்கு எத்தினியாவுது?"

"ஏய்... என்னடி துமுரா?"

"ம்... நீங்க கேக்கலாம். நா கேட்டா தப்புல்லியா?" ஏங்கலடித்து விம்மிய மாஞ்சியை இழுத்துப்போட்டு கவிந்து கொண்டான் தெலகராஜு. அவன் பார்த்த பெண்கள்... படித்த சமதர்ம புஸ்தகங்கள். மனித வஞ்சனையை இழித்துக் காட்டும் புஸ்தகங்கள்... பேசிப் பேசி கனவு கண்ட கற்றுக்கொண்ட சமநீதி... ஆண் பெண் சமத்துவம், சோஷலிஸம், கம்யூனிஸம்... எல்லாம் எல்லாம் ... எழுதிய கட்டுரைகள் படித்து பயின்ற விஞ்ஞானங்கள். எல்லாம்... இந்த நேரம் உதவவேயில்லை... பயன்படவேயில்லை... சுருண்டு போனான்.

"ஏங்க"

"... ... ..."

"ஆண்டெ"

"... ... ..."

"ஆண்டெ"

"ஏய். என்னெ ஆண்டென்னு கூப்புடாதெ."

"ஏய்யா ஆண்டென்னு கூப்புடப்டாது? நீயி ஆளலாம் நானு கூப்டப்டாதா?"

"... ... மொதல்ல மாட்டென்னெ ஒண்ணும் பண்ணிடாதீங்யன்னெ. இப்ப நான் ஆண்டையா? என்ன கொளுப்புடி?"

"நானு கரமுண்டாரு வூட்டு பள்ளத்தி... ல்ல? அக்காளெ கருப்பு கரமுண்டாரு வெச்சிருக்காரு... எங்கம்மாளயும அவருதான் வெச்சிருக்காரு... எங்கத்தையும் அவருதான் வெச்சிருந்தாரு... என்னையும் ரெண்டு மூணு தடவை கையெப் புடிச்சி இளுத்தாரு. நாந்தான் மாட்டன்னுகிட்டேயிருந்தனா... செம்பாட்டுப் பள்ளன் கத்தரி வேற வந்து இமுசெ படுத்திகிட்டேயிருக்கு. கட்டிக்க கட்டிக்கன்னு... ராசா நீங்க வந்து தூக்கிக்கிட்டு போப்போறிங்யன்னு தெரியாமப் போச்சி. ஆனா சொல்லல பள்ளனுவ வந்து கண்ணாலம் கட்டிப்புட்டான்னா சாமீ. எங்கம்மா மாதிரி அலையணும்ன்னு பயந்தன். எப்டியும் கரமுண்டாரு பள்ளத்தியதான நாங்க?"

"அது கெடக்கு ஒங்கம்மா என்னா அலைஞ்சா? ஏன்டி?"

"என்னங்க, இப்படிப் போட்டு... பாருங்க ரத்தம் ஊத்திக் கெடக்கு... பயமாயிருக்கு."

"அது ஒண்ணுமுல்லெடீ. எனக்கும் பயமாத்தான் இருந்தது. மொத மொதல்ல நாந்தான் ஒனக்கு. நீதான் எனக்கு. மொதமொதல்லன்னுட்டு ரெண்டு பேரும் குடுத்த ரத்தம். வலிக்கிதா?" கொல்லுன்னு சிரிக்கிறா மாஞ்சி. வலியாவுது?

மறுபடியும் மறுபடியும் மாஞ்சி தெலகராஜுவை அமிழ்த்தி எடுத்தாள். அவன் மேலேறி மார்பில் அழுந்த தன் மார்புகளைத் தானே அவன் மேல் ஏறி மறுபடியும் நினைவிழக்க வைத்தாள். உலகம் இல்லை. உலகம் எங்கோ போய் விட்டது.

"ஏங்க."

"ம். என்ன?"

"இனிமெ நான் ஓங்க பள்ளத்தி. எனக்கு வேற ஆம்பள வாண்டாம்."

"அட, அதெப்புடி உடுவாங்க? பள்ளனுவ உடுவானுவளா?"

"நா, ஓங்க பள்ளத்தில்ல? என்னெ வேற எவனும் தொடப்டாது... ஏங்க?"

"தாலி கட்டச் சொல்றியா?"

"தாலி கட்டுனாத் தானாய்யா? ஏய்யா நீயி என்னய வேற ஒருத்தனுக்கு உடுவியா?"

"அடச்சீ. என்னா பேச்சு இது?"

"நடுத் தெருவுல உட்டுட்டு போவாதய்யா. என்னெக் காப்பாத்துய்யா."

"என்ன பண்ணணுங்கிற நீயி."

"தேந்த செம்பாட்டுப் பள்ளத்தி நானு. என்னெ எந்தப் பள்ளனும் வந்து தொடப்படாது. எந்த கரமுண்டானும் கை தொட்டு இளுக்கப்டாது. நானு கண்டவங்கிட்டல்லாம் போவாமெ என்னிய நீதான் எடுத்துக்கணுய்யா. மவராசா, எங்காயி பட்ட பாடு நாம் படப்படாது."

"என்ன செய்யணும்? சொல்லு?"

"எங்காயியெ எப்ப வந்து கரமுண்டாரு கூப்புடுவாரு தெரியாது. எங்கப்பாவெ ஆசப்பட்டுதாங் கட்டிகிச்சு எங்காயி. பாட்டத்துப் பள்ளனும் பாட்டத்து கரமுண்டாரும் எங்கம்மாளெ மறிச்சுப் பறிச்சுத்தான் எடுத்தாங்கய்யா. ஒரு நாளு நாயும் நரியும் கொதறி வய வரப்புல கெடந்தா எங்காயி."

"ஏன் அப்புடியாச்சாம்?"

"எங்கப்பந்தான் குத்தி கொடலெ உருவி மாலையா போட்டுகிட்டு போலீஸ் டேசனுக்குப் போச்சுதாம். அப்புறம் எங்கப்பன் வரலெ."

"அதுக்கு?"

"நான் ஒம் பள்ளத்தின்னு எல்லாருக்கிட்டேயும் சொல்லிடுவேன். ஆம்மா"

"சொன்னா...? உட்ருவாங்களா?"

"நீயும் சேந்து சொல்லணும், இவ ஏம் பள்ளத்தின்னு....."

"சொன்னா ஏத்துக்குவாங்களா?"

"நீ என்னெ தலை முழுகிட்டுப் போனா, நானும் உட்ருவனா... நேத்திக்கி வரைக்கும் எல்லா பயலும் என்னெப் போட்டு மாட்டி எடுக்கப் பாத்தானுவ. அட நானு மசியலன்னு தெரிஞ்சதும் கள்ளனுவ பள்ளனத் தூண்டிவுட்டாங்க. ஒவ்வொரு பள்ளனா வந்து அமுத்தி எடுக்கப் பாத்தானுவ. ராமுக் கரமுண்டாருதான் வெச்சக்கிறேன்டின்னாரு. எனக்கு நீயி வரெ வரைக்கும் ஒன்னியத் தெரியாது. ராசா, நீயிதான் இப்ப ஏஞ்சொந்தம். நானு எஞ்சப் போவன்? எங்கக்கா கூட என்னெ பள்ளனுவளுக்கு காட்டிக் குடுத்து மாட்டிடுவா. ஆருகிட்ட போயி நிப்பேன்? ஏம் பள்ளன் நீயி."

"பள்ளனா?"

"ஆம்மா. நீயி ஏம் பள்ளன் நானு ஒங்கள்ளச்சி."

கண்களில் எல்லாம் மாலைமாலையாய் வடிய சம்மணமிட்டு அம்மணமாய் உட்கார்ந்திருந்த மாஞ்சியப் பாத்து அசந்து போச்சு தெலகராஜுக்கு. என்ன அழகு இது? அவனுக்குமே அவளெ வுட இஷ்டமில்லதான். ஆனா கரமுண்டாரு வூடு ஒத்துக்குமா?

மாந்துளிர் உடம்பும் பூசினாப்ல இருக்க, அந்த நிர்வாணமும் வெறி ஏத்துற மாஞ்சியோட அந்த அந்த... மொதல் மொதல் தொட்டு கட்டிப்பிடிச்சி... இவளெ எப்புடி காப்பாத்தி... எஞ்ச கொண்டு போயி... பள்ளனுவா உடுவானுவளா... ஓ... எந்த ஞாயமும் வராது போல இருக்கே... படிச்சு சேத்த எல்லா தர்மமும் இதுக்கு வராது வராது.

அப்புடியே அழுதுகிட்டே அவன் காலை கட்டிக்கிட்டா மாஞ்சி. ரெண்டு மாரும் கால்ல பலமா கதகதப்பா அமுங்குது. ஒடம்பு துடிக்கிது.

அவன் படிச்ச செக்ஸ், அரசியல், தத்துவம் எல்லாம் நாசமாச்சு. சுயம் இழந்துபோறது நல்லாவே தெரியுது. தொரச்சியப்பாயி சொன்னுதே, வாண்டாம்டான்னு.

அவன் நெஞ்சில் பதிஞ்சு உருண்ட அந்த மாஞ்சியோட முலை ரெண்டும் இப்ப அவன் காலடியிலல்ல நசுங்கிக் கெடக்கு. தெலகராஜுவாலெ தாங்க முடியல்லெ.

"ஏய்யா. என்னெ சதை சதையா கூறு போட்டு விக்கியப் போறியா சொல்லு. எங்கப்பனும் என்னெ விப்பான். எங்கம்மா இருந்தா அவ தப்பிச்சுக்க எவனுக்கும் உடுவா. எங்கக்கா எந்த கரமுண்டாருக்கும் வெட்டிக்குடுப்பா. நீயியும் என்னெ நாயிக்கும் நரிக்கும் எறியப் போறியா?"

"நீ எங்கள்ளச்சிதான்டி. ஒன்னெ வுடமாட்டேன்டி. நான் உம் பள்ளன்டீ" கத்தியபடியே அவள் மேல் பாய்ந்து கட்டிக் கொண்டு சரிந்தான் தெலகராஜு. நீண்ட நேரம்... மிக நீண்ட நேரம்... அந்தக் கள்ளச்சியும் பள்ளனும்... நூற்றாண்டுகளாக நிகழ்ந்து வரும் சிருஷ்டியில் ஆண் பெண்ணாய் சிதைந்து கலந்து போனார்கள். தெலகராஜு பயந்து போனான். என்ன வேகம் அவனையே புரட்டி எடுத்தாள் மாஞ்சி. உலகம் முழுமையுமே பழி வாங்கிக் கொண்டிருந்தாள் மாஞ்சி. தெலகராஜு அசந்து ஓய்ந்த போதும் பள்ளி, செம்பாட்டன் பள்ளி மாஞ்சி உடலெ. "என்ன கரமுண்டரே அவ்வளவுதானா...?"ன்னா. மறுபடியும் அந்த இருண்ட குளிர்ந்த குடிசை தலைப் பரப்பியது. இது எந்தக் கள்ளச்சி தருவா? தர முடியும்? கரமுண்டாத்தியளுக்கு முடியுமா? தெலகராஜுவுக்குத் தெரியாது. அவளைத் தள்ளிவிட்டு எழுந்தான். சங்கிலிப் பாயாய்த் தொங்கினாள் மாஞ்சி. அள்ளிக் குமித்தான் தெலகராஜு. அந்தக் காலியான பாட்டிலை எடுத்துக் கவுத்தான் தெலகராஜு.

"இருய்யா வர்றேன்" இருட்டுக்குள்ள போனா மாஞ்சி. ஓடனே வந்தா. கையில கலயத்தெக் குடுத்தா. சாராயம். அவளே காச்சினது. வாட்டு.

"ம். குடிய்யா. எனக்கு வேணும் மிச்சம் வெய்யி." தெலகராஜு தெண்டையில் கருப்புச் சூலை சுருண்டது. பாதியெ அவகிட்ட நீட்டினான். "குடிய்யா எனக்கு ரெண்டு மொடக்கு போதும்." குடித்தான்.

"மாஞ்சி"

"ஏய்யா?"

"அய்யா அய்யான்னு என்னக் கூப்டாதடி."

"பின்ன என்னான்னு கூப்புட?"

"டேய் பயலேன்னு கூப்புடு."

"என்னய்யா? எகிறிகிச்சா? அப்டில்லாம் கூப்ட மாட்டேன்"

"நா ஒரு கோழப்பயடி."

"ஆரு சொன்னா? நீயி தாய்யா வீரன். என்னெ உச்சில வெச்சிட்டய்யா ராசா."

"ஒன்னெ தாலி கட்ட முடியலியேடி தேவ்டியா"

"அட நீயி வேற. இப்பவே நீயி எங் குடுசையில எம் புருசந்தாய்யா."

"யாரும் ஒத்துக்க மாட்டாங்க"

"யாரு ஒத்துக்கணும்? எவன் ஒத்துக்கணும்?"

"ஏஞ் ஜாதி சனம்."

"அட பயித்தார மனுசா, என்னெ உம் பள்ளத்தின்னு சொல்ற பாரு அது போதுய்யா. ஒரு பய என்னெ ஒண்ணும் பண்ண முடியாது. தாலிக்கி மேலய்யா இது. திகிரியமா சொல்லு, மாஞ்சி ஏம் பள்ளத்தீன்னு. எல்லாக் கள்ளனும் தேவுடியா குடிக்கப் போறான். போகாதவன் யாரு? ஆனா பள்ளத்தி கதை வேற. பள்ளத்தி கள்ளங்கிட்டதாய்யா போவா." தலைக்கு மேல் உலகம் அப்பளம்போல் சுழண்டது.

"படிச்சேன்டி. பத்து பயலோடு போட்டி. டிக்ரியெல்லாம் வாங்கினன்டி மாஞ்சி. அஞ்சயும் போட்டிதான். கரமுண்டாரு பொண்ணுதான்டா ஒனக்குன்னானவ. இஞ்சயும் எட்டுப் பய மாமன் அத்தான்னு போட்டி. கடேசில வந்தா எஞ்சியும் இதே கதையாடி? ஒனக்கும் போட்டி எவனோ கத்திரின்னு சொல்றே? ஜெயிச்சுகிட்டே வந்தாச்சி மாஞ்சி குட்டி. ஒன்னெ மாதரி என்னெ தலையில ஏத்திக்கிட எந்த கரமுண்டாத்தியாலெ ஆவும்? வூடா அது. சேய்... முப்பது வருஷமா எத்தெ பெரிய்ய தூணு. எத்தே பெரிய கதவு எத்தே பெரிய திண்ணென்னு சொல்லி... இப்ப ஒரு நாமம் போட்ட அம்மன் ஒருத்திய கட்டிகிட்டு. அவ என்னடான்னா..."

"ஏய்யா... ஆயியய்யா சொல்ற? தங்கம்ல்ல அது. எப்ப கட்டிக்கப் போறெ?"

"ஆ... ஆமா... எங்க நெலம் வேற இவங்க நெலத்தோட கலந்து பெய்டுச்சி. வருஷம் முப்பதாச்சுடி. ஒண்ணும் புரியல்லியாம். அம்மா பேச்சொன்னுதுன்னு இஞ்ச வந்தா... ஏன்டா ஒனக்கு இந்த எளவு? அதென்னமோடி எனக்கு இப்பதாம் புரியுது. கரமுண்டாரு வூடுன்னாலே பெருங்கூட்டந்தான். எல்லா பெருசுதான் ஒஸ்த்திதான்... கல்யாணம், கல்யாணம்ன்னு பெருந்தி மாதிரி ஒரு பொண்ணெ வளத்திருக்கானுவ...

"என்னய்யா? எனக்கு உன்னியத் தெரியாதா? கரமுண்டாரு வூடெப் பாக்காதவளா நானு? சாராயத்தெப் போட்டுப்ட்டு எதுனாச்சியும் ஒளராதெய்யா. படுத்து ஏந்திரிச்சோடனெ ஏங்கிட்ட இப்டி பெனாத்தாதய்யா. நேத்துக் குட்டிய்யா நானு. குடிச்சுட்டு பொரளாத. அது யாரு தெரியும்ல்ல? நா யாரு? அந்த வூட்டு பள்ளத்திய்யா, படுத்து ஏந்திரிச்சியே ஒடம்பு யாருதுங்கிற? கரமுண்டான் வூட்டு சதைய்யா, ரத்தம்."

"கோலம் போடுறத்தெப் பாக்கல்லியாடா தம்பி."

கிழவி லேசுபட்டதா? பள்ளத்தியுவ எல்லாத்தியுமா சொல்லியிருப்பாளுவ? மாஞ்சி இந்த கரமுண்டான் பள்ளத்தி தானே? பொக்கை வாயி செவக்க இந்த விடியாலம்பறயே வெத்தலையைப் போட்டு கொதப்புதே தொரச்சியப்பாயி இதுக்குக்கூடவா புரியாமெப் போவும். இந்த மாஞ்சிதான் எப்டிப் பொண்ணு. அததுல ஜாதி தரம் ஒஸ்த்தி ஒயரம்ன்னு வெச்சுகிட்டுத்தானே இருக்குறானுவ. செம்பாட்டம் பள்ளியாமே? எல்லாம் பணத்தெக் காப்பாத்துறதுக்கு அமைச்சது. ந்த மனுஷப் பயமாதிரி பழக்கி அதுக்கும் ஒஸ்த்தி மட்டம் கத்துக் குடுத்துருக்கானே...

கேணிப்பட்டறை பந்தையத்துக்கு போயி வந்த களைப்பு இன்னும் இருக்கே. அஞ்சினிக்கப்பாலல்ல இருக்கு கவரமேடு. ஆத்துல வெள்ளம் வந்தா கவரமேடு மட்டுந்தான் முழுவாதாம். எட்டு மயிலு நீளம், பதினாறு மயிலு அகலம், ஒரே தாக்கா மணலு, அம்பது வருஷத்துக்கு மிந்தி வந்த வெள்ளப் பாச்சல்ல மேடாகிப் போன மணல் திட்டு. தண்ணி வடிஞ்சப்புறம் மேடாவே நின்னு போச்சாம்.

சின்னத்தம்பி நாட்டாரு

தம்பி ராசு வன்னியரு (கள்ளருதான்)

ஆமருவித் தேவரு

சுப்பாக் கரமுண்டாரு (சின்னமாமா)

வீராச்சாமி வாச்சுத்தியாரு

இப்டி பத்து மைனர் தம்பிய எல்லாம் அஞ்சினிக்கு மேக்க ஆத்து மடுவுலயிருந்து கேணிப்பட்டறையள்ள ஏறிகிட்டு பொறப்படும். தரையில் ஓட்றதா பெருசு? மணல்ல ஓட்டணும். அஞ்சினிக்கப்பால வடக்கால பதினாறு மயிலும் கடந்து மேட்டெக் கடக்கணும். ஊருக்குள்ள பெருமாள் கோயில்ல கூட்டம் கூடிடும். அஞ்சினி பூரா அங்கதான் நிக்கும்.

ரெண்டு தடவை தெலகராஜுவும் பாத்திருக்கான். மணலக் கிழிச்சுகிட்டு கேணிப்பட்டறைவ பாயறது கொடலெக் கலக்கும். பதினஞ்சுக்கு மேல கேணிப்பட்டறை பாயும். கேணிப்பட்டறை சக்கரத்துல முள்ளு முள்ளா பட்டயடித்து மணல்ல ஊணிச் சுத்துற மாதிரி இரும்பு வரிஞ்சு சுத்தியிருக்கும். தம்பிராசு வன்னியரு மோட்டாவா ஆளு இருப்பாரு. கருப்பு குதுரெ, பளபளன்னு பிடறி மயிறு சலசலன்னு பறக்க வந்து, மணல்ல தவ்வித் தவ்விப் பாயும். அடிவானம் வரைக்கும் மணல்தான் குழிவுட்டுக் கெடக்கும். மாசக் கணக்குல மணல்ல கேணிப்பட்டறையை வுட்டு அடிச்சுப் பழகிகிட்டேயிருப்பாங்க. பக்கத்து ஊருவள்ள இருந்தும் ஆளுவ வந்து கேணிப் பட்டறை போட்டு உருட்டியடிச்சு பழகிகிட்டுத்தான் இருப்பானுவ...

"அம்மாயீ. இந்த வருசம் கேணிப்பட்டறை பந்தயம் உண்டுல்ல?"

"ஏன்டா தம்பி கேக்குறெ? ஒனக்கு அந்தத் தும்பம்ல்லாம் ஏன்டா ராஜா?"

"இப்ப நடந்தா பாக்கணும்ன்னுதான் அம்மாயி. ஆசையாயிருக்கு. சின்ன புள்ளையில பாத்தது."

"அடபோடா. அதுல என்ன இருக்கு பாக்க? திமுதிமுன்னு மணல்ல ஜனமும் ஓடும். குதுரை காலு ஒடியிறதுதாம் மிச்சம். எப்பமும் தம்பிராசு வன்னியந்தான் ஜெயிப்பான். எல்லாருக்கும் தெரியும். பத்து கேணிப்பட்டறையாவுது மணல்ல உருண்டு பள்ளத்துல போயி மடுவுல உளுவும். நம்ப பய சுப்பன் கேணிப்பட்டறை கடைசி வரைக்கும் பொரளாது. பெருமாள்கூட நிக்கிறப்ப கவுருமா? கோயில் தெடல் வரைக்கும் இளுத்துத் தள்ளீடும்டா தம்பி. ஆச்சரியமா இருக்கு. அம்பது வருசமா நம்ம கேணிப்பட்டறை கவுந்ததேயில்லெ..."

"நம்ம கேணிப்பட்டறை ஜெயிக்காதாம்மாயி?"

“ஆமாடா தம்பி. நம்ப கேணிப்பட்டறை தோத்ததுமில்லெ, ஜெயிச்சதுமில்லெ.”

“ஏம்மாயி அப்டி.”

“கரமுண்டானுவ சூரனுவடா. பெருமாளு சொத்துடா கரமுண்டாரு வூடெல்லாம். அதுக்கு அழிமானம் கழிமானம் கெடயாதுடா தம்பி. ஜெயுப்புமில்லெ, தோப்புமுல்ல.

“அப்ப நம்ப சொத்து எல்லாம் தேஞ்சுகிட்டே வருதேம்மாயி? அது எப்டியாம்?”

தொரச்சியப்பாயி கண்ணு ரெண்டு விரிஞ்சிது. சுருக்கம் விழுந்த முகம் புருவம் எல்லாம் விரிஞ்சுது. முகமே விரிஞ்சு பெருசாய்ட்டுது. கண்ணால தண்ணி குபுக்குன்னு தாரை தாரையா வடியிது. கண்ணு செவந்து வரயிது. வருசத்து தாக்கம் எல்லாம் கரையுது.

“என்னடா தம்பி, இப்டிக் கேட்டுகிட்டு இருக்கெ?”

“இல்லமாயி உங்கிட்டதாங் கேக்கலாம். பெரிய மாமா சொல்ல உட்டெங்கிது. நடு மாமா பேசமாட்டேங்கிது. குட்டி மாமா கேணிப்பட்டறையெ கதியா வாரெச் சுத்துது. நானும் வந்து ஒரு மாசத்துக்கு மேல ஆவுது. அம்மா பணங் கேக்குது. இல்லென்னா நெலத்தெக் கேக்குது.” வாசலில் இருட்டில் அரிக்கன் விளக்கு வெளிச்சத்தில் கோலமிடும் பெண்ணின் வடிவம் இங்கே எட்டாங் கட்டிலிருந்தும் தெரிந்தது. அந்தப் பிரம்மாண்டமான வூடும் அந்த சின்னப் பெண்ணின் அரிக்கன் விளக்கு வெளிச்சத்தில் புதைந்திருந்தது. கோலம்தான் தெரியவில்லை. குறுக்கில் நின்ற துளசி மாடத்துப் பிறையில் அகல் விளக்கின் வெளிச்சம் எந்தக் காற்றுக்கு அணையாமல்தான் நின்றது.

இதோ மணல் மேட்டில்... கவரமேட்டில் பந்தயம்.

குதிரைகள் தவ்வுதவ்வுன்னு தவ்வுது.

கேணிப்பட்டறையில்தான் எத்தினி ஜாதி. பந்தயம்ல்ல? குதுரையளுக்கு வேர்வை ஆறா வடியிது. முதுகிலிருந்து வயித்துக்கு வேர்வைப் பாய்ச்சல். தம்பி ராஜு வன்னியரு குதுரைய வெரட்டுறாரு. லங்கன்னு மிறிச்சலங்குப் பாயிது குதுரெ. கவர மேடு ஆபத்தான மேடு. காவேரிப் படுகையில பதுனாறு மயிலும் ஒரே தாக்கா மேடாக்கிட்டே போவுது, வானம் வரைக்கும். ஓட்டம் ஓட்டம். மேட்டுல மேல ஏறி ஏறிப் பாயுற ஓட்டம். அப்பல்லாம் ஜாதி தெரியாது தெலகராஜுக்கு. மோட்டாவா இருக்குற தம்பி ராஜு வன்னியரெ கீள தள்ளி மேல ஏறி

மெறிக்கணும், அப்டியேன்னு புகஞ்சுகிட்டு வரும், பத்திக்கிட்டு வரும் தெலகராஜூவுக்கு. பந்தயம்... போட்டி... ஏறி மிதிக்கணும். ஜெயிக்கணும். ஆ, அப்பல்லாம் அவன் பள்ளியூடத்துப் பய்யன். லீவு லீவுக்கு அஞ்சினிக்கு வந்துடுவான். பெரிய பெரிய புளிய மரம் தலை விரிச்சுகிட்டு மணல்ல நிக்கிற செம்மண் மேடு. ஆத்துக்குள்ள பரிசல்ல கடந்து வரும் போதே ஜிவ்வுன்னு காதுல ஒரு உஷ்ணம். என்னமோ ஒரு பாசம். அஞ்சினில ஒடனே ஒரு பரபரப்பா இருக்கும்.

காத்தாயிதான் நெனைப்பு. காத்தாயம்பாளுக்கு பத்து மாமன்.

பெரிய பெரிய ஆச்சரியமான கண்கள் காத்தாயம்பாளுக்கு. அது எப்பமும் சிமிட்டி சிமிட்டி முழிக்கும். கறுப்பு நவ்வாப் பழமாட்டம் பளபளன்னு ஆச்சரியந்தான். பத்து வயசுலியே காத்தாயம்பாளுக்கு கால் வரைக்கும் நீளம், கறுப்பு சுருள் சுருளா திராட்சைக்குலை மாதிரி ஆஹான்னு தலைமுடி. தலைகுளிச்சிட்டு உள் அங்கணகத்துல ஒரு கை மடக்கி நெத்தியில ஒத்தை நாமக்கோடோடெ காத்தாயம்பா கெடக்குறதை தெலகராஜு பாத்து அவ கை, காலெல்லாம் தொட்டுத் தொட்டு ஆசையா பாத்திருக்கான். காத்தாயம்பாளுக்கு ரெண்டு அத்தான் வேற இருந்தானுவளே. பளிச்சின்னு முளிச்சு ஏந்திரிச்சு ஒக்காந்துடுவா காத்தாயம்பா. தொட்டது தெரிஞ்சு போய்டும்.

"ஏம் மாமாவ். என்னா வேணுமாம்?"

"ஒண்ணுமில்லெ"

"ஒண்ணுமுல்லியொ? அப்ப ஏன் தொடுறயாம்?"

"ஒண்ணுமில்லெ."

"பொட்டப்புள்ளெய சும்மா சும்மா தொடப்படாது."

"ஒங் கையில எப்டி பட்டு மாதிரி இப்டிமுடி வளந்து கெடக்கு... ஆ."

"ச்சி. தொடாதே... அம்மா பாத்திச்சின்னா கொன்னுடும்..."

"நீதான் ஏம் பொண்டாட்டியாச்சே? நாந்தானே ஒன்னெக் கட்டிக்கப் போறோன்."

"ம் ஹும். வயசு பன்னண்டாவல கட்டிக்கப் போறாராம்ல்ல"

"நீ என்னெ கட்டிக்க மாட்டியா அப்ப?"

"பெரிய ஆம்பளெ நீய்யி. ஒன்னெ கட்டிக்கிறாங்க. ஹ்ஹும்..."

"ஏம் மேல ஒனக்கு ஆசெயில்லியா?"

"ஆசையா ஏதுக்காம்?"

"என்னடி சொன்ன?"

அப்படியே அவளை லாவி சடையைப் பிடித்து மறு கையால் பாவாடையைப் பிடித்து முறுக்கி நிறுத்துவான். இதற்காகத் தானே அவளும் இந்தப் பேச்சு பேசியதே?

அவன் செய்யும் அந்தக் காரியம், யாராவது பார்த்தால்... ஆ... ஒரு ரெண்டு நிமிடம் வலி. நெஞ்சில் குபீரென்று பயம்... வயதறியாத விளையாட்டா அது? உடம்பின் திமிர் அப்போதே மொட்டுவிட்டிருந்த பசுமையில்... எல்லாரையும் ஜெயித்த உத்தி. மாமன்கள் அத்தனை பேரையும் குப்புறத் தள்ளிவிட்டு காத்தாயம்பா அவனை நோக்கி ஓடிய, ஓட வைத்த பந்தயம்.

ஒரு நிமிடம் அவளைக் கதவின் முக்கோண இருட்டில்... மூலையில் அறைந்து நிறுத்தி நிமிண்டி.... இப்போதல்ல... பதினைந்து வருடங்களக்கு முன்பே... அந்த அறியாப் பருவத்தில், யாரும் காணாத கதவின் மூலையில் ஒரே ஒரு நிமிடம்... உளியால் செதுக்கிய அவன் நிர்வாணம் காத்தாயம்பாளை மூடிவிட்டது. பந்தயம்... பந்தயம்... ஒரே குறியில் பாய்ந்தது அது.

"ஆமாடா தம்பி... நீயி சொல்றாப்ல கரமுண்டாரு சொத்து தேஞ்சுதாம் போச்சு. ஆனா கரமுண்டானுவ இன்னைக்கு கரமுண்டானுவதான்டா. ஆயிரம் வேலியிலிருந்து ஐந்நூறு வேலியாகி இப்ப நூறு வேலிக்கும் கீள போச்சே, எப்டி? எல்லா கள்ளனுவ மாதிரியில்லடா நம்ம கள்ளக்குடி. யோசிச்சுப் பாரு. இப்ப நம்ம பத்தாயம் எல்லாம் காலியாக் கெடக்குடா. தின்னு கெட்ட ஜாதிடா நம்ம வூடு. வேற ஒண்ணுமில்லெ. தேவுடியா குடிக்குப் போறவனா நம்ம கரமுண்டானுவ இல்லடா. மைனர் ஷோக்கு பண்ணத் தெரியாது. ஒங்க தாத்தா பேருக்கு ஊரெக்கட்டி மேச்சாருடா. ஆமா. ஊருக்கு ஆத்தெக் கட்டி எறச்சாரு. ஒங்க பாட்டனுவ எல்லாம் தெரியுமா? ஊரு முழுசும் சாப்ட்டுதுடா. பத்து ஊரு பள்ளன் நம்ம பள்ளனுவடா தெரியுமாடா? இப்பக்கூட எளங்காக்குடி பள்ளனுவ வந்தா குமுறுவானுவடா. இதே முத்தத்துல ஒக்காந்து "ஆண்டச்சி. எங்களையெல்லாம் இப்படி அடிமயளா உட்டியளே வேணுமா, நாங்க இப்ப வேத்தாளுக்கிட்ட அடிமையாத்தான் இருக்கோம்ன்னு அழுவுவானுவடா... தெரியும்ல்ல?"

“நம்மகிட்ட மட்டும் அடிமையா இல்லியாக்கு அவனுவ?”

“அட பைத்தியாரப் பயலே. எத்தனை பேருகிட்ட போனாலும் அவனுவ நம்ம பள்ளனுவடா. நம்ம காடு கரை தேஞ்சு போனாத்தான் என்ன? நம்மளெ யாரு அசைக்க முடியும்டா?”

“போ அம்மாயி. மனுஷனுக்கு மனுஷன் யாரும் அடிமை ஒண்ணுமில்லெ.”

“அதெல்லாம் ஒங்க காலம்டா தம்பி. எல்லாம் ஒண்ணும்... ஓம் வாயில மண்ணுன்னு எல்லாத்தியும் ஒண்ணடி மண்ணடியா போட்டு கொழப்புறது. எல்லாத்துலியும் ஒஸ்த்தி, மட்டம் இருக்குடா தம்பி. இப்ப, நமக்குள்ளகூட அது இருக்கு... இல்லைங்க முடியுமாடா? இப்ப, நீய்யி இருக்கெ... காத்தாயம்பாளெ ஒனக்குன்னு பேசி வெச்சிருக்கு... இனிமே யாராவுது ஒண்ணு பண்ணிட முடியுமா? காத்தாயம்பாளுக்கு நம்ம ஜாதிக் கட்டுக்குள்றயே பத்து மாமன்காரன் இருக்கான். எல்லாப் பயலும் இன்னைக்கும் காத்தாயம்பா வேணும்ன்னு ஆலாப் பறக்குறானுவ... இதென்ன கேணிப்பட்டறை பந்தயமா... ஜெயிச்சவனுக்கத் தூக்கிக் குடுக்க?”

கறுப்புக் குதிரையில் தம்பிராஜு வன்னியரு. கவரமேடு வானம் வரை ஒரே ஏற்றமாய் மணல் தளம் விரியக் கிடக்கிறது. கேள்விக் குறிகளாய் கேணிப்பட்டறைகள் அடுக்கடுக்காய்ப் பாய்கின்றன. செங்குத்தாய் இப்படி ஒரு மணல் மேடு குதிரைகள் குளம்பால் மணலைப் பறிக்கின்றன. ஹோவென்ற ஜனங்களின் சத்தம். அதென்ன சின்னத் தம்பி நாட்டாருடைய கேணிப்பட்டறை குப்புறப் புரள்கிறது. ஹா... குதிரைகள் மணலில் குப்புற உருண்டுருண்டு புளியமரங்களிடையில் மோதி... கேணிப்பட்டறைகள் சுக்குச் சுக்காகி உடைந்து, ஆறு கேணிப்பட்டறைகள் சிதறி உருண்டு, கீழே காவிரி மடுவில் குதிரைகள் எதிர் கரை அலையில் நீந்தி... நீந்தி... குதிரைகள் நீந்துவதைச் சிறுவன் தெலகராஜு பார்க்கிறான். தலைகளைச் சிலுப்பியபடி கிடகிடத்து கரை ஏறுகின்றன. ஒரு குதிரை கழுத்து மட்டம் தண்ணீரில் ஆற்றோடு போகிறது. இளவட்டங்கள் ஆற்றில் குதித்து குதிரையோடு நீஞ்சிப் போகின்றனர். தொரச்சியப்பாயி சொன்னது உண்மைதான். ஒருவித தந்திரத்தோடு தவ்வித் தவ்விக் கரமுண்டார் குதுரை கேணிப்பட்டறையை இழுத்துக்கொண்டு ஓடுவதில்லை. முண்டி முண்டி மேடேறுகிறது. கால் பிசகாத தவ்வல்... கரமுண்டார் குதுரை ஜெயிக்காதுடா. தோக்கவும் தோக்காது. இதென்னா

கேணிப்பட்டறை பந்தயமா அவளை அப்டியே தூக்கிக் குடுக்க? தம்பிராஜு வன்னியரு மட்டும் ஜெயிக்க என்ன? ஓ... அவரு குதுரெ எல்லாம் வாழப்பழமும் சராயாமும் ஏத்தியிருக்கு. வன்னியரும் காட்டமா சாராயம் ஏத்தியிருக்காராமே. வன்னியரு பொண்டாட்டியுவ... நாலும் வந்து புளிய மரத்தடியில ஜமக்காளத்தல ஒக்காந்திருக்குவ... திமுதிமுன்னு கூட்டம் மேடேறி ஓடுது. ஒரு பக்கமா குச்சி முட்டாயி. சின்னச் சின்ன மேடையில சீனி முட்டாயி விக்கிற ஆளுவ... வேற பலூனு...

மணல் சரிவுல அதோ நெம்ம தெலகராஜு யாரோடியும் சேராமெ அழகான கால் சராயும் பட்டுச் சட்டையுமா நிக்கிறான். கண்ணு மண்ணு தெரியாம ஓடுற பள்ளனுவ இவனப் பாத்து கத்துறானுவ...

"வூட்டுக்கு ஓடுங்க ஆண்டெ. இஞ்ச நின்னியண்ணா பட்டறையில நசுங்கி போவ வேண்டியதுதான். வூட்டுக்கு ஓடுங்க கரமுண்டான்" பள்ளத்தி ஒருத்தி கேக்குறா...

"வாரியளா ஆண்டெ நாந்தூக்கிட்டுப் போறேன் வூட்டுக்கு?" கவரமேடு சரிவுல புளிய மரத்தோப்புக்குள் பூந்து ஓடுறான் தெலகராஜு. ஊருக்குள்ளயிருந்து 'ஹோ'ன்னு சத்தம் கேக்குது. தம்பிராஜு வன்னியரு இந்த வருஷமும் ஜெயிச்சிட்டாராம். பக்கத்துலியே ஓடிப் போயி குதிச்சு சேந்துதாம் கரமுண்டாரு வூட்டு கேணிப்பட்டைறை. பதினாரு மைலும் ஓட்டமா ஓடி வந்து சேந்துடுச்சாம்.

ஊருக்குள்ள ஓட தெலகராஜுவுக்கு புடிக்கல்லெ. ஜெயிக்கணும். பந்தயம்ன்னா ஜெயிக்கணும். ல்லெ சாகணும். எத்தனை குதிரை கால் முறிஞ்சு கெடக்கு...

தொரச்சியம்மாயி சொல்லுது. இதோ முப்பது வருஷத்துக்கு பழுதில்லை. "இப்பக்கூட வன்னியந் தம்பிராஜு சொல்வான்டா. ஒங்க குதுரைக்குச் சாராயம் ஊத்திவிட்டா நாஞ் செயிக்கமாட்டேன். ஏங்குதுரையும் முந்தாது. பட்டறையும் போய்டும். தம்பிதான் சாராயம் வாண்டாங்குது. எனக்குத்தான் அதிர்ஷ்டம்."

"ஏம்மாயி. நம்ம ஜெயிக்க வாண்டாமா?"

"ஏன்டா ஜெயிக்கணும்? தப்பு வழியில போறதுக்க கரமுண்டான் இல்லெடா. அப்டி ஜெயிச்சு பேருவாங்கணுமா?"

"பின்னெ தோக்கணுமாம்மாயி?"

"போயி கேளுடா ஊருக்குள்ற கரமுண்டான் தோப்பாருன்னுட்டு. ஹா." தொரச்சியம்மாயி கண்ணு உட்டு எரியிது. என்னா ஆங்காரம்?

"ஆமாடா தம்பி. ஓட்டித்தான் ஜெயிக்கணும்ன்னு இல்ல. கரமுண்டான் பட்டறையில காலு வெக்யாமலே ஜெயிப்பான்டா. கேட்டுப்பாரு. புரியாது ஒனக்கு. ஜெயிச்சவனெ எல்லாம் கேட்டுப்பாரு."

' வாசலில் கோலம் இன்னும் நீண்டு கொண்டேயிருந்தது. முட்டாயிப் பொட்டலம் சுற்றிலும் சிவப்பு. வானம் சிவந்து வெளுத்து வந்தது. சிவப்பு மொட்டுப் போல குனிந்த தாமரை போல காத்தாயம்பா. முட்டாயிப் பொட்டலம் கோலமாகுது.

தெலகராஜு எழுந்து சோம்பல் முறித்தான்.

"இப்டி சோம்பல் முறிக்கப்படாதுடா தம்பி. வூட்டுக்கு ஆவாதுடாய்யா"

ஒன்றுமே பேசாமல் வாசல் பக்கம் போனான் தெலகராஜு. லேசான வாடைக் காத்து. திண்ணையின் கீழண்டைப் பக்கம் பார்த்தான் தானறியாமல். பெரிய அகண்ட கட்டில் கோத கத்தி மேசை பக்கம் கிடந்ததும். கட்டிலில் சந்திரஹாச கரமுண்டார் எப்போதும் போல தூக்கக் குறட்டையுடன் கிடந்தார். எவ்வளவு பெரிய கட்டில், கட்டில் என்று சொல்ல முடியாது. சின்ன மேடை மாதிரி. ஆறு பேர் தாராளமாய் படுத்து உருளலாம். கருங்காலிக் கட்டில் நாலாபுறமும் அலை நுரைபோல் கொசுவலை அலையடித்தது. காலைக் காற்றில் கரமுண்டார் பக்கத்தில் மனைவிகள் யாருமில்லை.

"தூங்குறவங்களெ அப்டிப் பாக்கப்டாது தெரியும்ல்ல." திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தான் தெலகராஜு. அவள்தான் கரமுண்டாத்தி காத்தாயம்பா.

"இப்டியே பேசிப் பேசித்தானே எல்லாரையும் அடக்கி ஒடுக்கி வெச்சிக்கிங்க?"

கோலத்தில் கடைசி இழைகளை இழுத்துச் சேர்த்து தானே வியந்தபடி அவனை நோக்கித் திரும்பினாள் காத்தாயம்பா. கால்களுக்கிடையில் சொருகியிருந்த பாவாடையும் சேலையும் அவளை இறுகச் சுற்றிக் காட்டின. தெலகராஜுக்கு கொஞ்சம் பயமாய் இருந்தது. நிஜத்தில் அவளது துடைகள் இத்தனை

பெரியவையாகி அவனை அடைந்ததில்லை. செக்ஸ்? அவன் படித்த உடம்பு பற்றிய புஸ்தகங்கள் இது இப்படியிருப்பது அதிகம் என்றன. காத்தாயம்பா கேட்டாள். "யாரெ எஞ்ச அடக்கி வெச்சிருக்கோம்?" சின்னதாக இருந்த சிலையின் அங்கங்கள் பெரிதாகி அயர வைத்து அருகில் வந்தன.

"என்ன மாமா பேசமாட்டெங்கிறிங்களாம்?"

இது ஒரு லயம் காத்தாயம்பாகிட்டெ. எதையும் தான் சொல்வதாகச் சொல்ல மாட்டா. என்ன கவர்ச்சி இந்தப் பேச்சுக்கு. என் இஞ்ச வரமாட்டேங்கிறங்கன்னு கேக்கமாட்டா. யாரோ கேட்டாப்ல...'ஏன் இஞ்ச வரமாட்டேங்கிறிங்களாம்'ம்பா... எப்போதும் கள்ளிச் சொட்டு மாதிரி உதிரும் ஒரு சிரிப்பும்.

பெரிய புஜங்கள் பூப்பூவாய் தாமரைகள். கனமான பூக்கள்தாம். நெஞ்சில் இத்தனை சுமக்க இத்தனை சின்னதாகத் தோன்றினாலும் இடுப்புக்குக் கீழே குடம்போல் அகலமாய் விரியும் புட்டம். அதைவிட அகலமாய் கனபரிமானமான துடைகள்... ஒடுக்கமாய்... ஒடுங்கினாலும் குத்து விளக்கின் தண்டுகள் பெரியதாகினபோல் கால்கள். முத்துக் கொத்துக்கள் சப்திக்கும் அம்மன் பாதங்கள். மேல் நோக்கி எழும்பும் பெருவிரல். கீழ் நோக்கிய பவழங்கள்போல் விரல்கள். நகங்கள்... சுடர்கள்... இன்னும் அம்மன் போல்... அம்மனைப் பார்த்ததில்லை... படித்த செக்ஸ் உணர்த்தியது. பயமாய் இருந்தது. நல்ல உயரம். பூசிப் பழுத்ததுபோல் கரவு சரிவான உடல். ஆ!

இப்படிப் பெண்கள் அடங்கமாட்டார்களாமே?

எங்கோ படித்த ஞாபகம். பெண்கள் அடங்க வேணுமா? அடங்க வேண்டியதில்லையே என்றது அவன் ஞானம். என்றாலும், ருசிக்காத ஞானம். பெண்–அதிலும் அடங்காத பெண். கரமுண்டாத்திகள் எல்லாமே அடங்காததுவதான். உதாரணத்தக்கு அவன் அம்மா, வடுவாம்பா. எத்தனை படித்த அவன் அப்பா. அவன் அம்மாவிடம் அடக்கம்.

அவன் படித்த புஸ்தகங்களும் பத்திரிகைகளும் பெண் விடுதலை என்றன. கூவிக் கிழித்தன. யாரோ ஒரு பெண் எழுதினாள் இந்த உடம்பு மட்டும் எங்களுக்கில்லாமல் இருந்தால், இந்த கருப்பை அறுத்தெறிய முடிந்தால்... இந்த யோனி மட்டும் இல்லாதிருந்தால்...

நேற்று அவன் மாஞ்சியிடம் படித்த அரைமணி நேரம் போதும். இதோ படிக்காமலேயே பயம் தருகிறாள் காத்தாயம்பா.

காலை நேரத்து செம்மையான அமைதியும் காற்றும் இதமாய் இருந்தன. தெருவில் ஆங்காங்கே கோலம் போட்டுக் குனிந்து நின்றனர் பெண்கள். இன்னும் பெருமாள் கோவிலிலிருந்து ஜபஸ்லோகங்கள் ஒலி பெருக்கி வழியே வழிந்து கால்களை கட்டிக்கொண்டு திண்ணையில் உட்கார்ந்தபடி கோலத்தைப் பார்த்தான் தெலகராஜு. அது இன்னது என்று தெரியாமலே மயக்கியது. அத்தனை சீரான கோடுகள். வளைவுகள்கூட ஒரு ஓவியத்தின் ஒரு சார் தன்மையை காட்டும் ஒழுங்கிசைவுகள் ஓர் அமைப்பை அழகாக்கின. கோடுகளின் முனைப்பு புரியாதது.

"என்னதுன்னு புரியலியாக்கும்." அவனையே பார்த்தபடி கேட்டாள் காத்தாயம்பா. அவனை இப்படி தெளிவாகப் படித்துவிட்டாளே என்ற பயமும் தோன்றியது தெலகராஜுக்கு. அவனறியாமல் வாயில் எழும்பியது.

"உன்னையுந்தான் புரியல்லெ."

"புரிஞ்ச வரைக்கும் போதும் மாமாவ்." கொலுசு சப்தமிட உள்ளே போக முயன்றாள்.

"கோலத்தெத்தானே புரியல்லென்னு கேட்டாரு மாப்ளெ. சொல்லேன்டி சின்னி." உமாமஹேஸ்வரி கதவோரம் நின்றபடி கேட்டாள். காலை நேர கும்மணி. திடுக்கிட்டான் தெலகராஜு. ஒன்றும் செய்ய முடியவில்லை. உள்ளேயும் போகமுடியாது. உமாமஹேஸ்வரி அவனுக்குச் சின்ன அத்தை. கேலிக்கு என்ன குறைச்சல்? திரும்பிப் பார்த்தபோது, கதவோரமாய் பார்வதி அத்தை தலையும் தெரிந்தது.

உள்ளே ஓட முயன்றாள் காத்தாயம்பா. உமா அத்தை விடவில்லையே. உமாவும் காத்தாயம்பாளும் நின்றால் அக்கா, தங்கை மாதிரி இருந்தார்கள். உமா விடாமல் கொழுந்தனாரைக் கேலி செய்வதுபோல் கேலி பண்ணினாள்.

"ஏந்தம்பி நேத்து நடு மாமாவோட பள்ளக்குடிக்கிப் போயி ஒரு அலசு அலசுட்டிங்களாம்ல்ல?"

"... ... ..."

"டவுன்ல இதெல்லாம்கூட சொல்லித்தராங்களா என்ன?"

"... ... ..."

"மாஞ்சி வந்திருந்தா. நம்ம பள்ளத்திதானே? குடும்பமே இஞ்சதானே வேலை செய்யுதுவ. ரொம்ப எளகிப் போய்டாதீங்க தம்பி. ஆம்மா."

"ஆ ... ..."

"பேசாம இரு சின்னம்மா. என்ன பேச்சு பேசுற நீய்யி?" வெடித்தாள் காத்தாயம்பா.

"இதென்ன புதுசா? அப்பாரு காதுல வுளுந்தா குடி கெட்டுது. ஒன்னெ என்ன வக்கீலு உத்தியோகம் பார்க்கச் சொன்னாவளா? அவரெப் போயி... குறுக்கு கேளுவி கேட்டுகிட்டே போற?"

'திடும் திடும்'ன்னு வெடித்ததுபோல் அதிர்ந்தது எல்லாம். அப்படியே நின்றான் தெலகம்.

கட்டிலில் எழுந்து உட்கார்ந்தார் சந்திரஹாச கரமுண்டார். கொசுவலையை ஒதுக்கி எழுந்து பக்கத்திலிருந்த கனமான வெள்ளிச் செம்பை எடுத்து கீழண்டை திண்ணையில் இறங்கி வாய் கொப்பளித்துப் பீய்ச்சித் துப்பினார். இருமி கோழை வழித்துக் கொப்பளித்து அங்கேயே மாவிலை ஒன்றைப் பறித்து சுருட்டி, பல் தேய்க்கத் தொடங்கினார்.

உமாமஹேஸ்வரியும் காத்தாயம்பாளும் கண்ணால் நோட்டம் விட சந்திரஹாசக் கரமுண்டாரு செருமியபடியே காத்தாயம்பாளைக் கூப்பிட்டார். "ஆயி. கொண்டாம்மா." உள்ளே ஓடினாள் காத்தாயம்பா. அவ்வளவுதான் பேசுவார் அவர்.

உமாமஹேஸ்வரியைக் காணோம். கட்டிலில் கிடந்த துண்டை எடுத்து துடைத்துக் கொண்டார் சந்திரஹாசக் கரமுண்டார். எல்லாம் கேட்டிருப்பார். எல்லாம் தெரியும். ஒண்ணும் பேசமாட்டார், அதுவும் தெரியும். எதையும் கேக்க மாட்டார். மீசையை ஒதுக்கி திருகி விட்டுக்கொண்டார். முறுக்க... முறுக்க... அது வளைந்து அற்புதமாய் சுருண்டு அழகு தந்தது.

உள்ளேயிருந்து ஐந்தே நிமிடத்தில் பட்டுப்புடவையுடன் கையில் காப்பியுடன் கொலுசு இனிக்க காத்தாயம்பா சந்திரஹாசக் கரமுண்டாரிடம் வந்தாள்.

# கரமுண்டார் வூடு - 3

இரணிய வேளை.

ஊடான வூட்டுல யாரைம்லல காணம். வெளியே சுத்திட்டு வந்து நுழைந்தான். சின்னப் புள்ளைவ முத்தத்துக்கு முத்தம் வெளையாடிகிட்டு ஒரே கூச்சல். திண்ணையில சந்திரஹாச கரமுண்டார் எப்போதும்போல நாலுபேரோட பேசிகிட்டு ஒக்கந்திருக்காரு. பொண்டுவ எல்லாம் பெருமாள் கோவிலுக்குப் போயிருக்குதுவ. அப்பாயி அம்மாயி எல்லாம் கொல்லைக்காட்ல மருந்துச் செடி புடுங்கிகிட்டு நிக்கிதுவ. மெல்ல திண்ணைக்கி வந்தான் மாப்பிள்ளை தெலகராஜு. 'ம்ஹஹும்ம்'ன்னு கனைச்சுக் குடுத்தான். திண்ணையில வேற யாருமில்லை. பெரியவரு சந்திரஹாச கரமுண்டாரு, சிங்காரயரு மாமா. ஜோசியரு வில்வா மங்கலம் சுப்ரண்யம் இவ்வளவுதான்.

"வாடா தம்பி ஒக்காரு" என்றார் கரமுண்டாரு. "என்னா விஷயம்?"

"ஒண்ணுமில்லெ. நானும் வந்து ஒரு மாசம் பத்து நாளு ஆவுது. ஊருக்குப் போகணும். அம்மா ஒங்ககிட்ட கேக்கச் சொன்னாங்க..."

"கல்யாணந்தானே தம்பி? அதுக்குத்தனே நாள் பாத்துகிட்டு இருக்கோம்" என்றார் ஜோதிடர் சுப்ரமண்யம். அவருக்கு அவர் காரியம்.

“நீ பேசாம இருய்யா, தம்பி என்னமோ சொல்லணும்ன்னுல்ல பாக்கறான். என்னடா அம்பி என்ன விஷயம்?” என்றார் சிங்காரச்சாரியார் உரிமையோடெ.

“... ... ...” மௌனமாய் தடைபட்டன வார்த்தைகள். எப்படி கேட்பது? புரியவில்லை.

“அம்மா கேக்கச் சொல்லிச்சு. மாமாகிட்ட கேளுடான்னு. எனக்கு கேக்கத் தெரியலெ மாமா. என்னன்னு கேக்கன்னும் புரியலெ. எனக்குப் புரியாது. ஆனா அம்மா பங்குக்கு வந்த நெலம் நூறு வேலியும் நீங்கதானே கண்டுமொதல் பண்ணுறிங்க? இப்ப அந்த நெலம் முழுசும் யாரு சாகுபடி பண்றாங்க? இத்தனை வருஷமா அதுக்கு குத்தகை என்ன? ஒண்ணும் புரியல்லியாம். அது பத்தி விசாரிக்கத்தான் என்னெ அனுப்பிச்சுவிட்டுது அம்மா. அந்த நெலம் யாருதுன்னு கேட்டாங்க”

“என்னது?” என்றார் சிங்காரச்சாரியார் அதிர்ந்து, கடகடவென்ற சப்தத்தோட அதே நேரத்தில் வாசல் குறட்டில் வந்து எதிரே நின்ற கேணிப்பட்டறையில் வந்திறங்கிய சுப்பாக் கரமுண்டாரு கிழ குதிச்சுப் பக்கத்துல நின்ன பள்ளங்கிட்ட குதுரெ வாரெ குடுத்துட்டு, படியேறிகிட்டே சிங்காரச்சாரிகிட்ட, “என்ன இஞ்ச நடக்குது?” என்றார். குதுரெ வாயில கொத்து கொத்தா நுரை.

“ஒண்ணுமில்ல நம்ப அம்பி, அவாம்மாளோட நெலத்தெ எங்களுக்குன்னு கேக்கறான்... ம்... காலம். நெலமு தேஞ்சு போச்சு. என்ன பண்றது? இவ்வளவு காலமா ஒண்ணுமே கேட்டதில்லெ. அவாளுக்கென்ன வந்துடுத்து? வந்து இப்ப அந்த நெலம் யாருதுன்னு பையனெ வுட்டு கேட்ருக்காளே வடுவாம்பா?”என்றார் அய்யங்கார் துருதுருப்பாக.

“என்னடா தெலகராஜு, என்னதுது?”

“எங்கிட்ட கேட்டா? அம்மா கேக்கச் சொன்னுது. அதுக்குத்தான் வந்தேன் நானு.”

“கரமுண்டாரு வூட்டு நெலம் என்னைக்கிடா பிரிஞ்சுது? ஏ நெலம், ஓ நெலம்ன்னுகிட்டு. ஆயிர வேலியா இருந்தப்பவேயிருந்து நூறு வேலியா இன்னைக்கி சுருங்கித்தாம் போச்சு. ஆனா இன்னைக்கி வரைக்கும் யாருக்காவுது பாகம்ன்னு பிரிச்சதுண்டா? யாராச்சும் கேட்டதுண்டா? அப்டி வழக்கமேயில்லியே.” என்றார் சின்ன மாமா சுப்பாக் கரமுண்டாரு.

“இல்ல சின்ன மாமா. அம்மாவுக்கு இப்பப் பணமுடை”

"அதுக்குப் பணம் கேக்காமெ... குத்தகை அது இதுன்னா... என்னடா துளுர்வுட்டுப் போச்சா?"

"கரமுண்டாரு நெலம் எல்லாம் பாகம் பிரிக்கிறதுக்கு இல்லடா."

"அவன் சின்னப்பையன். அவனண்டை என்ன பேச்சு? அவாம்மா ஏதோ நெனப்புல கேட்டு உட்டனுப்பிச்சிருக்கா... அது இஞ்ச வழக்கமில்லெடான்னு சொல்றத்தெ வுட்டுட்டு... ஏன் வழக்கு பேசிண்டிருக்கேள். நாஞ் சொல்லியூட்றேன். அம்பீ. சொல்றத்தெ அப்டியே வடுவாம்பாகிட்டப் போயி சொல்றயோ? கரமுண்டாரு நெலத்தெப் பிரிச்சுப் பழக்கமில்லெ. பணமொடை இருந்தா பணம் கேட்டு வாங்கிக்கலாம்."

"ஏன்டா தம்பி. கல்யாணத்துக்கு அம்மா என்ன சொன்னுது?" இது பெரிய கரமுண்டாரு.

"ஒண்ணுஞ் சொல்லல்லெ மாமா"

"வடுவாம்பாகிட்டெ சொல்லு. கல்யாணத்தோட எல்லாம் ஏறி பண்ணீறலாம்ன்னு."என்றார் பெரிய கரமுண்டாரு.

கதவின் ஓரமாய் நாமம் போட்ட அம்மன். ஜன்னல்களின் பின்னேயும் நாமமிட்ட நெற்றிகளுடன் கரமுண்டாத்திகள். இவ்வளவு பெரிய நாமங்களுடன் (சிவப்புக் கோடு) ஸ்ரீ சூரணத்தோடு பெண்களை வேறிடங்களில் பார்க்கவே முடியாதுதான். எல்லாம் வைஷ்ணவர்கள். கரமுண்டாத்திகளே கொஞ்சம் துடியான சிவப்பு நிறம். ஆண்கள் கொஞ்சம் மங்கலடித்து புது நிறமாய் இருப்பார்கள். எல்லார் நெற்றியிலும் முழு நாமம் பட்டையாக முன்பெல்லாம் இருக்குமாம். இப்போது சிவப்பாக ஒற்றைக் கோடு மட்டும் இழுத்துக் கொள்கிறார்கள். நாமம் போடுவதே கேலியாகிவிட்டது. காலத்தின் விசித்ரமல்ல. மனிதர்களின் ஆசைகளின் கோலம் மட்டுமா தேய்ந்தது. நாமக் கோடுகளும்தான்.

காத்தாயம்பா நெற்றியில் எப்போதும் ஸ்ரீ சூர்ண சிவப்புக் கோடு துலங்கும். பெரிய கரமுண்டாரு இப்பமும் முழு நாமம் சாத்தின நெத்தியோடதான் இருக்காரு. கரமுண்டாரு வூட்டுப் பொண்ணுங்க நெத்தியுவளே இப்டி நீளமா சிவப்புக் கோட்டோட இருக்கறது எப்பவும் ஆச்சரியந்தாம்.

"அப்ப என்னைக்கிப் பொறப்புறெடா தம்பி?" என்கிறார் சந்திரஹாசக் கரமுண்டாரு.

"அம்மாகிட்டெ என்ன சொல்ல?" என்கிறான் தெலகராஜு.

"எதுக்கு?"

ஜன்னலிலிருந்து திரிசியம்பா முகம் தெரியுது. அடுத்த ஜன்னல்ல மாணிக்கவல்லி கண் சிவக்குது. புரியவேயில்லெ. சுப்பாக் கரமுண்டாருகூட முகம் செவந்துதான் வேர்வை சொட்டச்சொட்ட நிக்கிறாரு. ஐயங்காருக்குக்கூட வேர்வை காதோரம் வடியுது. கரமுண்டாரு நெலம் பிரியாதாம். பிரிக்கமாட்டானுவளாம். சரி. அப்ப இதெல்லாம் உன்னுதுன்னு கல்யாணத்துலியே ஏன் சொல்லணும். அப்ப அது ஏன் சொல்லணும்? பெருமைக்கு ஆத்தெக் கட்டி ஏன் எறைக்கணும்? தெலகராஜுக்கும் ஏனோ தெரியாத படபடப்பு. தூணுக்குத் தூண் கரமுண்டாரு வூட்டுப் பொண்ணுவ நிக்கிதுவ. ஜன்னல்ல எல்லாம் கண்ணுல தண்ணிகலங்குது. நெலைப்படியில காத்தாயம்பா நிக்கிறா. ஏன் இது? இப்படி? எல்லாருக்கும் ஆக்ரோஷம். கேட்டுட்டானே. கேட்டுப்டானேன்னு எல்லாருக்கும் அடிச்சுக்குது. ரோசம். எல்லா பொண்ணுவளுக்கும் சட்டப்படி சொத்து செல்லாத காலத்திலியே கரமுண்டாருவூட்டு பொண்டுவளுக்கு மட்டும் இது... இது ஒனக்குடி திரிசியம்பா, இது கொய்யாத் தோப்பு ஒன்னுதுடி வடுவு, தோ அண்டராங்காட்டு ஓரத்து தென்னந்தோப்பு ஒனக்குத்தான்னு சொல்றது, கொஞ்சுறது. இப்ப? பொண்டுவளுக்கு சொத்து உரிமை ஏது? ஆனா அதையுஞ் சொல்லமாட்டானுவ கரமுண்டானுவ. எழுதிக் குடுக்கறது வழக்கமுமில்லெ. ஆனா பேச்சு மட்டும் எதுக்காம்?

வடுவாம்பாளுக்கு கல்யாணம் நடந்ததே இப்ப நாப்பது வருஷம் ஆவுதே? காடு, கரை, வயலுன்னு மிஞ்சிக் கெடந்துது. அள்ளி அள்ளி எடுக்க எடுக்க வத்தல்லெ. வெளஞ்சு நெல்லு தலசாஞ்சு குமுஞ்சுது. எட்டுக்கட்டு வூட்டு முத்தத்துலயும் காயும் கறியும் பழமும் பூவுமா கொட்டிக் கெடக்கும். இப்ப?

தெலகராஜுக்கு ஒன்னு மட்டும் புரியறதேயில்லை.

இதுவரைக்கும் அம்மாவும் இதெ கேக்கல்லெ. மாமனுவளும் இது பத்தி பேசுனதேயில்லெ. அப்ப நெலம் ஆருது? தெரியணும்ல்ல. இந்த நூறு வேலியும் உனக்கும்மா. அப்டின்னு யாரு சொல்லச் சொன்னா? இப்ப எல்லாரும் இப்புடி இத்து இத்து எலையாய் போகணும்?

தெலகராஜுக்கு பூமியோட சமாச்சாரம் தெரியாது. இஞ்ச மாமனுவ எல்லாருக்குமே பூமி, நெலம்தான் உசிரு. அப்ப நெலம்

எல்லாம் எங்கே போச்சு? கொஞ்சம் கொஞ்சமா கரைஞ்சு ஏன் இப்புடித் தேஞ்சுது?

"என்னடா தம்பி கேக்றன்ல்ல?"

"என்ன கேக்குறிங்க?"

"வடுவுகிட்ட என்ன சொல்லணும்ன்னு சொல்லிட்டேன். ஆனா நீயி திரும்பியும் கேக்குறியே? நெலம் யாருது? யாருது?ன்னு தம்பி. நாஞ்சொல்றேன்டா. நெலம் யாருதுமில்லெ. எப்பவும் 'யாருக்கும் சொத்து சொந்தமுமில்லடா. வடுவுகிட்ட சொல்லு. ஓனக்குக் காத்தாயம்பாளெத்தாங் குடுக்கலாம்ன்னு, தெரியுதா? கரமுண்டாங்கரை தேஞ்சாலும் பிரியாது."

கரமுண்டார் குரல் கரகரத்தது, ஆம். அவர் இந்த ஐம்பது வருஷத்தில் பேசியதில் இதுதான் அதிகம். யாரிடமும் அதிகம் அல்ல. பேச்சே சைகையிலதான் அதிகம். ஆறடிக்கும் மேல்பட்ட உயரம்கொண்ட அவரது உருவம் லேசாக பழசுபட்டது போல் தோன்றியது. வெளியே எங்கியும் அதிகமாய் போகமாட்டாரு. காலை, மாலை பெருமாளைச் சேவிக்கப் போறதோட சரி. நடமாட்டம் அவ்வளவுதான். என்ன விளைஞ்சது? ஏது விளைஞ்சது? கண்டுமொதல் என்ன? தேங்காமூட்டை எத்தனை லாரி ஏறுனுது? மாந்தோப்புல இருந்து எத்தனை அம்பாரம் மாங்கா திருச்சிக்குப் போனுது? எதுவும் அவருக்குத் தெரியாது. ஏன் இப்ப நாலஞ்சு பத்தாயம் மட்டும் நெல்லு சேருது? மீதி என்ன ஆச்சு? ஏன் இப்ப யாவாரிகள் இஞ்ச வர்றதேயில்லெ? பழ யாவாரியுவ ஏன் இப்பல்லாம் பலாப்பழம், வாழைப்பழம், மாம்பழம் இதுவளுக்கு முன்பணம் கொண்டாந்து கொட்டுறதைக் காணும்? இந்த சந்தேகங்கள் மட்டும் தோணும். ஆனா கேக்கறதுமில்லெ. பெருமாள் கோவிலுக்கு இப்பக்கூட நெய் குடம் குடமா கரமுண்டாரு வகையா போவுது. இப்பமும் பாலு மட்டும கொறயவேயில்லே. மண்டகப்படி எல்லாம் ஒழுங்கா நடக்குது. எல்லா திருவிஷா எல்லா விசேஷத்துக்கும் ராஜலிங்க கரமுண்டாரு போயி எல்லா செய்வினையும் செய்து, மாலை மரியாதி எல்லாம் வாங்கிகிட்டுத்தான் வர்றாரு. ஊருக்குள்ள மொதல் காரு வாங்குனதும், பஸ்ஸு வுட்றதும் வேற ஆளுவ. பத்து பதினஞ்சு காரு மாறிகிட்டே இருக்கு இப்பவும். மூணு நாலு மோட்டார் பைக்கு எப்பவும் கிடக்கு ஷெட்டுல எல்லாம் செலவு... செலவு. வேற யாராவதா இருந்தா, இப்ப மிஞ்சிக் கிடக்குற

சொத்துலியே மிச்சம் மிச்சம்ன்னு மீத்து இப்பக்கூட ஓஹோன்னு இருக்கத்தான் பாப்பாங்க. இப்பமும் நூறு நூத்தம்பது பள்ளனுவ நிக்கிறானுவ. சாயங்காலமானா இப்பக்கூட இருபது முப்பது பசு மாடுவ அம்மான்னு கத்திகிட்டு கவணையில இருக்க புல்லுக்கட்டை மேயுது. பெரிசும் சிறுசுமா அம்பது குடும்பமாவுது வூட்டுவுள்ளெ இருக்குதுவ. யாரையும் யாரும் ஒண்ணும் சொல்லகில்ல முடியாது. நிர்வாகம் எல்லாமே சிங்காரச்சாரியாருதான். ஆனா அவராலகூட ஒன்னையும் இளுத்து நிப்பாட்டிட முடியாது. எல்லாமே யாரு கையிலியும் இல்லேன்னு தோணும்.

வடுவாம்பா கேக்குறது அதுனாலதானே? தெலகராஜுகிட்ட சொல்லித்தானே வுட்டா. 'அஞ்ச நாயும் நரியும் திங்கிதுவடா. எல்லாம் நம் சொந்தம் சொந்தம்ன்னு அண்ணன் எல்லாத்தியும் பாத்துக்கிட்டேயிருக்கும்டா. ஒண்ணுஞ் சொல்லாது. நூறு வருஷத்து கரமுண்டானுவ அஞ்சியே இருந்து தின்னுக்கிட்டு, தீத்துக்கிட்டு இருக்கானுவடா தம்பி. இந்தக் காலம் என்னதுன்னே அஞ்சு இருக்க ஒருத்துனுக்குமே தெரியாதுடா. பாவம். காங்கிரஸ்காரனுவ வந்தா இப்பவும் ஆயிரக்கணக்குல ரூவாயெ வாரீவுடும் அண்ணன். அட டி.எம்மு.கே.க்காரனுவ வந்தாலும் தண்ணிப்பட்ட பாடா ரூவாயெ அள்ளித்தான் குடுக்கும். எந்தக் கட்சிக்காரன் எந்தக் கோயிலு எந்த சங்கம்ன்னே இல்ல. இப்பமும் தர்பாருதான். கேட்ட ரூவா கேட்ட எடத்துல தூக்கி எறியும்டா. வூடு முழுசும் தின்னாலும் தீராது. சரி, இப்டி அழிக்கணுமா? இப்ப என்ன ஆச்சு? களுத தேஞ்சு கட்டெறும்பாச்சு கரமுண்டாஞ் சொத்தெ நாயும் நரியும் இளுத்துகிட்டுப் போகணுமா? தெலகராஜு நீ போயி கேளுடா. காத்தாயிகுட்டிய கட்டிகிட்டா மட்டும் போதுமா? ஏங்கையிக்கி அந்த நூறு வேலி ஏம் பங்கு வரணும். காத்தாயி பங்கும் வரணும். மாமாகிட்ட கேளு. இப்ப நீயி சின்னப்பய இல்லெ எம்.மெஸ்ஸி மாப்ளடா நீயி. கை மேல வேலை உனக்கும், ரெண்டாயிரம் சம்பளம் ரெடியா இருக்குல்ல. மாமாகிட்ட வேற யாரும் கேக்கமாட்டானுவ. நீ கேளு. உங்கப்பா அந்தக் காலத்துலியே கேக்கமாட்டேன்னுட்டாருடா. இப்பக்கூட வாண்டாங்குறாரு. நீ வுடாதெ"

வடுவாம்பா மூக்கு மலர்ந்து சிவக்க வியர்க்கத்தான் இதை எல்லாம் தெலகராஜுகிட்டெ சொல்லிவுட்டா. தெலகராஜு இந்த ஒரு மாசமும் காத்தாயம்பாளெப் பாத்துப் பாத்துதான் ஆச்சர்யப்பட்டுகிட்டே இருந்தான். காத்தாயம்பா ஒரு ஆச்சர்யம்தான். கரமுண்டாரு வூடு மாதிரி, இந்தக் காலத்துலகூட

இப்புடி வூடு, ஜனம், பள்ளனுவ. இப்பக்கூட ஒண்ணும் மாறாத இந்த ஜனம். பள்ளத்தி மாஞ்சி, உடம்பு, உசிரு, அவகூட காத்தாயம்பா விஷயமா பேசுனா. நெருப்பாயித்தாம் போறா. அவளெ அவன் கண்டிப்பா கட்டிக்கணுமாம்ல்ல? அதென்னடி பெருமாள்கோவில் மங்கைத் தாயார் மாதிரி ஒரு நாமம். அம்மன் மாதிரி ஒரு பொண்ணுன்னு கேட்டதுக்கு சண்டைக்கி வந்துட்டாளே அந்தப் பள்ளத்தியும்? தெலகராஜுக்கு இப்பமும் ஆச்சர்யந்தான். அவனுக்குத் தெரியும் இதெல்லாம் பழைய பண்ணை முதலாளித்துவ சமுதாயம்ன்னு. ஆனா இப்பமும் இந்தக் காலத்லயும் இது இன்னும் மாறாமல் ஒரு வூடு மட்டுமா இப்டி இருக்கிறது ஆச்சர்யமா இருக்கு. அதே சமயத்துல பயமாக்கூட இருக்கு. புரியாமக்கூட இளுத்தடிக்கிது.

மாஞ்சிதானே அவனுக்கு உடம்போட உள்ளெல்லாம் புரியக்காட்டுனது. மாஞ்சிதானே தெலகராஜுக்கும் பொம்பளைன்னு புரிஞ்சுது, ஆம்பளைன்னு அவன தூக்கி எடுத்துக் காட்டுனது? அதே மாஞ்சிதாஞ் சொல்றா இந்த ஒடம்பு என்னது இல்ல, கரமுண்டாரு வூட்டுது. இந்த மாரு, இந்த புட்டம், இந்த இடுப்பு இந்த வெங்கலத்து வழுவழுப்பும் கனமும் கரவு, சரிவுமான இந்த ஒடம்பு, ரத்தம், சதை எல்லாமெல்லாம் கரமுண்டாரு வூட்டு சோறுன்னு சொல்றா. நூத்தம்பது வருஷத்துப் பைத்தியம் இன்னும் இந்த ஜனங்கள் கிட்ட ஊறிப் புளிக்கிது. காத்தாயம்பா... பேருகூட ஏதோ மந்திரம் போடுது. காத்தாயிங்கிற பேரு ரொம்பத்தா பழசு. ஒரு பண்ணை மொதலாளித்துவ புராதன அம்மன். தெய்வப் பேரு. கரமுண்டாங் கோட்டைன்னு ஒரு கிராமமே இருக்கு. அங்கய எட்டு பத்து வயசுல தெலகராஜுகூட போயிருக்கான் காத்தாயம்மன் கோயிலுக்கு. அது அஞ்சதான் இருக்கு. பள்ளக்கூடத்துல படிச்சப்போ காத்தாயி ஆச்சரியமான ஒரு திமிரோட இருந்தப்ப, அவனாலெ அவளை ஒதுக்க முடியல்லியே ஏன்? இப்பக்கூட காத்தாயிகுட்டி ஆச்சர்யமான அழகாத்தான் பயமுறுத்துறா. எல்லாரும் இஞ்ச அவகட்ட பயப்புட்றாங்ளே.

'காத்தாயம்பா, ஆயி... பாலு குடும்மா, உங்கையால ஏம் புள்ளைக்கி ஊத்தி உடும்மா'

'காத்தாயீ, மாடுமுடிட்டிருச்சி, கொம்பு பொதஞ்சு எடம் மருந்து போடு தாயீ.'

இப்படி எத்தனை தடவ தாயத்துப் போன பெண்களின் குரல் கரமுண்டாரு வூட்டுல? யாரும் உமாமஹேஸ்வரியெக்

கூப்பிடலெ. ராதயம்பாளெக் கூப்பிடக்கூடாதா? திரிசியம்பாளும் நாகலக்ஷ்மியம்பாளும் இருக்காவ. ஏங்கூப்புடுறதில்லெ? பள்ளனுவ கொல்லைக் கதவண்டயில நின்னு கூவுவானுவ:

"ஆயீ. மாடெல்லாம் கட்டியாச்சு. கஞ்சூத்து தாயீ. கும்பி கருவுது."

காலை கருக்கல்லியே பள்ளத்தியுவ வேலைக்கி கெளம்பும்போது அத்தனை பேருக்குமே கெட்டியாக் கஞ்சி கரமுண்டாரு வூட்டு அலுமினியப் பாத்திரத்துவள்ளெ எடுத்துக் குடுத்து உடுவா. யாரு? காத்தாயம்பாதான். மூணு மணி விடியல்ல பள்ளத்திவ வயகாட்டுக்கு வேலக்குப் போவும்போது, சோறு, வெஞ்சனம், கொழந்தைவளுக்குப் பாலு. ஓயாது. காத்தாயம்பா அந்தியில வந்து எட்டாங்கட்டுல வந்து குந்திகிட்டு தொரச்சியப்பாயியோட சளசளன்னு பேசிகிட்டு வந்து பாடிகிட்டு இருக்க பள்ளச்சிகளுக்கு சுண்டக் கொழம்போட சொம்ப சொம்பா கஞ்சி ஊத்துறது...

ஓயாது. பின்கட்டு பூரா கூட்டி கழுவி மொழுவி பள்ளக்குட்டிய ஓயாமத்தான் ஒவ்வொரு முத்தமா தொடச்சு எடுத்து இப்பக்கூட அதது வேலை அததுவளோட நடந்துகிட்டுயிருக்குமே. இந்த ஒரு மாசத்துல காத்தாயம்பா எஞ்சியும் இருந்துகிட்டே இருக்கிறது தெலகராஜுவுக்கு ஆச்சர்யம்தான். எஞ்சயும் அவதான்.

பள்ளிக்கூட காலத்துல பாத்த காத்தாயம்பாதான் இவ. ஒண்ணும் மாறவேயில்லெ. இவளெக் கல்யாணம் பண்ணிகிட்டு... நெனைக்கவே பயமாத்தான் இருக்கு. ரொம்ப அழகு பதவிசு பத்ரம்... எல்லாம் சரி, என்னமோ ஒண்ணு நெருடுதே. அவன் மேல பிரியம்தான். தெலகராஜுன்னாலே ஒரு அதங்கல் காத்தாயம்பாகிட்டவரும். மொகம் எல்லாம் பூத்துடும். பன்னண்டு வயசுலியே ஆசை வந்த ஆச்சர்யமாச்சே. அவனைப் பாத்தாலேயே ஒரு படபடப்பு வந்து அமைதியா அழகாகும். வேர்த்துடும், பேச முடியாது... எல்லாம் சரி என்னமோ ஒரு...ஒண்ணு வந்து... முட்டும் தட்டும். என்னது அது? காத்தாயம்பாளுக்க எல்லாம் தெரியும். ஏமாத்த முடியாது. அதுதான் ஒரு உரசல். இந்த ஒரு மாசகாலத்தில்அவங்கிட்ட ஆசையா ஏதாவது... ஒண்ணும் கிடையாதே. அப்டி அவ மனசுக்குள்ள மாதளம்பழமா? எதுவுமே ஒளிவு மறைவு கெடையாது. ஒடைச்சாப்ல வெடிப்பா. அதுவா வேணும்?

கோவிலுக்கு பெருமாளெ சேவிக்கப் போனா கோவில்பட்டர் சொல்றாரே. "என்னடாம்பி. அதிஷ்ட்டக்காரன்டா நீ. ரத்னம்

மாதிரிடா காத்தாயிகுட்டி. எப்டிப் பொண்ணுடா அவ, சீக்கிரமா மாங்கல்யதாரணம் நடக்கணும்டா. நீ எங்க மாப்ளெயாச்சே. சிக்கிரமா சுபகாரியம் நடக்கணும்"பார்.

ஆத்தோரமா காலார நடந்து போவான். எதுர்க்க சாம்பக்குடும்பன் வருவான்.

"சாமீ. சீக்கிரமா கண்ணாலங்கட்டிக்கிங்க. ஆயி மாதிரி பொண்ணு கெடைக்குமாங்களா? பொட்டு போல பொண்ணுங்க. எங்க வூட்டு மாப்ளயில்ல நீங்க?"

தெரு மொகனையில ராவுத்தர் கடை. பொட்டிக்கடை ராவுத்தர் கூட...

"என்னாம்ளா. நீங்க நம்ப மாப்ளயில்லெ? சீக்கரமா கரமுண்டாரு மாப்ளையா வரணும். நாம் பாக்கணும். ஏமிளா பேசாம இருக்கிங்க?"

அஞ்சினியில கேக்காத ஆளு கெடையாது. உத்தண்டியாரு அத்தை அவங்கிட்ட பேசவே வெக்கப்படும். அத்தைன்னா அத்தை வயசு கெடையாது. உத்தண்டியாரு நாலாந்தாரம். அத்தை மொறை. அதுவும் அவன் வயசுதான். அது கேக்குது... "எப்ப தம்பி எங்க வூட்டு மாப்புளையா வரப்போறே?"

இவுங்களுக்கெல்லாம் இது இருபத்தோராம் நூற்றாண்டுன்னு தெரியலியா? பதினெட்டு வயசுல அறுபத்தஞ்சு வயசு உத்தண்டியாருக்கு வாக்கப்பட்டு நாலு வருஷத்துல அஞ்சு புள்ளையும் பெத்து நிக்கிற இந்த அத்தை கூட கரமுண்டாரு வூட்டுக்குள்ளதான் ஜீவிக்குது. மூணாங்கட்டுல புள்ளைக்கி பாலு குடுத்துகிட்டு பொரண்டு கெடக்கும். ஆச்சரியமாயிருக்கும் இருபத்தஞ்சு வயசுன்னு சொன்னா நம்ப முடியாது. எப்பப் பாத்தாலும் ஒரு கொழந்தைய மடியில போட்டு மாரெ பெசஞ்சு பெசஞ்சு பாலு உட்டு உட்டுன்னு உட்டிக்கிட்டேயிருக்கும் அத்தை. எப்பவும் கிட்ட போனா பால் மொச்செ.

உத்தண்டியாரு எங்குருந்தோ வருவாரு. திண்ணையில இருந்து பாத்துகிட்டேயிருப்பான் தெலகராஜு. காலாலதான் அத்தெயெ தட்டி கூப்டுவாரு உத்தண்டியாரு. பாலு ஒழுக ஒழுக வாரிச் சுருட்டிகிட்டு ஏந்திரிச்சு உத்தண்டியாருக்கு சோறு போடப் போவும் அத்தெ. சாப்பாடு நடக்கும் போதே புள்ளைவ சத்தம் தாங்காது. கதவெ ஒருக்களிச்சு வெச்சிகிட்டு படுத்துக்குவாங்க. உத்தண்டியாரும் அத்தையும்.

காத்தாயம்பா எங்கருந்தோ வருவா. தெரியும். கதவுக்கு வெளியருந்தே கூப்டுவா "பெரியப்பா, ஒங்களுக்குப் புடிக்குமேன்னுட்டு சீனி கொழுக்கட்ட கொண்ணாந்திருக்கேம் பெரியப்பாவ், வெளிய வாங்க. அத்தைய செத்த சும்மா உடுங்க. வூட்டுக்கு வந்தொடனே உள்ற பூந்துகிட்டீங்களா?"

"இல்லாயி... தோ வந்துட்டேம்மா."

காத்தாயம்பாளுக்கு இதெல்லாம் தெரியாதா? புரியாதா? தெலகராஜு மேல ஆசெ ஒண்ணுமே இல்லியா? வூடு பூரா ஆளுங்க, மாமா, அத்தான், சித்தப்பா, பெரியப்பா, அத்தை, அம்மாயி, பெரியம்மா, சின்னப்பாயி, பெரியாத்தா, நடு அப்பாயி, பெரியண்ணெ, சின்னம்மா, அத்தாச்சி, நடுவதம்பி. மூத்தாயா, பெரியதம்பி. வூடு பூரா ஆம்பளையும் பொம்பளையும், பெரிசு சிரிசு எல்லாம். கல்யாணங் கட்டுனதுவ கட்டாததுவ. எல்லாம் அஞ்சியே இருக்கு. எல்லாம் நடக்கும். இது போதாதுன்னு எப்பமும் பதனஞ்சு பள்ளத்திவ வேற அஞ்சியே கெடப்பாளுவ. ஆம்பளைவ தொரத்தித் தொரத்தி அடிச்சு குப்புற தள்ளி மேலேறி... அதுவும் நடக்குறது உண்டுதான். இதெல்லாம் பாக்காதவளா காத்தாயம்பா. படிக்காதவளா?

தெலகராஜுவுக்கு நம்பவே முடியாது. இதென்ன வூடு? இப்டிப் பொண்ணு. ரகசியமாக்கூட திரும்பிப் பாக்கமாட்டாளா ஒரு பொண்ணு? திருட்டுத்தனமாக்கூட அவங்கிட்ட எதாச்சும் பேசணும்ன்னு இருக்காதா காத்தாயம்பாளுக்கு? அன்னைக்கி ஒரு நாள் ப்ரசாதம் குடுக்க கிட்ட வந்தா காத்தாயம்பா. நல்ல வெளிச்சமா முத்தம் சாயங்கால வேளையிலகூட பிரகாசமாயிருந்தது. மஞ்சள் அரைச்சுப் பூசி குளிச்சிருந்தா. கூந்தல் பாரமா கால் மட்டுக்கும் தொங்குது. கீழ் முடிச்சுல ஒரு குத்து மல்லியப்பூ சுத்தியிருக்க. தாக்ஷாணப்பொடி வாசனையும், சீயக்கா நெடியும் சப்ர மஞ்சள் வாடையும் பவுடர் மணமும் அவனை என்னமோ பண்ணிவுட்டுது.

"தொடாம பேசுங்க மாமா." அவன் அறியாமல் தொட்டுபிடித்த வேளை மயக்கம்.

"தொட்டா என்ன?"

"தொடாதிங்யங்கிறேன்ல்ல?" காத்தாயம்பா கண்ணு ரெண்டும் சிவந்தது.

"என்ன தம்பி? ஆயி தொடக் கூடாதுங்குதா? சும்மா புடிச்சி இளுங்க கெடக்கு." சுந்தரம் அண்ணன். திரும்பிப் பார்த்தான்

பரிதாபமாக. என்ன வூடு இது? என்ன ஜனங்கள்? ஜே ஜேன்னு எப்பமும் கூட்டம்தான். தனியா எதுவும் யாருகிட்டெயுமே பேசிட முடியாது. எல்லாத்துலியும் யாராவது தலையெ நொழைக்காம இருக்கவே மாட்டாங்க... வெக்கத்துல தெலகராஜுதான் இடிவுழுந்து நிக்கணும். அவங்களுக்கு கவலையே கெடையாது. சுந்தரம் அண்ணன்பொண்டாட்டி லச்சுமி சிரிக்கிற சத்தம் கும்மறியா கேக்கும் பின்னால. அதுவளும் பத்தம்பது பேருக்கு முன்னாலியே புள்ளெ பெத்து... அட. வென்னி விளாவிக் குடுக்க குளிக்கிற உள்ளுக்குள்ள வந்தா காத்தாயம்பா. இடுப்புத் 'துண்டும் வெறும் ஒடம்புமா நின்ன தெலகராஜு, அவளை ஒண்ணுமே பண்ணல்லெ. ஒரு கம்முன கொரல்ல கரகரப்பா 'காத்தாயி'ன்னுதான் கூப்புட்டான். ஒரு எழவும் பண்ணல்லியே அதுக்கு அந்தச் செறுக்கி...

"என்னது? குளிக்கிறப்ப, ஹம்? ஒழுங்கா குளிச்சிட்டு வெளிய வாங்க மாமா. ரெண்டு நாளா ஒங்களுக்கு ஒடம்பே சரியில்லெ. மருந்து பச்சிலையெல்லாம் போட்டு அப்பாயி காச்சின வென்னி, வீணா பாத்துகிட்டு நிக்காதிங்க, ஆம்மா."

காத்தாயிகிட்ட போறது அப்டி ஒண்ணும் பெரிசில்ல தெலகராஜுக்கு. ஆனா போவணுமாங்கிறது தாங் கேள்வி. அப்டியே அவளை அடிச்சு கீழ தள்ளி, யானை மாதிரி தும்பிக்கையால தூக்கி எறியிற மாதிரி எறிஞ்சு, புலி மாதிரி பாஞ்சு புடிச்சு... காத்தாயம்பாளெ... அப்டியே வாரி அணைச்சு... ம்ஹும்...

அதெல்லாம் ஒண்ணுமே முடியல்லெ... அண்ணைக்கி சாயங்காலமா ஆத்தோரமாவே நடந்து புளியந் தோப்புக்குள்ளே போயி... ஆத்து மடுவு எறக்கத்துலியே பொதை மணல் சேத்துக்குள்ள நாணல் காட்டுக்குள்ள பூந்து ஆத்தோரமாவே போயி ஆத்து மேட்டுல ஏறி... வேலி முள்ளுகுப்பல்கிட்ட நின்னு "ஏ மாஞ்சி... மாஞ்சி" மெல்ல குரல் குடுத்து பள்ளக்குடிக்குள்ள யாருக்கும் கேக்காம... மாஞ்சி... மாஞ்சி... பதிலில்லெ ஆனா அதோ இருட்டுல சேத்துக்குள்ள நாணல் மேல தெரியிறது யாரு? மாஞ்சியா?

"இஞ்ச எஞ்ச வந்திங்க? யாராச்சும் பாத்தா?" அவ்வளவுதான் தெலகராஜு. ரெண்டு பேரும் நாணல் மத்தியில... சேத்துல வுளுந்தாங்க. சேறு சகதி ஏதும் லக்ஷியமில்லை. அங்கேயே அவளை கட்டிக்கொண்டு புரண்டான். "அய்ய... ஆண்டெ ஒரே சேறு, என்ன எளவு இது."

"சும்மா இருடி முண்டெ" அவன் அவளை உள்ளடக்கிக் கொண்டான். வெங்கலச் சிலை மாதிரியிருந்து அந்த உடம்பு. அவன் உடம்பில் நெருப்பு போல் கனல் ஏறியது. இரண்டு பேரும் காணோம். நாணல் கூட்டத்தில் மீன்கள் சேற்றுக்குள். குறவை மீன் சப்தம் துல்யமாய் கேட்டுக் கொண்டேயிருந்தது. சேற்று மீன்களோடு மாஞ்சீ நீந்துவது அவனுக்கு மட்டும் புரிந்தது. அவளை இழுத்து எழுப்பி நிறுத்தினான் தெலகராஜு. அப்படியே அவளை இழுத்துக்கொண்டு புளியந்தோப்பக்குள் போனான். வானம் இருண்டு விட்டது. பூமி காணாமல் போச்சு.

கண்ணுக்கெட்டினவரை காவிரி தெரிந்தது. சரிவில் இறங்கினார்கள் இருவரும். மறுபடியும் அவர்கள் ரெண்டு பேருமாய் ஆற்றில் இறங்கினார்கள். ஆறு மட்டும் வெளிச்சமாய் இருந்தது. ஆத்துக்குள்ளேயிருந்து வெளிச்சம் வெளியே வர்ற மாதிரியிருந்தது. ஆச்சரியம்.

படுகை மணலில் ரெண்டு பேரும் உட்கார்ந்திருந்தார்கள்.

இருட்டுக்குள்கூட ஒருத்தருக்கு ஒருத்தர் நல்லாத்தான் தெரிஞ்சுது. மாஞ்சி வெங்கலச் சிலை மாதிரி எப்பவும் போல கிண்ணுன்னுதான் இருந்தா. முந்தியெல்லாம் யாராவுது சொல்லியிருந்தா கேலிப் பண்ணிச் சிரிச்சிருப்பான் தெலகராஜு. கீழ் ஜாதி மேல் ஜாதின்னு பேசினாலே எரிச்சலா வரும் அவனுக்கு. பெண்மையெக் கீழடக்க ஆணுக்கு என்ன யோக்யதெ இருக்குன்னு கத்துவான். இப்பதான் தெரியுது. இதெல்லாமே ஒரு நினைப்புன்னு. நான் அப்டிங்கிற நெனைப்பு மாதிரி அவங்கிற நெனைப்பு மாதிரி பள்ளன் கள்ளன்ங்கிற எல்லாமே ஒரு நெனைப்பு, ஒரு பாவம், ஒரு சங்கல்ப்பம், அவ்வளவுதான். நான் ஒரு நாய்ன்னு ஒரு சங்கல்ப்பம் பண்ணிகிட்டா நாய்தான். அதே நேரத்துல இல்லையும்தான். இஞ்ச நான் தெலகராஜுமில்லெ, அவ மாஞ்சியுமில்ல நாங்க ரெண்டு பேரும் இப்ப நாங்களே இல்லெங்கிற சங்கல்ப்பம்தான் இப்ப. வேறயெல்லாம் பொய்தான். மாஞ்சி எனக்கு; நான் மாஞ்சிக்கு... விடாம எனக்கு மாஞ்சி...

"மணி என்னஇருக்கும்?" பயந்துகிட்டே கேட்டா மாஞ்சி.

"போவட்டா?"

"இப்பயேவா?"

"பின்ன ஏன் மணி கேக்கிறே?"

"மீனு புடிக்க இந்த நேரத்துல இந்தப் பக்கமா ஆளு போவும். மாட்டிக்கிட்டா?"

"என்ன பண்ணலாம்?"

"ஐய்ய. ஒண்ணுமே தெரியாது பாருங்க? வேற. ஏந்திரிங்க போவலாம்."

"ஏன்டி? உங்க அக்காளெ எங்க காணும்?"

"இப்ப எதுக்கு ஆண்டெ அவ பேச்சி?"

"இல்லெ கரமுண்டாரு வூட்டுக்குப் போயி எல்லாத்தியும் பேசீருக்காளே"

"என்ன பேசிப்புட்டா அப்டி?"

"மாஞ்சிய தெலகராஜு வெச்சுகிட்டாருன்னு எல்லாருகிட்டியும் சொல்லிருக்கா"

"அட நீங்க வேற, அவ சொல்லல்லெங்க நாந்தாஞ் சொன்னேன்."

"எதுக்குச் சொன்னெ? ஏஞ்சொன்ன நீயி?"

"பெரிய வூட்டு ஆயிவளுக்கு சொல்லாட்டியும் தானா தெரிஞ்சுடும். தானாத் தெரிஞ்சா கொன்னுடுவ்வோ தெரியும்லெ? ஓங்களுக்கென்ன? தரகண்ட எடத்துல படுத்துப் பொரண்டுட்டுப் பொய்டுவீங்க. காத்தாயம்பா ஆயி என்னப் பெத்த ஆயி. அது மனசு கலங்குனா நா நல்லாருக்கமாட்டேன். என்னமோ என்னையும் புடிச்சு கேட்டுது. அவரு வந்தாரா ஓங்குடிக்கின்னு, கண்ணு கலங்குனுது, ஆயி என்ன மன்னுச்சுக்காயி, நடுப்பெரியய்யாதாங் கூட்டிகிட்டு வந்தாரு. ஒண்ணுந்தப்பு பண்ணல்ல, ஓடனே ஓடியாந்துட்டாரு தஞ்சாவூரய்யா"ன்னு சொன்னேன். இனிமே தப்பு பண்ணமாட்டாயின்னு கால புடிச்சிகிட்டு அழுதன்."

"இப்ப ஏன்டி வந்த"

"இப்ப ஏய்யா திலும்பியும் கூப்ட்டெ?"

"என்னோட தஞ்சாவூருக்கு வந்திர்றியாடி?"

"எதுக்குய்யா அஞ்ச? நீயி இஞ்சயே இருய்யா. நீ போனா நானும் போய்டுவேன்"

"தஞ்சாவூருக்கு வரமாட்டியா?"

"ஏய்யா என்ன தஞ்சாவூருக்குக் கூப்புட்றெ? அஞ்செ என்னை கட்டிக்கவா போற? கௌப்பு கடை போடுவ. கரமுண்டாம் பள்ளனுவ என்னெ தொரத்திகிட்டு அஞ்ச வருவானுவ. போட்டு மிறிச்சுப் போடுவாரு கரமுண்டாருல்ல?"

"ஒனக்கு மட்டுமில்ல, இஞ்ச யாருக்கும் நான் சொல்றது புரியாதுடி."

"பிரியிது, பிரியிது நீ சொல்றது. ஆசையில சொல்ற. அதெல்லாம் நடக்காது. இனிமெ நானு உம்பள்ளத்திதாய்யா... எப்டியும் ஒரு புள்ளெ பெத்துக்குவேன். எவனும் என்னெ தொடவுடமாட்டன். நீ ஏய்யா கவலப்படறெ? எந்தப் பயகிட்டியும் இனிமே 'போ'வவே மாட்டேன். உம் பள்ளச்சிய்யா நானு. நாங் கூப்புட்டா நீயி வந்தெ... நீயி கூப்புட்டா உங்கிட்ட 'போ'னேன்"

"நீ தஞ்சாவூர் வந்திருடி. உன்னெ நானு கட்டிக்கிறேன்"

"அப்பாடா. இதெச் சொன்னெ பாரு, இதுக்கே பத்து ஜென்மத்துக்கு ஒம்பள்ளச்சியா நாம் பொறக்கணும்யா. போதும் போதுஞ் சாமி, போதும். எனக்கு கன்னி கழிச்சியே அதுவே போதும் போ. ஆயி காத்துகிட்டு இருக்கு தாலிகட்டிக்க, அது மனசு கோணவுடாதெ. நானு எப்பமும் இஞ்சதாய்யா இருப்பேன். எங்க போய்டப் போறா மாஞ்சி. ஒனக்குத்தாய்யா எப்பமும் ஒனக்குத்தான். ஒனக்கே ஒனக்கு"

"காத்தாயம்பாளக் கட்டிக்கத்தான்டி அஞ்சினி கிராமத்துக்கே வந்தேன்... அவளுக்கு ஏம் மேலெ ஆசை ஒண்ணுமில்லெ தெரியுமா?"

"ஏய்யா உம் புத்தி இப்டிப் போவுது? நீல்லாம் ஒரு ஆம்பளைன்னு உன்னெ நெனைச்சுகிட்டுத்தாய்யா, அது இத்தினி வருசமா அப்புடியே சமஞ்சு கெடக்கு தெரியுமா?"

"அட போடி கழுதெ. அவளுக்கு நான் பெரிசில்லெ."

"அது? அது அப்டித்தாய்யா"

"என்ன மாஞ்சி என்ன சொல்றெ?"

"கரமுண்டாரு வூட்டு பொம்பளைவ எல்லாமே இப்டித்தான்?"

"அப்டின்னா?"

"அதுவளுக்கு ஆம்பளைன்னா பெரிசில்லெ. புருசன்னாத்தான் அதுவளுக்குப் பெருசு"

"என்னடி ஒளர்றெ? ஆம்பளெ வேற, புருசன் வேறயாக்கும்?"

"ஒளறல்லயா ஒளறல. கண்ணாலத்துக்கு மிந்தி ஒண்ணும் பண்ண உட்டாளுவ. எனக்குத் தெரியாதா? கண்ணாலம் ஆயிடுச்சின்னா வெளியவுடமாட்டாளுவ"

"... ... ..." குரோதம் மூச்சாய் படர்ந்தது.

"ஏன்னய்யா பேச்சு மூச்சக் காணும்?"

"... ... ..." காத்தாயி நெனப்பு திரும்பியும்...

"மொதல்ல நீயி ஆயிகளுத்துல தாலிய கட்டு எல்லாஞ் சரியாப் போவும்"

"அவ சரி வர மாட்டாடி"

"அது உம்மேல உசிரெயல்ல வச்சிருக்கு? நீம் பாட்ல போவலாம்ன்னு பாக்காத ஆமா."

"ஒன்னெ இப்டியே தஞ்சாவூருக்கு தூக்கிகிட்டு போயிடலாம்ன்னு இருக்கு எனக்கு?"

"தஞ்சாவூர்ல போயி என்னெ என்ன பண்ணுவெ? ஒங்க அம்மா ஒத்துக்குமா? அப்பாரு ஒத்துக்குவாரா? பள்ளனுவ வுடுவானுவளா? கரமுண்டாரய்யா பாத்த எடத்துல வெட்டிப் போட்டுடமாட்டாரா? என்னெச் சாவடிக்கப் பாக்காதய்யா. நல்லாருப்பெ. நாந்தான் நீ எப்ப கூப்புடுவேன்னு காத்துகிட்டு நிப்பனே அஞ்சினியிலியே. என்னெ இனிமே யாருங் கூப்புட முடியுமா? 'போ'வானாய்யா. நான் 'உம்' பள்ளச்சிய்யா"

"அதுக்கில்லெடி, எனக்கு நீதான் வேணும் 'அவ' வாண்டாம்."

"அப்புடிச் சொல்லாதய்யா சாமீ. ஆயிதான் ஒனக்குன்னு முடிபோட்டாச்சு. நானு எப்ப வாண்ணாலும் ஒனக்குத்தாய்யா. ஆயியெ கட்டிக்க, அப்றம் பாரு"

"ஆ...ம்மா எப்பப் பாத்தாலும் சுத்திச் சுத்தி சாமி கும்புட்டுகிட்டு, நாமம் போட்டுகிட்டு, பூஜை பண்ணிகிட்டு. அப்டி ஒரு பொண்டாட்டி வேணுந்தான்."

"தும்பப்படாதெய்யா, ஆயியெ கட்டிக்க. கரமுண்டாரு சொத்து முழுசும் ஒனக்குத்தான்."

"சொத்தா? அது எஞ்சருக்குன்னு தாம் பாக்க அஞ்சினிக்கு வந்தேன். இன்னும் பாக்குறேன்டி"

இருட்டுல ஆத்து மேட்டுக் கரையில உப்புக் கொறவனுவ மீனு புடிக்க மடுவுக்குப் போறது இஞ்சருந்தே நல்லாத் தெரியிது.

"வா போவலாம். எவனாவுது வந்தா ஆவத்தாப் போய்டும்."

"ஏன்டி போ போன்னு தொரத்துற?"

"இல்லய்யா. வூட்டுக்குப் போ. காத்தியியம்பா தூங்காது. பாத்துகிட்டேயிருக்கும்."

அதுவும் உண்மைதான். இந்த ஒண்ணர மாசத்தில ஆச்சரியமான அவளில் 'இதுவும்' ஆச்சரியந்தான். சொத்து பிரியக்கூடாது. ஆனா பொண்ணுவதான் சொத்தெக் கொண்டு போறதும் கொண்டு வர்றதும். ராத்திரி எத்தனை நேரமானாலும் அந்தக் கரமுண்டாரு வூட்டு கதவெத் தெறக்க காத்தாயம்பாதான் வருவா. அவன்தான்னு அவ எப்படி புரிஞ்சுக்குவாளோ? கதவெத் தெறந்ததும் அவளை ஏறிட்டுப் பார்ப்பான் தெலகராஜு. ராத்திரி பதினோரு மணியிருக்குமா? அலங்காரம் கலையாம, தூங்காம, அசங்காம அவனுக்கு கதவு தெறந்து உட காத்துகிட்டு இருப்பாளோ? தெரியாது. ஆனா சுருளான தலைமுடி கலைஞ்சுருக்காது. பட்டுப்புடவை கூட மடிப்பு பிரியாம அப்டியே கட்டினபடியே சுருக்கா இருக்கும். தலையில ஜாதிப்பூ அப்படியே கொத்தா பளீர்ன்னு வெள்ளை மாறாம புதுசா அவனுக்கே மணக்க காத்து இருந்து, வாசனை கும்ன்னு தூக்கும்.

"ஏம் மாமா இத்தினி நேரம்? குட்டி சித்தப்பாவோட மோட்டார் பைக்குல ஊரு கோலிகிட்டு நடுராத்திரீல இனிமே வராதெ. ஆமா."

"... ... ..."

"சாராய நாத்தம். ஒன்னையும் கெடுத்து குட்டிச்செவராக்கிட்டு வராம் அந்தாளு."

"... ... ..."

"மொந்தெ போட்டுகிட்டு வூட்டு உள்ற வராதெ. போயி கீழண்ட திண்ணைல படு"

என்ன திமிர் இவளுக்கு? வெளியே போ. என்ன கொழுப்பு? இவளெ?!

"இந்தாடி என்னது? அவனெ தொரத்துற. நாளைக்கி ஒன்ன கெட்டிக்கப் போறவண்டி" எஞ்சருந்தோ பெரியப்பாயி தொரச்சி வந்துடும். தூங்கவே தூங்காதுவளோ இதுவ.

"ஆமா, கெட்டிக்கப் போறந்தான். அதுக்கு இப்புடி இவ்வோ வருவாவ்வோன்னு காத்துகிட்டு நின்னு சோத்தப் போட்டு படுக்கப் போக இன்னும் ஒருமணி நேரம் ஆவும். தெரியும்ல்லப்பாயி. நீ வேண்ணா தொண்டூளியம் பண்ணேன்"

"எனக்கு சோறு வாண்டாம். சாப்ட்டாச்சி."

"ஆமா... சின்ன சித்தப்பாவோட போனா கௌப்புக்கடையும் டவுன் சாப்பாடும். அட நடுச்சித்தப்பனோட போனா பள்ளக்குடி கறி. இஞ்ச வூட்டு சோறு எறங்குமா?"

"ஏய். உம் வேல மசிரப்பாரு. நீ ஒண்ணுந் தாங்க வாண்டாம். தெரியும்லெ" உறுமியபடியே அவளைக் கடந்து தொரச்சியப்பாகூட பின் கட்டுக்குப் போவான் தெலகராஜு. ஒவ்வொரு முத்தம் தாண்டும் போதும் மனுஷ்ய வாசனை. குறட்டை சத்தம், பெண்களின் மூச்சு மூசு மூசு என்று புரியும். விளக்கில்லாத மங்கிய இருளில் புருஷனுவளோட கெடந்து புரளும்போது அவ்வப்போது நடை ஓசைகள் குடும்பங்களை அலட்டாது எல்லா ஆம்பளைவளும் அதெப்படி ஒரே மாதிரி பொண்டாட்டிவளோட எப்பவும் அப்டி பொரள முடியுது? தெலகராஜுக்கு கரமுண்டாரு வூடு இணக்கமாப் பதிஞ்சு போச்சு. கரமுண்டானுவ வெளிய வெளெயாடுறது இல்லதான். அனேகமா யாருமில்லெ. எல்லாரும் நெலத்துல சேத்துல அக்கினிக்கி கீழ நிக்கிறவனுவ. மூணாங்கட்டுல இருக்குற சந்திரமதியண்ணிக்கி கொழந்தை கெடையாது. அண்ணன் கிட்னராஜு கரமுண்டான் முத்தத்துலதான் கெடக்கும். ராத்திரியில அவரு வூட்டு அறைக்குள்ள சந்திரமதியண்ணிய போட்டு ஒத பின்னி எடுத்துடுவாரு. எப்பமும் அண்ணி கூச்சல் கேட்டுகிட்டே இருக்கும். முத்தத்துல நின்னுதான் ரெண்டு பேரும் சண்டை போடுவாங்க. தெலகராஜுக்கு பயமாயிருக்கும். சந்திரமதியண்ணி நாப்பது வயசு பொம்பளை. நடு வயசு. ராஜ மன்னார்குடிக்காரி. கிட்ணராஜு ஒதைக்க ஆரமிச்சுதுன்னா வுடாது. தூக்கிப் போட்டுத்தான் மிறிக்கும். யாரும் கிட்ட கிட்ட போவமாட்டாங்க.

"அஞ்ச என்ன மாமா பார்வெ? வந்து பாலெ குடிச்சிட்டுப் போ" காத்தாயம்பா இழுத்துக் கொண்டு போவது மாதிரி பார்ப்பாள். அவள் பின்னாலியே போவான் தெலகராஜு. நல்ல தக்காளிப் பழம் மாதிரியிருப்பாள் சந்திரமதியண்ணி.

"இந்தா பாலு. அஞ்சியே பாத்துகிட்டு நிக்காத, கிட்ணமாமா ஒரு மாதிரி ஆமா." பாலைக் குடிக்கும்போது இரைச்சல் முத்தத்தில் அடி உதையுடன் உச்சம் ஆகும்.

"ஏந்தாம் இப்டி அடிக்கிறாரோ பாவம்."

"என்ன பாவம்? ஒனக்கு அதெல்லாம் வாண்டாம்?"

அவளைத் திரும்பி ஒரு பார்வை. அவ்வளவுதான் மௌனமாகி நிற்பாள் காத்தி. சந்தனக் கடைசல் பிடித்த அவள் அங்கங்கள் உள்

வூட்டு இருட்டிலும், மங்கிய சமையல்வூட்டு வெளிச்சத்தில் பொன் உருவ வழிசலாய்த் துலங்கும். மனுஷ உடம்பில்லாத மேன்மை அவனை உன்மத்த வெறி கொள்ளுவிக்கும். பாலின் இத்தனை ருசிக்கும் அவள்தான் காரணம். மெல்லிய பட்டுப்புடவையின் நொசு நொசுப்பும், கால் கொலுசின் சிலுக்கமும், தங்க வளைகளின் கையசைவின் கிணிக்கிணிக்கிடும். கிண்ணக்கமும் அவளை அவன் அம்மாவின் உட்சாயலில் கொண்டு போய் நிறுத்தி, அவனை அயர அடிக்கும் அத்தனையும் அழகு.

"பாலக் குடிச்சிட்டா போயி படுத்துக்கயேன். ஏன் பாத்துகிட்டே நிக்கிற?"

"... ... ..."

ஒரு கணம்தான் உன்மத்தம் தலையேறியது. இன்னது என்று புரியாது.

"என்ன மாமா இது? நீ ஒண்ணும் கிட்ண மாமா இல்லெ எனக்கும் புரியும்"

"... ... ..."

ஒரு உதறல். அவ்வளவுதான், தெலகராஜு விக்கித்துப் போனான். என்ன பெண் இவ. "ஏன்டி அவனெப் புடிச்சி தள்றெ? நாளைக்கி ஒன்னெத் தூக்கி எறிஞ்சிடப் போறான் பாத்துகிட்டே இரு. பெரிய இவள்ல நீய்யி? ஊருல இல்லாததெ அவன் என்னா பண்ணிப்புட்டான்னு இப்டித் தள்றெ? டேய் தெலகராஜு ஏன்டா இவகிட்ட தொண்ணாந்துகிட்டு நிக்யிறெ? பட்டிக்காட்டுக் கழுதடா இது. இப்டித்தான் வெறிச்சிகிட்டு ஓடும். எங்க காலத்துல ஆம்பளெ சொடக்குப் போட்டுக் கூப்ட்டா ஓட்டமா ஓடி அவனுவளோடயே ஓடிப் போவோம். இப்பக் குட்டிவ ரொம்ப தெகையிறாளுவ. முன்னெப் பின்னப் பாக்குறாளுவ. தொட்டாப் போச்சாம். ஏமாத்திடுவானுவங்குறாளு. ந்தோப்பாரு. முத்தத்துல மயித்தப்புடிச்சி பொரட்டி எடுத்துகிட்டு இருந்தானே கிட்ணன், இப்ப என்ன ஆச்சி போயிப் பாரேன்."

பெரியம்மாயி தொரச்சியோடயே வந்தான் தெலகராஜு. முத்தத்துக்கு கோடியில கயித்துக் கட்டில்ல கிட்ணன் குப்புறக் கெடக்குறது நெலா வெளிச்ச மங்கல்ல தெரியுது. சந்திரமதியண்ணியெக் காணும். அழுகுறது மட்டும்சன்னமா கேக்குது. பாடிகிட்டே அளுவுது சந்திரமதியண்ணி.

'அடிச்சாரெச் சொல்லுவனோ ஆராரா பாடுவனோ புடிச்சிப் பத்துவனோ பாங்கான பொண்டுவளா? எங்கோமான் பெரம்பெல்லாம் தங்கப் பெரம்பல்லோ? புருசன் போட்டதெல்லாம் முந்திரக் கொத்தல்லோ. நெலாவெப் போட்டெடுத்து வைரத்தெ அறுத்தெடுத்து எஞ்சித்திரமே, நான் ஆராரோ பாடுவனோ?"

பாட்டுச் சத்தம் ஆளுகையோட வெடிக்கிது. எஞ்சருந்தோ பாடுது சந்திரமதியண்ணி. கிட்ணன் குப்புறக் கெடக்குது. யாரையும் காணும். பேச்சு மூச்சில்லெ.

"சந்திரமதியண்ணி எங்க அம்மாயி?"

"என்னடா ஒனக்கு கண்ணு இல்லெ. ஏங்கிட்ட கேக்கிறியே?"

"எங்க அம்மாயி காணும்?"

"சரி அதெல்லாம் புருசம்பொண்டாட்டி விஷயம். உனக்கு வாண்டாம். வா போயி படுக்கலாம். மணி பன்னண்டுக்கு மேல இருக்காது?" மேலண்டை நடந்து அம்மாயி போச்சுது. பளிச்சென்று மூளைக்குள் மின்னல் வெட்டியதுபோல் திரும்பிப் பார்த்தான். ஒருத்தர் மட்டுமே படுக்க முடிகிற அந்த கயித்துக் கட்டிலைத் திரும்பிப் பார்த்தான். இருண்ட நிலா வெளிச்சத்தில் கிட்ணக் கரமுண்டார் குப்புறக் கிடக்கும் கட்டில் இப்போது அவருக்குக் கீழே அடியில் புதைந்து அழுது கொண்டிருக்கும் சந்திரமதியின் கைகால்கள் கட்டிலுக்கு வெளியே நீண்டு கிடக்க, சந்திரமதியண்ணியின் உடம்பு முழுசும் கிட்ணக்கரமுண்டாரு கீழ மறஞ்சு பதிஞ்சு கிடக்கு. இப்பமும் அழுகைதான் கேக்குது. ஆனா பூரணமான அழுகை. ஒப்பாரி கேக்கும்போது ஒரு சொகம். அது அனுபவிச்சுப் பாடினாத்தான் வரும். இப்ப அழுகை ஒரு சொகம். கிட்ணக் கரமுண்டாரு சந்திரமதியண்ணிய பொத்தி மூடியிருக்காரு. முத்தத்துல பள்ளத்திவளோட புள்ளைவகூட கெடக்குது தூங்கிகிட்டு. எஞ்சப் பாத்தாலும் தூங்கித் திமுறு கண்டவளுவ, பொரண்டு கெடக்குறாளுவ. மறுபடி திரும்பித் திரும்பி கிட்ணக் கரமுண்டாரெப் பார்த்தான் தெலகராஜு. அவரு ஏந்திரிக்கவேயில்லெ, எந்த சத்தத்துக்கும். சந்திரமதியண்ணி ஒப்பாரி ஒப்பாரியா இல்ல. சொகமா ஒரு ஊங்ங்ன்னு நீண்டுபோன சந்தோஷமாக மாறி இப்பமும் கேக்குது. ஆனா மேலுங் கீழுமா குரல் போய் போய் வருது.

முத்தத்து எதிர் நடையில நிக்கிற காத்தாயம்பா அடுத்த அங்கணத்துல போயிப் படுத்துக்கறா. வெறுந் தரையில சிமிட்டி

பூசின செங்காந்தரை வழுவழுப்புல போயிப் படுத்துக்குறா. அஞ்சருந்து பாத்தா எட்டாங்கட்டு தெரியுது. தரைக்குளுமை அவளுக்கு வேணும். பத்து வருஷமா இந்தத் தரைக்குளுமைதான் அவளுக்குத் தெலகராஜு. இல்லேன்னா இந்த ஒடம்பு போடுற ஆட்டம் யாருக்கும் தெரியாது. அதையும் மீறி நாலு மாசத்துக்கு ஒரு தடவை அவ மேல மஹுமாயி வரும். அவளாவே ஆடி அடங்குவா. அப்பக்கூட மஞ்சத் துணி கட்டி இறுக்கி வேப்பிலையோட ஆட ஆரம்பிச்சா எல்லாருக்கும் ஒரு ரெண்டு மணி நேரம் கிலியடிக்கும். பூசாரி அரவான் வர்றதுக்கு மிந்தி ஆத்தா கீள எறங்கீடுவா. நெஜமா ஆத்தா அவமேல வரலேன்னாக்கூட காத்தாயம்பாளுக்கு எப்ப வேண்டுமானாலும் ஆத்தாவெ மேல கொண்டு வந்துக்க முடியும்ன்னு தோணுது. ஆத்தா மேல வந்தா அவ இன்னதுதான் பண்ணிக்குவான்னு யாராலியும் சொல்ல முடியாது. தீக்கவும் முடியாது. மஞ்சத் துணி கட்டியிருக்க ஒடம்பு அக்கினியா மாறிப் போவும். பூசாரி அரவான் சங்கிலியும், பெரம்புமா வருவான். யாரும் பக்கத்துல இருக்க முடியாது. ஹோன்னு சத்தம் போடுவா காத்தாயம்பா. பெரம்பால அடிச்சு அடிச்சு ஒடம்பு ரத்தம் கட்டிக்கும். வரிவரியா நெருப்பு வரியும். ஒவ்வொரு தடவையும் ஏகப்பட்ட பூஜை எல்லாம் நடத்துவாங்க. ஏகப்பட்ட வேண்டுதல், ஹோமம் எல்லாம் பண்ணுவாங்க. அடுத்த நாலாவது மாசம் திரும்பியும் மஹுமாயி ஆய்டுவா காத்தாயம்பா. டாக்டர்கிட்ட, வைத்தியர்கிட்ட, ஹக்கீம் சாயுபுகிட்ட எல்லாம் கொண்டு போய் காட்டியாச்சு. ம்ஹூம்.

தரை ஜில்லுன்னு ஏறுது. பெரிய பெரிய மாரு ரெண்டு வட்டமா தரையில பதிஞ்சு அவ உள்ளுக்குள் ரத்தத்தெ குளுர அடிக்கப் பாக்குது. ஆனா தரையிலயிருந்து அவ ஒடம்புக்குள்ற ஜில்லுன்னு தொடை ரெண்டும் பின்னிகிட்டு யாரோ அவளெ அழுத்தி உருட்டி சுருட்டிக்கிறது தெரியிது. ஆண். அவளுக்கு ஜில்லுன்னு புரியிற அவன் தெலகராஜுதான். "குப்புறப் படுத்துப் புரண்டு எட்டாங்கட்டுலெ தலையெத் தூக்கிப் பாக்குறா காத்தாயம்பா. இப்ப அவளுக்கு கீழ தெலகராஜு குளுகுளுன்னு கெடக்குறது யாருக்குப் புரியப் போவுது. தெலகராஜு ஜில்லுன்னு தரையா செவப்பு சிமிட்டிப்பாலோட கலந்து கெடக்கானே. அடப்பாவிப்பயலே. இப்பக்கூட வந்து இருட்டுக்குள்ள கொண்டு போயேன்டா பாவி. இருபது வருஷமா வேற நெனப்பு ஏதுடா? ஏது? காத்தாயம்பா வாண்டாம் உனக்கு. நேர பள்ளக்குட்டிவ கிட்டப் போனியடா பாவி. இவ வாண்டாமா? இவ ஏதுக்குடா பின்ன? தரைக்குள்ளேயிருந்து சிமிட்டி ஜில்லிப்புல இருந்து இப்ப ஜில்லிப்பு

கொறஞ்சு போச்சு. காத்தாயம்பா ஓடம்பு கொத்திக்கிது. தரையும் ஜில்லிப்பு உட்டுப் போயி அவ படுத்துக் கெடக்குற எடம் முழுசும் கொதிக்க ஆரம்பிக்கிது. எட்டாங்கட்டுல தொரச்சியப்பாயியும் அவனும் பேசிகிட்டு இருக்கிறது மொணமொணன்னு இஞ்ச கேக்குது. இப்ப வந்து என்னெத் தூக்கப்படாதா? காத்தாயம்பா பொலம்புறா... ஓடம்பு முறுக்கிக்குது... மாரு ரெண்டையும் தரையோட தரையா அழுத்தி தொடை ரெண்டையும் பூமியில அழுத்தி... மாமா... மாமா... என்னெ... என்னெ... வாண்டாமா? அம்பாள் முலை ரெண்டும் பிளந்து தீக்குழம்பு பூமியெங்கும் பரவ, குப்புறக் கிடக்கும் அம்பாளை எடுத்து ஓத யாரிங்கே? அம்பாளை எடுத்துப் புரட்ட யாரிங்கே? அம்பாளை எடுத்து முக்கி எடுக்க யாரிங்கே...

வெகுநேரம்... வெகுநேரம்... கண்ணீர் வடிய காத்தாயம்பா தனியே ஜில்லிட்ட தரையில் கொதித்துப் புரண்டு கிடந்தாள். திடுக்கிட்டு வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். வாசலில் ரெண்டு பள்ளச்சிகள் புரண்டு தூங்கிக் கிடக்கிறார்கள். கரமுண்டார் உடு பூராவும் அமைதியும் இருட்டும்.

"ஏய். செல்லி. ஏய்."

செல்லி ஏந்திரிச்சு வந்து கேக்குறா "என்னம்மா?" தூக்க கலக்கம் தெளிந்தது.

"ஏங்கிட்ட வந்து படு"

"வாண்டாம்மா யாராச்சும் பாத்தா?"

"ஓர்த்தரும் பாக்கமாட்டாங்க. வர்றியா இல்லியாடி. சத்தம் போடாமெ வா"

"வாண்டாம்மா"

"வர்றியா நான் வரவா? முண்டெ"

இருளில் செல்லி வந்து அவளருகே படுத்தாள். பயம் அவளுக்கு. செல்லியை இறுகத் தழுவிக் கொண்டாள் காத்தாயம்பா. "வாண்டாம்மா வாண்டாம்மா" என்று புலம்பினாள் செல்லி. தழுவிப் புரண்டு செல்லிக்கு யாரும் தூண்டாமலேயே அவள் இயங்கினாள். பகல் முழுவதும் அவள் இவளுக்கு எஜமானி. இப்போது செல்லிக்கு வெறிகொண்டது. வாசனைத் தைலம் ஊட்டிய காத்தாயம்பாளின் கூந்தலை முறுக்கி இழுத்து ஏறினாள் செல்லி. செல்லியின் உடல் கணகணத்தது. செல்லியின் வெண்கல உடம்பின் வழவழப்பும் திண்மையும் காத்தாயம்பாளுக்கு

ஆச்சரியம். என்ன அற்புதமான கட்டுடம்பு. ஒருவரை ஒருவர் அழுந்தப் புதைந்து மேலேறிப் புரண்டு இறுக்கிக் கொண்டனர். மூச்சுமுட்ட அணைத்துக் கசக்கி வியர்த்த ஒரு சில கணங்கள். விரசங்களாய் சந்தோஷங்கள். காத்தாயம்பாளோட ஒடம்பு செல்லிக்கு அதிசயம். சந்தனக் கட்டை கடைசல். ஆ!

"சொல்லுடி, அப்பறம்."

"எதச் சொல்லச் சொல்ற ஆயிம்மா?"

"மாமா என்னடி பண்ணாரு மாஞ்சியெ?"

"என்ன பண்ணுவாரு? யாருக்குத் தெரியும்?"

"நீ தானடி சொன்னெ மாஞ்சிய வெச்சிருக்காருன்னு?"

"ஆமா, அவளே எல்லாருகிட்டயும் சொல்றா... அவள அவரு வெச்சிருக்காராம்ல்ல?"

நீண்ட மௌனம். அப்புறம் காத்தாயம்பா கேட்டாள்.

"இது மாதிரி பண்ணாரா?"

"ஆயி, ஒனக்குத் தெரியாதா? நாங்க எல்லாரும் ஒங்களுக்குச் சொந்தம். அப்ப?"

"இது மாதிரி பண்ணுரதெ நீ பாத்தியா?"

"எல்லாருக்கும் தெரியும் ஆயி, மாஞ்சி அவரு பள்ளத்தின்னு."

"அதெப்புடி பத்தே நாள்ள அவளெப் 'புடி'ச்சி 'ஏத்து'கிட்டு ஒடனே 'செஞ்சி'... ஆ!"

"மாஞ்சியெ பத்துபட்டி பள்ளனுவளும் தூக்கிட்டுப் போவணும்ன்னு காத்துகிட்டே அலஞ்சானுவம்மாயி. அவ கரமுண்டாரு பள்ளத்தியில்லெ. வுட்டுக்குடுக்கல்லெ அவளும். ராமுக்கரமுண்டாருகூட தேடித்தேடி பள்ளக்குடிக்கி வந்துகிட்டு இருந்தாரு பாரு. இப்ப தஞ்சாவூருகாரரு வந்து தூக்கிட்டுப் பெய்ட்டாரும்மா. எல்லாப் பயலும் முண்ட முடியாம, முளுங்க முடியாம, இப்பமும் காத்துகிட்டுத்தான் இருக்கானுவ. செம்பாட்டம் பள்ளச்சி அவ. ஒங்களுக்கு தெரியாததில்லெ. இனிமே யாரும் அவளெ வுடமாட்டானுவ. கரமுண்டாரு வூட்டு தம்பி வெச்சுக்கிச்சுன்னாக்கூட தஞ்சாவூருக்கு தம்பி போனாவன்னா போச்சு. மாஞ்சி காணாமப் போய்டுவாம்மா. கரமுண்டாரே போட்டு மாட்டிடுவாரும்மா."

“என்னா அக்ரமம் இது?” செல்வி காதுகளில் புலம்பினாள் காத்தாயம்பா.

“கல்யாணம் எல்லாம் ஒண்ணும் பண்ணமாட்டானுவ. பத்துமாசந்தான்...” கரமுண்டாரு கொண்டு போனார்ன்னா கொட்டடிதான். அடுத்த நாளே வெரட்டி உட்ருவாரு. இல்லெ பத்து நாளும் வெச்சிருந்து வெரட்டி ஓட்டி வுட்ருவாங்க அவ்வளவுதான்.”

“அப்புறம்?”

“அப்றம்னா என்ன ஆயி? பள்ளக்குடியில இருக்க முடியாம இஞ்சயும் நிக்க முடியாமெ தொரத்தித் தெரத்தி அடிச்சு வெரட்டியடிப்பாங்க. அப்புறம் ஒரு நாளு ஏதாவுது ஒரு பள்ளங்கூட ‘போவா’. அதுவும் ஆண்டைக்கி தெரிஞ்சுடும். மறுபடியும்... திலும்பியும்...”

ஆத்து அலை சத்தம் சளப்பு சளப்புன்னு ராத்திரில மௌனமா கேட்டுகிட்டேயிருக்கும். காவிரி கரமுண்டாரு வூட்டெ அலம்பிச்சுத்திகிட்டுல்ல ஓடுது. மேல வூட்டு மூணாவுது மாடிக்கு இப்ப போனா நெலா வெளிச்சத்துல கரமுண்டாரு வூடே ஆத்துக்குள்ள பொதஞ்சிருக்குறாப்ல சுத்திலியும் அலையடிச்சுகிட்டு ஓடும். ரொம்ப அருமையா இருக்கும். உமாமஹேஸ்வரி தனியா மாடியில போயிப் போயி ஒக்காந்திருக்கும். செல நாளு மாமா சின்ன மாமா வராமலே வெளியூரில தங்கிடும். அப்ப அப்ப... உமா வந்து இஞ்ச உள் அங்கணத்துல வந்து காத்தாயம்பா கூட படுத்துக்கும். சேந்தாப்ல ரெண்டு மூணு நாளு ஆகும் போது, உமாவால தூக்கம் புரண்டு புரண்டு வராமலேயே போவும்போது காத்தாயம்பாளுக்கு இந்த இம்சை ஆரம்பமாச்சு. உமாமஹேஸ்வரி கத்துக் குடுத்ததுதான். இப்ப செல்விகிட்ட ராத்திரி பூரா கசங்கி... இது ஒரு பாவம். இது ஒரு அசிங்கம். இது ஒரு மோசம்ன்னு ஏமாத்தியிருக்காங்கன்னு காத்தாயம்பாளுக்கு உருட்டி ஏத்திக் குடுத்தது உமாமஹேஸ்வரிதான்.

இப்ப செல்வி காத்தாயம்பாளெ வடிச்சு எடுத்து வுட்டுர்றா. செல்வி இப்பல்லாம் பள்ளக்குடிக்கே போறதில்லெ. கரமுண்டாரு வூடே கதின்னுதான் கெடக்கா. பதிமூணு பதினாலு வயசு இருக்கும். நல்ல கருங்காலி மாதிரி கருப்பு. ஆனா செம்புங் கலந்த நெறம். காத்தாயம்பாளுக்கு செல்வியெ ரொம்பப் புடிக்கும். பெரிசு பெரிசா அவ கண்ணு கறுப்பு முழியோட அழகாயிருப்பா.

கரமுண்டாரு வூட்டுப் பள்ளன்வள்ள வீராச்சாமி ஒருத்தன். செல்லிய இழுத்துகிட்டு ஓடிட்டான். செல்லியும் மூணு நாளு திருவையாறு டவுன்ல அவனோட இன்னொரு பள்ளக்குடியில படுத்துக் கெடந்து, சினிமா எல்லாம் பாத்து, கிளப்பு கடையில பலவாரம் எல்லாம் தின்னு, தஞ்சாவூருக்கு ஓடி, அஞ்சயிருந்து மெட்ராசுக்கும் ஓடுனவதான் செல்லியும்.

கரமுண்டாரு ஆளுங்க அஞ்சயும் உடலெ. வீராச்சாமி செல்லிய உட்டுட்டு ஓடிப்பெய்ட்டான். பள்ளனுவ வுடலெ. பத்து மாசம் பதினஞ்சு மாசத்துக்கப்புறமா வீராச்சாமியெ கொண்டாந்துட்டானுவ. இப்ப அவ நடுவக் கரமுண்டாரு பள்ளத்தி. அவருதான் கொண்டாந்து சேத்திருக்காரு. வீராச்சாமியும் இஞ்சதான் இருக்கான். இவளும் இஞ்சதான் வேலைக்கி நிக்கிறா. ரெண்டு பேருக்குமே ஓர்த்தர் மேல ஓர்த்தர் கொலை வெறிதான். இவ வேல செய்யிற வயல்லதான் வேல அதிகம். வூட்டுலயும் மாடு மாதிரி வேலை செய்வா. அவன் இவளெக் கண்டாலே காய்வான். அத்தனை எரிச்சல். ரெண்டுபேருக்கும் பகை. ரெண்டு பேரும் அங்கியே அங்கிய கெடக்காங்க. இப்ப? இப்ப?

செல்லி மேலயும் காத்தாயம்பா மாதிரியே சாமி வரும், மூலக்கரை அய்யனாரு. அவுத்துப் போட்டு ஆடி ஆடிக் குதிப்பா செல்லி. ரெண்டு நாளு மூணு நாளு ஒரே சத்தந்தான். கூவல்... நாலஞ்சு பள்ளனுவ சேந்து புடிச்சு அமுக்குவானுவ செல்லியெ. நடக்காது. தூக்கி எறிஞ்சுடுவா செல்லி. மாரு ரெண்டு பந்து பந்தா எகுரும். தலமுடி அவுந்து பறக்கும். வேர்வை பொங்கப் பொங்க வாயில நொரை தள்ளும். சவுக்கு புளிய மிலாரு வெச்சு பூசாரிப்பயலுவ செல்லியெ வெளுத்து கட்டுவானுவ. அப்புறம் நடுக்கரமுண்டாரு கொட்டடியில போடச் சொல்லிடுவாரு. பத்து நாளைக்கி ஆளெப் பாக்க முடியாது. ராமுக்கரமுண்டாரு கொட்டடிக்குள்ள எறங்கி ஏறி வருவாரு. பாச்சா ராவுத்தர் மருந்து பொட்டியோட கொட்டடிக்குள்ள போயி மருந்து குடுத்துட்டு வருவாரு. ரெண்டு புள்ளை செல்லிக்கு. ஒண்ணு ஒண்ணும் ரெண்டு. ரெண்டுமே அழகாயிருக்கும். பதினஞ்சாவுது வயசுலியே மூணாவுதும் கர்ப்பமுண்டானுது, கர்ப்பமாயிருக்கப்பவே அவ மேல அய்யினாரு வந்து ஆடுனாரு. உளுந்தது பெரண்டதுல கர்ப்பம் கலஞ்சு போயி ரத்தமா வூத்திச்சு. கர்ப்பம் மிச்சமில்ல. இப்பல்லாம் செல்லி பள்ளக் குடிக்கே போறதில்லெ. மாசாமாசம் ஐயினாருக்கு பூஜை பொங்கல் வைக்கிறா. கரமுண்டாரு ஐயனாரா வந்து கொட்டடிக்குள்ள செல்லிய கொண்டு போறதுக்கு

கரமுண்டாரு குடியில யாரும் தடுக்கறதேயில்லெ. இப்ப செல்லி காத்தாயம்பா பள்ளச்சியா காத்தாயம்பா உள் வூட்டு காவலுக்கு படுத்துக் கெடக்குறா.

இப்பவெல்லாம் அவ மேல சாமி வர்றது எப்பவாவுதுதான். அப்டியே வந்தாலும் காத்தாயம்பாள செல்லி விட்டதேயில்லெ. ரெண்டு தடவை வந்தப்பமும் கதவெ அடச்சி வெச்சு, தானே வைத்தியம் பண்ணிவுட்டதும் அய்யினாரு வர்றதில்லெ. பெரிய வைத்தியம் ஒண்ணுமில்ல. காலு கையெ மஞ்சத் துணியில கட்டிப் போட்டு. ராமுக்கரமுண்டாரு கொட்டடிக்குள்ள இருந்து செஞ்ச அதே வைத்தியத்தெ, பொண்ணா இருந்தும் பகல்லியே காத்தாயம்பா செஞ்சதும் செல்லிக்கி ஐயனாரு வர்றதேயில்லியாம். செல்லியும் இப்ப ரெண்டு புள்ளையோட ஆயி. காத்தாயம்பா அங்கணத்துலியே கெடக்கா. இப்பமும் பள்ளனுவவால ஆட்டி அவளெ மெதுவா இளுத்துத்தான் அமுக்குறானுவ. இந்தப் பக்கம் கரமுண்டாரும் மோந்துதான் பாக்குறாரு. காத்தாயம்பா உள்ள வெச்சிகிட்டாளே யாரும் என்ன பண்ண முடியும்? பள்ளக்குடியில செல்லி குடிசையிலதான் மாஞ்சி இப்ப இருக்குறாளாம். செல்லிக்கும் மாஞ்சிக்கும் ரொம்பத் தெரியும் எல்லாம்... எல்லாம். வூட்டுக்கு வெளிய நடக்குறதும் புரியாமையா இருக்கு?

அதென்னமோ மாஞ்சியப் பாத்தா காத்தாயம்பாளுக்கு கோவமே வரமாட்டேங்கிது. மனசுக்குள்ற தாங்க முடியாத அருவெருப்பு இருக்கு. ஆனா கோவம் இல்லெ. இப்பல்லாம் ஜாதி பேச முடியுமா? காங்கிரஸு, டி.யெம்.முக்கே, அண்ணா டி.யெம்.முக்கேன்னு எத்தினி கட்சி. பள்ளக்குடியிலியே பத்து கொடி பறக்குது. ஓட்டு கேக்க... மிந்தியெல்லாம் கரமுண்டாரு வூட்டுக்குத்தான் வருவாங்க. கள்ளன் ஓட்டுக்கு மட்டுமில்லெ, பள்ளு பறை பதுனெட்டு ஜாதியும் பெரிய கரமுண்டாரு வார்த்தையெக் கேட்டுத்தான் ஓட்டுப் போடும். பாப்பானுவ ஓட்டு சாலியனுவ ஓட்டுன்னு, குடியான ஓட்டு எல்லாம் பெரிய கரமுண்டாரு சொன்னபடிதானே விழுவும். இப்ப முடியுமா? நேரா ஜீப்புல பறக்குடிக்கும் பள்ளக்குடிக்கும் அக்ரகாரத்துக்குமா தலைவருவளோட போயிர்றானுவ. அஞ்சியே மேடை போட்டு பேசுறானுவ... எல்லா ஜாதியும் ஒண்ணாம். எல்லாம் மனுஷனும் சமமாம். எல்லாரும் ஒண்ணாத்தான் இருக்கமாம். சேப்புச் சட்டைக்காரன் சொல்றான் ஒலகமெங்கும் ஒண்ணுன்னு. ஆனா பணங்காசு மட்டும் கவுர்மென்ட்டுக்கு நாம குடுக்கணுமாம், எலக்‌ஷனாம். எல்லாரும் ஒண்ணு ஒண்ணுன்னு எல்லாருமேதான்

பேசுறாங்க. கறுப்பு சட்டைக் கச்சிக்காரனுவ எல்லாரும் ஒண்ணு, பாப்பானுவ கூடாதுங்குறானுவ. காங்கிரஸு கட்சிக்காரன் சொல்றான், ஆண்டான் அடிமெ ஒண்ணும் கெடையாதுன்னுட்டு. ஆனா அவந்தான் ஆள்றான். அஞ்சினியில எம் ஜார் கட்சி, சிவாசி கட்சி எல்லாம்கூட இருக்க, வயக்காட்ல வேலெ செய்ற பள்ளனுவளே செவப்புச் சட்டைக்காரன் வந்துக் கூலி ஒஸ்த்திக் குடுக்கல்லென்னா அறுவடை பண்ண உட்டெடங்குறான். சேப்பு கொடியெ வரிசெயா வயல்ல குத்துறான். வயல்ல சேப்பு கொடி பறந்தா தஞ்சாவூர் ஜில்லாவுல எஞ்சியும் பள்ளனுவளும் பறையனும் வயல்ல எறங்கமாட்டேங்கிறானுவ. போலீசுவ வந்துடுது, கரமுண்டாரு வூட்டுக்கு.

என்னமோ கரமுண்டாரு வூடு மட்டும் இன்னமும் பிரியலெ. சிங்காரச்சாரியாரு மவன் அமெரிக்காவுல படிக்யிறானாம். காத்தாயம்பாளுக்குத் தெரியும். நறுங்கலா செவப்பும் மஞ்சளுமா பட்டும் நகையுமா இருப்பான். ரெண்டு தடவை மேலக்குடி அக்ரகாரத்துக்குப் போயிருக்காளே காத்தாயம்பா. அஞ்சியும் கட்சி வந்துருக்கு. மஞ்ச, பச்ச, சேப்பு கலர்ல அதுவளும் நோட்டீசு ஒட்டுது. ப்ராம்ணப் பசங்களும் கொடி தூக்குதுவ. ப்ராமண பொண்ணுவகூட மேடை போட்டு பேசுதுவ. படிச்ச பொண்டுவள்ள? ப்ராம்ணாள் எல்லாம் ஒண்ணாவணும்ன்னா ஒத்துமையாவணும்ன்னும் பேசுறாளுவ. ரேடியோவுல பேசுறது காது தொளைக்கிது. எஞ்சப் பாத்தாலும் எல்லாம் சமமாம். மாஞ்சிக் குட்டிகூட சொல்லுவா இதெல்லாம். மாஞ்சியோட அண்ணந்தம்பியெல்லாம் எம் ஜார் கட்சி. எம் ஜார் படம் போட்ட கொடி தூக்கிட்டு போனா ஓடிப் போயி தெருவுல நின்னுபாப்பா மாஞ்சியும் காத்தாயம்பாளும். மாஞ்சியோட அம்மாள கொன்னது இன்னும் ஞாபகம் இருக்கு. கட்சி ஜெயிச்சு ஊர்வலம் போனுதே அன்னைக்கித்தான் மாஞ்சியோட அம்மா கொடல் சரிஞ்சு வரப்புல கெடந்தா. அன்னைக்கிக்கூட கூலி பத்தலென்னு கொடி போட்டுருந்தானுவ, கரமுண்டாரு வயக்காட்டுலயும். எல்லாஞ் சரி அவளெக் குத்துனது யாரு? தெரியாதுங்கிறா மாஞ்சி இப்பக்கூட. மாஞ்சியோட அம்மா மாஞ்சியோட அப்பா ரெண்டு பேருமே கரமுண்டார் வூட்டுப் பள்ள ஜனம்தான். குத்துனது யாரு? அப்பங்காரன்தான்னு போலீசுல இளுத்துகிட்டு போனானுவளே? மாஞ்சியோட அம்மா ஒடம்புல இருந்த குத்து ஒண்ணு ரெண்டு இல்ல. ஏழெட்டு எடத்துல குத்தில்ல தள்ளீருந்தது. செம்பாட்டாம் பள்ளச்சிவளுக்கு இதாங் கெதி. திமீர்ன்னு வந்து சொல்லுவானுவ. மாஞ்சி இந்த கரமுண்டாங்குடிக்கே வந்தப்ப எட்டு வயசு. ரெண்டு

பேரும் வெளையாடுவாளுவ. ஆனா ஆண்டச்சி ஆண்டச்சிதான். இப்ப ஆண்டச்சி பெரிசா வளந்து நிமுந்து நிக்கிது. மாஞ்சியும் வெங்கலச் செலை மாதிரில்ல ஓசந்து பெய்ட்டா. கரமுண்டாரு வூடுல்லெ...

அவன் அவளை தூக்கிக்குவான்னு காத்தாயம்பா யோசிச்சதில்ல. அவன் தொட வர்றப்ப அவனுக்கு வயசு பன்னண்டு. காத்தாயம்பாளுக்கு எட்டுல்லன்னா ஓம்பது வயசு. நம்ப இப்ப அவளாலயே முடியாது. இப்பக்கூட ஆச்சரியமாத்தான் இருக்கு. அவன் மாஞ்சி பின்னாலயே போவான்னு நெனைக்கவே முடியல்லியே... அவன் தொட்ட பன்னண்டு வயசு இப்பமும் காத்தாயம்பாக்குப் போதும். பள்ளிக்கூடத்துல படிக்கிறப்போ ஒரு தடவையோ ரெண்டு தடவையோ இஞ்ச வந்துட்டு மறுநாளே போயிடுவானே. அப்பக்கூட அவனெ ஓடிப்போயி பாக்காமெ இருந்திருப்பாளா காத்தாயம்பா? இப்பக்கூட 'உம்'ன்னா போதும் மதாரத்துலயிருந்து சுப்ரமணிய மாமா வந்து அள்ளிகிட்டுப் போய்டும்... தெரிஞ்சாப் போதும், தங்கமுத்து ஓடியாற மாட்டானா? சிராளூர் அத்தைக்கி கண்ணுல வழியிற கண்ணீர் தெரிஞ்சிரிஞ் சா போதாது ஓடியாரும். தஞ்சாவூர் மாமன் மேல இப்புடிப் பித்து இருக்கும்ன்னு யாருக்குத் தெரியும்? ஆ... மாஞ்சியெ வுட்றப்டாது. மாஞ்சி பாவம். மாஞ்சி மாமம் பள்ளச்சின்னு யாரு காத்தாயம்பாளுக்குச் சொல்லிக்குடுத்தா? இனிமே மாஞ்சியும் இஞ்சதான் வந்துடணும்ன்னு சொன்னப்ப மாஞ்சியோட தம்பிவ ஆச்சரியமா பாக்கல்லெ? ராதயம்பாகூட கேக்கல்லெ?

"ஏன்டி அவளெக் கொண்ணாந்து இஞ்ச வச்சுக்கப் பாக்குறெ? ம்ஹ்ம்... தெலகராசுப் பயலெ ரெண்டே நாள்ள வளச்சுப்போட்ட நாயி அது"

"ஏம்மா புரியாமெப் பேசுற? மாஞ்சி யாரு? நம்ம பள்ளச்சியில்லியா? வுடு பேசாமெ. எனக்கு அவ வேணும். அவருக்கும் அவ வேணும்."

"அடிப் பாவி மவளே."

"கல்யாணத்தையே காணுமாம். இதுல வந்து கிளிச்சுக்கிச்சாக்கும் போவியா..."

"கல்யாணம் பண்ணிகிட்டா மாத்திரம் அப்டியே மூலையில உக்காந்துடுவாராக்கும், ஓம்மருமவன்? ல்ல எவந்தான் அப்டியே பொண்டாட்டிய தலையில வெச்சு ஆடுறானாம்?"

ராதையம்பா பேசாமல் உள்ளே போனாள்...

காத்தாயம்பா அவளையே பாத்துகிட்டே நின்னுகிட்டிருந்தா. இப்பக்கூட கரமுண்டாரு வூட்டுக்கு வாரிசு வேணும். ஆனா அது வராதுன்னு காத்தாயம்பாளுக்கு ஏனோ தெரிஞ்சுது. ஆம்பளப் புள்ளக்கி இப்பமும் காத்துகிட்டு, இப்பமும் ஜாதகத்தெப் பொரட்டிகிட்டு, இப்பமும் பக்தி பயமா ஆசாரத்தோட பொண்டாட்டியாத்தாளுவளோட திண்ணையில பூஜை பண்ணிகிட்டு இருக்காரே பெரிய கரமுண்டாரு–சந்திரஹாச கரமுண்டாரு, அவருக்கு இந்த வூட்டுக்குள்ள எத்தினி பொண்ணுவ ஏங்கி நறுங்கி சாம்பிகிட்டு போவுதுன்னு தெரியுமா? தெனமும் கற்பூரமும் குங்குமப் பூவும் போட்டு பாலுகாச்சி செம்புல தூக்கிகிட்டு குடிச்சு, திண்ணைல ராஜாங்கம் பண்ணிகிட்டு இருக்காரே, சந்திரஹாச கரமுண்டாரும், ராதையம்பாளும், நாகலக்ஷ்மியம்பாளும திரிசியம்பாளும்,இந்த ஒலகத்துலதான் உயிரோட படுத்துப் பொரண்டு கெடக்காளுவளா? ஆமா. ஆம்பளை வாரிசுக்கு இன்னும்... காத்தாயம்பாளுக்கு அருவருப்பு ஓங்கலடித்து வந்தது. வாரிசாம் வாரிசு. அங்கணம் அங்கணமா கட்டுனவூடு கரமுண்டார் வூடு. எரணூறு எரணூத்தம்பது வருஷத்துக்கு மிந்தி இதுவும் ஒரு ரெண்டுமா நெலத்துல நின்ன நக்குனூண்டு வூடுதான். அங்கணம் அங்கணமா வளந்து இப்ப பெரிய்ய ஊடா நிக்கிது. ஆனா குடும்பம் குடும்பமா உள்ள புழுங்குது. யாருக்கும் எந்தக் கவலையுமில்லெ. இப்பமும் வடிச்சுக் கொட்ட நாகலக்ஷ்மியம்பா சளைக்கிறதேயில்லெ. கூட்டம். எஞ்சியும் கூட்டம். வூட்டுக்குள்ளயும் கூட்டம்தான். குடும்பம் குடும்பமா கூட்டம். வூட்டு நிர்வாகம் எல்லாம் ராஜலிங்கம் சித்தப்பாதான் பண்ணுது... என்ன வருது? என்ன போவுது?ன்னு அதுக்கே தெரியாது. நெலம் நீச்சு காடு கரை எல்லாம் சிங்காரச்சாரியாரும் ஜோசியரும் பாக்குறாங்க. பெரிய கரமுண்டாரு கணக்கு பாக்கவேமாட்டாரு. அது ஒரு அசிங்கம் அவருக்கு. திண்ணையில ஒக்காந்துகிட்டு வர்ற போறவங்களோட, மேவாம பெருமையா பேசிகிட்டு இருப்பாரு. எப்பவாவுது கார்ல தஞ்சாவூருக்கு நெலம் விஷயமா கூட்டிகிட்டுப் போவாங்க. வக்கீலு ராமசாமிய்யங்காரு தம்பிராஜு வன்னியரு எல்லாம் போவாங்க. ஏதாவது நெலம் பைசலாவும். பணம் நெறைய வரும். நெலம் வெளச்சல் கண்டு முதல் எல்லாம் ராமுக் கரமுண்டாரு வகை. அவரும் கை பாத்து செலவு செய்யிறவரில்லெ... அட வழக்கமேயில்லெயே...

எல்லாம் காத்தாயம்பா கையில வரும். காத்தாயம்பாதான் எல்லாம். காத்தாயி கையிலருந்து வாங்குற பழக்கம் குடுக்குற பழக்கம் எல்லாம் அவ பள்ளியூடம் போறது நின்னுதே, அப்பயிலிருந்து வழக்கமாச்சு. காத்தாயிக்கித்தான் வூடு இன்னதுன்னு தெரியுமா? அதுக்கும் பதனஞ்சு வருஷம் வேண்டிவந்தது. கொஞ்சம்

கொஞ்சமாத்தான் கனம் ஏறுனுது. ஏதாவது கேட்டா சிங்காரச்சாரி மாமா சொல்றது: “அதெல்லாம் அப்டித்தான்டி கொழந்தை” நம்ப வூட்டுப் பழக்கம்ன்னு மட்டும் விடாமெ சொல்லுவார். அழிமானம். சிங்கரச்சாரியாரு வூட்ல பத்து பொண்ணு. ஒவ்வொரு பொண்ணுமே கரமுண்டாரு வூட்டுப் பொண்ணுதான். செலவு எல்லாம் பின்ன யாரு பண்ணுவா? ஒவ்வொரு குட்டிக்கும் ஐம்பதாயிரம் செலவு பண்ணி ஒண்ணொன்னா அனுப்புனது சந்திரஹாச கரமுண்டாருதானே? செலவு பண்றதுக்கு முந்தி “ஆயி. பணம் இருக்கா?”

“எவ்வளவு வேணும்ப்பா?”ம்பா காத்தாயம்பா.

“பெரிய ரூவா அஞ்சாவுது வாண்டாம்? இருக்கா?”ம்பாரு

தம்பிராசு வன்னியருகூட ஒருநாள் கேட்டாரே,

“ஏம்மா இப்டி எடுத்து எடுத்துக் குடுக்குறியே... நெலத்தெ வித்து வந்த பண்மல்ல இது?

“ஆமா மாமா.”

“கண்டு முதல் கண்டு வந்த பணமா? இல்லியே.”

“அவகிட்ட யென்னத்தெய்யா கேக்குற? சின்னக்குட்டி அது. குடுத்தா வெச்சுக்கு, கேட்டா குடுக்கும் அவ்வளவுதான்.” இது ஜோசியர்.

“இப்ப நேரம் எப்டியிருக்கு?” ம்பார் சந்திரஹாச கரமுண்டாரு.

“நேரத்துக்கென்ன ஒங்கள அசைக்க யாரால முடியும்? போயி காரியத்தெ முடிங்க.” இதுக்கு மேல கரமுண்டாருகிட்ட யாரு பேசமுடியும்? இப்ப எங்க நெலம் எஞ்சருக்கு காட்டுங்கன்னு வந்துட்டான் தெலகராஜு. என்னா கிண்டல் இந்த வடுவாம்பா அத்தைக்கி. பத்து வருஷமா என்ன நடந்துகிட்டு இருக்குதுன்னு தெரியாதா அந்த பொம்பளைக்கி? நாசம். என்னா கொழுப்பு நேர கேக்க?

மிந்தி மாதிரி ஆத்துல தண்ணி வருதா? வுட்டுவுட்டு நிறுத்தி நிறுத்தி தண்ணி வுட்றான். அதுவும் இந்த பத்து வருஷத்துல

தண்ணி வரத்தே கொறஞ்சிதாம் போச்சு. தோப்பு தொரவெல்லாம் காயுது. அஞ்சினியில இருக்க கொளம் எல்லாம்கூட வத்திகிட்டே வருது. காத்தாயம்பாளுக்கு மட்டுமில்ல, எல்லாருக்குமே நெனைச்சா பகீருங்குது. அஞ்ச பயிறு காயிது, இஞ்ச வேரோட காயிதுன்னு பள்ளனுவ வந்து சொல்லும்போது நெஞ்சு வேவுது. மாம்பழகாலத்துக்கு மிந்தியே தஞ்சாவூர்ல திருச்சில சேலத்ல இருந்தெல்லாம் பழத்துக்கு அட்வான்ஸு குடுக்க யாவாரிய வந்து கரமுண்டாரு வூட்டுத் திண்ணையுலேயே கெடப்பானுவ. கட்டுகட்டா நோட்டு பணத்தெ காத்தாயம்பாகிட்டதான் கூப்புட்டுக் குடுத்து பணப்பொட்டியில வெக்யச் சொல்லுவாரு ராமுக் கரமுண்டாரு. கரமுண்டாரு வூட்டு லெக்ஷ்மியில்லெ... அண்டாரங்காட்டுக் குத்தகையே கரமுண்டாரு வூட்டுதாச்சே. பத்து தோப்பு படுகை பூராவும் சக்கரக்கட்டி மாம்பழம். நீலமாம்பழம், ஜகாங்கிரு மாம்பழம், நாலு ஜாதிப்பழம்தான் உதுந்துகிட்டேயிருக்கும். உதுந்த பழம் மட்டும் நாலு லாரி எடுப்பாங்க. ஆளும் பேருமா ஊரு தெருவு ஆளுவளுக்கெல்லாம் பழம் கூடையில போவும். கரமுண்டாரு தோப்புப் பழமின்னா அத்தனை பேருருசி, இப்ப என்ன ஆச்சோ? மாம்பழம் பலாப்பழமெல்லாம் காய்ப்பே இல்லெ. கொறஞ்சி போச்சி. ஆத்துல தண்ணி வரத்து கொறஞ்சதோட பூமியும் வத்த ஆரமிச்சுது பாரு, அது எப்பேலருந்து? ஆத்துல தண்ணி வந்தாத்தான் அஞ்சினியில கொளம் எல்லாம் ஊறும். ஆத்துல தண்ணி ஏற ஏறத்தான் ஏறும். கிணறு எல்லாம் இப்ப ஆழத்துல போய்டுச்சு. தண்ணி வத்த வத்த பூமியும் மேலருந்து உள்ள நோக்கி வரள ஆரமிச்சிடுச்சி. வறட்சி...

ஒரு நாள் கரமுண்டார் கால்ல வுளுவுறதுக்கு வந்தான் விஜயராகவன். அப்ப பாத்தப் புள்ளெ. இந்தப் பய்யன். எத்தாம் பெரிசு வளந்துட்டான் பாரேன். "விஜயராகவன் சீமைக்கிப் போறான் படிக்க. என்ன இருந்தாலும் நம்ம புள்ளயில்லியா?" என்றார் சந்திரஹாச கரமுண்டாரு.

அவனையே பார்த்து கரங்குவித்த சிங்காரச்சாரியார் மவனை. ஏளனமாகப் பார்த்தாள் காத்தாயம்பா. ஆமாம். அவன் பார்வையில் ஒரே நோட்டத்தில் விஷயம் புரிந்துவிட்டது. அது எப்படியென்று புரிவதேயில்ல காத்தாயம்பாளுக்கு. ஒரே பார்வையில் ஆம்பளைகளைப் புரிஞ்சு போகும். எவனாயிருந்தாலும் எந்தப் பெரிய மனுஷனும் இந்தப் பார்வை

நெருடல்ல மாட்டிக்குவான். அதென்னமோ தெலகராஜு மட்டும் புரியவேமாட்டேங்கிது அவளுக்கு.

அப்பாரு கால்ல வுளுந்து ஆசீர்வாதம் வாங்கிட்டு ஏந்திரிச்சான் விஜயராகவன். "நம்பவூரு பெருமெய காப்பாத்தணுண்டா ராஜா. எந்த வூருக்கு எந்த சீமைக்கிப் போனாலும் நம்ம பேரு பெருமையெ வுட்றப்டாது. நல்லாருடாய்யா நல்லாரு. ஏ ஆயி பத்தாயிரம் ரூபா இருக்கா உங்கிட்ட? கொண்டாந்து குடு தம்பிகிட்ட. தம்பி நம்ம பய" பதறியது காத்தாயம்பாளுக்கு. இப்டித்தான். சிங்காரச்சாரி பொண்ணு வந்து கால்ல வுளுந்தாப் போதும் வாரிவுட்றதுக்கு. எவ்வளவு காசி போச்சு. இப்டியே விஜயராகவன் கையில நோட்டெ குடுக்க, நீட்டின கையெத் தொட்டு வாங்கின விஜயராகவெ‌ன காத்தாயி எத்தனைதான் உதறினாலும் அருவருப்பு அடங்கல்லியே. அப்பாரு இல்லென்னா அஞ்சினியே காறித்துப்பியிருப்பா. பாப்பாரப் புள்ளையா அது? யாராயிருந்தா என்ன? பொம்பளை பாக்குற ஆம்பளப் பயலுவதானெ? எவனாயிருந்தாலென்ன? கண்ணெ நட்டுகிட்டு மாரப்பாக்குற ஆம்பளை. வெறும் தடியனுவ.

தெலகராஜு மட்டும்தான்.

தெலகராஜு மட்டும்தான் இந்த அக்குறும்பெல்லாம் பண்ணலாம். பண்ணனும். ஆனா அவனையும் வுடமாட்டா காத்தாயி. இருபது வருஷமா ஒரு கண்ணாம்பூச்சி வெளையாட்டுத்தனம் ஒண்ணும் காத்தாயம்பாகிட்ட பலிக்காது. கள்ளப் பொண்ணுல்ல? தெலகராஜு முண்டிப் பாத்து முடியாம நிக்கிறது ஆச்சரியமாயிருக்கும் காத்தாயம்பாளுக்கு. எத்தினி தடவை? தூக்கி எறிஞ்சாச்சு. திலும்பியும் திலும்பியும் வர்றானே!

# கரமுண்டார் வூடு - 4

அண்டாரங்காடு அஞ்சினிக்கு மேக்க தல தூக்கி நிக்கிற காடு. காடுன்னா பெரிய வனமோ, ஆரண்யமோ இல்லெ. சின்ன வனாந்திரம்தான். அஞ்சினியோட மேலண்டை பக்கம் பூராத்தையும் அண்டாரங்காடுதான் அடச்சு மூடியிருக்கு. மாந்தோப்பா ஆரமிச்சு பாம்புப் புத்துவள்ள போயி காடா ஆரம்பிக்கும். எட்டு மயிலு நீளம் ஒரே மரக்காடு. பாம்புப் புத்துதான் எல்லை. பாம்புப் புத்துன்னா லேசா இல்ல, எட்டடி ஒசரம் பத்தடி ஒசரத்தக்கு வளந்த பாம்புப் புத்துவ. நெறைய நல்லது குடியிருக்கு. ஊரு ஜனம் பாலூத்த பகல்ல பாம்புப் புத்துப் படைவரிசை வரைக்கும் வரும்.

காத்தாயம்பா வருவா. தனியே வருவா. ஆமா செல்லியோட ஊட வர்றது இப்பப்ப வழக்கமாப் போயிடுச்சி. உமா மஹேஸ்வரியும் கூட எப்பனாச்சும் வரும். அண்டாரங்காடு காவிரிப் படுகையில கடைசி மூலை. அதுக்கு மேல நெலம் இல்ல. அண்டாரங்காடு முழுசும் இலுப்ப மரம், பின்னமரம், வெண்ணாவமரம், கருநாவமரம்ன்னு வகை வகையா ஒசர ஒசரமா வளந்து கெடக்கும். பெரியப்பாயி தொரச்சியம்பாளும், நடப்பாயி சந்தனத்தம்பாளும், மூலிகை பறிக்க மருந்து செடி புடுங்க அண்டாரங்காட்டுக்கு தனியா வரும். மருந்துக்கு.

சின்னப்பாயி செத்து அண்டாரங்காட்டு மேக்கால கடே சிலதான் பொதச்சாங்க. வெள்ளக்காரன் அஞ் சினிக்கி வந்து அண்டாரங்காட்டுக்கு மேலண்டை

கடேசில ஒரு பங்களா கட்டி 'ஆப்சர்வேடரி' வெச்சிருந்தானுவளாம். மனுஷங்க அண்டாத மூலெ அது. நெடு நெடுன்னு தேக்கமரம் வரிசையா வானத்தெத் தொடச்சுகிட்டு நிக்கிதே, அதோ அந்த மூலையில இருக்க பாழடஞ்ச கட்டடம்தான் அந்த வான ஆராய்ச்சி சாலை. அதுக்கப்பால காவிரி. சின்னப்பாயி மங்களம், அதுலதான் குதுச்சி மடுவுல வந்து சொழண்டு கெடங்குல முழுகி செத்துச்சு. அதெல்லாம் நடந்து எழுபது எம்பது வருஷமாச்சாம். கரமுண்டாரு வூட்டுக்கு வாரிசு இல்லாமப் போனதுக்குக் காரணமே, மங்களப்பாயிதான். அதான் சின்னப்பாயி.

மங்களம் ரொம்ப அழகு. மாராப்பு மட்டும் போட்ட அந்தக் காலம். காதலு வைர ஓலை. மூக்குப் புல்லாக்கு. மார்ல வங்கித் தட்டு, முழங்கையில வங்கிச் சொருவு, கையில கெட்டிக் காப்பு, கழுத்துல பதைக்யம், இடுப்புல கெட்டி ஒட்டியாணம், தொடையில வங்கி வீரம்ன்னு ஏராளமா நகையும் தானுமா இருப்பாளாம்... தொரச்சியப்பாயி ஓலம் போட்டு ஒப்பாரி வெக்யும். இப்பயும்கூட ஓலம் பாடும்.

ரகுநாதக் கரமுண்டாருக்கு கடைசியா கொண்டு வந்த பொண்ணு அவ. அந்தக் காலத்துல கள்ள வூடுவள்ள பெரிய தலக்கட்டு மதாரம் ஆதிரயாரு வூடு. ஏராளமா சொத்து பத்தோட வந்த பொண்ணு மங்களம்பா. ஆதிரயாரு வூட்டுப் பொண்ணு. சந்தனம்பாளும் தொரச்சியம்பாளும் மங்களம்பாளெப் பாத்து அசந்து நின்னுடுச்சுவ. கண்ணெ எடுக்க முடியலீயே பின்னெ?

அஞ்சடி ஓயரம், பூசுனாப்புல அற்புதம் மங்களம்பா. ஜாக்கட் இல்லாது முதுகு. 'ஆசர்வேசரி' கட்டிடத்துக்குள்ள வெள்ளக்காரனுவ இருந்து என்னென்னமோ ஆராய்ச்சியெல்லாம் பண்ணுனானுவளாம் அப்ப. ஆறு சுத்தி சுத்தி ஓடியும் அண்டாரங்காடு கரையவேயில்லை. மேட்டு பூமி. அது நல்ல சதுப்பு நெலம். அஞ்ச வந்து வான ஆராய்ச்சி பண்ண என்னமோ எடங் கேட்டு வாங்கி அஞ்சதான் கட்டடம் ஓசத்தி கட்டுனானுவளாம்... எப்பவும் ஒரு ஆளு அஞ்ச இருந்து ஆராய்வானுவளாம்.

பாம்புப் புத்துல பாலூத்த தொரச்சியம்பா, சந்தானம்பா, மங்களம்பா மூணு பேரும் வேண்டிக்கிட்டுதுவ. அது மாறியே அண்டாரங்காடு நாவ மரத்தடியிலியும் பாம்புப் புத்துலியும் பாலூத்துச்சுவளாம்... வாரா வாரம்.

மரங்கள் அற்புதமான சித்திரம்போல இருக்க, காவிரி புரண்டு அசைய... 'ஹோ'ன்னு காத்து நெட்டிலிங்க மர தலைப்புகளை அசைக்க... க்ளிக்குன்னு ஒரு சத்தம்.

பெரிய பாம்புப் புத்துப் படைக்கிப் பின்னாலிருந்து கழுத்தில் காமிராவோட வெளிய வந்தார் ஆசர்வேரி வெஸ்லிதுரை. துரைக்கு மங்களம் பெரிய ஆச்சரியம். படம் எடுத்துட்டாரு கைக்காமிராவுல. யாருக்கும் தெரியாது இன்னதுன்னு.

மூணு பொண்ணுவ, ஆ ! மூணு பேரும் ரொம்ப ஆச்சரியமான இன்பம். 'வண்டர்... ஃபுள்.' என்றான் துரை வெஸ்லி. அவன் வான ஆராய்ச்சியாளன். இங்கும். துரைக்கு சாப்பாடுகூட கரமுண்டார் வூட்ல இருந்துதான் போகும். எல்லாம் கரமுண்டாருதான். துரை அண்டாரங்காட்டு 'ஆசர்வேரி'யிலியே ( ஆப்ஸர்வேட்டரி) தங்கியிருந்தான். எப்போதாவது ஊருக்குள்ளே வருவான். துரைக்கு மாம்பழம் ரொம்பப் பிடிக்கும்... வெள்றிப் பழமும் ரொம்ப இஷ்டம். ஆத்துல நீச்சலடிக்கிறதும் காட்டுக்குள்ற சுத்தி வேட்டையாடுறதும் வெஸ்லி துரைக்கு ரொம்ப இஷ்டம். மங்களத்தையும் இஷ்டம். க்ளிக் கிளிக்குன்னு கைக்காமிரா வெச்சிகிட்டு எல்லாத்தையும் படம் பிடிச்சிகிட்டுத் திரிவான். ஒரு நாளு வான ஆராய்ச்சியெப் பாக்க கரமுண்டாரு வூட்டு பொண்டுவ புள்ளைவ எல்லாம் போனுதுவ. பெரிய பெரிய கொழாயில கண்ணாடி வெச்சு எல்லா நட்சத்திரம் வானம் நெலா எல்லாத்தையும் வெஸ்லி துரை எல்லாருக்கும் காட்டுனான். பெரிய பங்களாதான், எல்லாருஞ் சுத்தி வந்தாங்க. போன கூட்டத்துல ரகுநாதக் கரமுண்டாரு மாத்திரம் இல்லியாம். பங்களாவுக்கு வெளிய சுத்து மதில் ரொம்ப விசித்ரமா கட்டியிருந்தான் தொரை. ஒரு தனி மனுஷனா அஞ்ச எப்டியிருந்தான் தொரை? நெறைய கோழி, ஆடு, மாடு எல்லாம் வளத்தான். 'ஆசர்வேரி' பங்களா கீழ சரிவுல காவேரி ஓடுது. அதுல குளிக்கிறதுக்கு ஆத்துக்குள்ளயிருந்து பங்களாக்குள்ள வர்ற மாதிரி ஒரு நீளமான ஸ்நானக் கட்டம், நீச்சல் தொட்டி ஒண்ணு கட்டியிருந்தான். ரொம்ப ஆச்சரியமான தொட்டி. மேல ஆத்துத் தண்ணி வழிஞ்சு நாலு பக்கமும் அருவி மாதிரி கொட்டிக்கிட்டேயிருக்கம். ஒரு பக்கமா தொட்டியிலயிருந்து தண்ணி அடுத்த பக்கம் காவேரியில வடிஞ்சு ஓடிப்போயிகிட்டே தொட்டி நெரம்பிகிட்டே பொங்கும். கரமுண்டாரு வூட்டு பொண்டுவ எல்லாம் ஆச்சரியமா பாத்துகிட்டு நின்னாளுவளாம். மாராப்பு மட்டும் கட்டுன பொண்டுவ. வெளிய தெருவ போனாலும் யாரும் புதுசா உத்துகிட்டுப் பாக்கமாட்டாவ. வெஸ்லி கொழந்தை மாதிரி, ஆனா அழகான விஷயங்கள் எல்லாம் அவன் விடமாட்டான். வெஸ்லியோட தனி அறை ஒண்ணுதான் பாக்கி. ஆசர்வேரியெ எல்லாம் பாத்தாச்சு. எல்லாரும் பொண்டுவ எல்லாம் போயி அவனோட தனி ரூம்பையும் பாத்தாங்க.

மூச்சு விடலெ. யாருக்கும் ஒண்ணுமே பண்ண முடியலெ. மாடி மூலையிலெ காவிரிக்கி மேல அந்த ரூம்பு. அறைக்குள்ள நல்ல காத்து. குளுகுளுன்னு, நாலா பக்கமும் காவிரிதான் தெரியிது. காலை நேரம் நல்ல வெளிச்சம். செவுத்துல நெறைய போட்டா படம். அறை மூலையில போட்டோ படம் கழுவுற தொட்டி பீங்கான் தட்டுவ, மருந்துக்குப்பி, சீசா எல்லாம். ஒரு மூலைல மேசை. ஏராளமா காயிதம், பொஸ்தவம், அதோட மேசை மேல பெரிசா ஒரு படம். தந்தத்துல சட்டங் கட்டுன ஒரு போட்டா அது. யாரு படம்? அஞ்ச ஏது? மங்களம்பா படம் அது. நெத்திச் சுட்டியும், வைரக்கம்மலும், காசிபட்டும், செவப்புக் கல்லு பதக்கமும், வைர அட்டிகையும், அரசலயும், காதுப் பூவும் திருகும், மூக்குப் புல்லாக்கும், வைர எட்டுக்கல் மூக்குத்தியும், கல்லு எழச்ச ஒட்டியாணமும் அடேயப்பா! எல்லாரும் போட்டாப் படத்தெ மொமொதன்னுட்டு அப்பத்தாம் பாக்குறாவ்வோ. அப்பத்தான் சுருசுருன்னு கரமுண்டானுவ ரத்தத்துல ஏதோ ஏறுது. மங்களம்பாளும் தன்னோட படத்தெ ஒலகத்துலியே மொத வாட்டியா தன்னையே இன்னொருத்தனுக்கு குடுத்துட்ட மாதிரி நெஞ்சுக்குள்ள வேக்காடு. எல்லாரும் திலும்பித் திலும்பி ஒருத்தர் ஒருத்தரையும் சுத்திச் சுத்திப் பாத்துக்கிட்டாங்க. என்ன செய்யணும்ன்னு யாருக்கும் புரியல்லெ. கோவிக்கிறதா? ஓடுறதா? கத்துறதா? ஒண்ணுமே புரியல்லெ. எப்ப புடிச்சாம் படத்தெ? எப்ப நிக்க வெச்சு இப்டி படமா எடுத்துப்புட்டான்? அடப் பாவீ. எப்புடி இது. எல்லாரு தலைக்குள்ளியும் ஒரு கெழட்டிகிட்டு என்னமோ போல வருது. பொண்ணுவ மூக்கு மேல வெரல வெச்சதுவ எடுக்கவேயில்லெ.

படத்தெப் பாத்த மங்களம்பாளுக்கு நாண்டுகிட்டு சாகலாம் போல வருது. யாரும் அந்த அறையெ வுட்டு போவவேயில்ல. போட்டாப் படம்ன்னு இதுல்ல. ஆ! எல்லாருக்கும் மங்களம்பாள தெரியிது. மானம் போச்சு. தொரை எஞ்ச வந்து என்னா காரியம் பண்ணிட்டான்? தெரியாமலா மங்களம்பா எல்லாரையும் 'ஆசர்வேரி' பாக்க கூட்டியாந்தா? அப்பப்பா! என்னா 'அளகு' தேவ்டியா 'மாருதி' என்னா ரப்பு? என்னா கெப்புறு? ஒடம்பு கரமுண்டாரு வூட்டு பாலும் மோரும் நெய்யும் பண்ற வேல? வேற எவளாவுது இப்டி நிண்ணு குடுத்து எடுத்துக்கடா போட்டான்னு காட்டியிருப்பாளுவளா? ஒடம்புத் துணி போறது தெரியாம அப்டியே நின்னுருக்கான்னா... தொர லேசுபட்டவன் இல்லியே. நம்ப வூரு ஜகாங்கீர் மாம்பழந்தான் திம்பான். மங்களம்பா வூட்டு கறிகாதானே அவன் ஒடம்புலியும். அடப்பாவிப் பயலே, ரகுநாத

கரமுண்டாருக்குத் தெரிஞ்சா? மங்களம்பா கண்ணு செவந்து உட்டு எரியிது. போச்சி. எல்லாம் போச்சு. ஹா...

அதே நேரத்துல மாடி ரூம்புக்கு வெஸ்லி தொரெ வர்றான். "வாட் ஹெப்பண்ட்? எ... எல்லாம் இப்டிப் பாக்குறிங்கோ?" கூட்டம் எகிறிப் பாஞ்சுது. ஒண்ணும் புரியல்லெ தொரைக்கி. பொண்டுவ திமுதிமுன்னு படி எறங்கி ஓடுதுவ. ஆம்பளைவ தொரையெ இடிச்சுத் தள்றாங்க. மூலையில போயி உளுவுறான் வெஸ்லி தொரை. அவ்வளவுதான் எல்லாக் கரமுண்டானும் கீழ எறங்கி ஓடுறானாம். ஒரு பய நிண்ணு இன்னது இப்புடின்னு கேக்கல்லியாம். யாரும் மங்களம்பாளெ நெனைக்கவேயில்லியே? கரமுண்டாரு வூட்டெ வுட்டா மங்களம்பாளுக்கு என்ன தெரியும்? நல்ல குண்டு குண்டுன்னு பட்டும் பவுசுமாயிருப்பா. அப்ப. முளுவாமகூட இருக்காளாம். உள்ளுக்குள்ள ரெண்டு உசுரு. மேசையில அந்த இன்னொரு மங்களம்பாளப் பாக்கப் பாக்க அவ வயிறு எரியுது. இனிமே ரகுநாத கரமுண்டாரப் பாக்கப் போறாளா? கண்ணு வழியா தண்ணி ரெண்டு வரியா கொட்டுது. ஆத்திரத்துல மொகம் வீங்கிட்டாப்ல பெருசாயிடுச்சி. வெக்கத்துல உடம்பு பூரா நடுங்குது. ரத்தமேயில்லாமெ மூஞ்சி எல்லாம் வெளுத்துப் போயி, பாக்கவே முடியாம கண்ணு மேல செருகிகிச்சாம்.

அப்பத்தான் வெஸ்லி தொரைக்கும் என்ன நடந்துடுச்சின்னு தெரியுது. "ப்ளீஸ். ப்ளீஸ். டோண்ட் திங்க் அதர்வைஸ்... யூ ஆர் ஸோ ப்யூட்டிஃபுல்." மாடி கம்பியில்லாத ஜன்னல் வழியா வானத்தை நோக்கி நீண்டு கிடக்கற பூதக்கண்ணாடி மாட்டுன குழாய் தெரியுது. தூரத்துலியே ஓடுற அஞ்சினி ஜனம் தெரியுது. பொம்பளைவகூட ஓடுறாங்க. அப்டி என்ன ஆச்சு? என்ன பண்ணுவாங்க தெரியல்லெ. வெறி புடிச்சுத்தான் ஓடுதுவ எல்லாம்.

"மங்களம்பா. நீங்க ரொம்ப அலகாயிருக்கீங்க, ஏன் அழுவுறிங்க. ஓய் க்ரையிங்? வெரி ப்ரெட்டி பட், ஏன் இவங்க எல்லாம் ஓடுறாங்க இப்டி? என்ன நடக்குது? வாட்டிஸ் கோயிங் ஆன்?" துல்யமாய உயரமாய் இருந்த அவளையே... சிலை மாதிரி பாரத்துக்கொண்டு கதறும் அவளையெ பார்த்துக் கொண்டு நின்றான் வெஸ்லி.

உயரமான அவன் அவளையே பார்த்து நின்றான். எத்தனை பெரிய பெரிய மார்புகள் இந்தப் பெண்ணுக்கு? என்ன அற்புதமான உடல். பெரிய ரத்தம் பேசும் கண்கள். ஏன் அழ வேண்டும்? இந்த துடைகளும், கால்களும் இந்த தாமிர நிற உடம்பும்... ஆ!

ஒளிக்க முடியாத பேரழகு. அவள் அதிக உயரமில்லை. குள்ளமும் இல்லை. அவன் பார்த்த பெண்களுக்கு இந்த இந்திய திராவிடக் கட்டுமானம் இல்லை. இது தூய்மையானது. கலப்பிருந்தாலும் தனித்தன்மையானது. ஆனாலும் மிருகம்போல இவள் இப்படி கதவருகில் நின்று அவனை இப்படி முறைத்து அழுது கொப்பளித்த முரண்டுவது...

வெஸ்லி நிறைய படித்தவன்தான். வானத்தைத் துருவ வந்தவன்தான்... அந்த ஜனங்களுக்குக்கூட பிடித்தவன்தான். அவன் தனியானவனுமில்லை. அவனுக்கு மனைவி, குழந்தை எல்லாமே வானம்தான். வேற ஒரு சூதும் கணக்கும் புரியாதவன். கரமுண்டாருகூட சொல்லுவாரே, கொழந்தை மாதிரி. ப்பய. பாத்துடா எல்லாம் பாத்து பங்கு பணிக்கையா செய்யுங்கடான்னு சொல்லிக்கிட்டேயிருப்பாரே, ஆ!

மெல்ல சாரல் ஆரம்பிச்சது, மழை.

ஜன்னல் ஒண்ணுக்கும் கதவில்லாம மாடம் மாடமா கட்டியிருக்கு. வெளிய வெளிச்சம் மங்குது. சாரல் கனமா வுழுவுது. ஆனா பெரிய மழையில்லை. வெஸ்லிக்கு என்ன ஆச்சு? அவன் ஏதோ மோசம் போயாச்சுன்னு புரியுது. என்ன அது? அதுதான் புரியல்லியே அவனுக்கும். ஆபத்து பின்னாலெ வருது ஆ!

மங்களம் இத்தனை அழகாயிருக்கக் கூடாது. அது மட்டும் அவனுக்கும் தெரியுது. ஆனா அவ ஏன் ஓடல்லெ? அவ ஏன் எதுவும் பண்ணாம இங்கியே நிக்கிறா?

"ஒய் யுவார் ஸ்டான்டிங் ஹியர்? ஏம்மா இப்டி நிக்கிறிங்க? அவங்களோட போகலெ?" 'ஹோ'ன்னு காத்தும் சாரலும் வலுத்துகிச்சி. வானம் முட்டுற மாதிரி வளந்த ஆலமரம் ஒண்ணு அப்புடியே பேத்துகிட்டு போய்டுமோங்கற மாதிரி காத்து பேயா ஆட்டுது. சாரல் ஊன்னு சத்தம் போட்டு ஊளையிடுது... மரங்கள் உலையிது. பேயா ஆடுது.

காவிரி படுகையெல்லாம் பஞ்சு மாதிரி பனிப்புகை படருது மாதிரி மழை முடி போட்டுடுச்சி. கொழுவ கொழுவ காவிரித் தண்ணி எகுறுது. அண்டாரங்காட்டு உள்ள இருட்டுப் பரவுது. சாட்டை சாட்டையா மூங்கில் மரமெல்லாம் காவேரிக் கரை ஓரமா தண்ணியில சொழட்டியடிக்கிது. பாம்பு பாம்பா பெரம்புச் செடியெல்லாம் சுருண்டு நெளிஞ்சு மழையில இருண்டு போவுது. நெட்டிலிங்க மரமெல்லாம் வானத்தெக் கிழிச்சு கோடு போடுது. மின்னல் மின்னலா சட்டார் சட்டார்ன்னு வெளிச்சம் போடுது.

மடேர்ன்னு ஒரு இடி எஞ்சியோ விழுந்த மாதிரி அண்டாரங்காடு முழுசும் பெரிய வெளிச்சமா வானத்துல வெளக்கு போட்ட மாதிரி, வெளிச்சம் அறுந்து அழிஞ்சி நேர எறங்குனுது.

அதுக்கப்புறம் என்ன நடந்தது? தொரச்சியப்பாயி சொல்லாது. கண்ணால தண்ணி உட்டு ஒப்பாரிதான் வெக்யும். ஊரு ஜனமும் இந்தக் கதையெல்லாம் மறந்து எழுவத்தஞ்சு வருஷமாச்சு. யாரும் இப்ப மங்களம்பா பேச்சே எடுக்கறதில்லெ. அப்பாயியும் பேசாது. சந்தனப்பாயிதான் ரகசியமா காத்தாயம்பாகிட்ட சொல்லும்: "அதெல்லாம் கேக்காத ஆயி. மானம் போய்டும்." மங்களம்பா அத்தோட போனவதான் பொணமாத்தான் கொண்டாந்தாங்களாம். பள்ளனுவதான் ஓடிப் போய்ப்பாத்தானுவ. வெஸ்லி கட்டுன நீச்சல் கொளத்துல கெடந்தாளாம் மங்களம்பா, மழை வேற. அண்டாரங்காட்டக்குள்ள சதுப்பு பூமியில யாரும் போயிப் பாக்கல.

ரகுநாத கரமுண்டாரு போயித்தான் ஆத்துல தூக்கி எறிஞ்சாராம் மங்களம்பா பொணத்தெ. பள்ளனுவளும் பறையனுவளும் ஆத்தோட போயி நீஞ்சி பொணத்தெ கொண்ணாந்து போட்டும்... கரமுண்டமாரு வூட்ல யாரும் வல்லெ. வூட்டுக்குள்ள ஓலம் போட்டுகிட்டேயிருந்தது. ஒப்பாரி எட்டு ஊருக்குக் கேக்குதாம். ரகுநாத கரமுண்டமாரு சொல்லிப்புட்டரு, இல்ல அலறி கத்துனாரு:

"யாரும் போகக் கூடாது. இழுத்து எறிங்க அவளெ"ன்னுட்டு... மங்களம்பாளத் தேடிகிட்டுப் போன செம்பாட்டம் பள்ளனுவ ஆத்தையே அலசுனானுவ. காவேரி மடுவுல கொண்டுபோயி வெஸ்லி தெரையெ வெட்டிப் போட்டானுவளாம். நாலு நாளைக்கப்பறமா கல்லணையில துண்டம் துண்டமா உப்பி மெதந்துதாம். வெஸ்லியோட பொணம்தான்னுகூட கண்டு பிடிக்க முடியாமெ வெறா மீனு புடுங்கி எடுத்திருந்துதாம். குத்து குத்தா சதை தொங்க கண்டந்துண்டமா வெஸ்லி நொரையா மெதந்து போனானாம்...

ஆரறையடி ஒயரம் இருப்பாரு ரகுநாதக் கரமுண்டாரு. கருங்கல்ல செதுக்கி எடுத்த துவாரபாலகர் மாதிரி நெத்தி நாமத்தோட சேவைக்கி நிக்கிற மல்லன் மாதிரி இருப்பாரு. காது வரைக்கும் மீசை. ஆறு அத்த மவளுவளையும் கெட்டிகிட்டவரு ரகுநாதக் கரமுண்டாரு. மங்களத்தெக் கட்டும்போது, அவருக்கு அம்பது வயசு... பூனைக்குட்டி மாதிரி அவரோடியே நிப்பா

மங்களம்பா. இஞ்சேருக்க செருப்பை எடுத்துப் போட, குடையெ விரிச்சுக் குடுத்து வாசக் கட்டு வரை போயி வழியனுப்ப. அங்கவஸ்திரம் மறந்து போய்டுமாம். ஓடிப்போயி கொண்டாருவா. இதான் மங்களம் செய்வாளாம் வேலன்னு. மத்த நாலு தாரம் இருந்தாவளே எதுக்கு? வூடு பூராவும் இப்ப மாதிரியே எப்பவும் வெண்ணையும் நெய்யும் மணக்குமாம். எப்போதும் பாசுரம் பாடுறதுக்கு ஆளு! பெருமாள் சேவையில்லாம ஒரு நாளும் திருநாளா இருக்காதாம். என்னைக்குமே பெருமாள எண்ணித்தான் வூட்ல சாப்பாடே. அம்பது ஆளு அதுக்கு.

குளிக்கப் போனா தேச்சுவிட மங்களம்பா பின்னாலியே நிப்பா. நாமப் பொட்டியோட உக்காந்து நாமம் இட்டுக்கும்போது அது இதுன்னு எடுத்துக் குடுக்கவும் மங்களம்பாதான் வேணும். அது ஒரு சிங்காரம். ராத்திரி பதினோரு மணிக்கு மேலதான் படுக்கப் போவாரு ரகுநாத கரமுண்டாரு. அப்பதான் பாவமாயிருக்கும் கரமுண்டாருக்கு. இந்த சிருங்காரம். இவளெக் கட்டியிருக்க வாண்டாமேன்னு பாவமாயிருக்கும். மங்களம்பா கொழந்தை மாதிரி கிடப்பா. தூக்கிக்குவாரு கரமுண்டாரு.

ரகுநாத கரமுண்டாரு ஒண்ணு ஒண்ணா சொல்லித் தரணும். மங்களம்பா பாவம். மங்களம் அவரெ உட்டு எழுந்திரிச்சு வெளிய வர வெள்ளி முளச்சுடுமாம்... ரகுநாத கரமுண்டாரு அத்தினியும் அள்ளி எடுத்திருப்பாராம். சந்தனாப்பாயிதான் சொல்லும். "அவுங்கல்லாம் மனுஷுங்களே இல்லெடி காத்தாயி. அதெல்லம் 'இப்ப' புரியவே புரியாது. தெய்வம்ன்னா யாரு? அதுவதான். ஆனா மனுஷாளுதான். தெய்வம் தெய்வம்ன்னு சாமியாடுறது ஒண்ணுமில்லடி. சுத்தந்தான் சாமி. மனுஷன் சுத்தமா, மனுஷி சுத்தமாயிருந்தா சாமிதான் அதுவ. மங்களம்பா மானஸ்த்தி. போய்ட்டா. அவ்வளவுதான்."

"அப்ப மங்களப்பாயி வவுத்துப் புள்ளெ?"

"அதான்டி காத்தாயி இன்னும் பொறக்கல்லெ. அதுக்கப்புறம் வாரிசு நமக்கு? எல்லாம் பொண்டு ராஜ்யமாப் போச்சுடி. வெளிய போன கரமுண்டானுவ வர்றதில்லெ. உள்ள வந்தா வெளிய போறதில்லெ"

"புரியலப்பாயி"

"என்னத்துக்குடி புரியணும்? வெளிய போன மங்களத்தெ பொணமாக்கூட கரமுண்டாரு வூட்டுக்குள்ள திலும்பியும் கொண்டுவல்லடி இவனுவ. கர்ப்பிணியா, வவுத்தப் புள்ளக்காரியா

போனவளெ சந்தேகப்பட்டானுவளே, அன்னையோட வாரிசத்துப் போனுதுடி நம்ப வூடு"

"என்னா தப்பு பண்ணுச்சி மங்களப்பாயி?" பதைபதைப்போடு கேட்டா காத்தாயம்பா.

"வெக்கங் கெட்டுப் போய்த்தானெ நாண்டுகிட்டா?"

"அப்ப? வீணாப் போய்டுச்சாப்பாயி?"

"ஆரு சொன்னா? வீணாப் போனான்னுட்டு? அதெல்லாம் ஒண்ணுமில்லெடி. ஆனா வீணாப் போயிட்டாத்தான் சாவணும்ன்னு இல்லடீ. மங்களம்பா தெய்வம், சாமி. ஒரு பொண்ணு... தப்பு பண்ணணும்ன்னு இல்லடி, மனசுல அப்டி நெனைச்சாலே, அப்டி எல்லாரும் நெனைச்சாலே, போச்சு. ஆமா. தப்பு பண்ணனுமா என்ன? மங்களம்பா மனசு பூரா கரமுண்டாருதான். அப்ப அவளுக்கு வயசு கூட பதுனாறுதான், சின்னப் பொண்ணு பாவம். ஆனா, இப்பமும் நம்ப கரமுண்டாரு வூட்டே தாங்கிட்டு நிக்கிறா. கொறையாப் போய்ட்டான்னு பூஜை கூட வெக்கிறதில்லெ. பேச்சாப் போச்சு ஊர்லன்னு பொணத்தெக் கூட எரிக்கல. மானம். மானம் அதுக்காவ தெவசங்கூட குடுக்கறதில்லடி. பாவி மவ இன்னைக்கும் நிக்கிறா. ஆனா, மங்களம்பாதான் இந்த வூட்டெ இத்தனைக்கு பின்னாலியும் தாங்கி நிக்கிறா. நம்ம நெலமெல்லாம் போச்சு. கூத்தாடி அழிக்கல்லெ கரமுண்டானுவ, கூத்தியா வூட்டுக்கு கொட்டி அழிக்யல்லெடி. ஊருக்கு அழிச்சானுவடி, ஊரு மெச்ச அழிச்சானுவ. பெருமைக்குப் போச்சு அத்தினியும். பெருமாளுக்கு கொட்டிக் குடுத்தானுவ. பாப்பாரப் பயலுவளுக்கு எறச்சானுவடி. எல்லாம் இந்தக் கொலம் வெளங்க ஒரு வாரிசு வேணுமேன்னு. அவுத்து காசா ஒதறுனானுவளே, பத்தாயக் கட்டுக்குள்ள தனியா கெடக்கா காத்தாயம்பா. அது என்ன கரமுண்டானுவ மட்டும் தொறமில்ல? எப்பமும் அடங்குன சரக்கா? இஞ்ச பொண்ணுவதான் ஆண்டு தாமே? ஆமா. எஞ்சியுமே பொண்டுவதான் ஆளுது. ஆள முடியும். மேடையில ஒக்காந்து கரமுண்டானுவ என்ன பண்ணானுவ. பத்தாயக் கட்டு முழுசும் காலியாக் கெடக்கு. தெலகராஜு வந்து எல்லாத்தையும் சரி பண்ணலாம், பண்ணமுடியும். அபாரமா படிப்பான். உள்ளூர்லயே இஞ்ச இருந்தாப் போதும், இருப்பானா?

காத்தாயம்பாளுக்கு அவன் வாசனை ரொம்ப புடிக்கும். மொதல் ஆம்பளை? கமரிகிட்டு ஒரு வேர்வையில ஒரு ஆம்பளை வாசனை. உடல் சிலுத்துக்கும்...

மனசு அவனுக்காகவே சவத்துக் கெடக்கு. அவளோட மாசம் எல்லாம் அவன் மட்டுமே முணுமுணு என்று தனியே உஷ்ணமாய் அவளுக்குள்ளே குடைவான். மாதத்தில் ஆறேழு நாள் கடும் வலி அக்கினியாய் இரண்டு துடைகளிடையே வழியும் போது அவனைத் துடைத்தெறிய முடியாமல் தவிப்பாள் காத்தாயம்பா.

அவன் இப்போது நினைத்தால் எட்டக் கூடிய தூரம் வந்தும், நெருங்கி வந்து, அவளை எட்டிப்பிடித்தும்கூட, காத்தாயம்பாளுக்கு எட்ட முடியவில்லை. எட்டி எட்டித்தான் ஓடுகிறான் இதுதான் உசிதம். ஆனாலும் அவன் பாவம். அவளுக்கு புரியல்லெ. அவளுக்கு தெலகராஜு வேணுமா?... ஆ, இதென்ன வாண்டாமா? யோசிச்சுப் பாத்தா தெலகராஜு கட்டிக்கிறதெ விட வேற எதுக்காவவோ காத்துகிட்டு இருக்காப்லல்ல இருக்கு இதெல்லாம்... ஆமா.

இந்தப் பத்தாயக் கட்டு... பெரிசு பெரிசா அட்டை வெச்சு ஒட்டுன இந்த மூணு மாடி கட்டடம். திண்ணையிலேயே ராஜ்யம் பண்ணிகிட்டு வூட்டுவுள்ளயே எட்டிப் பாக்காம திண்ணையிலேயே படுத்துகிட்டும் ஏந்திரிச்சு உக்காந்துகிட்டும் தூங்கிக்கிட்டும் இருக்க அப்பாரு, பெரிய கரமுண்டாரு. சித்தப்பா பெரிசு, நடு, சின்ன சித்தப்பா இதெல்லாம் உட்டுட்டு தெலகராஜோட தஞ்சாவூர் போயி இருக்க முடியுமா, என்ன? சின்னப்பாயி மங்களம்பா குடியிருக்க இந்த வூட்டெ வுட்டுட்டு போவ முடியுமா?

அப்ப அவளுக்கு அவன் வாண்டாமா?

ஒரு மாசமாய் அவளையே தூரத்திலும் பக்கத்திலுமாய் பார்த்துக் கொண்டேயிருக்கும் தெலகராஜுக்கும் விட்டுப் போக முடியுமா?

தெலகராஜு மாதிரி ஓர்த்தன் இனிமே உண்டுமா? தெலகராஜு வெளிய இல்லெ, அவ ஒடம்புலியே இருக்கான்னு தோணுதே, அது எப்புடியாம்? தெலகராஜும் கள்ளப் பயலுவ மாதிரி... கரமுண்டானுவ மாதிரி இல்லாமெ ரப்பு ராங்கியா இருக்குறதும்... அவளெப்பத்தி கவலையே படாம மாஞ்சியே தேடிப் புடிச்சதும் ஆச்சரியமான சந்தோஷம்தான்.

மாஞ்சி என்னெப் போல இல்லெ. ஒடனே குடுத்துட்டா. தெலகராஜு என்னன்ன பண்ணியிருக்கான் அவளெ? செல்லியும் செவத்தையும் சொன்னாளுவளே? பட்டப்பகல்ல நடுச்சித்தப்பா வெசத்தெய இளுத்துகிட்டு பள்ளக் குடிக்கே போயி... மாஞ்சிப் பொண்ணெ புடிச்ச... குடுத்துருக்கே...

அவதான் என்ன பண்ணுவா? அந்தப் பக்கம் பள்ளனுவ/ இந்தப் பக்கம் கரமுண்டானுவ. பத்து பட்டியும் தேடுது அவளெ.

கரமுண்டாரு உட்டு பொண்ணுவளால இது முடியுமா? அவளுவோ எத்தினியோ தேவலை, ஆசை ஆசையா அள்ளிக்குடுத்துற முடியுதே... தொரச்சியப்பாயிதாஞ் சொல்லுதே, “வெளிய மேய உட்றாதடி கண்ணு. பள்ளத்திவ நம்ம பள்ளனுவ. எல்லாம் நம்ம எல்லைக்குள்ற. வெளிய உட்றாத”ன்னு.....

நேத்து விறால் மீன் கொழம்பு வெச்சு பொரிச்சு வெச்சிருந்துது. என்னமா ருசிச்சு சாப்புட்டான் தெலகராஜு? நீள நீளமான விரலால மீன் முள்ளை நீக்கி நீக்கி அவன் ரசிச்சு சாப்பிட்டது பெரிசில்லெ. கிட்ட வந்து யாருமில்லாத நேரம் பாத்து 'நீதானே பொரிச்செ? கொழம்பு வெச்சே?'ன்னு கேட்டுட்டு கீழ குனிஞ்சு... அப்பத்தான் ஏன் அந்தப் புத்தி வந்துது? அவளுக்கே தெரியலையே...

அவன் முகம்தான் எத்தனை சிவந்திருந்தது. பரபரத்து அவளை நெருங்கும் அந்த வேளை, பளிச்சென்று விலகி வழிந்து... ஒதுங்கி விட்டாள் காத்தாயம்பா. சாகசம்தான். மங்களப்பாயி என்ன பண்ணியிருக்கும்? கடைசியா என்ன நெனைச்சிருக்குமாம்? ஒரு போட்டாப் படத்துக்கு ஒரு தலைமுறையே பலி. வெள்ளக்காரப் பயலும் சும்மா வுட்டிருப்பானான்னு தானே எல்லாம் இன்னைக்கும் கேக்குறானுவ. இல்லேன்னா ஒண்ணுமே ஆயிருக்காதா? நடப்பாயி சந்தானம் சொல்ற மாதிரி கரமுண்டாத்தியுவளுக்கு இந்த வூடுதான் பெரிசா? அப்புடிப் பாத்தா அப்பாயிவ ஒண்ணும் கரமுண்டாத்தியவ இல்லெ. கள்ளக்குடிவள்ள இருந்து கருண்டாங்குடிக்கு வந்ததுவ தானே? கரமுண்டாரு வூட்டுக்குள்ள வந்தாவே 'அதுவ' மாறி 'இது'வளாயிடும்ன்னு தொரச்சியப்பாயி சொல்லுதோ? ஆமா. உயிரோட இருக்கணும்ன்னா கரமுண்டாத்தியாத்தான் இருக்கணும்... இதுவ எல்லாம் அப்புடி வந்த பொண்டுவதானே. இந்தக் கரமுண்டாரு வூடு இல்லைன்னா நாம ஏது... உண்டா?

ஆம்பளைன்னா என்னா? அவுத்துப் போட்ட எடத்துல அவள் எவன்னா என்ன? படுத்துப் பொரண்டுட்டு போய்டுவானுவ. பொம்பளைன்னா இருக்க எடமும் சேந்துதான். உள்ள குடி முழுசும்ல்ல அழிஞ்சு பெய்டும்? கரமுண்டாரு வூடு வுளுவுமா? முளுவுமா?

தெலகராஜு நெலத்தெக் கேக்குறான்.

அதாவது காத்தாயம்பாவோட சேத்து கரமுண்டாரு குடியையே கேக்குறான் இல்லியா? வூடு வேற, பொண்ணு வேறயா? வூடுன்னா என்ன? அதானே எல்லாம். அப்பாரு... சித்தப்பனுவ... எல்லாம்... முடியதுன்னு சொல்லியாச்சு. கரமுண்டாரு வூட்டவுள்ளியே சூறைக் காத்து அடிக்க ஆரமிச்சாச்சு. பேய்ச்சூறை. தெலகராஜு

காத்தாயம்பாளெ 'செற எடுத்துட்டுப் போவானா? ல்லெ... தனிய்யா போயிடுவானா? பத்தாயக் கட்டு விதானம்... அந்த அறை மேல் பகுதி பூராவும் ஜன்னல் ஜன்னலாயிருக்கு. இந்த அறையே ஒரு வூடு பெருசுக்கு ஆயிடும். ராஸமணிக் கரமுண்டாரு பேத்தி வழி புள்ளைவ வூட்டுக்கு சைடுல குதுரெ லாயத்துல குடுத்தனம் பண்ணுதுவ... குதுர லாயம்ன்னா அதுவும் ஒரு பெரிய கட்டடம்தான். தாத்தா காலத்துல கட்டுனது. ஹா... முப்பது குதுரெ நின்னு புல்லு தின்னதை சின்ன குட்டியா இருக்கும்போது பாத்திருக்காளே காத்தாயம்பா. பெரிய பெரிய தொட்டிவள்ள கொள்ளு வேவும். ஆவி பறக்க குதரைவ பய்யில கொள்ளெ போட்டு மூக்குல மாட்டிகிட்டு தலையே மேல போறாப்ல ஆட்டி ஆட்டி திங்கிறத்தெ நெறைய பாத்தவதான காத்தாயம்பாளும்? தெலகராஜு... அடப்பாவி.

தொரச்சியப்பாயி மட்டும் அன்னைக்கி ஒருநாள் வரல்லென்னா... என்னமோ தெரியலை... தெலகராஜுதான் தனக்குன்னு தெரியும். அவன் இல்லாதப்போ விபரீதமாகூட நெனைப்பெல்லாம் அவனாவே இருக்கும். ஒனக்குத்தான் ஒனக்குத்தான்னு அப்பாரு சொல்றாரு. ஆனா கல்யாணப் பேச்சே காணும். தெலகராஜு எப்ப எப்பன்னு காத்துகிட்டு பாயுது. ல்லென்னா மாஞ்சியெப் புடிச்சு இழுத்துப் போட்டுக்குமா? தனக்குத்தான் வயசு கொஞ்சமா? இருபதுக்கு மேல ஆவலெ? எத்தினி தடவெ மாமனும் எத்தினி தடவெ... பகல்லகூட உடாமெ மல்லுக்கட்டப் பாக்குது? பொட்டச் செறுக்கிக்கி எவ்வளவு நேரந்தாக்குப் புடிக்கும்? எசகேடா பாஞ்சிட்டுதுன்னா... எத்தனை மல்லுக் கட்டுக்குத் தாங்குவா? தெலகராஜு குளிக்கும்போது கூட பாச்சல்தான். யாரு இருந்தாலும் இல்லாட்டினாலும்தான். என்னா புடி. இரும்புப் புடிதான். பொட்ட செறுக்கியும் புத்தியெ வுட்டா அவ்வளவுதான். மானக் கேடு யாருக்கு? யாருக்கு கொறச்சல்? கரமுண்டாரு வூட்டுக்கில்லெ? பெரியப்பாயி தொரச்சி தாஞ் சொல்லும். "பொட்டக் கழுதக்கி வேணுண்டி எல்லாம். ல்லென்னாலும் மேஞ்சு தள்ளீடுவிங்கடி. நீங்க"ங்கும். எத்தினி தடவை ஒதைச்சு தள்ளாப்ல தள்ளியிருக்கா காத்தாயம்பா. தெலகராஜு கையில கெடச்சா, அவ்வளவுதான். தெரியும், அவளுக்கு. அவன் இல்லாதெப்போ நெஞ்சு பதைக்கிது.

களத்து மேட்டுக்கு நடுச் சித்தப்பா ராமுக் கரமுண்டாருகூட போயி, கெடக்குறதெ சாயங்கால வேளையில தெருக் குட்டியளோட ஆத்துக்குப் பெய்ட்டு வர்றப்போ, வயக்காட்ல எத்தினி தடவை காத்தாயம்பா பாத்திருக்கா?

சேண்டப்பிரியரு வூட்டுக் குட்டி செம்பவம் காதுல வந்து சொல்லுவ. "யேய் களத்து மேட்டு கயித்தக் கட்டுல்ல ஒம் மாமங் கெடக்குடி" கால் பெரு விரலிலிருந்து ஜிவ்வென்று என்னமோ சூடு பறந்து, காது மடல் சிவந்து, மூஞ்சி வெளுத்து, ஏறுமே என்னவாம் அதெல்லாம்? குட்டிவளோட வரப்புல நடக்கும்போது கீழயிருந்து மேல தேனீ குடையிற மாதிரி என்னமோ உள் நோக்கி குடஞ்சு ஈரமாவுமே என்ன அது'

களத்து மேட்டுக்கு வந்ததும் செம்பவம் அதோன்னு காட்டுவா. கயித்துக் கட்டுல்ல மாமங் கெடக்கும்.

சித்தப்பன் ராமுக் கரமுண்டாரு வயல்ல கார்வாரிகளோட சத்தம் போட்டுகிட்டு நிக்யும். வெச்ச கண்ணெ எடுக்காமே எப்டிப் பாக்குறா இந்தக் குட்டி செம்பவம்? உச்சி வெயில் ஏர்றப்ப நடுச் சித்தப்பாவம் தெலகராஜும் சாராயம் ஊத்திக்க ஆரம்பிச்சிருப்பாங்க. தெரியும். உச்சி வேளை வெய்யில் ஏறும்போது கிர்ர்ருன்னு ஏறுமாமே. மத்தியானமெல்லாம் களத்து மேட்டுல இல்லேன்னா ஆத்துப் படுகைல அண்டாரங்காட்டு எல்லை ஆலமரத்தடியில எஞ்சியாவுது பொரண்டு கெடக்குதுவ. நாயந்தானே? தெலகராஜு மணல்ல கெடக்கான். எவளாவுது வந்து சொல்லுவாளுவ. நாலு பள்ளனுவளோட செல்லியோட போயி அழச்சிட்டு வருவா காத்தாயம்பா.

கள்ளனுவ குடிக்கிறது பள்ளச்சிவள வெச்சுக்கிறது எல்லாம் புதுசு ஒண்ணுமில்லடி. ஆனா எல்லாம் தெலகராஜு முன்னாலியே தொடங்கிட்டானே. இவன வெச்சு எப்படி கட்டியடிக்கப் போற நீயி? கரமுண்டானுவ இதெல்லாம் மூடி மூடி வெச்சுக்குவானுவ. பயம் இருக்கும். கரமுண்டாருவூட்டு பொண்டுவ மெரட்டிகிட்டே 'மிர'ட்டியடிப்பாளுவ. இவனுவளும் இளுத்தடிச்சிகிட்டே பள்ளத்திவளையும் அமுக்கிப் போட்டுக்குவானுவ. வெளிய தெருவ தேடப் போகமாட்டானுவ. ஆதிரியாரு, சேண்டப்பிரியரு, மழவராயரு வூட்டுப் பசங்க திருவாரூருக்கும் தஞ்சாவூருக்கும் தேவிடியாகுடிக்கு தேடிகிட்டு போறப்ப, கரமுண்டானுவ வூட்டுக்கு வெளிய எவளையும் தேடிகிட்டு போறதில்ல. பள்ளக்குடிக்குகூட போறதெல்லாம் இப்ப கிட்டன்சுலதான். தெரியும், புதுசில்லெ. ஆனா தெலகராஜு வாயில இன்னும் பாலு ஒழுகுது. கெளம்பிட்டான். என்னான்னா... என்ன பண்ண? யாரு என்ன சொல்ல. ஒன்னெ கட்டிக் குடுத்தனுப்ப உங்கப்பனுக்கு மனசில்ல. என்ன பண்ணுவான்? என்னெ அனுப்பிட்டு என்ன பண்றது. அடப்பாவின்னு கேட்டா சின்னிய அனுப்பிட்டு என்ன

பண்றதுங்கிறான். அவம் மட்டுமில்லெடி சின்னவனும் மஹேஸ்வரிப் பொண்ணும்கூட அப்பறம் என்ன பண்ணன்னுதான் கேக்குறாங்க. நடுப்பயலும் பெரியவனுக்குங்கூட இதெ கவலெ இருக்குது. என்ன அதுக்குன்னு பதினேழு வயசுல பெருசான பொண்ணெ இன்னும்கூட வூட்டுக்குள்ளயே வெச்சுக்க முடியுமா? ஏன்டி? பொண்ணே? நீ இஞ்சியே இருந்துடலாம்ன்னு நெனைக்யிறே? தெரியுது. உங்கப்பன் உன்னை விட்றதா இல்லெ. ஏன்னு தெரியுமா? கரமுண்டாரு வூடு பிரிஞ்சிடும். ஆனா நீயி இஞ்சயே இருந்தா, இப்படியே இருக்க வேண்டியதுதான். எவளுக்காவுது ஒரு வயத்துல ஒரு பூச்சி, புழு வெக்யாதான்னு ஒருத்தி ஒருத்தியும் உங்கப்பங்கிட்ட பொறண்டுதான் ஏந்திரிக்கிறாளுவ. நடக்கல்லெ. வாரிசு வேணுமாம்ல்ல... மங்களம்பாள ஆத்துல இளுத்து வுட்டுட்டு பாத்துகிட்டு இருந்தானுவளே. கரமுண்டானுவ, சும்மா வுடுமா? ஒரு குத்தமும் பண்ணாத அவளப் போயி போட்டா புடிச்சானுவ. தண்ணீல மெதக்க உட்டானுவ. வயித்தப் புள்ள தாச்சியப் போயி பள்ளனுவளெ உட்டு பொதச்சு அநாதையா பொணமா எறிஞ்சானுவளே? கள்ள வெறி, கரமுண்டானுவளுக்கு. அதான் ஆத்துல வெள்ளம் வந்து வூட்டையே காவேரி இழுத்துகிட்டுப் போனுது. அப்பக்கூட கரமுண்டான் வூடு தக்கி நின்னதுக்கு மங்களம்பா மண்ணுக்குள்ள எதுர் கரையில இருந்தது தான்டி காரணம். அவதான் இன்னைக்கும் கரமுண்டான் கள்ளக்குடியெ தாங்கி நிக்கிறா, தெரியும்ல்ல?"

எட்டாங்கட்டு முத்தத்துல ஒக்காந்துகிட்டு தொரச்சியப்பாயி சொல்லுது. சுருங்கி நறுங்கிப் போனாலும் அது கண்ணுல உசிர், கொரல்ல ஒரு வேகம் இருக்கு. நெஞ்சில அசாத்ய தைரியம். வயசு நூறுக்கு மேல ஆச்சுன்னா யாரு நம்புவா? கண்ணால தண்ணி வுட்டுகிட்டே பொலம்புது. காத்தாயம்பா கேட்டுகிட்டே அது பக்கத்துல ஒக்காந்துகிட்டு இருக்கா. நடப்பாயி சந்தானம் எதுர்க்க தூணுல சாஞ்சு ஒக்காந்துகிட்டு சுருட்டு ஒண்ணெ கனிய வெச்சு பப்பப்பப்பன்னு பொகை வுட்டுகிட்டே கேட்டுகிட்டு இருக்கு. இருட்டு. அது பேச்சே எடுக்கல்லெ. அழுவுதா? தெரியல்லெ. அதுக்கும் வயசு தொண்ணூறுக்கும் மேலதான் இருக்கும். இதுவளெ வுட்டுப்புட்டு தெலகராஜூவோட தஞ்சாவூருக்குப் போறதுன்னா, லேசுல இல்லன்னு தோணுது. காத்தாயம்பாளுக்கு. தொண்டையெ வந்து அடைக்கிது.

"... என்னடி நாம் பேசிகிட்டேயிருக்கேன். பேசாம இருக்கெ நீய்யி? ஒக்காள... இனிமே ங்கொப்பன் ஒங்கல்யாணம் பேசமாட்டான்டி. நாகலக்ஷ்மியும் ராமுவும் இனிமே உடமாட்டாளுவ. இன்னமும்

தலையாணி மந்துரம் போடுறவளுவளாச்சே. திரிசிக்கி எது நடந்தாலும் ஒண்ணுதான். ஒப்பஞ்சொல்றதுக்கெல்லாம் தலையாட்டிட்டு நிப்பா. ஒரு வாரிசெ நோண்டி எடுக்கத்தான் அலையிறாளுவ. முடியுமா? திண்ணை ராஜாவுக்கு திண்ணெ போதும். ஆறடிக்கி இருபத்தஞ்சடில்ல இருக்கு? போதாது? நீயி புத்தியா பொளெ, ஆமா சொல்லீட்டன். இனிமேல இஞ்ச ஒக்காந்துகிட்டு இருந்தீன்னா, ஒன்னையும் இந்த வூட்டோடெ வெச்சு பூஜை பண்ணிப்புடுவானுவ. எம் புள்ளைவதான் இல்லங்கலெ. அதுனாலதாஞ் சொல்றன்டி ஏமாந்து பெய்டாதெ ஆம்மா."

"ஏப்பாயி, அப்பாரெ தப்பு சொல்றெ. கல்யாணம் பண்றதுக்குத்தானெ நாள பாத்தானுது அன்னைக்யி? ஓங்கிட்டகூட தகவல் சொன்னாங்களே?"

"தெலகராஜ வுட்டுறாதெ. அப்பாயி சொல்றன், ஆம்மா. இஞ்ச நெலத்தெக் கேட்டு கௌப்பி வுட்ருக்கா வடுவாம்பா. அதுக்கு இப்ப அவளுக்குக் குடுக்க இஞ்ச என்னா இருக்கு? அவளெ கட்டிக் குடுத்தப்ப செறப்பு மொறப்பா ஓங்கப்பன் கையடிச்சி குடுத்ததுதான் இந்த நூறு வேலி நெலம். வடுவாம்பா கல்யாணத்தோட நமக்கு முன்னூறு வேலி நெலம் ஒரு தாக்கா இருந்தது. அந்தத் துமுர்ல சொன்னான் ஓங்கப்பன். இப்ப? இப்ப என்ன ஆச்சு? நெலத்தெ வித்து வித்து முப்பது வருஷமா எல்லாக் கள்ளக்குடிவளும் என்ன கதி ஆச்சோ, அது கரமுண்டாங் குடியிலயும் ஆச்சுடி. அந்தப் பாப்பார குடிவளுக்கு எவ்வளவு போச்சி, அழிஞ்சுது. ஆனா... கரமுண்டாங்குடி நிமுந்துதான் நின்னுது. இப்ப வடுவாம்பா கேக்குறா அதே. யாருக்குத் தெரியும் வடுவாம்பா எதெக் குடுத்து எதெ எடுத்துக்கப் பாக்குறா, அப்டீன்னு எவனுக்குத் தெரியும்? தெலகராஜு அப்பன் சேதிராயம் வாயத் தொறக்க மாட்டான். கரமுண்டாங் குடியக் கவுக்கணும்ன்னு பாக்குறது வேற யாருமில்லெடி, வடுவாம்பா கரமுண்டாத்திதான்.

"தெலகராஜு இஞ்சியே இருக்காதாப்பாயி." தயங்கியபடி கேட்டாள் காத்தாயம்பா.

"எப்புடி இருப்பான் அவன்? இஞ்ச கிராமத்துல என்ன பண்ண? படிச்சவன், அதுலயும் ஏராளமா கத்தவன், மெட்றாசு போணும், மேல படிக்கணும்ங்கிறான். ஆனா கரமுண்டானுவ மாதிரியில்லெ. கருக்கான பய. ஒன்னெ கொண்டு போய் வெச்சு பூட்டிக்குவான். வுடமாட்டான். ஆனா இந்தக் கரமுண்டாப் பயலுவ வுடணுமே?"

"ஏப்பாயி நீயி இப்டி கரமுண்டா கரமுண்டான்னு கருவுறெ?"

"பின்ன என்னாடி? ஒன்னெ கட்டிக் குடுத்து அனுப்பணும்னா நூறு வேலி போச்சு. நூறு வேலி வாண்டாம்ன்னு வுட வடுவாம்பா தயாராயில்லெ. நெலத்தெக் குடுக்க இஞ்ச யாரும் தயாராயில்லெ. உன்னெ ஒப்பாரும் சித்தப்பனுவளும் வுடமாட்டானுவ போல இருக்கு. கேட்டா இதோ கல்யாணம்ங்குறானுவ. சொத்தோட நீயும் வூடும் பிரிஞ்சு போறது, எல்லாருக்கும் கரிக்கிது."

"ஏப்பாயி சொத்து சொத்துன்னு அலையிற? எனக்கு சொத்து வாண்டாம்."

"அது சேரி. நீய்யி சொல்லிப்புட்டெ. எவன் வுடுவான்? வடுவாம்பா இஞ்ச வந்துங்கொப்பங்கிட்ட போயி கேட்டா... ங்கொப்பன் மறுவார்த்தெ பேசமாட்டான். ந்தான்னு தூக்கி எறிஞ்சடுவான்னு, எல்லாருக்குமே பயம்மா இருக்கு"

"எனக்கு நெலம் சொத்து எதுவும் வாண்டாம்ப்பாயி"

"அதுக்குதான்டி ஒன்னெ வுடமாட்டெங்கிறானுவ. பொம்பளைக்கி சொத்து கித்து ஒண்ணும் உரிமையில்லெம்பானுவ. ஆனா வெறும் பொண்ணெ எந்த கள்ளக்குடியில குடுக்க முடியும்? எவந்தான் கட்டிக்குவானாம்? அதுக்குத்தான் ஒன்னெ கட்டிக்கவும் பத்து மாமனும் சுத்திச் சுத்தி வந்தானுவ. இப்பக்கூட நீய்யி உம்முன்னு சொல்லிப் பாரு, நாளைக்கே கரமுண்டாரு வூடு நாலா எட்டா பதுனாறா பொளந்துகிட்டு ஆத்துல துண்டு துண்டா முழுகும். ஹெஹ்ஹெஹ்ஹே" பயங்கரமாய் சிரித்தது துரைச்சி.

நெஞ்சை எங்கோ உலுக்கியது அந்த ஈவிரக்கமற்ற சிரிப்பு. சொத்துக்குள்ளே எல்லாத்தையும் சொருவி வெச்ச பழய மனுஷ புத்தி, இப்பவும் அப்படியேதான் புதுசாயிருக்கே தவிர ஜாதி, சனம்ன்னு ஒட்டு மொத்தமா இந்தப் பயலுவ வெச்சுகிட்டு இருக்க எல்லா சமாச்சாரமும் இப்டித்தான் எங்கியோ ஒரு எடத்துல ஒதச்சுகிட்டு நிக்கிறது தெரியிது.

தூரத்துல ஆந்தை கத்திகிட்டு ஆத்துக்கு குறுக்க போற சத்தம் கொஞ்சங் கொஞ்சமா கேக்குது. அண்டாரங்காட்டுல இருந்து இன்னோரு ஆந்தை கிளை கூட்டுது. தன்னோட சத்தத்தாலே எழுப்பி பதில் செதுக்கு செதுக்குது ஊவ் ஊவ்ன்னு.

"மாமன் எங்கப்பாயி பெய்ருக்கு?"

"ஆருக்குடி தெரியும்... ந்தக் களுத மாஞ்சிகிட்டக் கேளேன்?"

"மாஞ்சியெ நானு இப்ப கொல்லெயிலியே போட்டு வேல வாங்கிகிட்டு இருக்கேம்ப்பாயி. அவளுக்கு ஒண்ணுந்த தெரியாது பாவம். அவளெ பள்ளக் குடிக்கே உட்றதில்ல நானு"

"மாஞ்சிய உட்றாத. உட்டின்னா ந்தப்பய தெலகராஜு பொய்டுவாம்."

"எல்லாந் தெரியும்ப்பாயி. வுடுவனா? ஆனா அவுரும் உட்றதில்ல. ராத்திரியில வூட்டுக்குப் பின்னாலெ படிக்கட்டுக்குப் பெய்டுது மாமா, என்னெப் போட்டு தூங்க வெச்சுட்டு மாஞ்சியும் போறா. என்ன பண்றது? மாமம் வுடாது. ல்லென்னா கொண்டு போய்டும்"

"லேசுபட்ட நாயா அது? ஏன்டி அவன் வந்தாலெ துள்ளிகிட்டு அந்தாண்ட ஓடுற நீய்யி?"

"பின்ன என்னா பண்ணச் சொல்ற கௌவீ? ஓடிப்போயி மாமனெ நானுங் கட்டிக்கணுமாக்கும்? பத்து இல்ல எட்டே மாதத்துல மாமன் புள்ளெய பிதுக்கி உட்ரும் தெரியும்ல்ல?"

"பின்ன என்ன பண்ணப் போற? நீயும் இந்த நூறு குடிக்குள்ள குடியா கரமுண்டான் உட்டெத் தாங்கிகிட்டு எல்லாருக்கம் வடிச்சு கொட்டிகிட்டு, சாமி கும்புட்டு எல்லாருக்கும் தொளசீ தீர்த்தம் குடுத்துகிட்டு, சேவிச்சுகிட்டு, இருந்துகிட்டு இருக்கப் போறியா நாயி?"

"நீயி அந்தக் காலத்துல இதானெ பண்ணுனெ கௌவீ?"

"அது வேறடீ. நானு கல்யாணங் கட்டுன வூட்டை வெளங்க வெக்யல்ல வந்தேன். நீயி இஞ்ச இருந்துகிட்டு வாழா வெட்டியா முண்டச்சி மாதிரி பண்டாரச்சியா பெருமாள் சேவை பண்ணிகிட்டு இருக்கவா போறெ? ஹ்ம்?" தொரச்சியப்பாயி ஆவேசம் வந்தது போல் பேசிக்கிட்டேயிருந்தது. வேற ஒண்ணும் புரியலை காத்தாயம்பாளுக்கு. அவள் அறியாத கண்ணீரு கொட்டுது. தொரச்சியப்பாயி சேலையெ உருவி போட்டுட்டு மார்லயே அடிச்சுக்குது. யாரும் கேக்காம-கேக்க முடியாம-அடிச்சுக்குது. அளுவுது. அது மாரு ரெண்டும் குண்டலம் குண்டலமா ஆடுது. மாரு முழுசும் கண்ணுலயிருந்து வடிஞ்ச தண்ணில நனைஞ்சு ஈரமாயிருக்கு. நடப்பாயி மூணாவுது சுருட்டு தீக்கங்கு இருட்டுல. பொகையில சுருட்டுப் பொகை, வயத்தெக் கொமட்டும்ல்ல. இப்ப கொமட்டல்லெ. பழகிப் போனதுனால இல்ல. இப்ப அதுதான் கரிய்யா இருட்டுலகூட நீல வட்டவட்டமா சுருள் வுடுது.

இருட்டுக்குள்ளயிருந்து வட்டவட்டமா மேல போறது தெரியிது. இருட்டுக்குள்ளகூட வெளிச்சம் இருக்கத்தான் இருக்குன்னு காத்தாயம்பாளுக்குத் தோணுது. முழுசா இருட்டுக்குள்ள வந்தாச்சுன்னா, இருட்டுகூட இருட்டு இல்ல வெளிச்சம்தான்னு தோணுதே, தப்பா?

ஆமா, இப்பல்லாம் மாஞ்சிய இறுக்கித்தான் வெச்சிருக்கா காத்தாயம்பா. செல்லியை அவளோட நிறுத்தி அமுக்கித்தான் வெச்சிருக்கா. ல்லென்ன மாமன் மேஞ்சுடுமே. மாஞ்சியோட அக்காளையும் கரமுண்டாரு வூட்டுக்குள்ள கொண்ணாந்துட்டா காத்தாயம்பா. கரமுண்டாத்தி வேலையே இதான். பள்ளச்சிவள்ல ஓஸ்த்தி செம்பாட்டம் பள்ளத்திவ. அதுல சாம்பங் குடும்பம் பரம்பரையா கரமுண்டாஞ் சொத்து. யாரும் அண்ட முடியாது. பள்ளச்சிவளும் 'போ'கமாட்டளுவ. வைராக்யம்தான்.

மாஞ்சியெ சோறு போட்டு வூட்டுறதெப்பாத்து உமாமஹேஸ்வரி சின்னம்மாவும் பார்வதி சின்னம்மாவும்கூட ஆச்சரியப்பட்டாங்க. என்னாடி எளவு இது? அவனெ வளச்சுப் போட்ருக்கா இவ. இவளெ வளச்சுப் போடணுமா? நாலு பள்ளனுவ கிட்ட விஷயத்தெச் சொன்னாப் போவுது. கொண்டு போய்டமாட்டானுவளா? இதுக்குப் போயி இவளெக் கொண்ணாந்து மூடி வைச்சுகிட்டு. ஆவுற காரியமா இது?

ஆனா மாஞ்சியத் தேடித் தேடித் திரியிறது இன்னொரு ஆளு. அது யாருக்கும் புரியாது. மாஞ்சி கரமுண்டாரு வூட்ட வுட்டு வெளிய வந்தாப் போதும். சாணியாயிடுவா. அவ்வளவுதான். அது யாருக்கும் தெரியாது. மாஞ்சியோட அம்மாளையும் அக்காளையும் பொரட்டி எடுத்த ராமுக் கரமுண்டாருதான் அது.

அதே ராத்திரி வேளையில வயல்ல... களத்து மேட்டுல தெலகராஜுவொட அவரு சமபந்தியா ஒக்காந்து செம்பாட்டம் பள்ளச்சி கொண்டாந்து ஊத்துன சாராயத்தெக் குடிச்சுப்புட்டு களத்து குடுசையில அவளோட பொரண்டு கெடக்குறது யாருக்குத் தெரியும். யாருக்குத் தெரியணுமாம்? பள்ளனுவ கையில ஆம்புட்டா அவளுவளெத்தான் குத்தித் தள்ளுவானுவ. ல்வியா? ஆனாலும் பயமில்லெ. கரமுண்டானுவளுக்கும் பயமில்ல. கள்ளச்சிவளுக்கும் பயமுல்ல. பயந்து என்னா பண்ண? யாருதான்... எப்பதான்... இதெல்லாம்...

களத்து மேட்டு வக்யப் பிரி மேல ஒக்காந்துகிட்டு இருக்கான் தெலகராஜு. "குடிங்க ஆண்டெ. ஊத்தட்டுமா?"

"யாரு நீயி? தெரியல்லியே?" சுற்றிலும் கனமான கருக்கிருட்டு. வானம்கூட இருண்டு கிடந்தது. யாருமில்லாத வேளை. யாரு இவ? உள்ள மாமனும் அவளும்... இஞ்ச வெளிய யாருமுல்லியே... இருட்டிலும் லேசான மல்லியப் பூ வாசனை... வெறித்துப் பார்த்தான். மாஞ்சியோ? இல்லியே மாஞ்சி இப்பல்லாம் ஆம்பவே முடியாது. தெரியும். கரமுண்டார் வூடு மூடிக் கெடக்கு. அவுங்க பள்ளச்சியாமே...

"யார்றி நீயி? ஓம் பேரு என்னா?"

"சோணைங்க."

"சோணையா?"

"ஆமாங்க ஆண்டெ பெரியாண்டெகூடப் போய்ருக்காளே... நாச்சி? அவ மவங்க... சோணெம்பாங்க என்னிய."

"இது யாரு புதுசு? சின்னகுட்டி? எங்கடி வந்த? ஒங்கம்மாளத் தேடிகிட்டா வந்தெ? மாமா வரட்டும்."

வக்யப்பிரியெச் சுத்திச் சுத்திப் போட்டுருந்த அடுக்கு மேல சாஞ்சு கெடந்தான் தெலகராஜு. நன்றாக உருண்ட மெத்தை மாதிரியிருந்தது வக்யப்பிரி. தூரத்ல ஆத்துக் கரையோட போன பஸ் வெளிச்சம் நீளமா இஞ்ச வரைக்கும் நீலப் புகையிருட்டே கிழிச்சிகிட்டு வந்து சோணையாருன்னு காட்டுனது. சோணைக்குட்டி. சின்னவளாத்தான் இருந்தா. பஸ் வெளிச்சம் ஒரு நிமிஷந்தான். அப்புறம் இருட்டு. சுருசுருன்னு அவ பார்வை. அந்த இருட்டுலியும் கண்ணு பளபளன்னுது. ஒடம்பு தெலகராஜுவுக்கு சோழர் கால வெங்கல தாமிரச் சிலைகள் ஞாபகம் வந்தது. வார்த்த செப்புச் சிலைகள். வரலாறு புதிசு இல்லியே? இருட்டுக்குள்ள அவளை ஏன் வந்தா? எதுக்கு வந்தா?ன்னு நச்சுப்படுத்தி கேட்டுகிட்டேயிருந்தான் தெலகராஜு. செம்மறியாட்டுக் கிடாய்க் கறியெ நல்லா உப்பு மொளகு போட்டு சுட்டுக் கொண்டாந்தா நாச்சி. அது வயித்துக்குள்ள எரியிறதும் அடங்குறதுமாயிருந்தது. நல்ல திண்ணக்கம்.

சோணை இப்ப காலடியில் ஒக்காந்திருக்கா... தெரியும் மாமன் வேலை. வானம் இருண்டு கிடந்தது. பிரிபிரியா கெடந்த வக்யல் சுருள் மேல சோணையும், தெலகராஜுவும் இப்ப ஓர்த்தரை ஓர்த்தர் விடாமெ கட்டி உருண்டு வியர்த்து வடிய கொஞ்சம் கொஞ்சமாய் இருண்டு போனார்கள்... இருட்டு... இருட்டு... அப்பறமும்...

ராமுக்கரமுண்டாரு நாச்சியெ வுட்டு எந்திரிச்சி வெளிய வந்து ஒரு சிகரெட்டைக் கொளுத்திகிட்டு நின்னப்போதான் சோணையெயும் வரச்சொன்னது ஞாபகம் வந்துது... திடீர்னு அவளோட பின்னத்தி உருவம் ஞாபகம்...

"சோணை. வந்துட்டியாடி?"ன்னு வக்யப் போர் பக்கமாச் சத்தம் குடுத்தாரு... பதிலே இல்லெ. "மாப்ளெ. டேய் மாப்ளெ... எஞ்சருக்க நீயி?"

' பதிலே காணும்... "சோணெ? யேய் சோணெ" இருட்டு நுரைத்தது. தெலகராஜு வுடமாட்டெங்குறான். காதுல சொல்றா சோண, "அவரு கத்துறாரு வுடுங்க ஆண்டெ. அப்பறம் கொன்னுடுவாரு" தெலகராஜு அப்பத்தான் உச்சியில ஏறி கொப்பெப்புடிச்சி உலுக்கிகிட்டு இருக்கான். அவ மேல அமுத்தி... எறங்கி...

"ஏ முண்டச்சி சோணெ. யே... ய்." ராமுக்கரமுண்டாரு கூச்சல்.

"ஏய்... எஞ்சருக்கடி? தேவுடியா முண்டெ."

ராமுக்கரமுண்டாருக்கு கலி ஏறிடிச்சு. சாராய நெட்டை உசப்பல்.

ஒரே உருவல்ல உருவிகிட்டு சோணெ ஏந்திரிச்சு தெலகராஜெ வக்யப்பிரிலே தள்ளிட்டு ஓட்டமா ஓடுனா. எந்திரிச்சு அவ பொடறில ஒரு அற வுட்டு கீழ தள்ளி மேல... ஏறலாமான்னு வெறி... எதுர தெரிஞ்சு களத்து மேட்டு குடுசைக்குள்ள மாமனும் சோணையும் பூந்துகிட்டது தெரிஞ்சு கதவு மூடிகிச்சு... போயி அந்தக் கதவெ ஒரே மிறில மிறிச்சு தள்ளுனா என்ன... எதுர யாரோ வாறாங்க... நாச்சி.

"ஆண்டெ... சின்னாண்டெ..." அவதான் கூப்புட்றா. கட்ட வண்டி கெடக்கு, மாடுவ கட்டிக் கெடக்கு, அஞ்ச போயி தேடுறா. பேசாம வக்யப் பிரிமேல கெடந்தான்.

"இஞ்சியா படுத்துக் கெடக்கீங்க ஆண்ட?"

"... ..." அவள் குனிந்து அருகில் வந்து நெருங்கி "ஆண்டெ என்னாது? ஏன்? அவ சோணை இஞ்ச படுத்துக் கெடந்தாளா? பெரியாண்டைக்கித் தெரிஞ்சிருக்காது? கூப்புட்டு இளுத்துக்கிட்டுப் பெய்ட்டாரா?" ஒரு கணத்தில் புரிஞ்சிகிட்டாளே இவ.

"அட வாங்க, அப்டிப் போவலாம்..." ரொம்ப இனிமையான குரல் நாச்சிக்கு.

அவளோட ஏந்திரிச்சு களத்து மேட்டு வடகால்ல இருந்த கொளத்து பாராங்கல்லுல போயி ஒக்காந்தான் தெலகராஜு. அவனுக்கு இப்ப இப்ப இன்னது செய்யிறதுன்னே தெரியிறதில்லெ. கரமுண்டாரு வூட்டு படிக்கல் ஏர்றதேயில்ல. சுப்பா கரமுண்டாரோட இப்பல்லாம் கேணிப்பட்டறையில சுத்தப் போறது கெடையாது. மாமனோட குடிக்கிறது, பள்ளக்குடிகளோட சகவாசம். யாருன்னே கெடையாது. பள்ளனுவ இப்ப... தெலகராஜ வெறியோட பாக்குறானுவ. கண்ணுகள்ல தெரியிது பாஷை. முந்தியெல்லாம் மாப்ள ஆண்டெ மாப்ள அய்யான்னு தஞ்சாவூரு ஆண்டென்னு மகிமையாப் பேசிகூடவே திரிவானு. இப்ப அதெல்லாம் இல்ல. கண்ணுல ஒரு பகை... தெறிப்பு.

மோட்டார் பைக்குல 'டுட் டுட் டுட் டுட் டுட்'ன்னு வயவரப்போட திருக்காட்டுப்பள்ளி போனா... அஞ்சருந்து

தஞ்சாவூர் கிட்டத்தான்னாக் கூட போறதுக்குப் புடிக்கல. மாஞ் சியப் பாக்கறதுன்னா பெரிய கஷ்டம். உமா சுத்திச் சுத்தி வந்தா சிரிக்கிதுவ வூட்டுப் புள்ள குட்டியெல்லாம். எல்லாருக்குந்தான் பிரிஞ்சு தெரிஞ்சிருக்கே.

வாடி ஓடிறலாம்ன்னா மாஞ்சி மாட்டெங்கிறா... ஆயிய கண்ணாலங் கட்டுன்னு அவவேற பிலு பிலுன்னு பிலுத்துறா. அம்மாயிவ சிரிச்சு எத்துதுவ. எப்டியாவது மாஞ்சிய தனிய்யா வரச்சொன்னா கொல்லைக்கட்டு படித்துறையிலதான் எப்பனாச்சும் பாக்க முடியிது... அப்பகூட ரெண்டே நிமிஷத்துல ஓடீர்றா... புடிச்சு அமுக்கி...

"என்னா ஆண்டெ கோவமா? சோணக்குட்டிய அவரு கொண்டு போய்ட்டாருன்னு?"

"இல்லியே அவதான் வந்தா. அவளே ஓடுனா. நானா கூப்புட்டென்?"

"அதான் ஆண்ட செம்பாட்டம் பள்ளிங்கறது. எங்களுக்கும் ஒரு வரிச ஒருங்க உண்டு. நாங்களும் அப்டித்தான். கரமுண்டாரு அவள பன்னண்டு வயசுலருந்து வெச்சிருக்காரு. அவரு பள்ளி அவ. நீங்க டவுனு. இதெல்லாம் பிரியாது ஓங்களுக்கு... அவரு கூப்புட்டா புருசங்கூட படுத்துக் கெடந்தாலும் இப்புடித்தான் ஏந்திரிச்சு ஓடுவா. கன்னி கழிச்சு புள்ளெ குடுத்து ஓலெ கட்டுனவரு அவருதான்?"

"அப்ப ஏங்கூட படுத்தது?"

"அட படுத்துட்டா? என்ன ஆண்ட நீங்க? படுத்துட்டா போதுமா?"

"ஏன் வந்தா? ஆரு கூப்புட்டா அவளெ?"

"அட வாங்க நீங்க. பாவம். பாதில ஏந்திரிச்சா அப்டித்தான் இருக்கும். இப்டி வாங்க."

"சீ... வுடு. நான் வர்லெ."

ஒரு சின்ன மல்யுத்தம். நாச்சி அப்டியே வளச்சு தெலகராஜ தூக்குனதும், புல்லு மேட்டுல சரிஞ்சு வுளுந்ததுமா ஒரு புடி பிடிச்சி இறுக்கி நாச்சிஅவனெ வுடாமெ ஏந்தி கட்டிகிட்டா. நல்ல மனுஷ வாடை. நாச்சிக்கி வயசு ரொம்ப ஆயிருக்கும். பெரிய ஒடம்பு... தெலகராஜு மேல பொரண்டும் அவன் நெஞ்சுல பொதையப் பொதைய...

"இப்பக் கூப்புட்டா நீயுந்தான்டி ஓடுவ?" கத்தினான் தெலகராஜு. மண்டைக்கு தீப்பாட்டம் சுழண்டது. நாச்சி விடாமல் முனைந்து புகுந்து கொண்டாள். தெலகராஜுவுக்கு இந்த அடிமைச் சமுதாய வழிகள் எல்லாம் முன்பே அவன் படித்த அரசியல் புஸ்தகங்களில் ஒவ்வொரு நாட்டிலும் இப்படித்தான் என்று வரைந்து காட்டியிருந்தன. ஆனால் இன்றைய நவீன காலத்திலும்கூட இது வந்து அவன் மேல் பாய்வது பயங்கரமாயிருந்தாலும், தடுத்துக்கொள்ளவில்லை அவன். அவனுக்குப் பூரணமாய் ஏற வேண்டும். எல்லாமே புரிய வேண்டும். இதை அவளிடம் கற்றுக் கொள்ள விட்டுக் கொடுத்தாக வேண்டியிருந்தது. செக்ஸில் மட்டும் இது வேண்டாமா? பொருளடிமைத்தனம்தான் இங்கும் விளைச்சல். நாச்சியிடம் இப்போது பேச முடியவில்ல. அவனை வரிந்து சுற்றிப்படர்ந்து வேலை செய்தாள் அந்தப் பள்ளி. சந்தோஷமாகவும் பூரணமாகவும் அவனை நேசித்து, ஆசை கொண்டும், அவனைப் பூரணமாய் எழுப்பி, அவனைக் கசக்கி ஆணாக உருமாற்றி அடக்கினாள். அழுந்த அழுந்த அவனைச் சுற்றிச் சுற்றி ஆழ்த்தினாள்.

இது புதுசு அவனுக்கு. நாச்சி அவனை புதுசாக்கியிருந்தாள். எதுரக்க குடுசை கதவு தெறந்துகிச்சு. ராமுக் கரமுண்டாரு அரிக்கன் வெளக்கெ எடுத்துகிட்டு வெளிய வந்து, கயித்துக் கட்டுல்ல ஒக்காந்துகிட்டாரு. தூரத்துல வாய்கா காட்டுல ஒக்காந்து இருந்த நாச்சிக்கும் நல்லாவே தெரிஞ்சுது. இன்னுஞ் செத்த நேரந்தான், ராமுக்கரமுண்டாருக்கு நாச்சி வேணும். பாக்கு கடிக்கிற நெரத்துல ஒருத்தி. அடுத்து வெத்தலைக்கி இன்னொருத்தி

அவருக்கு. ல்லென்னா உடமாட்டான். கொண்டு எடுத்துடுவாம் மனுஷன், மனுஷனா?

மொந்தையில சாராய ஏத்தம்... மூணாவுது தடவெ... வுடாமெ ஏத்துறாரு கரமுண்டாரு. இன்னும் குடிசைக்குள்ற இருந்து சோணெ வெளிய வரலெ, என்னா ஆனுச்சு தெரியலை.

"நாம் போவட்டா ராஜா. கரமுண்டாரு இப்பக் கூப்புடப் போறாரு. போவணும்"

"நீயும் அவரு பள்ளத்திதானா? ஓடணுமா?"

"ஆமா. நானும், ஏம்மவளுவ மூணு பேரும், அய்யா பள்ளச்சிவதாங்க வேற என்ன?"

"உம் புருசன்காரன்?"

"அது இப்ப வேற ரெண்டு பள்ளச்சிவளெ. கட்டிகிச்சு. பொணவாசல்ல இருக்கு."

"நாச்சி" தூரத்துல ராமுக்கரமுண்டாரு கத்தல்.

"தோ கத்துறாரு பாருங்க. இருங்க. பொய்டாதீங்க. பத்து நிமிஷம். வந்திடுவேன். சோணையோட பேசிகிட்டு இருங்க. பெரியவரெ தூங்கவுட்டு வந்துடுவேன். ஆத்து மேட்டுக்குப் போவலாம். செத்த நேரந்தான்... ஒடியாறேன்..." திங்கு தெங்கு என்று ஆடினாள் நாச்சி... என்ன உலகம் இது. வானம் வெளிறி வெளிச்சமாய் இருந்தது. தலை குனிந்தபடியே வந்தாள் சோணை. அவன் கூப்பிடாமலே அருகில் படுத்துக் கொண்டு குலுங்கி குலுங்கி...

"ஏய். என்னது அழுவுறெ? நீ தான்டி போனெ உருவிகிட்டு தேவுடியா"

"ஏய்யா நீ வேற. உம்மாதிரியா ராமுக்கரமுண்டாரு? மாஞ்சிய என்னைக்கி கூப்புட்டு வெச்சிக்கிட்டியோ, அன்னையோட கரமுண்டாரு வூட்டு லெச்சமி வூட்டுக்குள்ள கூப்புட்டுக்கிச்சு ஒனக்காவ. நானல்லாம் நாதியத்தவதான? இனிமே கரமுண்டாருகூட கூப்புட முடியாது அவளெ? மாஞ்சி இனிமே ஒம் பொண்டாட்டிதாய்யா. முப்பத்ரண்டு பள்ளியில நானு ஒருத்தி. அவ்வளவுதான்."

"இதென்ன அக்ரமம்? நீங்க எல்லாம் ஒண்ணா தெரண்டு... இந்தக் காலத்துலகூடவா?விடக்கூடாது... தொலைக்கணும்... ஜாதி? கொலம்? எனம்?..."

"நீயி, எதுக்குய்யா வந்தெ? 'இது'க்குதானெ?" புரண்டு அவனைத் தழுவிக் கொண்டாள் அவள்.

"இந்த ஜாதி... மேல கீள... ஆண்டான்னு அண்டச்சி எல்லாம் ஒழியணும்."

"எப்புடிய்யா ஒழியும்? மறந்து போவுமாக்கும்?" அவன் அடியில் புதைந்து கொண்டாள்.

"இதெ மாத்தணும். பொரட்டிப் போட்டு மிதிக்கணும், ஆமா. இது அடியோட ஒழியணும்... நீ சொல்ற எல்லாத்தியும் எலச்சென் வர்றப்ப எல்லாரும் மேடையில பேசுறான். கீழ நாங்களும் ஒக்காந்து கையத் தட்டுறோம். அப்பறம்... இப்டித்தான், காசுக்காசு பொறமாட்டெடாம்... தொரத்தியடிச்சா கெழவியாய்ட்டோம்னு அர்த்தம்..."

மண்டை எரிந்தது. வேறு எதுவும் ஏறவில்லை... அவள் பேசிக்கொண்டேயிருந்தாள். தெலகராஜு எழுந்திரிச்சு நின்னான்... "நான் வர்றேன்டி மாமங்கிட்ட சொல்லிடு, போய்ட்டேன்னு. இனிமே இந்த சங்காத்தமே எனக்கு வாண்டாம். ஆமா."

"இரு. அம்மா இப்ப வந்துடும். மெதுவா ஆத்தோரமா நம்ம குடுசைக்குப் போவலாம், இரேன். ல்லென்னா இப்புடியே எறங்கி ஆத்தாங்கரைக்கி போய்டலாம்..."

"ல்லெ. நாம் போகணும். இனிமே சகிக்க முடியாது. வர்றேன்..." எதிரே தெரிந்த குடிசையைப் பார்த்தபடியே வாய்க்காலில் இறங்கி நடந்தான் தெலகராஜு.

"அட. இருய்யான்னா." பின்னால் சோணையோட சத்தம் கேக்க வேக வேகமாய் இருளில் நடந்தான். நல்ல சாராயம். இன்னும் வேகம் அடங்க வெகு நேரமாவும். வரப்போடு நடந்தான். நல்ல இருட்டிலும் நன்றாகவே வழி புரிந்தது. உலகம் இருட்டுன்னு யார் சொன்னா? என்னைக்குமா இதெல்லாம் ஒழியாது?

நடந்து வரும்போதே... யாரோ பின்னால் வர்றாப்ல இருந்ததும் திரும்பிப் பார்த்தான்... யாரது அடுத்த வரப்பு மேல? யாரது? உமா அத்தெயாச்சே... அந்த ஒயரமான வடிவம். அவளா? எப்டி? இஞ்ச? ஏன்? எதுக்கு? தனிய்யாவா? நேராகப் பார்த்தபடி எதிர் வரப்பில் வேகமாக பட்டுப்புடவை பாவு அறுக்க அறுக்க முசுமுசுப்போட நடந்து போறா உமாமஹேஸ்வரி... வெளக்கு இல்லாமெ ஆளு துணையில்லாம எங்கப் போய்ட்டு வர்றா இவ? தெலகராஜுவுக்குப் பயமாக்கூட இருந்தது. ஆனா இவனெ அவ கண்டு புடிச்சுக்கல.

இவனோட கைலியும் நீலச்சட்டையும் இருட்டுக்குள்ள கூட தெலகராஜெ மறச்சுடுச்சி. ஆத்துக் கரையிலயிருந்து குறுக்க வர்றான்னு தோணுது. அப்ப தெக்கயிருந்துல்ல வர்றா. எப்ப போனா? எப்புடிப் போனா? எஞ்சயிருந்து வர்றா? அப்புடியே நின்னு போனான் தெலகராஜு. பின்னாலியே மொள்ள மொள்ள அவனும் நடந்து, எதுர் கரை மேட்டுலியே வயக்காட்டெ சுத்திகிட்டு உமாமஹேஸ்வரியெ பின்னாடியே தொடர்ந்து போறது அவளுக்குத் தெரியலையே. வுடாமெ தொடர்ந்து போறான். கரமுண்டாரு வூட்டுப் பொண்ணு..... ஆ..... தெலகராஜுவுக்கே பகீருன்னுது. என்னடாது காலம்ன்னு ஓங்கரிக்கிது. ஆனா யாரானா என்ன? ரகசியம் இல்லாத மனுஷப் பிறவி ஏது? ஒரு பர்லாங்கு தூரம் வுட்டு பதுங்கிப் பதுங்கி தெலகராஜு வர்றான். என்னடா விதி? ஏது? அவ... சைடுல திரும்பி கரமுண்டாரு வூட்டுக் குதுதுரெ லாயத்து பக்கமா போயி சத்தப்படாமெ உள்ள போயி நொழயிறது வரைக்கும் புளிய மரத்தடியில பதுங்கியிருந்துட்டு இவன் வெளிய வந்தா... தூரத்துல வாய்க்காத்தண்ணியில நாச்சியும்... சோணையும்... நிக்கிறான். மெதுவா அவங்ககிட்ட வந்துகிட்டேயிருக்காங்க... சளப்பு சளப்புன்னு தண்ணி சத்தம்.

அவுங்களுக்கும் தெரிஞ்சிருக்குமோ... தெரிஞ்சுதானே பின்னாலியே வந்துருக்காளுவ. அடக்கடவுளே. ஒண்ணும் புரியலியே... உமாமஹேஸ்வரீ.

“கரமுண்டாரு மல்லாந்துட்டாரு. வாங்க போவம்...” நாச்சி குசுகுசுத்தாள்.

“இனிமே எஞ்சடி கூப்புடுறிங்க? மணி ரெண்டு இருக்கும்ல்ல. விடிஞ்சுடும்.”

“விடிய வர்லாம் வாங்க.”

மிக இனிமையான குரல் சோணைக்கு. கையெக் கோத்துகிட்டா சாராய வெடுப்பு நன்றாக அடங்கியிருந்த மாதிரியிருந்தது. நாச்சியின் உடம்பு மணம் ஆச்சர்யமாய் நினைவு வந்தது. உடலில் ரத்தம் சர்ரென்று உரைத்தது.

நாச்சி நல்ல உயரம். நாற்பத்தஞ்சு வயசு இருக்கும். நல்ல திமிர் ஒடம்பு, பெருசு. கைகால் எல்லாமே ஞாபகம் இருக்கிற மாதிரி புதுசாவே ஞாபகம் பண்ற வடிவம். சின்னது அதே மாதிரி சோணை... அவ மக. நெலா வெளிச்சம் மழையில நனஞ்ச மாதிரி இப்ப மூட்டம் கலைஞ்சு ஏந்திரிச்சிருக்கு. சோணை

அவனை ஒட்டி நடந்து இடிச்சு இடிச்சு நடந்தாள். கனம்! தனம்... அவள் செய்த இன்னொரு வேலை முன்னால நடந்த அவ அம்மா நாச்சி மேல தெலகராஜுவை இடிக்க வைத்ததுதான். இதையெல்லாம் எஞ்ச கத்துக்குறாளுவ இவளுவன்னு தோணுது தெலகராஜுவுக்கு. ரொம்ப நேரம் நடக்க வேண்டியிருந்தது. வழியில யாரும் வரல்லெ... சுருக்க வயல் வரப்போட போனா எவங் கண்ணுலயாவுது பட வேண்டியிருக்கும்... சுத்திகிட்டு போயி ஆத்து மேட்டுல ஏறுனாங்க...

• மணல் மேட்டுல இருந்து சரிவா எறங்குது ஆத்துப் படுகை. ஒரே மணல் மணல். மங்கலா நெலவு பூத்துக் கெடக்கு. மணல்ல மேடும் பள்ளமா எறஞ்சு கெடக்கு. நடுவுல ஆத்து தண்ணி ஷோன்னு பாயுது. அதுல நெலா வெளிச்சம் மின்னுது மறையிது. தூரத்ல புளியந்தோப்பு. மூங்கில் மரங்கள் தண்ணீல நனைஞ்சு நனைஞ்சு கிர்கிறுகிறுங்குது.

சோணையும் நாச்சியுமா ரெண்டு பேரும் அப்புடியே தெலகராஜுவெ... ரெண்டு பொண்ணுவளோட ஒரு ஆம்பளை... என்ன பண்ண முடியும். ஒரே நேரத்துல ரெண்டு பேரும் முண்டி முண்டி முந்திகிட்டு அப்பப்ப்பா. மணல் கொதிச்சுப் போச்ச. ரெண்டு கையும் பத்தாம நாலு கையும் அவனைக் கட்டி இறுக்கி அமுக்கிகிச்சு. வெறிதான் கொஞ்சங் கொஞ்சமா புயல் காத்து மாதிரி புகுந்து புகுந்து வியர்த்து வடி... ரெண்டு பேரோடும் சிதறிப் போனான் தெலகராஜு. ரொம்ப நேரம் மூணு பேருமா அசந்து போகவேயில்லை. மூணு பேரும் கட்டிகிட்டு மணல்ல... ஆ! மூணு பேருமா...

நல்ல குளுறு காத்து... நெலவு மறஞ்சு மேகம் மூடிகிச்சு.ரொம்ப நேரம் சில்லுன்னு கெழக்க வானத்துல ஒரு கீறல். வெள்ளி கிண்டி வழியிறாப்ல வெளிச்சம் வழியிது. காத்து சிலுசிலுன்னு அடிக்கிது... விடி வெள்ளி கீறல்கீறலாப் பிரியிது...

"ஏய். ஏய்யா... ஏந்திரி... ஏந்திரிங்கறனில்ல..." என்றாள் சோணை. திடுக்குன்னு முழிச்சான் தெலகராஜு. பக்கத்தில் நாச்சி உருண்டு தூங்குறாளே, ஆமா. சோணைதான் எழுப்புனது. என்னது? கூப்புட்றாளே. ஏந்திரிச்சு அவ பின்னாடியே போனான். விடியலுக்கு இன்னும் ரொம்ப நேரம் இருக்கு. எதுர் கரையில மறுபடி பஸ் ஒண்ணு. மொத பஸ் திருக்காட்டுப்பள்ளிக்கி. லைட்டு இஞ்ச வீசியடிச்சுத் திரும்புது. சோணையோட உருவம் முழுசும் அச்சாவா மனசுல பதியுது. முழுசா...

அவன் கைக்குள் வந்து பதிஞ்சு புளியமரத்தடி மறைவில் மணல் சரிவில் திரும்பத் திரும்ப ஓயாது ஒழியாது... திரும்பியும் ஊட்டம். சோணை அலைபோல் மேலும் மேலும் வந்து படிந்தாள். அசிங்கமான இடம்தான், ஆனால் தப்பமுடியாத இடம். உதடுகள் உதடுகளுடன் உருகி உள்ளாழ்ந்து அமுதம் கக்கின.

"அஞ்ச ஆண்டச்சி போணுதே நீ பாத்தியா?" அவன் காதுகளுள் கேட்டாள் சோணை.

"ம் பாத்தேன் இப்ப என்ன அதுக்கு."

"அது... எஞ்சப் போய்ட்டு புள்ள வரம் வாங்கிட்டு வருது தெரியும்ல்லெ?"

"ம்?" தூக்கிவாரிப்போட்டது போல் அதிர்ந்தான் தெலகராஜு.

"ஆத்துல நடுப்பூல மணல் மேடு இருக்கே தெரியுமா மேக்க?"

"ம்"

"யாருக்கும் தெரியாது, பாவம். ஆனா தெரிஞ்சா கொண்ணு கொடலெ உருவிப் புடுவாங்க. கரமுண்டாருக்கு தெரிஞ்சா நாண்டுக்குவாரு..."

"ஆதிரியாரு வூட்டு பள்ளன் கலியன்."

"என்னது கலியனா?"

"கலியந் தெரியாது? உங்களென்னு இருக்கும். வாட்டசாட்டமா. யாருகிட்டியும் சொன்னா போச்சு. ஓங்கிட்ட மட்டும் சொல்றன்யா. நெஞ்சுக்குள்ள வெச்சுக்க." ஞாபகம் வருது... ஆ! உமாமாஹேஸ்வரியோட... கலியன். படிச்சவன்கூட. ஆளு நல்ல தாட்டிகம் முறுக்கு மீசை. வெங்கலச்சிலை மனசுக்குள் ஒரு காட்சி. அப்டியே உமாமஹேஸ்வரி அத்தையோட பள்ளன் கலியன் மணல் திட்டுல தூரத்துல ஒண்ணெ ஒண்ணு கவ்வி உறிஞ்சி... உமாமஹேஸ்வரி எப்பமும் காத்தாயம்பாகூடவே தங்கச்சி மாதிரி திரியுவாளே... சின்ன மாமாவுக்கோ வயசு நாப்பத்தஞ்சு. பதினெட்டு இருபது வயசு சின்ன பொண்ணு இது.

அடப்பாவிகளா. யார் கண்ணுலியாவுது பட்டா... பட்டாத்தானே? படாமெப் போவுமா? எது ஞாயம்? எது அநியாயம்... எவஞ்சொல்ல? எப்புடி?

கலியன் லேசுபட்டவன் இல்லை. எஞ்ச வந்து எப்புடி இழுத்து எஞ்ச கொண்டு போயி என்ன பண்ணிகிட்டு இருக்கான்?

கரமுண்டாரு ஊடா பிரியாது? கரமுண்டார் ஊடா ஒடையாது? கரமுண்டார் நெலமா போவாது? ஆ... எவஞ் சொன்னான்.

"ஒனக்கெப்புடிடி தெரியும்? கண்ணால பாத்தியா?"

"ஒரு மாசமா பாக்குறோமே."

"கரமுண்டாரு வூட்ல யாருக்காவுது தெரியுமா?"

"கலியன் உசுரெ எடுத்துருவாங்க. வாயத் தொறக்காதீங்க. நாஞ் சொன்னதும் தப்பு." சோணை அவன் கீழ் அழுந்த மேலே யாரோ வந்து அணைந்தது போல கனம்... அதிர்ச்சி... நாச்சிதான். மேல் வந்து கவிந்து கொண்டாள். சரிந்து தழுவியபடியே அவளும் அவன் கீழிறங்கி சரிந்து இறுக்கிக் கொண்டான். மறுபடியும் மூணு பேரும் மூணு பேரா ஒண்ணா...

குயில்கள் சிலுசிலுத்தன. ஆற்றங்கரையோரம் சிவந்துகொண்டது. சளசளசளவென்று புளிய மரங்களிலும் ஆலமரங்களிலும் கிளிகள் பேசின. ஆற்றுப்படுகை மேட்டில் கட்டை வண்டிகள் போகத் தொடங்கின. இருட்டு இறுகிப் பிழிந்து வெண் மேகங்கள் அடர்ந்து வந்தன. வெள்ளை மேகம். வெள்ளைக் கோடுகள் வானத்தைக் கிழித்து அகண்டன. வெளிச்ச விடியல் விடியலுக்கு முந்திய இருட்டு கசிந்து கொண்டிருந்தது ஆற்றுக்குள். எதிர்கரை பரிசல்கள் மிதந்து வரத் தொடங்கின. பரிசல் துறையில் இருக்கும் ஆட்கள். ஓயாது ஒழியாது காக்கைகள் கத்தின. மீன்கள் காலைச் சூரியனில் துள்ளிச் சரிந்தன.

விடிந்து விரிந்தபோது மணலில் தனியாகத் தூங்கிக் கிடந்தான் தெலகராஜு. எழுந்திரிக்க மனசே வரல்லெ. அப்டியே கெடந்தான் பயல். கிறுகிறுப்பு இன்னும். எப்ப ஏந்திரிச்சுப் போனாளுவ? சொன்னது எதையுமே நம்பவே முடியலையே? அப்டிக்கூட நடக்குமா? ஏன் நடக்காதாம்? உமாமஹேஸ்வரி தங்கமாச்சே. உமாமஹேஸ்வரி... என்ன அழகு... காத்தாயம்பா மாதிரியே ஒடுக்கமா, ஆனா துடிக்கிற ஏதோ ஒண்ணு அவகிட்ட இருக்குமே, அது காத்தாயம்பாகிட்ட கெடையாது. ஆமா, காத்தாயம்பாளுக்கு அந்த துமுறடியான ஒரு அதப்பு கெடையாது. ஒடம்பு பெரிய அசிங்கம். எப்புடித் தப்புச்சிகிற்ரது? தனிய்யாத் தப்ப முடியுமா? பாவம். என்ன பாடு பட்டாளோ? சின்ன மாமா போதல்லியோ? காத்தாயம்பாளால தன்னோட ஓடியார முடியுமா? கலியனோட உமாமஹேஸ்வரி ஓடத்தான் பேறா? ஓடாமெ தப்பிக்க முடியுமா? உடுவானுவளா? மயிரெப் புடிச்சு

இளுத்துகிட்டு போயி உள்ற போட்டு வெட்டி கூறு போட்டு அள்ளிடுவானுவ கரமுண்டானுவ. ஆனா? ஓடிட்டா என்னன்னு கூடவா தோணாது ரெண்டுக்கும்... நாச்சியும் சோணையும்கூட ஓட முடியாமெ போட்டு மிதிபட்டதுவதான?

நெலம் எஞ்சருக்கு? பெரிய கேள்வி. என்னோட நெலமாமே? எங்கம்மாளுக்கு குடுத்தாச்சாமே அதெ? அது கேட்டதும் புதுக்குன்னு எகிறிகிச்சாமே கரமுண்டானுவளுக்கு... நெலம் எப்பமும் யாருதும் இல்லயாமே... அப்ப உட்டேறிஞ்சுடேன் எங்க நெலத்தெ? காத்தாயம்பாளும் நெலம் மாதிரித்தான்... இன்னைக்கி வரைக்கும் அவனுக்குன்னு சொல்ல முடியலியே. காத்தாயம்பா எப்ப ஓடிவரப் போறா? அம்மா வடுவாம்பாளுக்கு நெலம் வேணும். காத்தாயம்பா வாண்டாமா? தெரியல்லியே. எனக்கு அவ வேணுமே...

தூரத்துல ஆத்துக்கு நடுவுல மணல் திட்டு தெரியிது. இன்னும் இருட்டு முழுசுமா பிரியல. முழுசுமா சூரியன் வரல்லெ. வெளிச்சம் ரத்தமா கக்குற செவப்பு எஞ்சப் பாத்தாலும் வடியிது. தெலகராஜு ஆத்தோரமா நடக்குறான். உடம்பு முழுசும் சுகமான அலுப்பும், நாச்சியோட மனுஷ வாசனையும் பெரிய உடம்பும் ஞாபகமா இருக்கு. சோணையும் அவளுமா ஒரே பாச்சலா பாஞ்சு வெட்டி இழுத்து அமுக்கிகிட்டு அசிங்கம் கூட ரொம்ப இன்பமான சுகமா இப்பக்கூடதான் மேலியே வீசுற தன் வாசனையாயிருக்கு. மெல்ல மெல்ல நடந்து நடந்து ஆத்துக்கரையோரமாவே நடந்து வந்தான் தெலகராஜு. ஆத்து கிடங்கும் எதிர மணல் திட்டும் தெரியிது. நல்லா விடிஞ்சு வெயில் உஷ்ணமா ஏறிடிச்சு. நடு ஆத்துல மணல் திட்டுலயிருந்து... கலியன் தண்ணியில நீஞ்சி வாரது தெரியுது.

# கரமுண்டார் வூடு - 5

"ஏ கலியோவ்." தன்னறியாமல் அழைத்துவிட்டான் கூவி. கலியன் நிமிர்ந்து பார்த்தான். பாம்பு மாதிரி பார்வையிலேயே ஒரு ஊசி தென்பட்டது. ஆஜானுபாகுவான ஒடம்பு. மண்ல புடுங்கின வள்ளிக் கிழங்கு மாதிரி கருகரு வென்ற உடம்பின் வார்ப்பு ஆச்சரியம் தந்தது. யாரையும் சற்றே பயப்படுத்தும் பலம் வெளித் தெரியும் புடைக்கும் தசை நார்கள், வார்த்த வெண்கலச்சிலையின் சோழர்கால உடல் நலம். முறுக்கிய எஃகு மீசை.

'கலியராஜன்னு கூப்பிடுங்க ஸார்." பேச்சில் ஜாதி தெரியவில்லைதான். இவன் அப்பனும் இவன் மாதிரி கொஞ்சம் தலை தெரிச்ச பயதான். பள்ளக் குடியில இவன் வூடு காரக்கட்டு வூடு. கட்சியில மெம்பர். தலைவர். என்னென்னமோ இயக்கங்கள் எல்லாம் இவன் திடகாத்ரத்தை நம்பியிருப்பதுகூட சின்னக் கரமுண்டாரு சொல்லி கேட்டிருக்கான் தெலகராஜ்.

"என்னடா ஒன்னெ எனக்கு கலியராஜன்னு தெரியாதா என்ன?"

"அதில்லெ. கரமுண்டாரு வூட்டு மாப்ளையாச்சே, நாங்க பள்ளனுவதான?"

"அதுனால என்னடா? நீ படிச்சவன் கட்சில பெரிய ஆளுன்னு தெரியதா? அதோட கரமுண்டாம் பள்ளனாவா நீயி இப்ப வேலைக்கி நிக்கிற? ம்"

"இன்னைக்கும் எங்காயி அஞ்சதானே புளுக்கையடிக்கிது. வேலைக்காரின்னா சொல்றிங்க? பள்ளச்சின்னுதானே சொல்றிங்க?"

"பள்ளச்சின்னா கேவலமாடா கலியராஜா?"

"கேவலப் படுத்தறத்துக்குத் தானே அந்தப் பேரு சொல்லிக் கூப்புடுறிங்க?"

"அது சரி. இது தீராது. நீ ஜாதியெ ஒழிச்சுடலாம்ன்னு நம்புறவன். நானும் ஜாதியெ ஒழிச்சிடலாம்ன்னு படிச்சவன். ஆனா இஞ்ச அஞ்சினி கிராமத்துக்கு வந்தப்புறம் எனக்கு ஜாதின்னு ஒண்ணு இருக்கிறதாவே தோணமாட்டேங்குடா"

"ஆமா ஒங்களுக்கு தோணாதுதான். காங்கிரஸ் கட்சி வந்து பத்து இருபது வருஷமாயி டி.எம்.கே கட்சி ஆட்சி வந்து, ஜாதி பேசுறதே குத்தம்ன்னு சட்டம் வந்து, எலக்ஷன் லிஸ்ட்லகூட ஜாதி இல்லென்னு ஆக்க, அப்புறமா அண்ணா.டி.எம்.கே வந்து, பெரியாரு அண்ணா எல்லாம் பேசுபேசுன்னு பேசி... என்னான்னமோ பண்ணியாச்சு. ஆனா நாங்க இருக்க எடத்துலதான் நாங்க இருக்கோம். நீங்க இருக்க எடத்துலதான் நீங்க இருக்கிங்க. ஆனா பேச்சு மட்டும் மாறியிருக்கு. தைரியமா நாங்க பேசமுடியுது. ஓட்டு போட முடியிது. கட்சி பேச முடியுது. பணங் கேக்க முடியுது. அரசியல்ல நிக்க முடியுது. அவ்வளவுதான். கரமுண்டாரு வூடு மட்டும் எப்பமும் மாறல்லெ."

தீப்பொறி சுடர்ந்தது கலியன் பேச்சில். கோபம், தாபம் அதை மீறிய ஏதோ ஒரு...

"நாங்கரமுண்டாரு குடி சேந்தவந்தான். நான் ஓங்கிட்ட ஜாதி பாக்குறவனாடா கலியராஜு"

"நீங்க ஜாதி பாக்காம ஏப்டிங்க... இப்ப பேசுறப்பகூட 'டா' போட்டுத்தான பேசுறிங்க? ம்? ஒலகத்துக்கே இன்னும் சமதர்மம் வல்லிங்க. நீங்க எப்டிங்க ஜாதி பாக்காம இஞ்ச இருக்க முடியும்? நீங்கல்லிங்க இஞ்ச யாராருந்தாலும், இன்னும் நூறு வருஷம் ஆனாலும், எந்த சீர்திருத்தவாதி வந்தாலும், அஞ்சினி கிராமத்துல ஒண்ணும் பண்ண முடியாதுங்க... ஆனா இப்டியே போய்டாதுங்க, மாறாம எதுவும் அப்டியே இருக்க முடியாதுங்க... மாறித்தான் ஆவணும்."

"அது சரிடா கலியராஜு... இந்தக் காலங்காத்தால எஞ்ச பொய்ட்டு நீஞ்சிகிட்டு வர்றெ? மணல் திட்டுக்கு போயிருந்தியா ஏதுக்கு?" கிண்டலாகவே எழுந்தது தெலகராஜுவோட குரல்...

"வூட்ல படுக்க முடியலிங்க... மணல் திட்டுல போயி படுத்துக்கிர்றது... வூட்ல மாடு ஆடு கோளி பூனை மொசல்ன்னு

எங்கப்பாத்தாலும் ஏதாவது நிண்டிக்கிட்டும் ஓடிக்கிட்டும் கெடக்கும். வூட்டு முத்தத்தில படுக்க முடியாது. திட்டுல போயி ஆலமரத்தடியில படுத்துட்டா காத்து அருமையா இருக்கும். காலையில நீஞ்சி வந்துடுவேன். குளிச்சிட்டு கரை ஏறிடுவேன்..."

கலியராஜன் பேச்சு அத்தனை களங்கமில்லாமல் வந்தது. உள்ளே துருவினான் தெலகராஜு. உமாமஹேஸ்வரியின் லீலையும் இருட்டும் புனையலும் ஞாபகம் வந்தது. என்ன தைரியம்? ஆற்று நடுவில் ஒரு பர்லாங்கு அகலம் நீந்தி... ஜலக்ரீடை செய்து பின்னர் ஆற்று நடுவிலுள்ள நீண்ட மணல் திட்டில் ஏறி... மறுபடியும் மணலில் குழந்தைகளாய் நிர்வாணமாகி விளையாடி... உமாமஹேஸ்வரி தெலகராஜுவுக்கு அத்தை. கலியன் அவளை என்னென்ன செய்து எப்படியப்பட்டியெல்லாம் உருட்டி எடுத்து எதை எதையெல்லாம் மறந்து திளைத்து... மணலில் புரண்டு...

நிஜமாகவே கலியன்... அவனை அடைகிற பெண்... தெலகராஜு களங்கமற்று இதையும் காதலித்தான். எத்தனை பொருத்தமான கற்பனை. பொருத்தமான ஜோடி. கலியராஜன்–உமா. எந்தப் பொண்ணும் பெருமிதம் அடைய வைக்கும் ஆண் பிறவி கலியனுடையது. ஒரு கணம் இந்த நிஜம் கசந்தது. உமாமஹேஸ்வரியுடன் நெருங்காதபடி குறுக்கில் வந்து தன்னை வளைய வரும் காத்தாயம்பாளை கொஞ்சம் ஆச்சரியத்துடன் நினைவு கூர்ந்தான் தெலகராஜு. ஆற்றின் பரிசல் துறை கலகலத்துக் கொண்டிருந்தது. ஆள் கூட்டம். "ஆமா1 தெனமும் இந்த மணல் திட்டுக்கு நனைஞ்சுகிட்டே போயி நீஞ்சி கரை ஏறுனதும் தூக்கம் வருமா ஒனக்கு? தனியாருந்தா தூக்கம் வருமா?"

எதிர் கரையில் பஸ்ஸுக்கு பரிசல் துறையில் காத்து நிற்பவர்களை நோக்கி பஸ் ஒன்று ஆற்றுக்கரை மேட்டில் மேலேறி பள்ளத்திறங்கி மறுபடி ஏறி குதித்துக் கீழிறங்கி வருவது இங்கிருந்து மௌனப்படம் போல் தெரிந்தது. வெயில் மஞ்சளாகி வெள்ளையாகி விரிந்து பரந்து கொண்டிருந்தது. பரிசல்துறைக் குத்தகைகூட இன்னும் கரமுண்டாரு வூட்டு வகைதான்?

"அப்புறம் என்ன சங்கதி? எப்டி போவுது ஓம் பொளைப்பு எல்லாம்?" உபசாரமாய் பேசாமல் இந்த மௌனத்தை எப்படித்தான் உடைக்க முடியுமாம்? யோசித்து நின்ற கலியராஜனும் இந்தக் கேள்வியை எதிர்பார்த்தது போல் சந்தேகமுற்றான்.

"பொழப்புக்கென்னங்க? நெனைச்சா சம்பாத்யந்தான். நானு யாரு வூட்டுப்பள்ளனுமில்லியே. அது அந்தக் காலமில்லெ.

பள்ளக்குடியே ரெண்டுபட்டுக் கெடக்குது. ஒரு ரூவா கூட்டிக் குடுக்க மேல கீழ பாக்குற இந்தக் காலத்துலகூட கூலி பத்தி பேசாம பேசாம வேலக்கி போயிகிட்டு இருக்க வூடு எங்களுக்கு கரமுண்டமாரு வூடு மட்டுந்தாங்க. அஞ்சகூட நானு வேலைக்கிப் போறது இல்லிங்க. படிச்சதுனால யாரும் வேலைக்கி கூப்புடலெ... நீங்க டவுன்ல இருந்தவுங்க, அதுனால சொல்றேன். மொதல்ல படிச்சு காலேஜுக்குப் போனதும் வேலெ கெடக்காதுன்னு தெளிவாப் புரிஞ்சிது. இந்த ஜனங்களும் ஒத்துக்காது... எனக்கும் வேலைக்கிப் போவ இஷ்டமில்ல. அதுனாலியே கோழிப் பண்ணெ வெச்சேன். ஒங்குளுக்கும் தெரியும், என்னோட யாவாரம் முளுசும் நம்ப அஞ்சினியில கெடையாது. எல்லாம் திருவியாறு தஞ்சாவூரு அப்டித்தான்"

"அப்பறம்?" தெலகராஜு கவனமானான், அந்த அரசியல் புரிய. எல்லாம் அரசியலாச்சே இப்ப.

"அப்பறம் என்ன? கட்சிதான். ஏதோ நம்ப வூரு ஜனத்துக்கு ஏதாவுது நம்ப குடிக்கி பண்ண முடியாதான்னு ஒரு ஆசையில தொடங்குனேனா... இப்ப எல்லாருக்கும் வேண்டாதவனாப் போய்ட்டேன்னு வையிங்களேன்."

"காலாகாலத்துல ஒரு கல்யாணமும் பண்ணீட்டா..." என்ற பெரிய மனுஷ தோரணையில ஆரம்பிச்ச தெலகராஜுவெ கலியன் ஒரே வெட்டுல முறிச்சான். இப்டி.

"தல தெரிச்சவன்னு ஊர்ல பள்ளக்குடியில பேச்சாப் போச்சு. இனிமே யாருங்க பொண்ணு குடுப்பா? எனக்கே அது தெரியுங்க. அஞ்சினியில மட்டுமில்லங்க இந்த பத்துபட்டியிலயும் என்ன ஏத்துகிட்டு பொண்ணு குடுக்க ஆளு கெடையாது. சேப்பு கச்சிக்காரன் கொலகாரன்னு பேரு வேற இருக்கா? இன்னமும் அஞ்சினிக்கெல்லாம் எந்த மாறுதலும் வல்லிங்க. பள்ளனுவ மட்டும் பத்து கச்சில சேந்துகிட்டு ஆடிகிட்டு இருக்கானுவங்க. ஒண்ணுமே தேறல. நானும் மேடைபோட்டு சொல்றேன்,கூட இருந்து கத்துறேன் பள்ளகுடிவள்ள போயி பேசிக் கூட்டித்தாம் பாக்குறன். ம்ஹூம். எலக்சன் வரலைன்னா கேட்டுகிட்டாவுது நிப்பானுங்க. எலக்சன் வந்துச்சின்னு வெய்ங்க. எல்லாம் நெல்லிக்கா மூட்டையா செதறி ஓடிப்புடுவானுவங்க. ஒங்குளுக்குப் புரியும். இஞ்ச எவனுக்கும் இதெல்லாம் ஒண்ணும் ஏறாதுங்க. எவனுக்கும் இப்பமும் சோறுபோட்டா போதுங்க. எது வேணும்னாலும் செய்வானுங்க. இஞ்ச இயக்கத்தெ கட்டணும்ம்னு தலைவருங்க எல்லாம் சொல்றாங்க. ஆனா யாரும் எங்கிட்ட வந்து

எங்கப்ரச்னையெ கேக்கறதேயில்ல. அவுங்க கச்சிய கட்டணும், அதுக்கு கூட்டம் வேணும். ஆளு வேணும், அவ்வளவுதான். வயல்ல வந்து எங்குளுக்காவ கூலி கேப்பாங்க. கூலியோட எல்லாம் முடிஞ்சா போச்சி?"

"கலியராஜன், வேற என்ன வேணும்ங்கிறே..." என்றான் தெலகராஜு.

"கொத்தடிமை தீந்துட்டுது. ஜாதி பொய்ட்டுது. எல்லாரும் எல்லாம் வாங்கிக்கலாம், உரிமை கெடச்சுடுச்சின்னெல்லாம் நானு நம்பத் தயாரில்லிங்க. அதே பழய மிராசு மிட்டாதாங்க. அதே அதிகாரம் பணம் எல்லாம் வேற மாதிரி வழில வருது. கட்சியெல்லாம் பணம். யாரு யாரோட கூட்டணின்னே புரியாது போங்க. ஜனநாயகம், சோஷயலிசம், தொழிலாளர் சர்வாதிகாரம்ன்னா எத்தினியோ கனவு. நாளைக்கே எல்லாருக்கும் சோறு. எல்லாரும் எல்லாருக்குந்தான், எல்லாருந்தான் எல்லாருக்கும்ன்னு எத்தனை பேச்சுங்க? எப்பமும், எதுவும், இதெல்லாம் வராதுங்க. ஆனா வேற வழியும் இல்லிங்க? ரொம்ப பேருக்கு நானு புடிக்காதவனாப் போனதுக்கு இதுவும் காரணந்தாங்க. நீயே கட்சி வெச்சிகிட்டு நீயே ரெண்டுந் தப்புன்னு பேசலாம்ங்குறாங்க... எங்கம்மா மட்டும் இன்னும் கரமுண்டாரு குடியில வந்து சேருடான்னு வேலைக்கி கூப்புட்டுகிட்டே இருக்குங்க. மனுஷனுக்குள்ள ஒஸ்த்தி தாழ்த்தி இல்லென்னு சொல்றாங்க. ஆனாக்க அது எஞ்சியுமே நடப்பு இல்லெங்க. டவுன்ல ஒண்ணா ஒக்காந்து காப்பி குடிக்கிறாங்க. நம்பூர்லயும் ஒண்ணா நம்ப ஐயரு கெளப்புல ஒண்ணா குடிக்க உட்டாங்க. கோயில்ல சமபந்தி நடக்குது. மந்திரியுவ கூட ஒக்காந்து சாப்ட்டா போதுமா? எல்லாம் ஒண்ணுதான்னு ஒரு தோணல உண்டாக்கியாச்சு. உண்மையாங்க? அது?"

"அப்ப பின்னெ என்ன பண்ணணும்ங்கிற நீயி? இன்னும் நீ பேசாதது கலப்புத் திருமணந்தான். மத்த அரசியல் எல்லாம் பேசீட்ட. யாரு வேணும் ஒனக்கு? சொல்லுடா. யாருமாட்டேங்கிறாங்க? யாரு ஒனக்குப் புடிச்சிருக்கு?"

ஒரு நீண்ட மௌனந்தான் கழுவேறிப் போச்சு. கலியராஜன் கண்களில் விஷம். பகை. அவன் தோள்கள் விம்மின. அடக்கிய பல விஷயங்களின் கரடுமுரடான மோதல்... அவனை வெளிப்படுத்திவிடுமோவென அஞ்சலுற்ற இவன்... தெலகராஜனும் பெருமூச்சுடன் மோதலுற்றான். வெய்யல் ஏறி சுட்டது உச்சியில். நெற்றியில் சுடர்ந்தது வியர்வை. குறுவடிசல். கலியராஜன்

கண்டுபிடிக்கப்பட்டது, கலியராஜனை விக்கித்துவிட்டது. புரிந்து கொண்டது. இவன், தெலகராஜனுக்கும் அறிந்து கொள்ள முடிந்தது.

"எனக்கு எல்லாம் தெரியும் கலியா."

"என்னது?" கலியராஜன் கண்களில் கலவரம், பயம்? அடிமை வெறி... பகை.

"ஆமா. ஆனா நாளைக்கே நானு தஞ்சாவூருக்குப் போய்டுவேன். எனக்கு ஒண்ணும் உம் மேல வருத்தமேயில்லெ. பாவம் நீயி"

"என்னங்க?" உளறினான் கலியன். வேறு ஒண்ணும் வார்த்தை வரவில்லை. "ஆமா, கலியன். உமாமஹேஸ்வரியும் நீயும் இனிமே மணல் திட்டுக்குப் போகாதீங்க... யாரும் தெரிய முந்தி ஒரு முடிவுக்கு வாங்க... சாகாதிங்க... கண்டவன் கண்பட்டு... அழியாதிங்க, பாவம் உமா, ஒரு ஒடம்பெ வெச்சுகிட்டு ரொம்பப்பாடு படுது. அது அதுவளப் போட்டு பொரட்டி எடுக்குது? என்னோட ஒடம்பெ வெச்சுத்தான் நானும் அதெத் தெரிஞ்சுகிட்டேன். புத்தி வேற, மனசு வேற, ஒடம்பு வேறயா தனித்தனியா தனித்தனிப் பக்கமா... புடுங்கி எடுக்குது. எனக்கு எது சரி? எது தப்பு?ன்னு எப்பவும் தெரிய வராது. ஆனா நீயி சொல்றது நெஜம். நீ ஆசெப்பட்டு தேடுறது உனக்கும் உமாவுக்கும் கெடைச்சாச்சு. என்னெ மாதிரி மாட்டிகிட்டு இத்தையும் வுடமுடியாமெ அதையும்விடத் தெரியாமெ. பதுங்கிகிட்டு நின்ன எடத்துலியே நிக்காதிங்க. இருந்திங்கன்னா... தெரிஞ்சுடும். இப்பவே தெரியும்ன்னு தோணுது. உமாவெ இழுத்துகிட்டு ஓடிடு. இனிமே இஞ்ச நின்னா இதயெல்லாம் ஞாயப்படுத்தி எல்லாருக்கும் புரிய வெச்சு, வெளங்க வெச்சு வாழ முடியாது. உமாவெ கொடலெ உருவி எடுத்து உத்துரக் கட்டையில தொங்க உட்ருவானுவ. ஓடிருங்க. ஒன்னெ. சந்து சந்தா களிச்சு குமிச்சுடுவானுவ. அப்றமா அரசியல் சாயம் பூசி அவன் அவனும் உருவ... முடிஞ்சதெல்லாத்தையும் உங்க, கதையிலருந்து உருவிப்புடுவானு. ஓடியே போய்டுங்க. நானும் கள்ளப் பயதான், நாளைக்கே நானும் எனக்கும் அது ஞாபகம் வந்தாலும் வந்துடும். ஓடிப் பெய்டு கலியராஜு" கலியராஜ் அயர்ந்து நின்றான். வெய்யல் மணலோடு சேர்ந்து எரிக்கத் தொடங்கியது. கண்ணுக் கெட்டிய தூரம் மனிதர்கள் யாரையும் காணோம். ஆற்றோரத்து மேட்டில் காணோம். ஆற்றோரத்து மேட்டில் கட்டை வண்டிகள் சாரிசாரியாகப் போக ஆரம்பித்தன.

"ஏய் கலியா. ஏம் பேசாம அப்டியே நிக்கிறெடா? என்ன ஆச்சு?"

"... ... ..."

"சரி ஒண்ணாலெ பேச முடியாது. பேச உடாது. நாம் போறேன். நாளைக்கே நானும் தஞ்சாவூர் பொறப்புட்டு போறேன். என்னால இனிமே இஞ்ச இருக்க முடியாது போல இருக்கு. நான் பண்ணுன தப்பு நீயும் பண்ணீடக் கூடாதுடா. யோசிச்சு ஆராஞ்சு பாத்துகிட்டு நிக்யாதெ. தெரியும்ல்ல? நின்னு நிதானிச்சு ஊரைத் தூக்கி உத்தரத்துல வெக்கிறதா நெனைச்சிகிட்டு நிக்காமெ உமாமஹேஸ்வரியெ இழுத்துக்கிட்டு ஓடிப்போ... அப்பத்தான் உனக்கு வாழ்க்கை ஆரம்பிக்கும். ஒனக்கு இதையெல்லாம் சொல்றப்போ என்னால... என்னாலஞ் காத்தாயம்பாளோட என் இஷ்டம் போல ஓட முடியாதுங்கிறது பயங்கரமா ஞாபகம் வருது. அஞ்சினி உன்னைத் தாங்காது. ஆனா என்னெ வுடாது. போய்டு. ஓடிப் போய்ட்டாத்தான் நீ தப்பிக்கலாம்."

"... ... ..."

"எது சரி எது தப்பு? அதெ உன் புத்தி சொல்லும்... ஆனா புடுங்கலே வேறபக்கம் தான்டா இருக்கும். உமா இனிமே உன்னெ உடமாட்டா. ஒருத்தரை ஒருத்தர் வெட்டிகிட்டு சாவாதிங்க. ஓடிடுங்க இனிமே டவுனுக்குப் போனாத்தான் வாழலாம் நீயி. இஞ் சல்லாம் நூறு வருஷத்து பழசுதான் ஆயிர வருஷமா உயிரோட இருக்கு. ஓடிப்போய்டு."

"... ... ..."

"பேசுடா, கலியா பேசு."

"என்னெ மன்னிச்சுடுங்க ஸார். உமாமஹேஸ்வரியெ நான் இழுத்துகிட்டு ஓடமாட்டேன். எங்கம்மாவை கொன்னுடுவானுவ. வக்யப் பிரியெச் சுத்தி ஏந்தங்கச்சிவள கொளுத்தி குடுசை குடுசையா பத்த வெச்சுருவானுவ ஸார். ஜாதிக் கலவரமாக மாத்தி இஷ்டத்துக்கு என் ஜாதி ஜனத்தெ வெட்டிக் குமிச்சுடுவானுவ? நானும் உமாவும் ஓடு ஓடுன்னு ஓடி எஞ்சப் போறது? அவளெ உசிரோட இதே ஆத்து மேட்டுக்குள்ள பொதச்சு கிட்டிச்சுப்புடுவானுவ. ஒருனா நானும் இதுக்கெல்லாம் காரணமாயிடுவேன். பள்ளு பற பதுனெட்டு ஜாதியும் பத்துப்பட்டி பள்ளனுவுளும் வெட்டிக்குவானுவ. ஒண்ணும் அடங்காது. கனிஞ்சு கனிஞ்சு எரியும், கொளுந்து வுட்டு எரியும்.

"அடப்பாவி. அப்ப இஞ்சியே மாட்டிகிட்டு இஞ்சியே அழியப் போறியா?"

“இதெத் தாங்க நானு அந்த உமாகிட்ட கேட்டேன். பரவால்லெங்குது”

“பரவால்லியா? என்னடாது?”

“ஆமாங்கிறனில்ல... எல்லாருக்கும் தெரியட்டுங்கிது... வாண்டாம் வாண்டாம்ன்னு சொல்லிச் சொல்லிப் பாத்துட்டேன். வவுத்துப் புள்ளையோட வெட்டட்டும். அதுதான் எனக்கு வேணும்ங்குது உமாமஹேஸ்வரி. ஒரு மாசமா நாங்க ரெண்டு பேரும் அதுக்குத்தான் காத்துகிட்டு நிக்கிறோம்ங்க...”

“சின்னக் கரமுண்டாருக்குத் தெரிஞ்சா...”

“அவருக்குத்தான் மொதல்ல தெரியணுங்குது உமாமஹேஸ்வரி”

“ஏன்டா இந்த மாதிரி?”

“வேற எப்டிங்க? கரமுண்டமாரு வூட்டுக்கு வெளிய எப்டிப் பொளைக்க முடியும் நாங்க? ஒண்ணு ஓடணும். ஓடி என்னா பண்ண? எங்களுக்கு பயமில்லெ. தைரியமா எதுத்து நிப்போம். சாவோம். இது ஒண்ணும் காதலு இல்லிங்க, ஓடிப்போறதுக்கு. எப்படியும் வெளிய தெரியும். தெரியணும். தெரியவப்போம் நாங்க மட்டும்”

“வேற வழியே இல்லியா?”

வேற எதுக்குங்க வழி? பதுனஞ்சு வருஷமா கட்டுன கட்சியும், நூறு வருஷம் ஆயிரம் வருஷம் கட்டுன ஜாதியும் எதுக்கும் அழிக்கும்ன்னு ஒளிஞ்சு ஓடணுமா? இதென்னங்க யாருமே ஒத்துக்கப்போறதில்லெ. கரமுண்டாரு வூட்டுப் பழி வேற... இதெல்லாம் யோசிச்சு ஒண்ணும் பிரயோஜனமில்லென்னு தெரிஞ்சுதான் எறங்கியிருக்கோம் போங்க.”

“வாண்டாம் கலியன். ஓடிப் போயி தப்பிச்சுக்கலாம். அவளையும் வாழ வைக்கவும் ஏதாவுது டவுன்ல வாழமுடியும். உன்னெப் போல ஒரு புத்திசாலி தைரியசாலி இப்டி சாவுறது...

“இப்ப மட்டும் என்ன வாழ்றோமா? கரமுண்டாரு வூட்டு மருமவளோட உமாவோட வாழ உட்ருவாங்களா? டவுன் டவுன்ங்கிறிங்களே அஞ்ச இன்னும் மோசம். அஞ்ச எத்தினி ஜாதி இருக்கு தொரத்த. டவுன்ல இருந்தா கரமுண்டாருவ உட்ருவாங்களா? டவுன் காப்பாத்திடுமாங்க? ஒரு வூட்டுக்கும் அடுத்த வூட்டுக்கும் சொந்தமே இருக்காதுங்க. எவஞ் செத்தா என்ன? எவன் இருந்தா என்ன?ன்னு அவ அவன் தனிய்யா மூடிகிட்டு பொத்துகிட்டு பெளைக்கிற வியாபாரந்தாங்க டவுனு.

எல்லாத்துலியும் பொது உடமை பொதுன்னு பேசுவாங்க. எங்கியாவுது அப்டி கூடி வாழ முடியுதா? பொண்டாட்டி ஏந்தம்பி ஏ அண்ணன், ஏ வூடு, ஏ வாசல்ன்னு சமுதாயத்துல ஒவ்வொருத்தனும் தனித்தனிய்யா முழுசு முழுசா இருக்கப் பாக்குறானே தவுர பொதுமனுஷன் யாருங்க? எஞ்ச இருக்காம் உறவுல இல்லாத பொதுவுடமை. எப்படிங்க சொத்து சொவத்துல வந்துடுமாங்காட்டியும், அதாங்க. இதெல்லாம் எழுதிப் படிக்கலாம் பேசலாம், நடக்க முடியாதுன்னு உலகம் பூராவும் நிரூபிச்சுட்டே மனுஷன் தன்னந் தனியா நீங்க சொல்றாப்ல எவளோடயாவுது எப்டியாவுது ஓடிகிட்டே இருக்கான். இதுகூட தனி மனுஷ குத்தமில்லீங்க. ஒரு சமுதாயமே ஆடுற தப்பாட்டம்."

"இவ்வளவும் புரிஞ்ச நீயி, அப்ப ஏன் அந்த உமா பொண்ணெ கெடுத்தெ?"

"உங்களுக்கும் புரியாதுங்க. கெடுக்கறதுன்னா என்னங்க அது. கட்டுன புருஷன் மேல இன்னும் ஆசை வெச்சிருக்க சாதாரண அடிமைங்க அது. புரியாது. என்ன பண்ண? ஒலகம் முழுசும் பொண்ணு அடிமைதான. எப்பமும் சமுதாயம் அது எந்தச் சமுதாயமும் பெண்ணெ இனிமேகூட அடிமையாத்தான் வெச்சிருக்கும்,வெச்சிருக்கு. அது ஓடம்பு தாங்கல்லெ. அது பசிக்கிது, எரியுதுன்னு யாருக்கும் புரியல. திமிரெடுத்து ஊர் மேல போனாம்பாங்க. உமாமஹேஸ்வரியெ தனிய்யா உட்டுட்டு பத்து வருஷமா வயித்துக்கு சோறு போட்டு, பட்டு கட்டி, நகை பூட்டி, வூட்டுக்குள்ள மூடி வெச்சிருந்தானே கரமுண்டான். அப்ப ஞாபகம் இல்லியா உமா ஒரு மனுஷின்னு. ஏங்க? தைரியமா தப்பு பண்றோம்ன்னு சொல்வீங்களே? தப்புன்னு பண்றதுக்கு யாருங்க காரணம்? மோட்டார் பைக்க ஒண்ணு இருக்குன்னு, எடுத்துகிட்டு ஊர் சுத்த வேண்டியது. அது வூடு தங்காம சுத்துறில்ல, பொண்டாட்டியவும் இளுத்துகிட்டுச் சுத்தேன். நீ என்ன ஆண்டியா?"

"ஆமா அப்ப? சுப்பாக் கரமுண்டாரு... அவரு ஒண்ணும் தப்பு இல்லெ. அவரு ஒரு ஆம்பளைதான்-நல்ல கெப்புறான ஆம்பளைதான்-ஒடம்புல கோளாறு இல்லெ. கரமுண்டாரு வூடு அவரெ மூளியாக்கிடுச்சி"

"என்னடாது? வூடு என்னா பண்ணனுதாம்?"

"என்னெத்தெச் சொல்லச் சொல்றிங்க? பத்துப் பன்னண்டு வயசுலியே பள்ளச்சிவளோட திரிஞ்சாராம். கரமுண்டாரு வூட்டுல

வூடு தங்கினதே இல்லியாம். கடைக்குட்டிய செல்லம் வேற. நாப்பது வயசு வரைக்கும் பள்ளக்குடில புள்ளெ குடுத்தா அப்புறம் கரமுண்டாத்திகிட்ட எங்க போயி புள்ளெ பெக்குறதாம்?இப்ப ரொம்ப ஒழுங்கு எஞ்சியும் போறதில்ல..."

"அடப்பாவி. இப்டி பச்சையா சொல்றியே."

"எங்கியும் இதேதாங்க நடக்குது. மஹாபாரதத்துல குந்தி பெத்தது இப்டித்தான். பின்ன ஏன் பள்ளச்சிவளெ தடுத்துக்க முடியல்லியாம் எங்களால? எரிச்சலாத்தான் இருக்கு. யாரால தடுக்க முடியும்? இதுல ஜாதி ஏது? எந்தக் காலத்துல எவன் ஒழுங்கு முத்துன வாளக்காயா இருந்திருக்கானாம். போங்க நீங்க. ஒங்குளுக்கு என்ன தெரியும்? நீங்களும் பள்ளக்குடி சுத்துறிங்க. தெரியாதா? மானங்கெட்டுப் போயி இல்லிங்க, தப்பு தவறுன்னு சொல்றவன் எந்தக் காலத்துல அதே தப்ப அவனே பண்ணாம இருந்தானாம்? சுப்பாக் கரமுண்டாரு பாவம். அவுங்க தாத்தாவுக்குத் தாத்தாகூட பள்ளக்குடியில புள்ள குடுத்த ஆளாத்தான் இருந்துருக்காரு. கேட்டா ஒளுங்கு ஞாயம் வேதம் தத்துவம் தர்மன்னு பேசுவிங்க. அப்டியில்லை, கரமுண்டான் ஓஸ்த்திம்பிங்க. கேசு போடுவிங்க. ஒதப்பிங்க கொல்லுவீங்கல்லெ. அதான் உங்களால முடிஞ்சது"

"அப்ப சுப்பாக் கரமுண்டாரு முடியாத ஆளா? அதைச் சொல்லு?"

"அப்டியில்லிங்க. தனிய்யா உட்டுட்டாரு. வூடு தங்கறதேயில்ல. ஏன் இப்டி ஊரெ சுத்தி வர்றாருன்னு இன்னும் எனக்கும் புரியல்லிங்க. பாவம், உமா அழுதுகிட்டே காவிரிக் கரையில வந்து மடுவுல குதுச்சிரிச்சு... திட்டுல நான் பாத்துகிட்டு இருந்தது தெரியாது... நடு ராத்திரில ஓடி வந்து சாகலாம்ன்னு குதிச்சிருக்கு... நான் பாஞ்சு நீஞ்சி தூக்கிட்டு வந்து மணல் திட்டுலேயே போட்டேன். மாட்டிகிட்டேன். ஞாயம் எல்லாம் சொல்லிப் பாத்தேன்... நேரமில்ல... மாட்டிகிட்டேன். இந்த தப்பு, தவறு, ஜாதி, மதம் ஒண்ணும் அஞ்ச நொழைய முடியல. ஆரமிச்சுட்டோம்... யோசிக்கல, யோசிக்க முடியல. என்ன நடக்குதுன்னு தெரியல... இப்ப? இனிமே? இதக்கு ஒரு ஞாயம் பேச நானோ அவளோ தயாராயில்ல. அவ வயத்துல புள்ளயும், உண்டாயிருச்சி. தெனமும் வர்றா. திட்டுக்கு நீஞ்சிப் போயிகிட்டே இருக்கோம். மணல் திட்டுதான் இப்ப எங்க வூடு ஒலகம். நாங்க இனிமே சாகறது ஒண்ணுதான் பாக்கி... நீங்க சொல்ற மாதிரி ஓடிப்போயி எங்கியும் வாழ முடியாது. வேணும்னா இப்டியெல்லாம் நடக்கலென்னு புளுவிகிட்டு இதே

எடத்துல திருப்பித் திருப்பி மணல்ல கெடந்து உருண்டுகிட்டே எங்களையும் ஏமாத்திக்கலாம்." மணலில் உட்கார்ந்திருந்த கலியராஜுவும் தெலகராஜுவும் மௌனமானார்கள். அளவுக்கு அதிகமாகவே ரெண்டு போரும் பேசி களைத்துப் போனார்கள். தெலகராஜுவுக்கு யோசிக்கவே பயமாய் இருந்தது கலியனப் பத்தி. கலியன் இதையெல்லாம் அஞ்சினியில யாருகிட்டயாவுது பேச முடியுமா? பேசப்படுமா? சுப்பாக் கரமுண்டாரோட ஞாபகம் வருது. என்ன அழகான ஆம்பளை அவரு. பள்ளக்குடிக்குத் தேடிகிட்டுப் போன ஆளாவே தெரியல்லெ. வெளிய கூட எஞ்சியும் தப்புத் தண்டாவுக்குப் போற ஆள் இல்லெ. ஆனா ரொம்ப ஒஸ்த்தியான பொருள் ஒண்ணு இருந்தா... அதுக்குப் பின்னால ஒரு ரொம்ப தாழ்ந்த சூழ்நிலை எப்பவும் இருக்கும். எப்போப் பார்த்தாலும் ஒரு கேணிப்பட்டறையில ஏறிகிட்டு சுத்திச் சுத்தி வருவாரு. சில்க்கு ஜிப்பா, மெல்லிசா உள்ற தெரியிற நைசான சிங்கப்பூர் பனியனுக்குள்ளகூட தெரியிற சிவந்த கட்டுவிடாத மேனி. ஒருவிதான ஆம்பளைத்தனம் தெரியாத, ஆனா, ஆண்மை கோமளமா தெரியிற ஒரு கருக்கான மனுஷன். ஆம்பளைகளே ஆசைப்படுற திண்மை. எல்லாம் ஆச்சர்யந்தான். உமாமஹேஸ்வரி எப்டி ஏங்கயிக்கும்? இந்த அருமைக்குள்ள இருக்கிற ஆபத்து, இல்ல இல்லென்னு இப்பத்தானே தெரியுது.

தெலகராஜுவுக்கு எல்லாமே சந்தேகம். அவன் பொறந்த ஜாதி அப்டி. இப்டி இருன்னு அவங்கிட்ட யாரும் சொல்லிக் குடுக்கல்லெ. இதோ கலியன் எல்லா வரம்புகளையும் மீறிகிட்டு பாயல்லெ? அவன்கூட படிச்சு பட்டம் வங்கினவன்தான். அவனாலெ எப்டி இப்படியெல்லாம் இருக்க முடியுது? பி.ஏ.படிச்ச பயன்னா இவனெ யாரு நம்புவா? அவனோட லட்சியங்கள் கோழிப்பண்ணெ, அரசியல் தலைவர், வட்டத் தலைவர் உத்யோகம், பள்ளக்குடில சீர்திருத்த அலையிற அலைச்சல், உமாமஹேஸ்வரியோட தொடர்பு, அம்மாமேல, ஊரு மேல, மண்ணு மேல பாசம், கம்யூனிஸம், பள்ளக்குடிய ஒசந்தணும்ன்னு ஆசெ ஒரு பக்கம்... இன்னொ பக்கம் மனுஷப் பிறவியெயே மனுஷப் பிறவிகளோட மோதி, ஒயரத்துல ஏற முடியலயேன்னு ஆதங்கம். இப்புடி எப்பவும் மனசு கொள்ள ஒரு புயல். உள்ளுக்குள்ள எப்பமும் ஒரு சொழல் சொழட்டியடிச்சுகிட்டேயிருக்கும் போல இருக்கு. கலியனெ வெளியில பாத்தா ஒண்ணுந் தெரியலெ. அரசியல்காரன் அரசியல்வாதி தலைவன்னு எல்லாம் ஊர்ல சொல்லிக்கிறாங்க. ஆனா அவங்க பேசின அப்புறம் இவன் அரசியல்வாதிதானா? தலைவந்தானான்னு சந்தேகம் வருது.

அவனே அவன் நம்பிக்கை எல்லாத்தையும் ஒடைச்சுப் போடுறானே... படு முரடன்... மோசமான எதிரி மாதிரி தோற்றம். பழகினா எடுப்பார் கைப்பிள்ளையா ஓடிவர்றானே? இவனுக்கு உமா எப்டி பொருத்தம்ன்னு தோணாம இல்லெ... ஆனா தனக்கு காத்தாயம்பா மட்டும் எப்டிப் பொருத்தமாம்... அஞ்சியுந்தான் இடிக்குது.

ஆற்றங்கரை வெள்ளை வெளிச்சத்தால் பிரகாசமாய் சூரியன் உச்சி ஏறயேற உஷ்ணத்தால் விரிந்து கொண்டேயிருந்தது. தெலகராஜனுக்கு வூட்டுக்குப் போகணும்ன்னே இல்லெ. கலியனோட இன்னம் பேசிக்கிட்டேயிருக்கலாம்ன்னு தோணுது. அஞ்சினியில இவனை மாதிரி ஒரு தயாரிப்பு உண்டாக முடியுமா? தெரியலை. ஆனா ஆச்சரியமான சந்தோஷம். ஆனா இவனையும கரமுண்டாரு வூடுதான் பெத்துருக்கு. சொல்லப்போனா நிஜமான தயாரிப்பு இவந்தான். அஞ்சினியில நெஜமான மனுஷன்... எப்பமோ வால்ட் விட்மன்ங்கிற கவியோட படத்தை, கவிதையோட பாத்தாப்ல இருக்கு கலியன் தோற்றம். ரெண்டு பேருமே ஒருத்தரை ஒருத்தர் ஆச்சர்ய சுகத்ல தள்ளி வுட்டாப்ல ஒருத்தரை ஒருத்தர் பாத்தே சந்தோஷப்பட்டுகிட்டு இருந்தாங்க. அஞ்சினிக்கி வந்ததுல இருந்து... அதுவும் காத்தாயம்பாளப் பாத்ததுல இருந்து... வேற மனுஷனா ஆகிப் போயிருந்த தெலகராஜ கீழ எறக்கி காத்தெ சுவாசிக்கிற சாதாரண மண்ணு மனுஷனா ஆக்கியிருக்கானே கலியன், இஞ்ச யாருக்காவுது புரியுமா? கலியனெ இஞ்ச யாரும் ஒத்துக்கமாட்டாங்கதான். தன்னையும் ஒத்துக்க மாட்டாங்கதான். ஆனா இப்ப அவன் அஞ்சினி மாப்புளை. அந்த கவுரவமும் ஜாதியும் கெப்புறும் பெரிசு. கள்ளன்லியே அவன் வடக்கத்திக் கள்ளனாச்சே! இப்ப அவன் ஜாதிக்குள்ள பெரிய ஜாதி, ஒஸத்தி. இதெ அவனுக்கு சொல்லிக் குடுத்ததே காத்தாயம்பாதானெ? ஆமா அஞ்சினியில இதுக்கெல்லாந்தான் தனிகானம்!

அஞ்சினியிலியும் கலியன்.

மண்ணுன்னு ஒண்ணு இருக்கு. பூமிக்கு வாங்கன்னு கொண்டு வந்து நிறுத்தியிருக்கானே தன்னெ, ஆச்சரியம்தான். கனவு மாதிரியிருக்கு... இதெல்லாம் அஞ்சினியில தானா நடக்குது? ஆமா ஆயிரம் வருஷமா கள்ளனுவ இப்புடித்தான் வாழ்ந்துகிட்டு இருக்கானுவ. இப்புடி ஒண்ணடி மண்ணடியா வாழ்ந்தாலும் அதுக்குள்ற ஒரு ஒஸ்த்தி, மட்டம், அப்புறம் வூட்டுக்குள்ற வந்தா அஞ்சயும் ஒஸ்த்தி காத்தாயம்பாதான். அம்மன்! கரமுண்டாரு வூட்டுப் பொம்பளைவளே இப்டி எனக்குள்ள எனம் பாத்துதான்

உயிரெ வெச்சிகிட்டு இருக்குதுவ. காத்தாயம்பாளுக்குத் தெரியாதா கலியான் யாரு மவன்னு? கலியன் அம்மா யாருகிட்ட கலியனெ உண்டாயிகிட்டான்னு தொரச்சியம்மாயி சொல்லுமே... உண்மை எரியிது. காலம் மாறிகிச்சு! இவுங்களும் மாறிகிட்டாங்க. ஆனா மாறுனதெ ஒத்துக்கமாட்டாங்க. இப்ப கலியனுக்குக்கூட இந்தப் பெருமையில்லை வேண்டியிருக்கு? ஜாதி கூடாதுங்கிறோம், ஆனா நம்மோட தனித்துவத்தை தமிழுங்குறோம், தெக்குத்தியாங்கிறோம், காங்கிரஸ்ங்கிறோம் அரசியல்ல, ஏன் ஊழல்? தத்துவத்துல ஏன் மாற்றம்? விஞ்ஞானத்துலகூட ஏன் இப்பல்லாம் தடுமாற்றம்? 'மனுஷன் வாழ்ற குழு-கும்பல்-கூட்டம். சமத்துவமா வாழ மனுஷனுக்கு எப்பமும் இந்த பத்தாயிரம் வருஷங்கள்ளெ ஆசெ இருந்ததேயில்லெ. ஒண்ணெ குலம், ஒண்ணெ தேவன் இப்படிங்கிற கோஷம் எல்லாம் அப்டியில்லென்னு தானே காட்டுது? எங்கே தர்மம்ல்லாம் ஜாஸ்தியா வேண்டியிருக்கு? அது இல்லாத எடத்துலதானே?

இரண்டு பேருக்கும் இடையில் இருந்த காற்றும் உஷ்ணமாயிருந்தது. காவிரி இரண்டு மயில் குறுக்களவில் ஓடுறதுனால தண்ணி மேல பாஞ்ச வர்ற காத்து குளுமை இன்னும் பரவிகிட்டேயிருக்குது. அதோட இனிமே உஷ்ணக் காத்தும் கலக்கும். ஆனா மத்தியானம் மூணு மணிக்குமேல மறுபடியும் உஷ்ணக்காத்து அஞ்சு மணி வரைக்கும் அடிச்சுகிட்டேயிருக்கும். கவரமேட்டு மணல் பூரா நாள் முச்சூடும் பாலைவனமா அனல் வீசும். குறுக்க கடந்து ஆய்குடி போறவங்க காலு பழுத்துடும். ராத்திரிலகூட கவரமேட்டு சூடு அலையா அப்ப அப்ப வீசும்பாங்க.

தெலகராஜு ஏந்திரிச்சு நின்னான். எந்திரிச்சுகிட்டே "கலியராஜன் நாம் போறேன். இனிமே அஞ்சினியிலகூட நாம சந்திக்க முடியும்ன்னு தோணல. எவனாவுது இதுக்கும் அர்த்தம் வெப்பாங்க. ஆனா. நிச்சியமா நீ வாழணும், தப்பிக்கணும், ஜெயிக்கணும்ன்னு நான் ஆசெப்பட்றேன். அது மட்டுந்தான் என்னால முடியும். ஆமா. நான் ஒரு பழய குடும்பத்து புது புட்டி. உள்ற ஒண்ணும் இல்லப்பா. ஒன்னெப் போல என்னாலியும் வாழ்க்கையோட போராட முடிஞ்சா எவ்வளவோ நல்லாயிருக்கும். ஆனா நானும் கரமுண்டாரு வூட்டுக்குள்ள காத்தாயம்பான்னு ஒரு முண்டைகிட்ட சிக்கிக்கிட்டு இருக்கேன். உன்னெப் போல அவள இன்னும் நான் பூரணமா பாத்ததுகூட கெடையாது. தொட்டா தூக்கி எறிஞ்சுடுவா. குப்புற வுழுந்து புரளுவேன். எட்டு பத்து வயசுலருந்து வளத்துகிட்டது இதெல்லாம். என்னெ

எங்கம்மா கரமுண்டார் வூட்டோட சேத்து கட்டீருக்கு. என்னால மீறிகிட்டு வரமுடியல. இதெ உன்னெப் பாத்துத்தான் தெரிஞ் சிகிட்டேன். ஆமா. இது உனக்கு மட்டும் புரியும்ன்னு எனக்குத் தெரியும், வரட்டுமா." என்றபடி புளியமரங்களுக்கிடையில் தெரியும் அஞ்சினியை நோக்கி நடந்தான் தெலகராஜு. திரும்பிப் பார்க்கவில்லை. கலியனால எதுவும் சொல்லவே முடியல. கலியன் சிரித்துக்கொண்டான். எல்லாம் எல்லாமே இப்டித்தான். எல்லாமே நாம்ம போடுற கணக்கு மாதிரி வழி புரிஞ்சிட்டா கணக்கு கணக்கே இல்லெ. விடை தெரியுது. வழி தெரியலெ. ஆத்து ஓரமாவே நடந்தான் கலியனும். ஆஞ்சினிக்குள்ள அவன் அதிகமா போறதில்லெ. யாருகிட்டயும் காரணமில்லாமெப் போசறதுமில்லெ. கரமுண்டாரு வூடு தூரத்துல தெரியுது. ஆத்துக்குள்ள கம்பீரமான பாதி வூடு தண்ணீல மொளச்சது மாதிரி கம்பீரமா கோட்டை மாதிரி நிக்கிது. வாழ உடமாட்டானுவ, மனுஷனுவ. உண்மையில பாக்கப் போனா கலியனும் கரமுண்டாரு வூட்டு கார்வாரிவள்ள ஒருத்தனாத்தானே இருந்திருக்கணும்? கரமுண்டாரு தெருவு நீண்டு கெடக்கு. ஆத்தோரம் போவாம இப்ப மணல்ல எறங்கி நாணங் காட்டுக்குள்ள பூந்து தண்ணிக்குள்ள எறங்குனான் கலியன்.

“யாலா. எங்கப் பெய்ட்டு வர்றடா? இந்தப் பக்கம் ஆயியெப் பாக்கணும்ன்னு இல்லியாடா ஒனக்கு?”

பேச்சு வந்த திசையில் திரும்பினான். பேச்சி... அவன் அம்மா படித்துறையில் கரமுண்டாரு வூட்டு துணி ஒரு அம்பாரம் குமிச்சிகிட்டு தொவச்சுகிட்டு நிக்கிறா.

“யாம்மா. என்னா வேணும்?”

“இப்படியே திரியிரியாடா? எப்ப கண்ணாலம் பண்றது? ஒப்பனும் இந்தப் பக்கம் வாரது இல்லெ. நீயும் வர்றது இல்லெ. ஏன்டா மானங்கெட்ட நாயிங்களா?”

“ந்தா. நீயி ஆரமிச்சுடாதெ. கண்ணாலம் கண்ணாலம்ன்னு பேத்தாத. எனக்கு எவம் பொண்ணு குடுப்பான்? நீயி வேற, இதே பொலம்பல் பொலம்புற.”

“ஏன்டா பொண்ணு இல்லெ? நீயி இப்டி ஊருமேஞ்சுகிட்டு திரிஞ்சா எவம் பொண்ணு குடுப்பான்? ரூவாயிக்கி நாலு பொண்ணுடா. தெரியும்ல்ல? நீ வந்து கரமுண்டாரு அய்யாட்ட வந்து சேரு அப்றம் பாரு. நீதாம் மாட்டம் மாட்டெங்கிற? கச்சி கச்சின்னு அலைற. அடிதடிக்கிப் போயி தெருக்காடு சுத்துற.”

“நிறுத்தும்மா. ந்த அடிமெ ஆண்டெ வேலலெய்லாம் ஒன்னோட போவட்டும்”

“நீதான் ஆண்டையா ஆவன்ண்டா? ஆரு வேண்டான்னாங்க?”

“பொண்ணு யாரு? அதச் சொல்லு. தாலிய குடு. நடுத் தெருவுல கட்டுறன்”

“பொண்ணுதானடா. சீலத்தான் மவ இருக்காளெ தெரியுமா... பேரு மாயி...”

“மாயி... யா?”

“ஏன்டா. வாண்டாமா? ஒனக்கு ஏத்த ஜோடி. பத்துபட்டி பள்ளனுவளும் காத்துகிட்டு நிக்யிறானுவடா, தூக்கிட்டுப் போவ. தெரியுமா?”

மாயி..... நன்றாக ஞாபகம் வருகிறது. அவனோட திருக்காட்டுப்பள்ளி பள்ளியூடத்ல படிச்ச பொண்ணு. திருக்காட்டுப்பள்ளியோட போய்ட்டாங்க குடும்பமா... இப்ப அஞ் சினியில அவுங்கம்மா கிளியாம்பாதான் இருக்கு. சாராயம் காச்சுறவ. அப்பங்காரன் வேற ஒருத்திய வெச்சுகிட்டு திருக்காட்டுப்பள்ளியில யாபாரக் கடைபோட்டு நல்லா இருக்காங்க. படிச்ச பொண்ணு.

“நாளைக்கி மாயி வர்றா அஞ்சினிக்கி. சரின்னியா? கேக்கறேன். என்ன சொல்றாளுவன்னு பாக்கலாம். இப்டியே இருந்தின்னா அப்பறம் ஒண்ணும் இல்லாமெ கையெ விரிச்சுகிட்டு நிக்ய வேண்டியதுதான். ஆம்மா.” என்றாள் பேச்சி மகனைப் பார்த்து

“எனக்கு வேண்டாம்மா.”

“ஏன்டா?”

“வாண்டான்னா உடேன்.”

மாயி, கருகருவென பளபளப்பாயிருப்பா. ஸ்கூல் காலத்துலியே ரொம்ப ஆச்சரியமா இருப்பா. பள்ளிக்கூடத்து பசங்களே மாயின்னு கொஞ்சம் மயங்குனாப்லதான் சொல்லுவானுவ. சிலை மாதிரி இருப்பா. பள்ளிக்கூடத்ல எல்லாம் கலியன் திரும்பிக்கூடப் பாக்க மாட்டான். ஆனா அப்பயே மாயி பாப்பா.

# கரமுண்டார் வூடு - 6

கரமுண்டார் வூடு என்னைக்கும் போல பிரும்மாண்டமாக நின்றது. வூட்டுத் திண்ணையில் என்றைக்கும் போல சந்திரஹாஸ கரமுண்டார் கட்டிலில் உட்கார்ந்து ராஜ்ஜியபாரம் பண்ணிக் கொண்டிருக்கிறார். திரிசியம்பா உள் அங்கணத்துலே உட்கார்ந்து எப்போதும் திரிகையிலே சத்து மாவு அரைத்துக் கொண்டிருக்கிறாள். ஒன்னாங்கட்டு முத்தத்தில் முல்லைக் கொடி பந்தல். கீழே யார் குழந்தை என்ற பேதம் இல்லாது, குழந்தைகள் ஓடி விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். ஆம்பளை பையன்கள் கரமுண்டானுவளுக்கே உள்ள தனிச் சாயலான முரட்டுத் தனத்தோட வயசுக்கு மீறின ஒருவித தீவிரத்தோட விளையாடுறாங்க. அதே மாதிரி கரமுண்டான் பொண்ணுவளும் அதுவளுக்கே தனித்துவமான ஒரு மிருதுவான அழகான பெண் சாயல்ல, ஒண்ணொன்னும் ஒரு ஒரு தனியழகா விளையாடுதுவ. நாலு பக்கமும் முத்தத்தச் சுத்தி எங்கப் பாத்தாலும் ஒவ்வொரு கட்டுலயும் தூணுக்குப் பக்கத்துல எல்லாம் பொண்டுவளா நிக்கிதுவ. சலசலன்னு பேச்சுச் சத்தம். ஓயாத குத்தல், கிண்டல், முத்தத்துல பள்ளத்திவ மாவிடிக்கிறதும் இடியாப்பத்துக்கு பச்சரிசி இடிக்கிறது கண்கொள்ளாத காட்சி. இப்போ தூந்துபோன தொளசிமாடம் ஒரு எச்சரிக்கை மாதிரி இருக்கு. இரண்டாங்கட்டுல மேலண்ட ஆலோடியில் மொதல் அங்கணத்துல ஒரு கதவு ஒருக்களிச்சு சாத்தியிருக்கு. உள்ளே

போனா, உமாமஹேஸ்வரி கட்டில் மெத்தையில குப்புற கிடக்கும். தலையணையெல்லாம் பட்டு சாட்டின் துணியெல்லாம் நனைஞ்சி கெடக்கும். சுப்பாக் கரமுண்டாரு சின்ன மாமா இந்த ரூமுக்குள்ள வந்தே ஒரு வாரம் ஆவுது. மோட்டார் பைக்குல எஞ்ச சுத்தி வாராரோ? தெரியாது. அவரு பள்ளக்குடி பக்கம் போறதேயில்ல. தஞ்சாவூரு, திருவாளூருன்னு எங்கே போறாரோ? தெரியாது. மோட்டார் பைக்குல ஓயாம போயிறதுனால இப்பல்லாம் அவரு கேணிப்பட்டறை ஓஞ்சி கெடக்கு. கட்டுன பட்டுப்புடவெ கசங்காம அப்படியே கெடக்கு உமாமஹேஸ்வரி. மூணாங்கட்டுல முத்தத்துக்கு மேல காத்து பந்தல் அடியுல ரோஜா பூ கொடியில பூத்துருக்கு. நடுவ கரமுண்டார், அவரு பெண்டாட்டி, அவரு குடும்பம் எல்லாம் அந்த முத்தத்து நாலு அங்கணத்தையும் எடுத்துக்கிட்டு இருக்குதுவ. பகலுபூரா வெள்ளாம நெலம் நீச்சின்னு வூட்டுல பாக்க முடியாது. ராத்திரியானா சிங்கராயரோட சேந்து விளைஞ்ச சரக்கு மாங்கா, தேங்கான்னு, ஏத்தி அனுப்ப சிங்கராயர் மாமாவோட லாரிக்காரனுவளோடயும், சொம அடிக்கிறவனுவளோடயும், லந்து பண்ணிகிட்டு இருக்கிறதுக்கே, கார்வாரியளோட சத்தம் போட்டுகிட்டு, தொடை தெரியறாப்புல வேட்டியை தூக்கி கட்டிக் கிட்டு, தகராறு பண்ணிகிட்டு இருக்கிறதுக்கும், சாராயத்த ஏத்திகிட்டு, வயலோட இறங்கி மணல் மேட்டுக்கு பள்ளக்குடிக்கி போறதுக்கும் நேரம் சரியா இருக்கும். ஒவ்வொரு வேளை சாப்பாடும் கரமுண்டாரு வூட்லயிருந்து வேளா வேளைக்கு களத்து மேட்டு குடிசைக்கு போய்டும். மத்தியானம் எல்லாம் உச்சி வெயிலு கீழ விழுற வரைக்கும் ஏதாவது ஒரு வேப்பமரத்தடியில குடி வெறியோட கயித்துக்கட்டில்ல பொறண்டு கெடப்பாரு. ஆக அவருக்கும் கரமுண்டாரு வூடு வேண்டாம். அஞ்சாங்கட்டு ஆறாங்கட்டு எல்லாம் வெள்ளாம உட வேண்டி வர்ற உரம், கலப்ப, அருவா, கயிறு, கழுத்து மணி, கடப்பாற, மண் வெட்டின்னு கண்டு முதல் பண்ணுறதுக்கான சாமானா குமிஞ்சு கெடக்கும். எட்டுகட்டு வூடுல்ல ஒவ்வொரு முத்தத்த சுத்திலும் பத்து பத்து குடும்பமாவுது இருக்கும். எல்லாம் கரமுண்டான் குடும்பம்தான். எல்லாம் ஒரமொரதான். எல்லாருக்கும் திரிசியம்பாளும் மாணிக்க வள்ளியுந்தான் வடிச்சு கொட்றாங்ன்னாகூட ஒவ்வொரு முத்தத்திலியும் ஒவ்வொரு அடுப்பு போட்டுருக்கு. ஒவ்வொரு அடுப்பும் இந்த ஐம்பது நூறு வருஷத்துல எப்பமும் அணைஞ்சதே கெடையாது. எப்பமும் ஏதாவது ஒரு குடும்பத்துக்கு முத்தத்து அடுப்புகள்ல எதாவது வெந்துகிட்டுதான் இருக்கும். அதே மாதிரி வருஷம் முழுக்கவும்

கரமுண்டார் வூட்டோட மொதல் கட்டு முத்தத்துல தெனமும் ஏதாவது ஒரு மங்கல காரியம் நடந்துகிட்டேயிருக்கும். அது இன்னதுன்னு இல்ல, இன்னாருதுன்னு இல்ல. கல்யாணமா இருக்கும். வூட்டுல இருக்குற எல்லாரும் ஏதாவது பட்டே சுத்திகிட்டு, இடுப்புல ஒரு கொளந்தய தூக்கிகிட்டு, வேர்க்க விறுவிறுக்க சந்தனத்தப் பூசிகிட்டு, குறுக்கயும் மறுக்கயும் ஓடிக்கிட்டுயிருப்பாங்க. நரைச்ச தலைமுடி தெரந்த மாரெல்லாம் வழிஞ்சு கெடக்க, திரிசியம்பா மாரெல்லாம் நகையோட சுத்திச் சுத்தி வரும். யாருக்குடி இன்னிக்கு காது குத்து? அப்டீங்கும். ஓகோ நம்ப சங்கிலிய எடுத்து, இந்த பூவாயின்ற பச்சபுள்ள கழுத்துல மாட்டும். பொக்கவாயி தெரிய சிரிக்கும். ஆயிரம் வேலி கட்டி ஆண்டப்பவும், இப்ப நூறு வேலியா தேஞ்சு குப்புற விழுந்த இப்பவும், இதெ கதெதான். தெனமும் ஏதாவது ஒரு பையனுக்கு பேர் சூட்டுறது, ஏதாவது கொழந்தைக்கு காது குத்தறது, ஒண்ணும்மில்லேன்னா ஒரு பால் குடம், பெருமாளுக்கு வடமாலை, பிராட்டியாருக்கு அபிஷேகம், அப்டின்னு ஏதாவது ஒரு காரணம் இருக்கும். எப்பமும் பெருமாள் கோவிலுக்கு நெய் வேத்தனம் போயிகிட்டும் வந்து கிட்டும் இருக்கும். இன்னும் பெருமாள் சந்நிதிக்கு தெனமும் மாணிக்கவல்லி நெய் கொடம் தூக்கி விடுறா. நெதமும் பாப்பானுவ விசேஷத்துக்கு தானம் வாங்காத நாள் இல்ல. திண்ணையில ஒக்காந்துகிட்டு கையசைக்காம காலாட்டாம எப்போதும் வர்றவங்க போறவங்க கும்புட்டுகிட்டே சிரிச்சிகிட்டே இருக்காரு சந்திரஹாச கரமுண்டாரு. சுத்துவட்ட கிராமம் எல்லாம் யாராவுது எப்பவும் பத்தம்பது பேரு வந்து விசேஷத்துக்கு சாப்புட்டுகிட்டே இருப்பாங்க. எட்டாங்கட்டு முத்தத்துல எப்பமும் குளுகுளுன்னு இருக்கும். எட்டாங்கட்டுக்கு பின் முத்தம் ஒண்ணு உண்டு. அங்கதான் மாடுவ கட்டி கெடக்கும். நூறு நூத்தம்பது மாடுவ நின்ன எடம், தொழுவம், அதுக்கப்பறம் கொல்லகட்டு, இப்ப இல்ல, அதான் ஆத்தோட போச்சே ஏழாம் கட்டும், எட்டங்கட்டும் ஆத்துக்குள்ள நிக்கிது. திருவியாரு P.W.D. (Public Works Department) இஞ்சினியர் எல்லாம் வந்து பாத்துபுட்டு, இதுல ஒண்ணும் கை வெக்க முடியாதுன்னுட்டானுவ. நூறு நூத்தம்பது வருஷத்துக்கு முந்தி வையாபுரி கரமுண்டாரும் திருமால் கரமுண்டாரும், கட்டுன வூடு இது. வெறும் கல்லும் மண்ணும் வெச்சு கட்டி இருந்தா வுழுந்துடும். இது நெஞ்சு கெப்புறு, வீரியம், மானம், இது வுழுந்தா மனுஷனே வுழுந்துடுவான். வெள்ளக்காரனுவ எட்டிப்பாக்காத சீமெ தஞ்சாவூர். வடக்கத்தி மராட்டியனுவ ஆண்டப்பவும், துளுக்கனுவ அரபிகுதிரை ஏறி

கச்சேரி நடத்துனப்பவும், கள்ளனுவகிட்ட நயந்து திவுந்துதான் ஆண்டானுவ. காசுக்கு மட்டும் இல்ல, சண்டையில் கெப்புறோட நிக்கிறதுக்கும், வீரத்தோட எயித்து நிக்கிறதுக்கும், மானத்தோட சாவுறதுக்கும், இந்த நாட்டுல எதிரிய அண்டவுடாம உயிர் மூச்சு உடம்புல ஒட்டிகிட்டு இருக்குற கடைசி நிமிசம் வரைக்கும் களத்துல நின்னவனுவ, கள்ளனுவ. மதுரெயா இருந்தாலும் சரி, திருனெவேலியா இருந்தாலும் சரி, இராமனாதபுரமா இருந்தாலும் சரி, பிரான்மலையா இருந்தாலும் சரி, எங்கேயும் இந்த நாடே கொழம்பி கெடந்த நேரத்துல எல்லாம் கள்ளனுவ கொழம்புனதே இல்ல. விதியால, காலத்தோட சதியால ஒலகம் நெல மாறி, அன்னியனுவ ஆள வந்தப்ப எல்லாம், எனத்த காப்பாத்துரதுக்காவ துணிஞ்சு நின்னானுவ? இருட்டடிச்சு போயி தடி எடுத்தவனல்லாம் தண்டல்காரனா வந்து இந்த நாட்ட மொட்டயடிச்சப்ப மிராட்டியனுவட்டயும், முஸ்லீமுவளுட்டயும், இங்கிலீஸ்காரனுவளுட்டயும், ஆயிரக்கணக்குல பத்தாயிரக் கணக்குல கிராமம் கிராமமா எய்த்து நின்னு போராடி எனத்துக்காக குத்தப் பரம்பரைன்னு பேரு வாங்கி இன்னிக்கி வரைக்கும், வாழ்ந்திட்டு இருக்கானுவ கள்ளனுவ? எத்தனையோ வருஷத்துக்கு முன்னால, எஞ்சியோ ஒரு மூலையில இருக்கிற காவிரிக்கரை கிராமம் அஞ்சினியில ஒரு பெரிய கோட்டையா இருந்தது கரமுண்டாரு வூடு. கரமுண்டான் பொண்ணுவ இன்னக்கும் வடிச்சுக் கொட்டுதுவ. கரமுண்டாரு வூடு ஒண்ணு மட்டுமா

தஞ்சாவூர் சீமையில ஓய்ந்து நிக்கிது? ஏன் இதே அஞ்சினியில ஆதிரியாருவ, மழவராயருவ, வன்னியனுவ, சேதிராயனுவ, கண்டபுள்ளையுவ, இப்படி எத்தினியோ கள்ளக்குடி ஒஸ்ந்துதான் நிக்குதுவ. இல்லெங்க முடியுமா? ஆத்துக்குள் வூடு கட்டுன மாதிரி ரெண்டு மாடி கட்டடம் ஏந்திரிச்சு நிக்கிது நூறு வருஷமா. வூடு நெறையா ஆளு, ஆளுவ மனசுல ஆனா பயம், பீதி. வூடு, வூடு இல்லெ. வூடுன்னா மனுஷன், மனுஷி, புள்ளைவ, பொண்டுவ எல்லாம்தான். ஆனா வூடு நிக்காது. எத்தனையோ தலைமொற நின்னுச்சு, எத்தனையோ தலைமொற போச்சு. எத்தனையோ தலைமொற அழிஞ்சாச்சு, கரமுண்டான் வூடு நிக்கிறது. இன்னும் ஆச்சரியம். கள்ளனுவளுக்குப் புரியாத விஷயம். எங்க பாத்தாலும் கடன். எல்லா எடத்துலயும், இன்னமும் வெளஞ்சு வரவு வந்துகிட்டு இருக்கிறதுனால எங்க வரவுல பொத்துகிட்டுப் போவுது. எங்க யாருக்கு எவ்வளவு கொடுத்து எவ்வளவு வாங்கி என்ன கணக்குன்னு இப்பவும் சந்திரஹாச கரமுண்டாரு பாக்குறதே இல்லெ. சந்திரஹாச கரமுண்டாரு என்ன. அதுக்கு முந்தி

எவன் கணக்கு பாத்தான். கணக்கு பாத்து எவன் மீண்டான்? ஒரு பக்கம் பாலு, அண்டா அண்டாவா கறந்து வூத்துரதுதான் தெரியும். லாரி லாரியா மாம்பழம் ஏறும் காவிரி கரையில. பத்து பரிசல்ல கட்டவண்டி ஏறி போன காலத்துல இருந்து, காவிரிக்கு குறுக்கே பாலம் கட்டி பாலத்து மேல ஜனங்க நடக்குறதுக்கு ரோடு போட்டு ஜனங்களுக்க வெயிலு தெரியாம இருக்க ரெண்டு மயிலு பெருமாள் கொடையா பந்தல் போட்டு, கொடுத்த காலம் வரைக்கும். நெல்லு அம்பாரம் அம்பாரமா குடோனுக்கு போயிட்டு இருந்துது தேஞ்சு போச்சு. தேஞ்சிகிட்டே போச்சு. ஆனா படுத்தா குதுரமட்டம்பாங்க. சந்திரஹாச கரமுண்டாரு எப்டி கணக்கு பாப்பாரு? கோயிலுக்கு போற நெய் கொடத்த கணக்குப் பாத்தாரா? கண்டு முதல் வந்த நெல்லு கோட்டைய கணக்கு பாத்தாரா? கண்ணு மூடி கண்ணு தொறக்குறதுக்குள்ள நாப்பது வருஷம் போனது தெரியல. ஆத்துல வெள்ளம் வந்தா ஊரே வெள்ளக்காடா போவும். அப்பல்லாம் எல்லாரும் ஓடி வந்து ஏறிக்கிறதுக்கு கரமுண்டான் வூடு தானே கதி? பள்ளக்குடி ஜனமும், பறக்குடி ஜனமும்... வெள்ளம் வடியவும், மழ நிக்கவுமா, பதினஞ்சு இருவது நாளு, உருண்டு பொறண்டு, திண்ணு தூங்கி ஏந்திரிச்ச எடமே கரமுண்டான் வூடுதான். இதெல்லாம் பெருமை இல்ல. பெருமாள் கொடங்கும் தொரச்சியப்பாயீ, திண்ணையில இருந்து, வாய தொறக்காம காரியம் பாக்குற சந்திரஹாச கரமுண்டாருக்கு, எட்டாங்கட்டு முத்தத்துல ஒக்காந்துகிட்டு ஒலப்பாயில இருந்துகிட்டே காரியம்பாக்கும் கரமுண்டான் வூட்டுக்கே காவல் மாதிரி தொரச்சியப்பாயிதான் நின்னுகிட்டு இருக்கு. மங்களப்பாயியும், சந்தப்பாயியும் இருந்த எடம். மங்களம்தான் இல்லியே? சந்தனப்பாயி மட்டும் கயித்தக் கட்டில்ல சாஞ்சிகிட்டு கப்பு கப்புன்னு சுருட்டு பொகயவிட்டுகிட்டே இருக்க. பொம்பளைவ எப்ப சுருட்டு குடிக்க ஆரம்பிச்சுதுவ? வெள்ளக்காரன் வந்ததுக்கு முந்தியா? அப்பறமா? தெரியாது. ஆனா கரமுண்டாரு வூட்டுல சுருட்டு குடிக்கிற ஒரே பொம்பள சந்தனப்பாயிதான். எதுக்காகவோ கௌவி ரெண்டு காத்துகிட்டு கெடக்கு. கௌவி மட்டுந்தானா? கரமுண்டாரு வூட்டுல யாருதான் காத்து கெடக்கல. சந்திரஹாச கரமுண்டாருகூட இந்த காலத்துலகூட நாலு பொண்டாட்டியோட ஒரு ஆம்பள வாரிசுக்கு காத்துகிட்டு இல்லியா? காலம்பற நேரத்துல இப்பகூட தூதான்னு துப்புது திரிசியம்பா. பொக்க வாயில அடிச்சிக்கிது. "பெருமாளே இந்தக் கௌவனுக்கு புத்தியில்லியா? அசிங்கம் தெரியாம நெதமும் கெணத்துல முங்கி முங்கி, ஆத்துலபோயி யாருக்குத் தெரியாம.

நடுங்க நடுங்க, இன்னும் எத்தனை நாளைக்குதான் என்ன முழுவவப்பானோ? உனக்கும் கண் இல்லியே பெருமாளே..."ன்னு பொலம்பும். அந்த வூட்டுக்கு கார்வாறி கணக்கப்புள்ளயா இருக்கானே சிங்காரச்சாரி ஐயங்காரு பய, அவன் பொண்ணுபுள்ள அல்லாம் B.A., B.Sc., M.Sc., Ph.D., ன்னு என்னா என்ன எளவை எல்லாம் படிச்சு இஞ்ச படிச்சது போதாதுன்னு எல்லாம் கரமுண்டான் வூட்டு பணத்துலியே அமெரிக்கா, இங்கிலண்டு, நைசீரியான்னு போயி படிச்சுபுட்டு திலும்பி இஞ்சயே வந்து எவளோ ஒரு ஐயங்காரிச்சியே, ஐயங்காரையோ தாலி கட்டிகிட்டு, திலும்பியும் இலுத்துகிட்டு சீமெக்கெ சம்பாதிக்க போய்ட்டுதுவ. ஆனா கரமுண்டான் வூட்டு புள்ளையுவ அஞ்சினிய தாண்டி வடக்கே எஞ்சியுமே போவல. தஞ்சாவூர்ல காலேஜா வந்து குமிஞ்சுது. எல்லா பயலும் படிக்க போனுதுவ. தஞ்சாவூருக்கும் அஞ்சினிக்கும் சிமெண்டுல ரோடு போட்டானுவ. அஞ்சினிய சுத்திக்கிட்டு, திருக்காட்டுப்பள்ளி வழியா டவுன் பஸ் ஓடுது. கரமுண்டாரு வூட்டுப் புள்ளையுவ காலேஜுக்கும் போவல. சீமைக்கும் போவல, போவவும் போவாதுவ. வூடு மட்டுந்தான் நிமிந்து நிக்கிது. வரத்து எல்லாம் கொறையுது. எல்லாருக்குந் தெரியும். நெலம் நீச்செல்லாம் தேயிதுன்னு. தேயாதது ஒண்ணு மட்டும்தான். எத்தனை கட்சி வந்து, எத்தனை தேர்தல் வந்து, எத்தனை ஜனநாயகம் வந்தாலும் இன்னும் பள்ளனுவளும், பள்ளச்சியுவளும் கள்ளனை வுட்டுப் போகல. கரமுண்டாரு வூட்டு திண்ணையிலயும் எட்டாங்கட்டுலயும் திமுதிமுன்னு அவனுவதான் கெடக்கானுவ. இன்னும் கரமுண்டார் வூட்டு வேலையெல்லாம் மாங்கு மாங்குன்னு, சம்பளம் வாங்காம செஞ் சிகிட்டே இருக்காளுவ செம்பாட்டம் பள்ளத்தியுவ. ஒரு காலடி வெச்சா மறுகாலடிய தாங்குறது அவளுவதான். மாஞ்சி, செல்வி, மாரக்கா, செவத்தெ எல்லாம் பள்ளக் குடிக்கே போறதில்ல. காத்தாயம்பா வுடமாட்டா. அவளுக்கு இந்த ஒலகம் வேண்டாம். கரமுண்டாரு வூடு போதும். கரமுண்டாரு வூட்டுக்குள்ள ஒக்காந்துகிட்டே ஒலகத்த பாக்க அவளுக்குத் தெரியும். ஊட்டுல இருக்குற பொம்பளைங்க அத்தனையையும் ஒரு வரியில நிறுத்தி மூச்சடிக்கி நிறுத்த முடியும். ராத்திரி வரப்போட ஓடியாந்த உமாமஹேஸ்வரிய மறச்சு வூட்டுக்குள்ள உள் அங்கணத்துல படுக்கப்போட்டு வெச்சது யாரு? அவதான். சாயங்காலமா நாகப் பூஜைக்கு பெய்ட்டு, புத்துல முட்டைய ஒடச்சு பாலு உத்திட்டு வர்றெப்போ ஒரு பார்வையாலையே கலியனெ காவிரியில தூக்கி எறிஞ்சது யாரு? காத்தாயம்பாதான். அவளுக்குத் தெரியாதா?

அவளுக்கு யாரெ என்ன பண்றதுன்னு தெரியும். யாரெ என்ன பண்ணணுமுன்னும் தெரியும். பொருமாளு அவ கையில. முன்ன நடந்தா திரும்பி பாக்குறதில்லெ, காத்தாயம்பா. அவளுக்கு முன்னாட நடக்கப் போறது. அவளுக்கு பின்னாலேயே ரொம்ப முன்னாடி தெரியும்.

ஒரே விஷயம்தான் காத்தாயிக்கு தெரியல. அவ தெலகராஜுவோட போகணுமா, வேண்டமா? தெலகராஜு இழுத்துகிட்டு ஓடினா அவன்கூட ஓடிலாமுன்னுகூட ஆசையாதான் இருக்கு. ஆனா தெலகராஜு ஓடமாட்டான். தெலகராஜு இங்கியே கட்டி புடுச்சி போட்டுலாம். காத்தாயம்பாளாவே கால்ல விழ முடியாது. தாலி பிச்சைக் கேட்க அவ தயாரா இல்லெ. வடுவாம்பா அத்தெ நூறு வேலி நெலம் கேட்டு மொவன அனுப்பிச்சு இருக்கா. மிச்சம் இருக்க நெலம் பூராத்தியும் கொடுத்துட்டா, அப்பறம் கரமுண்டான் குடிக்கு வித்து சுட்டு திங்க நெலம் இல்லெ. நெலத்தெ வடுவாம்பா கேட்டா அப்பாரு சந்திரஹாச கரமுண்டாரு மாட்டேங்கமாட்டாரு. இந்தாடி களுதெ தூக்கிட்டுப் போன்னு தூர எரிஞ்சுடுவாரு. அதுக்கப்பறம் மிச்சம் இருக்குறது தோப்பு தொரவு. காத்தாயம்பா கல்யாணத்துக்கு எல்லாத்தையும் வித்தாவணும். கரமுண்டாரு வூட்டுல அதுக்கப்பறமும் சந்திராஹாச கரமுண்டாரு இருக்க முடியாது. வூட்டுல குடியிருக்குற யாரும் போவமாட்டாங்க. வூட்ட இடிச்சு வகுத்து பிரிச்சு, குறுக்கயும், மறுக்கயுமா செவுத்த கட்டி நானு, நீயின்னு ஏலம் போட்டு, கோர்ட்டுக்கும், சப்ரிஜிஸ்டர் ஆபீஸுக்கமா கையில ஏலச் சீட்டையும், குத்தக சீட்டையும் எடுத்துகிட்டு இஞ்சயும் அஞ்சயுமா அலைஞ்சு கரமுண்டாரு வூடு நடுத் தெருவுக்கு வந்து நாறி நக்களிஞ்சி சீறி சிரிப்பாணி கொட்டி, இத்து எலையாகி கொண்டி குமிஞ்சு போகும்.

பத்தாயக் கட்டுக்குள் தன்னந்தனியே படுத்திருந்த காத்தாயம்பா மேலே பார்த்து பெருமூச்சு விட்டு ஏங்கல் எடுத்து விம்மினாள். அவள் அருகிலேயே படுத்துக் கெடந்த செல்லி அவளை இறுக கட்டிக் கொண்டு, "ஏய் ஆயி... கண்ணு நீயி எதுக்கும்மா அஞ்சுணும், எதுக்கும் அஞ்சாத. பொலம்பாத. அழுவாத. நான் இருக்கேன். உன்ன உட்ருவனா? எவனுக்காவது? எம் புருஷன வுட்டு, கரமுண்டாரவுட்டு, உன்னோட வந்துட்டேனே ஆயி எதுக்கு? நீயி எதுக்கு இப்டி நெருப்பா பெருமூச்சு வுடுற? நான் இருக்க வரைக்கும் எதுவும் ஒன்ன அண்டாது. ஏன் ராசாத்தி. ஓங் காலடியில தாம்மா என் உசிரு போவும். (நெருப்பு) தீ

மிறியில தலைக்கி மேல ஒன்ன தூக்கிகிட்டு கடேசி வரைக்கும் ஓடி வருவேன். ஒண்ணுக்கும் பயப்புடாதம்மா"

காதுகளருகே செல்வியின் குரல் தழுதழுப்பாய் நெருங்கி வந்தது. செல்வியின் மேனியில் இருந்து ஒருவித நெல்லின் மணம் புழுதி கலந்து வீசியது. இந்த மணம் காத்தாயம்பாளுக்கு ரொம்ப பிடித்தது. செல்வியின் நெஞ்சுக்குள் காத்தாயம்பாளின் முகம் புதைந்த கொண்டது. 'ஹல்'என்ற சுவர் கோழிகளின் கூச்சல் தவிர, வேறு எதுவுமே கேட்கவில்லை. பத்தாயக்கட்டு அறை முழுசும் லேசான எலி புளுக்கை வாடை. நூறு வருடங்களாக இந்த வாடை இருக்கிறது. காத்தாயம்பா இதிலிருந்துதான் தப்பி ஓடவேண்டும் என்று விரும்பினாள். பத்தாயக்கட்டுக்குள் காத்தாயம்பா போயிட்டா பகலானாலும் சரி, ராத்திரியானாலும் சரி, அதுக்குள்ற யாரும் போகமாட்டாங்க. அது காத்தாயம்பா கோயில். வெள்ளிக்கிழமையல்ல வெளிய வரவேமாட்டா. புழுதியா கெடக்குற அந்தப் பத்தாயக் கட்டுக்குள்ள கெடப்பா. ஏன்னு தெரியாது. யார் மேல கோபம்ன்னு தெரியாது. எவன் மேல சந்தோஷம்ன்னும் புரியாது. புழுதியோட புழுதியா நெல்லே இல்லாம காலியா கெடக்குற பத்தாயக் கட்டுக்குள்ற அன்னம், தண்ணி இல்லாம நெத்தியில குங்கும நாமக்கோட்டோட பொரண்டு எந்திரிச்சு வெளிய வார அவளப் பாத்தா நாச்சியா பெருந்திரு மாதிரி இருக்கும். ராத்திரியெல்லாம் தூங்காம கண்ணு முழி ரெண்டும் செவந்து போயி, கலங்கி, ரத்தமா சொட்டுதோன்னு தோணும். யாரும் கிட்ட போகமாட்டாங்க. எட்டி நின்னுதான் பேசுவாங்க. பத்தாயக் கட்டுக்குள்ள பள்ளத்தியுவதான் போயி அடுத்த நாளு விடியாலம்பற வெளியில கூட்டிட்டு வருவாளுவ. கூடவே செல்வியாவுது, மாஞ்சியாவுது இருப்பாளுவ. ரெண்டு பேருல யாராவது கைத்தாங்கலா அழைச்சிகிட்டு போவாங்க. ஆத்துக்கு போயி படித்தொரையில தலை முழுவி, ஏந்திரிச்சு ரெண்டு மணி நேரமாவது ஆவும் உசிலம் பொடி போட்டு கூந்தல் சோப்பு மாதிரி நுரை தள்ள தள்ள தலை தேச்சிவிட்டு சீயக்காயும், கஸ்தூரி மஞ்சளும், கோரக் கிழங்கும், சந்தனமும், சடாமஞ்சிலும், சதகுப்பையும், மூலிகை எலை எல்லாம் சேர்த்து மஞ்சளோட வச்சு நகட்டி பொடியா வஸ்த்ரகாயம் பண்ணின குளியல் பொடியால் உடம்பு பூராவும் தேய்ச்சு, பால்ல கொழப்பி எடுத்த பாசிப்பயறு மாவு தேச்சு பள்ளத்தியுவ குளிப்பாட்டி கையித்துக் கட்டில்ல படுக்க வச்சு, வால் கரண்டியில ஒலைத்தி பால்சாம்பிராணி தூபம் பொட்டு, தலைமுடியை அள்ளி

சொருகி ஏந்திரிச்சாத்தான் காத்தாயாம்பாகிட்ட பேச முடியும். வூட்டுல இருக்குற பொம்பளைவ எல்லாமே ஆச்சரியத்தோட சின்ன வயசிலிருந்து பாத்துகிட்டே இருக்க, அது என்னமோ வெள்ளிக்கெளம வந்தாலே அப்படி ஒரு திமிறு திமிறிக்கும் காத்தாயம்பாள. பத்து பள்ளத்திவ சேவகம் வெள்ளிக்கெழமை அன்னைக்கி மட்டும். காத்தாயம்பா பேச்சே கேட்க முடியாது. வூடு பூரா ஆணும், பொண்ணுமா பத்து அம்பது குடும்பம் இருக்கே! யாராவது ஒருத்தர் பத்தாயக் கட்டுக்குள்ள போவ முடியுமா? போயிருக்காங்களா? அஞ்ச என்ன நடக்குதுன்னு யாருக்காவது தெரியுமா? ஆளும் பேருமா கரமுண்டார் வூடு எதுக்கலிச்சு நின்ன காலத்துல, ஆயிரம் வேலி பண்ணயம் நடந்த அந்த காலத்துல, ஓங்கி கட்டுன பத்தாயம். பத்தாயம் பெருசு மட்டும் இல்ல ஒயரமும்கூட. சுண்ணாம்பும் கருப்புட்டியும் முட்டை வெள்ளைக் கருவும் பிஞ்சு கடுக்கா தண்ணியில சேத்தரைச்சு குங்குமமா கொழய கொழய அரைச்சு மூலிகை சாற்றோட கலந்து வெச்ச கவரு. இந்தப் பத்தாயக் கட்டுக்குள்ள வூட்டச் சொறுகி இருக்கா? வூட்டுக்குள்ள பத்தாயக்கட்ட சொறுவியிருக்கான்னு தெரியாம பத்தாயமே வூடு மாதிரி, மேல கோவுரமாட்டம் கூம்பாச்சியா மேல நாலு பக்கமும் வளைவா வளைஞ்சு குழிவா மேல உள் பக்கமா திரும்பிகிட்ட தேக்கமரத்துல செய்த ஜன்னல். கீழருந்தே ஜன்னல மூட தெறக்க செவுத்தோரமாவே வெசப்பலக. வெசப்பலகையை மிதிச்சா, அந்த காலத்துல ஜன்னல் வழியா மூட்டை மூட்டையா நெல்லு கொட்டுமாம். வெசப்பலகையை விட்டா பத்தாயக் கட்டுக்குள் எல்லா பத்தாயத்துலியும் நெல்லு ரொம்பிக்கும். இப்ப பத்தாயக்கட்டுக்குள்ள காத்துதான் நெரம்பியிருக்கு. பத்து வயசு குட்டியா காத்தாயம்பா இருந்தப்பலேருந்தே பத்தாயத்துக்குள்ள நெல்லு கொட்றது கொரஞ்சிகிட்டே வந்து, இப்ப வூட்டுக்குள்ளதான் நூறு எறநூறு மூட்டையின்னு அடுக்கி வைக்கிறாங்க. பத்தாயக் கட்டுக்குளள மொத்தம் 20 பத்தாயம் இருக்கு. ஆனா பத்தாயத்த இடிக்கணும்னு ராமு கரமுண்டாரு சொல்ல ஆரம்பிச்சு இருவது வருஷமாச்சு. கரமுண்டாரு வூடு பூரா நண்டும் சிண்டுமா, புள்ளைவ பெருகி போச்சுன்னாகூட கரமுண்டாரு ஆம்பள வாரிசு ஆத்துப் போச்சு. காத்தாயம்பா மேல மொத மொத மகமாயி வந்தது. அப்ப பத்தாயக்கட்டுக்குள்ள அடைச்சாங்க, பத்தாயக் கட்டுக்குள்ள இல்லாம அவள வேற எங்கெயும் அடைக்க முடியல. வீச்சருவாள எடுத்துகிட்டு... எல்லாரையும் வெட்டவெட்ட ஓடியாந்தா அவ. ரெண்டாங்கட்டு, மூணாங்கட்டு தான்டி, நடுவ முத்தம் ஓரமா, வூட்டுக்கு கோவுரம் வச்சாப்ல பத்தாயக்கட்டு இருந்தது.

ரொம்ப வசதியாப் போச்சு. காத்தாயம்பா மேல அப்புறமா நெறைய தடவ சாமி வந்தது. ஒவ்வொரு தடவையும் அவ மேல மகமாயி வரும்போதெல்லாம், ஆயிரம் கோட்ட நெல்லு குமிச்ச அந்தப் பத்தாயக் கட்டுக்குள்ள, அவளெப் போட்டதும் எப்படியோ அடங்கிப் போயிடும் மகமாயி. இப்ப மகமாயி வந்தாலும் வரலென்னாலும் காத்தாயம்பா வெள்ளிக்கெளமா வெள்ளிக்கெளம பத்தாயக் கட்டுக்குள்ள பூந்தா காத்தாயம்பாள யாரும் பாக்க முடியாது. சனிக்கெளமெ தலைமுழுகிட்டு சாம்புராணி போட்டு வர்றெ வரைக்கும் கரமுண்டாரு வூட்டு வரவு செலவு அப்படியே காத்துகிட்டு அவளுக்காவ நிக்கும். இப்ப ஒரு வெள்ளிக்கெளமெதான். பத்தாயக் கட்டுக்குள்ள மேல வானம் வரைக்கும் கரமுண்டாரு வூட்டு கஷ்டம் நஷ்டம் எல்லாம். அப்டியே கோட்ட கோட்டயா உள்ற கொட்டிக் கெடக்க, அது மேல அழுத்த கீழ கெடக்குறது மாதிரி ஒரு ஒத்தை ஓலப்பாயில பத்தாயக்கட்டு மேல ஜன்னல பாத்துகிட்டே காத்தாயம்பா மல்லாந்து கெடக்க... அவளெ கட்டியணைச்சுகிட்டு செல்லியும் கெடக்க... அந்த ராத்திரி அப்படியே குரூரமான அந்தப் பத்தாயக் கட்டுக்குள்ள வந்து பூந்துக்கிட்ட மாதிரி... பயங்கரமா இருந்தது. காத்தாயம்பாளுக்கும் உமாமஹேஸ்வரியோட ஒடம்பு ஞாபகம் வந்தது. இந்த ஒடம்பு எத்தனை சுகம்ன்னு அவளுக்கு சொல்லிக் கொத்ததே உமாமஹேஸ்வரிதானே? மங்களப்பாயி திரும்பியும் வந்தா நிச்சயமா இது சரின்னு சொல்லும். மங்களப்பாயியெக் கொன்னு குழி தோண்டி பொதச்சாங்க. தொரச்சியப்பாயி இன்னும் சாட்சியா இருக்கு. உமாமஹேஸ்வரி மொத மொதல்ல காத்தாயம்பாளுக்கு இந்த ஒடம்பச் சொல்லிக் கொடுக்கலன்னா... இந்த ஒடம்பு இப்ப சொன்னதக் கேட்குமா? ஆமாம்... இப்ப உமாமஹேஸ்வரி பண்ணிகிட்டு இருக்க மாதிரி காத்தாயம்பாளும் எஞ்சியோ ஒரு பள்ளன தேடிக்கிட்டு போயிருப்பாளோ? இதுகூட உமாமஹேஸ்வரிக்கு போதலயோ? இப்பல்லாம் செல்லிக்கி மேலதான் சாமி வருது. காத்தாயம்பா மேல சாமி வர்றதில்ல. உமாமஹேஸ்வரியோட போக்கு ஒண்ணும் புரியல. சித்தப்பாரு சுப்பாக் கரமுண்டாரு வூடு தங்கறது இல்ல. கேணிப்பட்டறையில அப்படி எஞ்சதான் போறாரு? சுப்பு சித்தப்பா. எப்படி ஆம்பள? அந்தக் கள்ளக் கரவுல இந்த மாதிரி ஒரு விண்ணம் இருக்குன்னு சொன்னா யாராவது நம்புவாங்களா? இன்னும்கூட ரெண்டு பேரும் ஒண்ணாதான் படுத்துக்குறாங்க. காத்தாயம்பாளுக்கு தெரியுமே, இன்னும்கூட உமாமஹேஸ்வரிதான் சுப்பு சித்தப்பாவுக்கு எலையில சோத்தப் படைக்கிது. இன்னும்கூட கால அமுக்கி விடுது.

இன்னும்கூட சுப்புக் கரமுண்டாரு பனியன் வேட்டியெல்லாம், உமாமஹேஸ்வரிதான் தொவைக்கிறது. ராத்திரியில ஒவ்வொரு நாளும் சுப்பு சித்தப்பா வர்லெயேன்னு கொட்டு கொட்டுன்னு முழுச்சுகிட்டே ஒக்காந்துருக்கு. இப்பக்கூட சுப்புக் கரமுண்டாரத் தேடிகிட்டு ராத்திரியில குதுரெ லாயத்துக்கு வெளியில ரொம்ப நேரம் தெருவப் பாத்துகிட்டே காவல் நிக்கிதுன்னு எல்லாருக்குமே தெரியும். பொம்பளன்னுகூட பார்க்கமாட்டான் இந்த சித்தப்பன். அது என்ன பிறவி? ஆம்பளைவ பாக்காத பிறவி. காத்து காத்து நின்னுகிட்டே இப்ப ஆத்தோரம் போக ஆரம்பிச்சுட்டா. யாரும் வாயத் தெறக்கல. தெறந்தா எத்தனை கொலை விழுமோ எல்லாருக்கும் பயம். மொதல்ல எல்லாம், உமாமஹேஸ்வரியோட தொணைக்குப் போயி காத்தாயம்பாதான் படுத்துக்குவா. உமாமஹேஸ்வரி... ஆண்டாள் கோதை மாதிரி கையும் காலும் நீளம் நீளமா சாட்டை சாட்டையா வளர்ந்த பெண் ஓடம்பு. காத்தாயம்பாளுக்கும் பாக்க பாக்க ஆசையா இருக்கும். ஒரே குத்தா ஏராளமான தலைமுடி, வழுவழுன்னு எஃகு கம்பி மாதிரி சுருள் சுருளா மை நிறத்தில பெருமாள் வர்ணத்துல தலைமுடி கால் வரைக்கும் யாருக்காவது இருக்குமா? கண்கொள்ளாது. பொம்பளை ஆசை வைக்கிற மாதிரி ஓடம்பு.

"என்ன சின்னி, அப்படி பாக்குற எதுக்கு பாக்குறியாம்" "இல்ல இப்டி இருக்குதேனுட்டுதான்"

"எப்படி இருக்குதெனுட்டு தானாம்?" ன்னு சொல்லிகிட்டே காத்தாயம்பா உமாமஹேஸ்வரி தன்னோட நீளமான சாட்டை மாதிரியான கைகளாலே வாரி கட்டி அணைத்துக்கொண்டாள்.

அப்புறம் அது ஒரு மாயம்... பாம்பு வாயில் இருந்த விஷம் தலைக்கு ஏறினது போல் ஆயிற்று. தலையில் ஏறி விஷம் பொடி பொடியாய் காத்தாயம்பாள் ஓடம்பெல்லாம் நீளமாய்ப் பரவி அவளோட கை விரல் நுனி வரையிலும் பரவி சொட்டு சொட்டாய் மறுபடியும் உமாமஹேஸ்வரியோட ஓடம்புக்குள் தீயாய் நுழைந்தது. ஆரம்பத்துல இதுரொம்ப ருசியான வெளயாட்டு. அப்பறம் பசியான தேவை. ரெண்டு பெண்கள் ஒண்ண ஒண்ண சுத்தி இறுகி முறுக்கி ரெண்டு பாம்பாய் ஆணும்பெண்ணுமாய் பாம்பும் பாம்புமாய் அல்லாமல் பாம்பும், சாரையுமாய், மாறிப் போனார்கள். சுப்பாக் கரமுண்டார் வேணாம்ன்னு ஆயிடுச்சி. நிறைய குடிச்சு தள்ளாடிகிட்டே வந்து படுக்கையில விழுற சுப்பாக் கரமுண்டாருக்கு எப்பாவதுகூட, உமாமஹேஸ்வரி வேண்டாம்ன்னு ஆயிடுச்சு. பாவம் ஒண்ணும் சொல்லக் கூடாது. சின்னம்மாவாச்சேன்னு

பயந்துகிட்டே மூச்சடக்கிட்டு தண்ணியில குதிச்சா, தரையிலேயே கால் பாவமாட்டேங்குது காத்தாயம்பாளுக்கு. காலால துளாவி, துளாவி அடியில போறாப்ல உமாமஹேஸ்வரி சாஞ்சிகிட்டு பூமிக்குள்ள போறது மாதிரி, காத்தாயம்பாளுக்கு ஆரம்பத்துல ஒண்ணும் பேச முடியலேன்னாலும் உமாமஹேஸ்வரியோட கண்ணு கலங்கி முத்து முத்தா தரையில கொட்டும் நெஞ்சுக்குள்ள பகீரு பகீருங்குது. ஒடம்ப அவுத்துப் போட்டா அசிங்கம்முன்னுதான் காத்தாயம்பா நெனைச்சிருந்தாள். ஆம்பளைவ உத்து உத்து மாரெப் பாக்குறப்பல்லாம் ச்சீச்சின்னு தோன்றாப்ல "சின்னம்மா... வேண்டாம்... சின்னம்மா... வேண்டாம்... சின்னம்மா. வாண்டான்னு" கெஞ்சினாலும், தனக்கும் சின்னம்மாவுக்கு ஒரு வயசு வித்தியாசம்தான்னு ஞாபகம் வர்றெப்ப 'ஐயோ'ன்னு ஏங்கும். அவளெ தேடிக்கிட்டு ராத்திரியில உமாமஹேஸ்வரி வரும்போதெல்லாம் திக்குதிக்குன்னு நெஞ்சுக்குள்ற பயமா இருக்கும். அப்றம் உமாமஹேஸ்வரி ஒரு ஆம்பளையபோல அவ கையெப் புடுச்சு இளுத்து கட்டிக்கும்போது தப்பிச்சு ஓடவே தோணாது. கொஞ்சம் கொஞ்சமா உரமேறிப் போய், மகமாயி தாயே. "மகமாயி தாயெ"ன்னு உமாமஹேஸ்வரி காத்தாயம்பாள தூக்கி முத்தம் கொஞ்சும் போதெல்லாம் மேலேயிருந்து பத்தாயக்கட்டு ஜன்னல் வழியே ஆயிரம் கோட்டை நெல்லும், அவள் மேலே நூறு நூத்தம்பது வருஷத்து வேதனையெல்லாம் கலந்து ஜோன்னு கொட்ற மாதிரி அப்படியே அவளை ரொப்பிக்கும். சீ. என்னாடி இது? இந்த அசிங்கம்? அப்படீன்னு பளிச்சு பளிச்சுன்னு தாம் மூஞ்சியில தானே அறைஞ்சுக்கும் உமாமஹேஸ்வரி. இப்டிகூட இருப்பாங்களா? இப்டிகூட ஆசை இருக்குமா? நான்தான் பொசக்கெட்ட மூதேவி? உன் துணிய புடிச்சு இளுத்தா, நீ ஏன்டி ஒலக்யெ எடத்து ரெண்டு சாத்து சாத்தாம வுட்டெ தேவிடியாங்கும் உமாமஹேஸ்வரி. காலமெல்லாம் நீதான் இந்த ஆட்டம் ஆடுறயேடி என்று சொல்லிகிட்டு எந்திரிச்சு ஒக்காந்தா பத்தாயக் கட்டு மேல் ஜன்னல்ல இருந்து விசைப்பலகையை மிதிச்சா கதவு தெறந்துகிட்டு மேல வானத்துல இருட்டுக்குள்ள நட்சத்திரமும் மங்குன நிலா வெளிச்சமும் தெரியிற ராத்திரி வரைக்கும் பத்தாயக்கட்டு வழியே ரெண்டு பொண்ணுவளோட அந்தரங்கம் கிழிபடுற மாதிரி எங்கியோ தூரத்துல இருந்து ஆந்தை ஒன்னோட அலறல் கேட்கும். பத்தாயக்கட்டு எப்போவும் போல விடிஞ்ச பின்னாலகூட இருண்டுதான் கெடக்கும். உமாமஹேஸ்வரி பேசுனதே இல்லெ. இருட்டுக்குள்ள பத்தாயக்கட்டுக்குள்ள யாரும் வர்றதும் இல்லெ. ஆளுங்க ஏறிக் குதிச்சு சுத்தம் பண்ணுவாங்க.

இப்ப காத்தாயம்பாளும் செல்லியும் அந்த பழைய குப்பைகள் மேலேயே கெடக்காங்க. இப்ப அதுவும் இல்லாம போச்சு. செல்லிதான் மிச்சம். தப்புதான், இந்த ஒடம்பு தப்புதான். அப்டின்னு இப்ப தோண்றதே இல்ல. உமாமஹேஸ்வரியைவிட ஆயிரம் மடங்கு பாவம் இந்த செல்லி, ஒண்ணுந் தெரியாது. படிப்பு இல்ல. வாசன இல்ல, ஆளு அம்பு இல்ல, பாசம் இல்ல. ஆனா ஒடம்பு இருக்கு. ஏன் இதுக்காக கள்ளனுவ இந்த பாடுபடுறான்? ஏன் இப்டி கரமுண்டானுவ தொரத்திகிட்டு திரியறானுவ? முந்தி எல்லாம் காத்தாயம்பாளுக்கு தெரிஞ்சிருக்காது. இப்ப ஒடம்பு மாதிரியே இது எல்லாம் தெரியுது. செல்லி மட்டும் இல்ல அடிமையா, எத்தன அழகு, மூலையில மாவிளக்காய் எரியிது. இனிமே உமாமஹேஸ்வரியால இஞ்சயும் இருக்க முடியாது. எஞ்ச போப்போராளோ, என்னாஆவப்போறாளோ, தெரியாது. செல்லி தீ மாதிரி. உமாமஹேஸ்வரி ஓடிப்போவா. காத்தாயம்பா தப்பிச்சுக்கவே முடியாது. செல்லியும் ஓடிப் போக முடியாது. ஒளிஞ்சுக்க முடியாது. காத்தாயம்பா இந்தப் பத்தாயக்கட்டு இடிஞ்சு விழும் போதும் இஞ்சதான் எஞ்சியோ ஆத்தோர இலுப்ப மரத்துல பேயா தொங்கிட்டு இருப்பா. உமாமஹேஸ்வரி பறந்து போகும்போது, ஆகாய வானத்தில துபாய்க்கி–அந்த முகம் தெரியாத அன்னிய தேசத்தில் ஓடியே போகும்போதும் இந்த பத்தாயக்கட்டு மூலை இருட்டுலதான் காத்தாயம்பா செல்லிக் குட்டியோட படர்ந்து கெடப்பா. செல்லிக்கும் மகமாயி வரும். மகமாயி அவமேல ஆவேசமா வரும்போதெல்லாம் அவகிட்ட இருக்குற ஒரே ஒரு வேப்பலை கொத்து, உமாமஹேஸ்வரி தந்த இந்தப் பிடிதான் செல்லி சத்தம் 'உம்... உம்... உம்...' என்று ஆங்காரமாய் மேலெழும்பும் போதெல்லாம், பள்ளக்குடியில பறக்குடியில அடிக்கிற உருமிக் கொட்டு வேகத்துல காத்தாயம்பா அவளெ கட்டிப் பிடிச்சு செல்லியோட உதடோட உதடா முத்தம் முத்தமா வேப்பிலை அடி விழும். அப்படியே மகமாயி செல்லியோட உதட்டு வழியா கொஞ்சம் கொஞ்சமாய் காத்தாயம்பா ஒடம்பெல்லாம் பரவுவா. வேர்த்து வழிய வழிய "என்ன விட்டுடுங்களேன் என்ன விட்டுறுங்களே"ன்னு செல்லி கதறி கொஞ்சம் கொஞ்சமா அடங்கிப் போயிடும். ஒரு நாள் ஆள் நொழைய முடியாத அளவுக்கு இருந்த சின்ன பத்தயாக்கட்டு வாசல் வழியே நொழஞ்ச உமாமஹேஸ்வரி நேரடியா மகமாயியையும் ஒண்ணா பாத்து அசந்து போனா. வெளிச்சம் கொறஞ்ச இருட்டுல அஞ்ச நடந்தது அவளுக்கு அருவருப்பா இருந்தது. அதுவே தப்புன்னு அவளுக்கே தெரியலை. இந்த ஒலகத்துல

யாருக்காவது தெரியுமா? கரமுண்டானுவ காத்துகிட்டே நிக்கிறானுவ. நூத்தம்பது வருஷமா இதையேதான் கட்டி மூடி மூடி பொத்தி பொத்தி வெச்சுருக்கானுவ. புள்ளெ பெக்குதுவ. கல்யாணம் பண்ணிக்குதுவ. கட்டையில போவுதுவ. காலம் காலமா இதையேதான் செய்யிதுவ. ஆனா காத்தாயம்பாளால் எல்லாரும் செய்யுறதச் செய்ய முடியல. ஏன்னே தெரியல? காத்தாயம்பா நெனைக்கிறது யாருக்கும் சொல்ல முடியல. ஏன்னே தெரியல. தெலகராஜு... அடப்பாவி, இதெல்லாம் ஏன்டா ஒனக்குப் புரியாது? பாவி மொவனே? என்ன ஒனக்கு கண்ணு தெரியலயா? நான் பொம்பளையில்லையா? ஒங்க ஆயி வடுவாம்பா கேட்டான்னு நெலத்தக் கேக்க வந்துருக்கியேடா? அப்பாரு தூக்கி கொடுத்துருவாரா?

இதோ ஒன்ன உடுவனா? மாஞ்சி இப்ப ஏங்கிட்ட இருக்கா. இனிமே நீ எவளை கூப்பிட்டாலும் அவள நான் கூட்டிக்குவேன். நான் வேற, அவ வேற இல்லெ, புரியுமா ஒனக்கு? நிஜமாவே மாஞ்சிய ஒனக்கு விட்டுத் தரணும்ன்னுதான் எனக்கு ஆசைடா. ஆனால் ஒனக்கு மாஞ்சி மட்டும் போதாது. கரமுண்டார் வூடே வேணும். வூட்ட மட்டும் பிரிச்சு எடுத்தியின்னா காத்தாயம்பா மட்டும் ஒன்னோட வரமாட்டா. இது புரியுமா ஒனக்கு? வூடுன்னா ஊடான வூடு. இந்த பக்கம் திருவையாறுல தொடங்கி தில்லஸ்தானம், திருக்காட்டுப்பள்ளி, தோகூர் இப்டி சுத்துப்பட்டு கிராமம் எல்லாம் பத்தம்பது கிராமம் சுத்துனாக்கூட இப்டி ஒரு அழகான வூடு பாக்க முடியுமா? வெறும் சுண்ணாம்பும் கல்லுமா இந்த ஊடெல்லாம்? கரமுண்டாத்தியுவ ரத்தத்துல கட்டுன வூடு. வூடுன்னா உயிரில்லாத வெறும் ஊடா கரமுண்டாரு வூடு? கள்ளனுவளுக்கு பட்டப் பேரு உண்டு. ஆனா இந்த பட்டப் பேர ஆயிரம் வருஷமா தூக்கி நிறுத்திகிட்டு இருக்குறவளுவ கள்ளத்தியுவதான். கள்ளனுவ இல்ல. வெவ்வேற பங்காளிவ குடுப்பத்துவல்ல இருந்து, வெவ்வேற பட்டப் பேருலேருந்து உண்டான கள்ளக் குடிவள்ள இருந்து, வந்து கள்ளச்சிவ தாம் பொறக்காத வேற பங்காளி குடும்பத்துல போயி சேந்து அந்த புது கள்ளக்குடி பட்டப் பேரதான் தலைவுள்ளெ ஏத்திகிட்டு, பூந்தக்குடிய தாங்கி, ஒசத்துறவ கள்ளச்சிவதான். கரமுண்டான் குடியத்தான் எடுத்துப்பாரேன் திரிசியம்பா, ராஜதயம்பா, மாணிக்கம், வள்ளியம்பா, நாகலெக்ஷ்மியம்பா நாலு பேரும் வேற வேற பட்டப் பேருவுள்ள கள்ளக்குடிவள்ள இருந்து வந்ததுவதானே? இப்ப அதுவ எல்லாம் கரமுண்டாத்திவதான், இல்லென்னு சொல்ல முடியுமா? கரமுண்டாரு குடி வெளங்கறதுக்கு இப்ப

அத்தனையும் ஒண்ணா நிக்கிது. இப்ப யாராவது இதுவள வேற குடி பேரு சொல்ல முடியுமா? வூடுன்னா என்னா வெறும் கூட்டமா? தெலகராஜு பொண்டாட்டியா காத்தாயம்பா பொய்ட்டா அப்பறம் கரமுண்டாரு வூடு ஏது? அது என்னமோ பொண்ணுவளுக்கு சாகுற வரைக்கும் பொறந்த குடிய தலையில கட்டியிருக்கு. அப்பாரு எப்பனாச்சும் இத ரோசிச்சு இருப்பாங்களா? எப்பவாவது இந்த வூட்டுள இருக்குற எந்த ஆம்பளையாவது யோசிச்சு இருப்பாளா? விடிஞ்சா, பொழுது போனா, எப்பப்பாத்தாலும் மார்ல சந்தனமும், காதுல பூவும், நெத்தியில நாமமுமா சந்திரஹாச கரமுண்டாரு ஏதாவுது ஒரு பொண்ணு மாப்பிள்ளைக்கி ஆசிர்வாதம் பண்ணிவுட்டுகிட்டு இருக்காரு. ஒரு கவலையும் இல்ல. காலையில ஒருபெரிய வெண்கலச் சொப்பு நெறைய பாலக் குடிக்க வேண்டியது. பெருமாள் கோயில்ல போயி ஒடம்பு பூரா நாமத்த போட்டுகிட்டு உச்சி வேளைக்கி திரும்பி வந்தா, பந்து பந்தா நாலு உருண்டை வெண்ணெய்ய முழுங்க வேண்டியது. திண்ணையில ஏறி உட்கார்ந்தாருன்னா வர்றெ கட்சிக்காரனுக்கெல்லாம், காளாஞ்சியில வெள்ளி ரூபாய போட்டு வெச்சிகிட்டு ஊர்ல இருக்க கோவிலுக்கெல்லாம் வந்து கேட்கறப்ப எல்லாம் வெள்ளி ரூபாயா அள்ளிவுட வேண்டியது. டி.எம்.முக்கே கூட்டம், காங்கிரசு கூட்டம், அன்னா டி.எம்.கே.கூட்டம், கம்யூனிஸ்ட் கூட்டம் அப்டின்னு எந்த கூட்டம் வந்தாலும் சரிதான் வர்றெ கூட்டத்துக்கெல்லாம் வாரிவிட வேண்டியது. என்னமோ அப்பாரு காலம் இப்படியே போச்சு. திரிசியம்பாளொடய அம்மா ராதையம்பாளோடய ஆயி... அப்பன், நாகலக்ஷ்மியேம்மாவோட குடும்பம் எல்லமே கரமுண்டாரு ஊட்டுக்குள்ற வந்து சேந்தாச்சு. கரமுண்டாரு வூட்டு மாடி பூரா இவுங்கதான் ரொம்பியருக்காங்க. வூடு பூரா சின்னதும் பெரிசுமா பொண்ணுவ பெரு மூச்சோட நிக்கிதுவ. எல்லாருக்கும் நாகலெக்ஷ்மியம்மா சமையல் ஒத்துகிச்சு. ஐம்பது வருஷத்துல ஏதுவும் மாறாம இப்படியே எங்கியாவது இருக்குமா? நாகலக்ஷ்மியம்பா கையி பெரிசு. யாரும் அதுக்கு ஒஸ்தி இல்ல; தாழ்த்தி இல்ல. சந்திரஹாச கரமுண்டாருக்கு என்ன பங்குபணிக்க நடக்குதோ, அதுதான் எல்லாருக்கும். அவரு பாலு ஊத்திகிட்டா, எல்லாருக்கும் பாலு. அவரு நெய் ஊத்திகிட்டா, எல்லாருக்கும் நெய். அவரு பழம் தின்னா, எல்லாருக்கும் பழம். மருந்துக்குகூட ஒரு பலசரக்கு கடை இல்லாத அஞ்சினி கிராமத்துல இப்ப துலுக்கனுவ வந்து பலசரக்கு கடை போட்டானுவ. பொளைக்கணும்ன்னு இருந்தா கரமுண்டானுவ கடை போட்டு இருந்தா கோடீஸ்வரனுவலா? துலுக்கனுவள ஜெயிச்சு

துவாயில வூடுகட்டி அமெரிக்காவுல வியாபாரம் பண்ணியிருக்க மாட்டானுவளா? கரமுண்டானுவளுக்கு அது முடியாது. பொய் சொல்ல முடியாது. இல்லாதத இருக்குன்னு சொல்லிகாட்ட முடியாது. வியாபாரங்குற பேருலெ அயோக்கியத்தனம் புரியாது, தந்திரம் புரியாது. சுப்பு சித்தப்பா நெனைச்சிருந்தா தஞ்சாவூர்ல, பஸ்ஸு கம்பெனி ஆரம்பிச்சு ஊரு பூரா பஸ்சு விட்டு வாரி குமிச்சுருக்க மாட்டாரா? ராமு கரமுண்டாரு நெல்லு மணிடியோ, உரக் கம்பெனியோ தொடங்கியிருந்தாருன்னாக்க-இந்த பத்தம்பது கிராமத்துக்கும் நெல் அரவைக்கு மில்லு போட்டிருந்தாகூட இன்னிக்கு ஆலைமாதிரி மில்லு ஓடியிருக்கும். கரமுண்டானுவ சப்பை. எஞ்சியும் போவமாட்டானுவ. இப்படியே திரிஞ்சு திரிஞ்சு ஊரு சுத்தி எம் பேரு முத்தின்னு ஒறப்பேரி போய்ட்டானுவ. ஞாயமா பாத்தா நூறு வருஷத்துக்கு முந்தியே கரமுண்டானுவ கப்பல் முழுகிப்போச்சு. இப்ப பெருமைக்கி ஆத்தக்கட்டி எறக்யப் பாக்குறானுவ. வீரம், தீரம், ரோசம்ன்னு பேசுன பேச்சு எல்லாம் காத்தோட போச்சு. இப்ப வீரம் எல்லாம் சாராயத்துக்கிட்டதான். சாராயம் உள்ற எறங்குனாதான் வீரம் வருது. இல்லென்னா பொம்பளைக்கிட்ட வருது. ரோஷம் எல்லாம் ராத்திரியில இருட்டுல எங்கோ தரியில வேகத்துல முடியுது. மேலயிருந்து அக்கினி மாதிரி பத்தாயக் கூம்பு ஜன்னல் வழியே பனியெறங்குது. அக்கினி எஞ்சியாவது பனி மாதிரி எறங்குமா? எறங்கத்தான எறங்கும். ஊமைப் பனி. காலமெல்லாம் புரியாத ஊமைப் பனி. கண்ணுக்கு நேரா குடி அழிஞ்சுகிட்டு இருக்கு. ஒரு வருஷமா? ரெண்டு வருஷமா? காத்தாயம்பாளுக்கு நெனவு தெரிஞ்சதுல இருந்து கரமுண்டான் குடி இடிஞ்சு கொட்டுனாப்புல இல்ல, கொஞ்சம் கொஞ்சமா? திண்ணையில ஒக்காந்துகிட்டு வாரி கொடுத்துருக்காரு. அதுக்குகூட ஒரு கணக்கு வெச்சிக்கல கரமுண்டாரு. சித்தப்பனுவ மட்டும் இல்ல, கரமுண்டாரு வூட்டுல இருக்க எந்த ஆம்பளையும் இப்படிதான். பட்டு வேட்டி கட்டுனவங்க டெர்லின், டெரிகாட்டன், பாலிதீன், டெரிக்ஸ், அல்டி மாரிகிட்டாங்களே தவிர, அதே பட்டு கட்டுன புத்திதான் இப்பவும் இருக்கு. மேல இருந்து குளிர் ஊசியா எறங்குது. இருபது முப்பதடி ஒயரத்துக்கு மேல இருக்குறதுனால சின்னதா தெரியிது தவிர, ஜன்னல் பெரிசுதான். ஒரு வகைக்கு இந்த குளிர்தான் தைரியம். இந்த குளிரும் இல்லென்னா, காத்தாயம்பாளுக்கு அம்பாளாலகூட தொணை செய்ய முடியாது. பசி இல்லாம சாப்பாடு எறங்குமா? செல்லியோட ஒவ்வொரு தடவை படுத்து புரண்டு எந்திரிக்கும் போதும், மூணு நாலு மணி நேரக் குளிர் ரெண்டு பேருக்குமே

விட்டுப் போயிடும். ஒடம்பு தீ மாதிரி கொதிக்கும். அது ரெத்தம்,ரெத்தத்தோட சூடு. இளமையோட அடக்க மாட்டாத ஆவேசம். கேணிப்பட்டறையில ஏறி குதிரையோட லகானப் பிடிச்சு ஒரு கையில் குதிரைவார் சவுக்குமா கவரமேட்டு மணல்ல பாஞ்சு சவாரி பண்ற தெலகராஜ மனசுக்குள்ள ஞாபகம் பண்ணிக்கிறா காத்தாயம்பா. தெலகராஜு இங்கே வந்து வள்ளிசா மூணுமாசம் ஆவுது. கரமுண்டாரு வூட்டுக்குள்ள வந்து நின்னு அவனும் கரமுண்டாரா ஆயிப் பொய்ட்டான். ஒரு பொண்ணு கையெப்புடிச்சு இளுத்து கட்டியாள ஒரு தெம்பு இல்லியா ஒனக்கு? நீயுமா கரமுண்டான் ஆயிட்ட? ஒனக்குமா நெஞ்சுல மஞ்சனம் இல்ல. நீயி கையெப்புடிச்சு இழுத்தப்பல்லாம் நான் ஓடி வந்து மடியில ஏறிக்குவன்னு நெனைச்சியா? நீ தொட்டவுடனே ஆகான்னு வெட்கத்துல ஒடம்பெல்லாம் சிலிர்த்துப் போயி மயங்கிப் போயி ஓங்கையில விழுந்துடுவென்னு நெனச்சிக்கிட்டே ஏங்கிப் போனியாடா? ஒனக்குத் தெரியுமா? இங்கே எத்தனப் பொண்டுவ கரமுண்டான் வூட்டுக்காவ வெட்டி பலியாயி இருக்குதுன்னு. எத்தனப் பொண்டுவ இன்னைக்கும் புள்ள வரம் காத்துகிட்டு இருக்குன்னு தெரியுமா ஒனக்கு? எங்க அம்மா திரிசியம்பாவுக்கு அறுவது வயசுக்கு மேல இன்னமும் அந்த ஆசை இருக்குடா. எத்தனை ஊரு தீர்த்த யாத்திரை பண்ணியிருக்காவோ தெரியுமா? இதுக்கெல்லாம் அடியில ஒரே ஆசை, யாரு ஜெயிக்கப் போறான்னு ஒரே போட்டி. நாகலெக்ஷ்மியம்மா, ராதையம்மா, மாணிக்க வள்ளி மட்டும் இல்ல. எல்லாருக்கும் அடி ஆழத்துல ஒரே ஒரு ஆசை கரமுண்டாருகுடி வுழுந்தரக்கூடாது. ஒரே ஒரு ஆசை ஒரு கொடி துளிர்க்கணும், ஒரு விதை முளைக்கணும், ஒரே ஒரு ஆம்பளைப்புள்ள. எத்தனை வருஷம்? கரமுண்டாரு குடின்னா ஆம்பளைப்புள்ள பொறக்காது. நூத்திபத்து வயசுல செத்து போனாரே பெரிய கரமுண்டாரு, அவருக்கும் மட்டும் நாலு ஆம்பளைப் புள்ளையுவ பொறந்ததுவ. அதுதான் இப்ப ஆண்டு அனுபவிக்கிதுவ. கரமுண்டாரு வூட்டுல குழந்த பேருன்னாலே நூறு வருஷா பொம்பளைப் புள்ளயுவதான். கடைசியா இப்ப கரமுண்டாரு வாரிசு இல்ல. கரமுண்டாரு குடியில பெண்டுவ எல்லாம் அழகுதான். ஒண்ணு ஒண்ணும் முழுசு முழுசா, பெரிசு பெரிசா, தாட்டிகையா, திண்ணக்கமா, தெளிவா, கண்ணுக்கு இதமா பொண்ணுன்னா இப்படி சிரிக்கணும், கண்ணுன்னா இப்படி சிமிட்டணும், காலுன்னா இப்படி நடக்கணும், பொண்ணுன்னா இப்படித்தான் இருக்கணும்ன்னு எல்லாரும் ஆத்துப் போகணும். அந்த மாதிரி இருக்கும் பொண்ணுவ எல்லாம். ஆம்பளைக்கு

உதாரணமா கரமுண்டானுவள சொல்ல முடியாதுங்கும் தொரச்சியப்பாயி. மேலயிருந்து பனி ஊசி கீழே எறங்குது. காவிரி ஆத்து அலைச் சத்தம் கரமுண்டாரு வூட்டு மேலே மோதி மோதி எப்பவுமே பாசி கெட்டிச்சுப் போன கரமுண்டாரு வூட்டுச் சொவரு மாதிரி, கரமுண்டாத்தி காத்தாயம்பா, மனசுக்குள்ள அலையோட்டம் கேட்குற மாதிரி, எங்கிருந்தோ உஸ்உஸ்ன்ன ஒரு கூகையோட சத்தம் கலந்து கேக்கும். நாளைக்கு என்ன நடக்கும் அதுதான் எல்லாருக்குமே தெரியாது. அது தெரிஞ்சா வாழ்க்கை இருண்டுடும். ரெண்டு நாளா செல்லியோட படுத்துக் கெடக்குறது தொரச்சியப்பாயிக்கி கூட புடிக்கல. "அது என்னா தெனம் பள்ளச்சியோட போயி உள்ள பூந்துக்குற? இன்னும் ரெண்டு நாள்ள ஒன்ன இழுத்துகிட்டு போவ வடுவாம்பா வர்றா. வடுவாம்பா சேதி தெரியும்ல்ல? புடிச்சா ஒரு புடிதான். ஆயிரம் வாட்டி சொல்லியாச்சு ஒனக்கு."

"நீ போ கிளவி கெடக்கு. நா எஞ்சயும் போ மாட்டேன்"

"எஞ்சியும் போவமாட்டியா... பின்ன இஞ்ச இருந்துகிட்டு கரமுண்டாப் பயளுவளுக்கு நோக்காலு, தாய்கோலு, குறுக்கு சட்டம் பாவிகிட்டு இப்டியே ஒட்டாரம் போட்டுகிட்டு இருக்கலாம்ன்னு நெனைக்கிறியா? எட்டீ காத்தாயி. கரமுண்டாத்தியுவ இனி எப்டி வரிஞ்சு கட்டுனாலும் இனிமே தக்காதுடி. எல்லாம் பறந்துடும். தச்சு வெச்சாலும் தறதறங்கும். கட்டி வெச்சாலும் கறகறங்கும் பொத்தி வெச்சாலும் பெற பெறங்கும்."

"ஆமா நீ கிழிச்ச, நீ தாங்குனது தான் தெரியுமே. மத்தவ தாங்க நீ உட்டுருவியா நீ கரமுண்டான் வூட்ட தலையிலதான் தூக்கிட்டு போயேன்... யாரு வேண்டான்னாங்க"

"ஒக்காள... பட்டிமுண்ட எப்படியும் போயேன். நாளைக்கி தெலகராஜு வந்து வௌக்கமாத்த எடுத்துகிட்டு நாலு சாத்து சாத்துனான்னாதான் நீ இந்த பண்ண முண்டையவுட்டு இந்தாண்ட வருவே."

"ஆமா நீயி சொல்லிட்டின்னாலும் அங்கன ஓம் பேரன் கையெ தூக்கி வௌக்கமாத்த எடுத்து தலைக்கி மேல தூக்கி அப்டியெ காத்தூக்கும் வலிக்காம கையிக்கும் வலிக்காம அடிச்சுதான் கிளிச்சுவுடு வாரு, மரியாதயா போ கௌவி."

"ஏய் ஏய் பேசிகிட்டே போவாதடி முண்டம், வடுவாம்பா வந்து ஓம் மயிர அறுக்கல, அப்புறம் நீ என்னக் கேளு. ஒனக்கேன்டி இந்த பள்ள சவகாசம்."

"கள்ளன் சவகாசம் வெச்சிக்கிட்டதே அப்படிதான். ஏங்கெளவி ஓம்புருஷன் சவகாசமே வெச்சிக்காம எட்டியே இருந்து நாட்டுக்கிட்டாறாம்ல? கேள்விபட்டேன்"

"பாவி முண்ட அவரெ பேசினியின்னா நாக்கு அழுகிடும். ஒன்ன அண்டாரங்காட்டு நாவம் புடுங்க, தெருவோட போற நாயி புடுங்க, நரி புடுங்க..."

காத்தாயம்பா கனவிலும் கேட்காத கெட்ட வார்த்தைகள் தொடர்ந்து தொரச்சியப்பாயி வாயிலருந்து அருவிமாதிரி பொறப்பட்டது. காது கொடுத்து கேக்க முடியல, கெளவி கழுத்த புடிச்சு ஒரே மிதி மிதிச்சா என்னா? ஆத்திரம் பொங்கினாலும் தொரச்சியப்பாயி மேல கோபமே வர்ல. காத்தாயம்பா கண்ணுல இருந்து தண்ணீ ஆறா வடியுது. செல்லி அவளை தனியே எங்கோ எடுத்துப் போய்க்கொண்டிருக்கிறாள். அண்டாரங்காட்டுக்கு அந்தப் பக்கம் ஊர் எல்லையில் ஆப்சர்வேரி கட்டடம்தான் ஊருக்கு எல்லை. அதுக்கு அந்தப் பக்கம் என்ன இருக்குதுன்னு காத்தாயம்பாளுக்குத் தெரியாது. அஞ்சினி கிராமத்த தவிர அவளுக்கு வேற எந்த இடமும் தெரியாது. ஊருன்னு பார்த்தா தஞ்சாவூருக்கு வடக்கே எந்த ஊரும் பார்த்ததில்லை. மனுஷங்கன்னா கரமுண்டாரு ஜனத்தத் தவிர வேறு எதுவும் பழக்கமில்ல. இந்த தொரச்சியப்பாயிதான் அவளுக்கு எல்லாமே. உள்ளது, இல்லாதது; நல்லது, கெட்டது, பெரிசு, சின்னது; எல்லாமே அவளுக்கு தொரச்சியப்பாயிதான் எல்லைக்கோடு. தொரச்சியப்பாயி வழியே தனிதான். அதுவள்ளாம் மனுஷியளே இல்ல. பெருமாள் மாதிரி, சாமியுவ, அதுல சொன்னா சொன்னதுதான். தங்கராசு மாமன் சுத்திச் சுத்தி வந்தானே, அப்ப யாரு சொல்லிக் கொடுத்தா? இவன் வேண்டான்னு. ஏதாவது தெரியலைன்னா, புரியலைன்னா காத்தாயம்பா திரும்பி ஒரு தடவை தொரச்சிய்பபாயி மூஞ்சியப் பாத்தாப் போதும், தொரச்சியப்பாயி சொல்லிடும். "தங்கராசு பய வாண்டாண்டீ நல்லவன்தான், கருக்கானவன், காசு உள்ளவன், சொத்து உள்ளவன்தான், நல்லா கண்டு முதல் காண்ற நெலம்தான். ஆனா சாவியா பொளைக்கும் பார்த்து இருக்கியா? நாஞ் சொல்றேன், தங்கராசு வேண்டாம். நெல்லுப்பாளெ மாதிரி நீத்துப் போவாதடீ"

தங்கராசுக்கு என்ன கொற? ஏன் வேண்டாங்குற கேட்டு இருப்பாளா காத்தாயி?

"நைலக்சு பொடவை எல்லாம் எதுக்கு ஒனக்கு? ஓம் ஒடம்பே சூட்டொடம்பு. இதுல வேற லப்பரால எல்லாம் பொடவை கட்டிகிட்டியின்னா புளுக்கி புளுக்கியெ ஒடம்பே வெந்து போவும்டீ. ஆசையா இருந்தா ஒரு பொடவை வாங்கி ரெண்டு நாளைக்கி கட்டிபுட்டு தூக்கி எறிஞ்சுடு. நெதெய்க்குமா கட்டுற வேல வாண்டாம்"

"ஆமா போ கௌவி... எனக்கு வந்து என்னா சோப்பு தேக்கிறதுன்னு சொல்லிக் கொடு. நல்லாரு இருக்கும்"

"சோப்பு எதுக்குடி சோப்பு? வூடு பூரா மணக்குற வினோலியா கட்டி வெள்ளக்காரன் காலத்து சோப்புடீ. ஓங்க தாத்தாவுக்கு வரும் அந்த காலத்திலேயே. எப்பவும் அதை தேச்சிகிட்டதே இல்லடி. இந்த காலத்து நாத்தத்தையா தேக்கப் போறேன்?"

"ஓம் பேரனக்கட்டிக்க சொல்றியே, அழகாவா இருக்கு அது?

"பொண்டுவளுக்கு ஆம்பளைய பாக்கணும். அழகா இருக்க வேண்டாம். ஆனா தெலகராஜு அழகு மட்டும் இல்ல. புடிவாதகாரன், ஒன்ன புடிச்சா புடிச்சதுதான், அவங்க அம்மா மாதிரி. நீ மாட்டேன்னாலும், ஒப்பன் மாட்டேன்னாலும், இனிமே உடமாட்டான். கொண்டு போயிடுவான், தெரியுமில்ல"

"ஆமா. பெரிய தேசிங்கு ராசன்ல ஓம்பேரன். எனக்கு வேண்டாம்"

"தேடினாலும் கெடைக்குமாடி? அப்படி பட்டணத்து சீமையெல்லாம் சுத்துனாலும் எம்பேரன் மாதிரி ஒருத்தன் கெடைப்பானா? தங்கத்துக்கு தங்கம், வயிரத்தக்கு வயிரம்டி." எயித்து எயித்து பேசிகிட்டு இருந்தாலும் கௌவியோட பேசிகிட்டு இருக்கிறது காத்தாயிக்கு ரொம்ப இஷ்டம். யாரு எது சொன்னாலும், கடைசியா தொரச்சியப்பாயி ரோசனைதான் வேணும். தனக்கே தெரியாம தொரச்சியப்பயாவே தானே பொறந்து, தொரச்சியப்பாயாவே தானே வளர்ந்து, கரமுண்டாருகுடிக்கு அடி ஓரமா அந்த கௌவி போட்ட ஒத்த ஓரம் மாதிரி, தானும் இந்த வூட்டு அடி மண்ணுல இந்த வூட்டோட ஊடா தேஞ்சு லக்கமா போயிடக் கூடாதா? அப்டின்ன ஒரு பேராசை. செல்லிய அப்பாயிக்கி தெரியும். இந்த வூட்டுல இருக்குற வேற யாருக்கும் தெரியலைன்னாலும் தொரச்சியப்பாயிக்கு எல்லாம் தெரியும். காத்தாயம்பாளுக்கு எதையும் ஒளிக்கத் தெரியாது. மறச்சுப்பேசி மாத்தி வெச்சு, அடியோட வேகெவெச்சு, அழுகவிட்டு, புரையோடி போற விஷயம். அவளுக்கு ஒத்துக்காது.

"வாணாண்டி காத்தாயி இந்த சவகாசம்"

"என்னாலேயே முடியலியே அப்பாயி"

"தெலகராஜ கூட்டிகிட்டு போயிடு. இது பாவம். கொலமே மூழ்கிடும்"

"என்னால முடியலியே அப்பாயி"

வானம் வெள்ளை சதுரமாகி துண்டுபட்டு பத்தாயக் கூம்புக்குள் வந்து கொண்டிருந்தது. நேத்தி இதே நேரத்துலதானே உமாமஹேஸ்வரிய காணுமேன்னு குதுர லாயம் பக்கம் பக்கத்து கொல்லை கதவை திறந்துகிட்டு போயி நின்னப்ப, வயல் வரப்போட ஈரப்பொடவையும் ஒடம்புமா இருட்டு வேளையில திரும்பி வந்த உமாமஹேஸ்வரிய கண்டு பிடிச்சது? திருக்காட்டுப்பள்ளி பள்ளியூடத்துல படிக்கிற காலத்திலேயே காத்தாயிக்கு ஒரு பெரிய சந்தேகம் உண்டு. ஆம்பளப் பசங்கன்னாலே ஏன் இப்டி இளிச்சு புளிச்சுகிட்டு நிக்கிறானுவ. வாத்தியாரா இருந்தாலும், ஐயங்காரா இருந்தாலும், தெலகராஜா இருந்தாலும், குடியானவனுவளா இருந்தாலும், பள்ளியூடத்து பயலுவளா இருந்தாலும், ஏன் இப்படி பொம்பளைவளக் கண்டா இளிச்சு புளிச்சுகிட்டு வெறிக்கிறானுவ? மொத மொதல்ல பயமா இருக்கும். அப்புறம் பாவமா இருக்கும். அப்புறம் அதுவே பழகிடும். ஆம்பளைன்னாலே அவனுவ எங்கேயிருந்தோ எதை எதையோ பத்திக்கிட்டு வரும். அப்பவே சின்னம்மா மேல் கிளாசுலதான் படிச்சிகிட்டு இருந்தது. அப்பவே சுப்பு சித்தப்பாவுக்குதான் கட்ட போறாங்கன்னு ஊருக்கே தெரியும். ஆனா பசங்க எல்லாம், பள்ளியூடமே உமாமஹேஸ்வரி மேல ஒரு கண்ணு வெச்சுகிட்டிருந்தது தெரியும். அது என்னமோ தெரியல, அன்னைக்கும் சரி, இன்னைக்கும் சரி, காத்தாயம்பாளே பாக்குற எந்த ஆம்பளைக்கும் பயம்தான் மிச்சமாக இருக்கு. அப்பவே தெரியும், உமாமஹேஸ்வரியை மட்டும் எல்லாருமே தைகிரியமா உத்துகிட்டு பார்த்தானுவ. அட பார்த்தாத்தான் என்ன, பாக்கட்டுமேன்னு காத்தாயம்பாளுக்கு தேனியதே இல்ல. அதெப்படி அப்படி பாக்குறானுவ? இளிக்கிறானுவ? வளியிறானுவ? ச்சீ... ச்சீ... த்து... த்தூன்னுக்கூட மொகத்துல எரிஞ்சாப்ல ஒரு குறிப்புகாட்ட முடியாம போகுதே? இவளுக்கு பாத்தியா? ன்னு காத்தாயம்பாளுக்குதான் அருவருப்பா இருக்கும். ஆனா மொத மொதல்ல இதே மாதிரி கோணல் மாணலா எதை எதையோ பாத்து, கையெப் புடிச்சு இழுத்தப்பவும், என்னென்னவோ பண்ணினானே தெலகராஜ் அது மாத்திரம் ஞாயமா போச்சா. ஆனா தொரச்சியப்பாயி சொல்லும் 'ஏண்டீ கழுதெ மாமன்தானடீ

தொட்டா கரைஞ்சா போயிடுவெ? அவன் வந்து தொட்டாலே முறுக்கிக்கிரியாமே. நாங்கெல்லாம் பொம்பளைவளா இல்லியா? நீ என்ன பெரிய அல்லிராணியா? கரமுண்டாத்திவ அவளுவ ஆம்பளைவுள தலைக்கு மேலே தூக்கிகிட்டு ஆடுனவளுவதான். சொல்லப் போனா, அவனுவளே அசந்து போவனும் எல்ல வேலையும் அவ அவ தலைமேலே தூக்கி போட்டுக்கிட்டு செய்யிறதும், அவளுவ அவனுவ வேலையையும் செய்யிறதும் வேற எஞ்சியும் பாக்க முடியாது. ஆம்பளைன்னா ஏதோ கெடைக்காதது கெடைச்சது மாதிரி கொண்டாடி கொண்டாடி பூப்பொட்டு கும்புடுவாளுவ. 'கும்புட கும்புடத்தான் கல்லுவ சாமியளா ஆவுது' அப்டீங்கும் தொரச்சியப்பாயி. வீரனா எவனும் இல்லடி ஆரம்பத்துல, எல்லாரும் மனுஷனுவதான். இவளுவ முறுக்குற முறுக்குலதான் அவனுவ வீரனாவுறதும், சூரனாவுறதும் எல்லாம் அடங்கி கெடக்கு. கரமுண்டான் புடிக்குள்ள வர்ற எந்தப் பொண்ணும் இந்த ரகசியத்த தெரிஞ்சுக்குறா. இஞ்சே இருக்குறவனுவ எல்லாம் வெறும் ஆம்பள மட்டும் இல்ல. ஏற்கனவே கரமுண்டாத்திய கும்புட்டு கும்புட்டு கரமுண்டானுவள மேலுக்கு மேல ஏத்தி வெச்சிருக்காளுவன்னு புரியிது. இதுனாலதான் கரமுண்டானுவ கள்ளனுவமாதிரி வெட்டிவீரம் பேசுறது இல்லை. வலுச்சண்டைக்கு போறதில்லை. மேல வர்ற சண்டைக்கும் போறதில்லை. பொம்பளைய தேடி தேவடியா குடி போறதில்லை. "சேர்ந்தா ஜாதி பாக்குறதில்ல, சேராட்டி பகையா நெனைக்கிறதில்ல. தெரியுமாடீ"ங்கும் சந்தனப்பாயி. சந்தனப்பாயியோட அப்பாயி, காத்தாயிப்பாயி கிட்ட சங்கதிய சொல்லும். கரமுண்டான் குடிய அழிக்கவே முடியாது. எந்த தைரியம் என்ன தப்பு பண்ணாலும் இன்னொரு குடிய அழிக்கிற தப்பு மட்டும் கரமுண்டான் பண்ணுனதே இல்ல. அதனால அவன் குடி அழியாது. பொன்ன வைக்கிறது, பொண்ண அழிக்கிறது, இந்த வேலை எல்லாம் ஒலகம் பூரா செஞ்சப்பகூட கரமுண்டானுவ செஞ்சதில்லை. எப்பவுமே காத்தாயம்பாளுக்கு உமாமஹேஸ்வரிய பாத்தா ஆச்சரியமாத்தான் இருந்தது. இப்ப எஞ்சியோ போப்போறாளாமே. எவனோடயோ ஓடப்போறாளாமே. என்னா தகிரியமா சொல்றா. ஆசைப்படுறது, காதலிக்கிறது, இஷ்டம் போல ஓடுறது, இதுக்கெல்லாம் அர்த்தம் என்ன? எனக்கு ரெக்க முளைச்சிடுச்சு. நான் பறக்க போறேங்கிறதுதான். வேற என்ன? ஜாதி இல்லைதான், காலம் மாறிடுச்சுதான், இல்லெங்கல. ஜாதி இல்லேன்னுட்டா மனுஷனோட துன்பம் எல்லாம் இல்லேன்னு ஆயிடுச்சா? கஷ்டம் எல்லாம் தீந்துடுச்சா? இல்லேங்கிறானே

தெலகராஜு. அத்தெ வடுவாம்பாளுக்கு நூறோட நூறுவேலி நெலம் வேணும். இல்லென்னா நான் வேண்டாம். இல்லியா? "எது இருந்தா என்ன, இல்லைன்னா என்ன? எவ எந்தப் பாடையில போனா என்னா? ராமு கரமுண்டாருக்கு செவத்த வேணும். வீடெல்லாம் கரமுண்டான் பொண்ணுங்க பொறந்து கிட்டே இருக்கணும். ஆனா பள்ளக் குடியிலே ஆம்பளைப் புள்ளைவளா பொறக்குதுவளே, அதுக அடுத்த பத்து பதினைஞ்சு வருஷத்துல கள்ளக் குடிக்கி உமாமஹேஸ்வரிகளை தேடிக்கட்டு வராமலா இருக்குதுவ? உண்மையெல்லாம் எல்லாருக்குந் தெரியாது. ஆனா ஒத்துக்கத்தான் மாட்டானுவ" அப்படிங்கிறான் தெலகராஜு கடைசில அவனுக்கும் இதுதான் வேண்டியிருக்கு. ஒசத்தி, சுத்தம் எல்லாம் பேசுற எனக்கு, இதே என்கைக்கு எட்டுன தூரத்துல இருந்து என்ன தழுவிக்கிட்டு இல்லாத பெருமை எல்லாம் என் தலைமேலே சுமத்தி என்னை அடியோட உள்ளே அடக்கிட்டது யாரு? இந்தப் பள்ளச் செறுக்கியதானே. நான் எங்கியும் போக மாட்டேன். ஊரு பாக்க ஒரு போட்டோ படத்த ஒரு வெள்ளைக்காரன் எடுத்திட்டாங்கிறத்துக்காகவே, அவன் கண்ணு முன்னாலேயே காவேரி மடுவுல பொணமா மெதந்துச்சே மங்களப்பாயி, அது ஓடுனாலும் அது ஒண்ணும் சாகலை. இதே மங்களப்பாயாவும், தொரச்சியப்பாயாவும், சந்தனப்பாயாவும், இதோ நான் இருக்கேன். யாரு வுட்டுட்டு ஓடினாலும் நான் ஓடமாட்டேன். கரமுண்டான் வூடு தேக்கந் தூணுல நிக்கல என்னோட மூச்சுல நிக்கிறது. ஆறு ஊருக்குள்ள திரும்புனப்போ கரமுண்டான் வூடு நின்னுது. கரமுண்டார் வூட்டு பொண்ணு ஒருத்தி எஞ்சியோ ஓடப்போறா, இன்னொரு பக்கம் வூடு சரியப் போவுது. கண்ணுக்கு முன்னால எத்தன கள்ளக்குடி சரிஞ்சது? பணங்காசு வருமானம் இல்லாம, எத்தனை கள்ளக்குடி நடுத்தெருவுக்கு வந்தது. நாதி இல்லாம எத்தனை கள்ளன் பிச்சை எடுக்கப் போனான்? தஞ்சாவூர் சீமைக்கு துலுக்கனுவ படையெடுத்து வந்தப்ப எத்தனை கள்ளச்சி துலுக்கச்சியானா? சந்தானப்பாயி சொல்லுமே கதை கதையா? பாட்டா பாடுமே.

"கள்ளப் பொண்ணு பள்ளப் பொண்ணு
செட்டிப் பொண்ணு கட்டிப் பொண்ணு
புள்ள மாரு, புளிய மிளாறு
எல்லாங் கூட்டி ஒன்னா கட்டி
தூக்கி குதிரையில ஏத்துறானே
அரபிக் குதிரை சாயுப்பு"

தொண்டையை அடைத்து துக்கத்தெ தாளமாட்டாம விம்மினாள் காத்தாயம்பா. வூடு வூடுங்கிறேனே அப்டி ஒண்ணு இருக்கா? கரமுண்டா வூடு அப்படின்னு ஒண்ணு இருக்கா? கள்ளன் கள்ளன்கிறானே, கரமுண்டாங்கிறானே, அப்படி ஒண்ணு இருக்கா? காத்தாயம்பா நெஞ்சு வேகுது... தெலகராஜு. எவ்வளவோ படிச்சிருக்கியேடா... மயக்க மயக்க என்னன்னமோ பேசுனியடா. சீமைக்கு போறேங்கிறியே... காச கொட்டி கொடுத்து படிக்க போறேங்கிறேயே, அஞ்ச ஒரு காத்தாயம்பா இருக்காளாடா. அஞ்ச வெம்பி வெடுச்சுகாக அஞ்ச ஒரு காத்தாயம்பா இருக்காளாடா? கரமுண்டார் வூட்ட வெட்டி சாச்சு வுட்டு நீ சீமைக்குத்தான் போனா என்னா. நீ சீரோட போனாத்தான் என்ன? ஜாதிங்கிது வேற்றுமை இல்லடா, ஒற்றுமை. கரமுண்டார் வூடு இனிமேல் நின்னுதான் என்ன ஆவணும்? அப்படி ஒண்ணும் இல்லெ. ஒரு வூடு உளுந்தா வேற வூடு கட்றாங்க. நம்ப ஊருல குடிசை குடிசையா இருந்த எடத்துல எல்லாம் இப்ப கல்லு கட்டடமா நிக்கிது பாத்தியா? யாரு சொல்லி அதெல்லாம் எழும்புச்சு? இந்த வூடு இடிச்ச அதே எடத்துல வேற ஒரு கட்டடம் கௌம்பாதா? நம்ப ஊருக்கு கெணறு வெட்ட வார ஒட்டனுவள பாத்திருக்கியா? அவனுவளுக்கு கூட ஒரு நெறி, ஒரு மொறை இருக்கு. அதுவரைக்கும் அதுதான் தெரியும். எனக்கு இதுவதான் தெரியும். இதோ இந்த செல்விய கூப்புட்டு பாரேன் ஒன்னோட மாஞ்சியத்தான் கூப்புட்டு இழுத்து பாரேன்? நீ போற சீமைக்கி இல்லடா, இந்தத் தஞ் சாவூருக்குக் கூப்பிட்டுப் பாரேன், வர மாட்டாளுவ. ஒன்ன பிடிக்காமலா? இல்லை நீ தந்தது தெரியாமலியா? அவளுவளுக்கு காத்தாயம்பா யாருன்னு தெரியும். என்னை விட்டுட்டு எஞ்சியம் போமாட்டாளுவ. ஏன் தெரியுமா? வானத்தக் கிழிச்சிகிட்டு யாரு தலையில விழுவுமோன்னு ராக்கெட்டு வெடிக்குதாமில்ல. இந்தக் காலத்துல கூட எங்களுக்கு ஜாதி எல்லாம் உண்டு. சுத்த வத்தம்னா ஜாதின்னு. ஒத்துக்கிட்டா சுத்தமா இருங்களேண்டா. வேண்டாதது அழுகல், கழிசல், ஒழிசல் எல்லாத்தையும் ஒன்னா போட்டு கொழப்ப முடியாது. ஒரே ஒரு வழி இருக்கு. கரமுண்டார் வூட்ட முதுவ கொடுத்து தூக்கு. ஒனக்காகவே காத்துகிட்டு மிச்சம் இருக்க காலமெல்லாம் ஒங்காலடியிலயே கெடப்பேன் வா, ஓடியா... எல்லாத்தியும் உட்டுட்டு ஏங்கிட்ட ஓடிவா? நான் படிக்காதவ, ஒண்ணும் புரியாதவ, கொஞ்சம் கொஞ்சமா இடிஞ்சு ஏந்தலையில விழப் போற இந்த பத்தாயக்கட்டுல இருந்து. என்னைய வெளிய கொண்டு வந்து காப்பாத்த வேண்டாம். உள்ளுக்குள்ள வந்து இடிஞ்சு விழப்போற பத்தாயக் கூம்பாச்சி

ஜன்னல ஒங்கையாலேயே புடுங்கி எறிஞ்சிடு. வூடுதான் இடியும். முன்னே, வூட்ட தூக்கி நிறுத்து. அது ஒன்னால முடியாதுன்னு தெரியும். கொஞ்சம் கொஞ்சமா எல்லாரும் காத்தாயம்பாளவுட்டு போயிடுவாங்க. காத்தாயம்பா மட்டும் தனியா நிக்க மாட்டா. இந்த ஜாதி ஜனத்தையும் வூட்டையும் கூடவே நின்னு ஊணி நிறுத்துவா. காத்தாயம்பா. கரமுண்டானுவ அவள கல்யாணம் பண்ண முடியாது. மொறையில்ல. ஆனா ஒரு கள்ளன் ஆப்புடாமலா போயிடுவான்? புத்திசாலித்தனமா? தந்திரமா? வரவு செலவு கணக்குப்பாத்து வாழ்க்கைய வியாபாரமா ஜெயிச்சு நீ மேல மேல போ. சீமெக்குப் போயி படிச்சுட்டு வந்து இன்னும் காச குமிச்சுக்கோ. எங்க ஆயி நெலத்தோட, நெலத்த சேத்துக்கோ. ஜாதி இல்ல, மதம் இல்ல, இனம் இல்ல, குலம் இல்லேன்னு இந்த காலத்துல பேசாதவங்க யாரு? வர்றெ சினிமாவெல்லாம் அதுதான். கேக்குற பாட்டெல்லாம் அதுதான். எல்லாரும் ஒண்ணு, சமம் அப்டீன்னு ரேடியோ எல்லாம் கொடையிது. டிவியில அதுதான். கட்சியிலயும் அதுதான். கொள்கையிலயும் அதுதான். ஆனா நாங்க எங்கோ ஒரு மூளையில காவேரி கரையோரமா எங்க கால ஊனி ஏந்திரிச்சு நிக்கப் பாக்குறோம்.

விடிஞ்சு பத்தாயக் கூட்டுக்குள்ள வெளிச்சம் பரவின போது, நெஞ்சு வலியோடு காத்தாயம்பா எப்பத் தூங்குனான்னு அவளுக்கே தெரியாது. செல்லி எழுந்திரிச்சு போயிட்டா. உடம்பெல்லாம் புழுதி, இன்னும் செத்த நேரத்துல அவளை எழுப்பி கூப்புட்டு காவேரிக்குப் போயி முங்கி எந்திரிச்சு பழையபடி முழுக்க இந்த கரமுண்டார் வூட்டோட, தன்னோட, வேலையோட, தன்னை இணைச்சுக்கணும். ராத்திரி பூரா தூக்கம் இல்ல. செல்லிக்கு எல்லா தந்திரமும் புரியும் போலிருக்கு. ரெண்டு மாசமா அவளுக்கு எந்த ஆம்பளையும் வேண்டான்னு ஆயிடிச்சு. வூடு பூரா பொம்பளை புள்ளைவ அலையிது. இது என்ன எழவு, யாருவுட்ட சாபம்? செவ்வா, வெள்ளி காத்தாயம்பா முழு பட்டினி. முத்தத்துக்கு முத்தம் நின்னு, சாம்பராணி போட்டு, கழுவி, மொழுவி, கோலம் போட்டு எல்லாம் சுத்தமாகுறதுக்கு ராத்திரி 11 மணியாகும். எட்டாங்கட்டுல உட்கார்ந்து தொரச்சியப்பாயிகிட்ட பேசிகிட்டு இருக்குற தெலகராஜு, இஞ்சே இருந்து கழுவி தள்ளிகிட்டு இருக்க காத்தாயம்பா தெரிஞ்சுகிட்டே இருப்பான். பள்ளத்தில அண்டா அண்டாவா தண்ணிய தூக்கியாந்து இப்பகூட கழுவ ஆரம்பிச்சுட்டாளுவ. காத்தாயம்பா போகாமலேயே. காத்தாயம்பாளோட வேலை நடக்கும். ரெண்டு நாளைக்கி, மூணு நாளைக்கி ஒரு கல்யாணம், ஒரு பூசுத்துறது, பொண்ணுக்கு

சுத்துறது, ஒரு நீராட்டு, ஒரு திருமஞ்சனம், ஒரு பொங்கல்ன்னு கரமுண்டாரு வூட்டுல தெனமும் விசேஷம்தான். நோட்டு எழுதி நோட்டு எழுதி, நெலம் எல்லாம் தேஞ்சாலும் பங்கு பணிக்கை ஒண்ணும் ஆசாரம் கொறையாம, அது அது நடந்துகிட்டுதான் இருக்கு. காத்தாயி ஒன்னையும் உடமாட்டமா. ஒரு காலத்துல கட்டுன தோரணத்த தெனமுமே மாத்துவாங்களாம். அடுப்பு அணையாமலே எரியுமாம், தொரச்சியப்பாயி சொல்லும். தலைக்கு மேல இப்ப பெரும மட்டும் மிச்சம். திடீர்ன்னு எல்லாம் ஒரு நாள் இல்லாம போப்போது. தெலகராஜு உள்பட, எங்க போனாலும் யார் வந்து கரமுண்டான் குடியை காப்பாத்த போறா? ஆப்புட்ட வரைக்கும் சுருட்டிக்கிட்டேதான் இருப்பாங்க. அப்பாரு சுருட்றவங்கள ஒண்ணும் சொல்லவே மாட்டாரு. அவருக்கு இருக்க மட்டும் இதே மாதிரி இருந்துட்டு போவோம் நெனப்பு. உங்கவும், திங்கவும், படுக்கவும், பெரளவும், எடுக்கவும், புடிக்கவும், தாங்கவும், தூக்கவும் அப்பாருக்கு ஒண்ணுக்கு நாலு பொண்டாட்டி இருக்க. அதுவளுக்கு அவருபோதும். யாரு எந்த சந்தியில நின்னா என்ன? வூடு இடிஞ்சு ஆத்தோட போனா என்ன? திண்ணையெ புடிச்சுகிட்டே இல்லேன்னா ஒரு குத்து செங்கல்லை புடிச்சுகிட்டே சந்திரஹாச கரமுண்டாரு நீந்திக்கிவாரு. ஒன்னு ரெண்டு வூட்டோட நசுங்கி, தண்ணில மெதந்துடும். ரெண்டு கால இடுக்கிபிடிச்சு சந்திரஹாச கரமுண்டாரு கழுத்தெக் கட்டிக்கிட்டே நீந்தி தப்பிச்சுக்கும் மாணிக்க வள்ளி, நெனைக்கும் போதே ஒடம்பு கொதிப்பு அடங்கல காத்தாயம்பாளுக்கு. அவளெ அறியாமல் கூந்தல் அவிழ்ந்து தொங்கியது. வெளியில போகலாம்ன்னு குனிஞ்சு பத்தாயக்கட்டு சின்ன வாசல்வழியா நொழைய போனப்போ யாரோ உள்ள நொழைஞ்சு வர்றாங்க யாரது? உள்ளெ வராதீங்க, என்று கத்த வாயெடுக்கும் முன்னால் வந்தது தெலகராஜுன்னு புரிஞ்சு போனதும், தொண்டையில இருந்து சத்தமே எழும்பல. அவனெ தள்ளிக்கிட்டு வேகமா அந்த சின்ன வாசல் வழியா போகணும்ன்னுதான் பாஞ்சா காத்தாயம்பா. எல்லாரும் வூட்டுல இருக்குற நேரம் இல்ல. காலை மணி பத்து இருக்கும். எல்லாம் களத்துக்கு போயிருக்குதுவ. இவன் எதுக்கு இஞ்ச வர்றான்? ஒரு வேளை மாமனுக்கு கெப்புறு ஏறி போச்சா? உள்ற தலையில நொழைஞ்சப்பவே தலையப் புடிச்சு வெளியில தள்ளியிருக்கணும். ஆனா அதுக்கு பதிலா காத்தாயம்பாதான், உள்ள வந்து விழுந்தா. கீழ விழுந்ததுல முழங்கை கீழே ஊணி விழுந்ததுல வலி கண்டியது. மேல ஜன்னல் வழியா அந்த வெளிச்சத்த மூடணும் காத்தாயிக்கு. ஆத்திரம் பொங்கியது. இதுல ஒண்ணும்

கொறைச்சல் இல்லெ. காலால ஏந்திரிச்சி விசெப் பலகையை கீர்த்தாயம்பா அமுக்கினா. மேல இருந்த ஜன்னல் பத்தாயக் கூட்டுக்குள்ள மூடிகிச்சு. மூடினாக்கூட அந்த இருட்டுலயும் அவனோட உடம்பு அவளுக்கு நல்லா தெரிஞ்சுது. என்ன பண்ண போறான்? பெரிய வீரன் மாதிரி கால அகட்டிகிட்டு குஸ்த்திக்கு போறவன் மாதிரி நிக்கிறானே. என்ன பண்ணணுங்கிறான்? பயந்திட்டான்னு நெனைக்கிறானா? இவனால என்ன முடியும்? மிஞ்சி போனா ஒரு தடவ படுத்து எந்திரிப்பான். பத்தாவது மாசம் புள்ளெயும் பெத்துக்கலாம். அதுக்கப்பறம் இவன் போற குடியில எல்லாம் நானும் போயாகணும். நாலு வருஷத்துல அஞ்சு குட்டி போடுவான். அப்பறம் நண்டு, நசவான், சிறுவான்னு எல்லாத்தக்கும் பாலு கொடுத்துகிட்டு, மாமியாரு அள்ளிபோட்டு குத்தினாலும் வாங்கிட்டு, எப்ப வருவான்னு காத்துகிட்டு இருந்து, அழுது குமிச்சு ஓட்டாரம் போட்டுகிட்டு, நான் எங்க அம்மா வூட்டுக்கு போறேன்னு ஓடிப்போயி குந்தக்கூட கரமுண்டாரு வூடுன்னு அப்ப ஒண்ணுமே இருக்காது.

தெலகராஜு எதுவும் பேசாமல் அவளை நெருங்கி எட்டிப் பிடித்தான்.

# கரமுண்டார் வூடு - 7

**மா**யி பஸ்ஸைவிட்டு எறங்குனா, ஒண்ணும் புதுசு இல்ல. இருவது வருஷத்துக்கு முந்தி பார்த்த அதே கிராமம் அஞ்சினி. ஆத்தோரமாவே போற தெரு. எங்க பாத்தலும் பச்சை பசேல்ன்னு மூங்கில், வாழை, புன்னை, புளிய மரங்களின் அடர்த்தியான பின்னணி. பஸ்ஸில் இருந்து எறங்கி, பின்னால திரும்பி பார்த்தால் லட்சக் கணக்குல ரூபாய் செலவு செய்து கட்டின பிரம்மாண்டமான பாலம். பாலம் இருந்தாக்கூட இன்னும் பரிசல் ஓட்டம் நிக்கல. தஞ்சாவூருக்கு போறதுக்குதான் பாலம் இருக்கு. ஆறு ரெண்டா பிரிஞ்சு அந்த பக்கம் கொள்ளிடம், அந்த கரை மூணாங்கரை. திருச்சிக்கு போகணும்னா மூணாங்கரைக்குத்தான் போகுணும். திருச்சிக்கும், தஞ்சாவூருக்கும் இடையில கொள்ளிடமும், காவேரியும் பிரியிற எடத்துல அஞ்சினி இருபது இருபத்திரெண்டு மயில் நீளத்துல ஒர நீளமான தீவு மாதிரி தண்ணிக்குள்ள நீட்டிக்கிட்டு நிக்கிது. ஒரு பக்கம் பரிசல். இன்னமும் ஜனங்க பரிசல்ல போவுதுவ. இன்னொரு பக்கம் பாலம். பாலம் கட்றதுக்கு முந்தி மாயி இந்த ஊரவுட்டே போயிட்டா. அப்போ அவ அப்பா சிலத்தான் இருந்தான். அப்பனும் ஆயியும் பிரிஞ்சதோட அப்பனோட போனவ இப்பதான் அஞ்சினிக்கி வாரா. நல்லா படிச்சு, பாஸாகி ஒரு வேலைக்கும் தயாராகிட்டா. ஆனா அஞ்சினி மட்டும், நெஞ்சுலயே நின்னு போச்சு. ஊருக்குள்ள கால வெச்சதுமே, அன்னிக்கி பார்த்த ஊரு

அப்புடியேதான் இன்னிக்கும் இருக்குன்னு, தெள்ளத் தெளிவா தெரியிது. ஊருக்குள்ள பஸ் வந்தா என்ன? காரும் கீரும் பூந்தா என்ன? எல்லாம் அப்படியே இருக்கு. அவ அம்மா கிளியாம்பா எழுதியிருந்தா. 'நீ இஞ்ச வர வேண்டாம். இஞ்ச வந்தா என்னோட சாராயக் கொட்டுக்குள்ளதான் தங்கணும், வூடுன்னு ஒண்ணும் கெடயாது. பள்ளத்தெரு முந்தி மாதிரி இல்ல. படிச்சுபுட்டு மெத்தனமா டவுன்ல இருந்து பழகிட்டே, இஞ்ச ஒன்னால இருக்க முடியாது.' அப்படீன்னு எழுதியிருந்தா. தெருவுக்கு நாலு கொடி, சந்திக்கு நாலு கட்சி, வூட்டுக்கு முப்பத்திரண்டு கோணல்ன்னு இஞ்சே ஒரே தகறாரா இருக்கு. தஞ்சாவூரு மட்டும் என்னா? தஞ்சாவூருலயும் அப்படித்தான் இருக்கு. அப்படீன்னு மாஞ்சியும் பதில் எழுதினா. பதில் எழுதிப்புட்டுதான், ஆனா மனசுக்குள்ள அவளுக்கு ஊரு இல்ல. மனசுக்குள்ள இருந்தது கலியனோட முரட்டு உருவம். எத்தனையோ தடவை அப்புடி ஒண்ணும் முக்கியமில்லேன்னு. எத்தனையோ வருஷமா தள்ளி தள்ளி போட்டுக்கிட்டே வந்த ஒரு நெனப்புதான் கலியன். வேற ஒண்ணும் வேண்டாம். ஒரு தடவை பார்க்கணும். எஞ்சயுமே இல்லாத இந்த காவேரி. காவேரிக்குள்ள நீளமா நீண்டு கெடக்குற அஞ்சினி, தண்ணிக்குள்ள நிக்கிற கரமுண்டார்வூடு, காத்தாயம்பா எல்லாத்தையும் ஒரு தடவை கலியனோட சேர்த்துப் பார்க்கணும். நெனச்சதெல்லாம் நடக்கும்ன்னு இல்ல. கலியன் நெனைக்காம கூட இருக்கலாம். காத்தாயம்பாளுக்கு பாக்கக்கூட பிடிக்காமல் போகலாம். கரமுண்டாரு வூட்டு ஆயிவ "ஏன்டி வாச பக்கமா வந்த? பள்ளமுண்ட கொல்ல பக்கமா வரத் தெரியாதா. படிச்சுட்டா ரத்தத்துல பயம் அத்து போயிடுமா" அப்புடின்னு கேட்டாலும் கேட்பாங்க. ஆமா நெஜம்தான் அவளுக்கு ரத்தத்துல இன்னும் பயம் அத்துப் போகல. இல்லேன்னா இத்தன வருஷத்துல ஒரு தடவையாவது அஞ்சினிக்கி வரணும்ன்னு தோணியிருக்காதா? இன்னும் கள்ளச்சாராயம் காச்சற அம்மா, திருக்காட்டுப் பள்ளியில பலகாரக்கடை வெச்சிருக்க அப்பா ரெண்டு பேரும் சம்பந்தம் இல்லாத மாயி, தனியாவே காலேஜில் சேர்ந்து துணையில்லாமல் ஒவ்வொரு க்ளாஸா பாசாகி உதவிப் பணத்துல டிகிரி வாங்கி, இப்ப காதி போர்ட்ல்ல ஒரு டைரக்டரா சம்பளம் வாங்கினாக்கூட அவ சம்பளம் மாயியோட அப்பன் சிலத்தானுக்கும் வேண்டாம். கள்ளச் சாராயத்துல மாயிய விட 25 மடங்கு அதிகமா சம்பாதிக்கிற மாயியோட ஆயி காளியம்மாவுக்கும் மவ சம்பாத்தியம் வேண்டாம். கலியனும் நெறையத்தான் சம்பாதிக்கிறான். பள்ளனுவ எல்லாம் இப்ப நெறையப் படிக்கிறான். பாஸ் பண்ணி பெரிய உத்தியோகமா

ஆகி முன்ன பாயிறான். இன்னும் ஹரிஜனமாத்தான் இருக்கான். இன்னும் சமமா ஆகல. அவனே அவள ஏத்துக்க மாட்டான் போல இருக்கு. இந்த பயங்கரம் டவுன்லயும்தான் இருக்கு. உத்தியோகம் அந்தஸ்த்து எல்லாம் எவ்வளவு பெரிய பொய்யின்னு மாயிக்கி தெரியும். கையில் இருந்த தோல் பையோட மெல்ல நடந்து கரமுண்டாரு தெருவுக்குள்ள நொழைஞ்சா. இருபது வருஷத்துக்கு முன்னால இந்தத் தெருவுக்குள்ள நொழைய முடியாது. கிளியாம்பா அவளெ இழுத்துகிட்டு கொல்லப் பக்கத்து நாராசம் வழியாத்தான் மாயியெ கூட்டிக்கிட்டுப் போவா. மெல்லிசா வானத்து நீல நெறத்துல பூப்பூவா போட்ட வெள்ளை ஸாரி. காவேரில பட்டு வர்ற குளிர்காத்துல சளசளத்து பொடவை பறக்குது. எதிரே கரமுண்டார் வூடு. தெருவுல ஆளுவ போறவனுவளும், வர்றவனுவளும் மாயியெ ஏற எறங்க உத்து உத்துப் பாக்குறதும். இவளத் திரும்பி, திரும்பி பாத்துக்கிட்டே 'அவ வைகய பாத்தியா எட்டு வளைவி எல்லாம் தங்கம்'ன்னு பேசிக்கிட்டே போறதும், காதுல விழுவும். எவ்வளவுதான் மாறிப் போனாலும் மூலம் தெரிஞ்சிடுது. பாத்தியா ஜாதி புரிஞ்சுடுது. மாயி நெனச்சிகிட்டா இப்ப ஆறடி ஒயரம் வளந்து இருக்குறா. கை, காது எல்லாம் பூசினாப்பல ஒருவிதக் கொழுமை தெரியிது. வயசுக்கு மீறின ஒரு வளர்ச்சி. அவள மீறி அவளுக்கே நெஞ்சுல அடங்காத ஒரு குதூகலம், சந்தோஷம், பதினைந்து வருஷமா அது ஏன்னே தெரியல? எதுன்னு புரியல, மாயி கொஞ்சம் கொஞ்சமா அதெ புரிஞ்சிகிட்டா தான் அழகுன்னு புரிஞ்சுக்கற ஒவ்வொரு பொண்ணுக்கும் இந்த சந்தோசம், தான் அழகு இல்லேன்னு சொல்லிக்கிறதுல உள்ள திருப்தி, ஒவ்வொரு பொண்ணுக்கும் இருக்கு. அழகுன்ற பயித்தியம் எல்லா எடத்துலயும் ஒரே மாதிரியாத்தான் இருக்கு. ரோட்டு மேல பாவா சாகிப்பு கடை இப்ப பெரிய கடையா ஆகியிருக்கு. கடையில கூட்டமும், ஜாஸ்தியா இருக்கு. பாவா சாகிப்புகூட திரும்பி பாத்து மொறைக்கிறாரு. பாவா சாகிப்பு அந்த காலத்திலேயே மோசம். பள்ளு பறைக்கு சாமான் கொடுக்குறதுக்கு தனி கவுண்டர். ஒரு கையில உள்ளவுட்டு காசு கொடுத்தா, கையெப்பிடிச்சு லேசா உள்ள இழுத்துதான் வாங்குவாரு. உள்ள இழுத்த கையெ விடுறதுக்கு கொஞ்சம் நேரமாகும். நாசமத்து போவன்னு எல்லாரும் திட்டுவாங்க. ஆனா யாரும் ஒண்ணும் குத்தம் சொன்னதில்ல. பாவா சாகிப்பு அந்த காலத்திலேயே பேரு போனவரு. ஆறடி ஒயரமும் கருகருன்னு முடியும், தாடியும் மீசையுமா ஆள் தாட்டிகையா இருப்பார். சட்டைய அவிழ்த்துவுட்டு வெறும் ஒடம்போட

களுக்கு முருக்குன்னு நெஞ்செல்லாம் சுருள் சுருளா கரு கருன்னு முடியோட பாக்குறதுக்கு நல்ல செவப்பு நெறமா அரபி சாயலோட நல்லாத்தான் இருப்பாரு. ஆனா மாயியெ பள்ளிக்கூடத்துல ஒரு நாளு கூப்புட்டு தொட்டு விசாரிச்சது அவளுக்குப் பிடிக்கவே இல்லெ. இன்னிக்கும் நெஞ்சுக்குள்ள அதே வைராக்கியம் இருக்குது. யாரெயும் புடிக்கல. கரமுண்டாரு வூட்டுல அவளுக்கு பிடிச்ச ஒரு மனுஷன் சந்திரஹாச கரமுண்டாருதான். பார்த்தவுடனேயே கால்ல வுழுந்து கும்பிடுவா மாயி. சந்திரஹாச கரமுண்டாரு தலைமுடிய தொட்டு தடவி விட்டு "நல்லாருடீ ஆயி, எப்பவும் பெருமாள கும்புட்டுக்கோ. பொருமாளுதான் எல்லாருக்கும் ஒரே வழி. ஓங்க அண்ணன் ஆத்தோட போனானே அதுல இருந்து ஓங்க ஆயிய பாக்கும்போதெல்லாம் எனக்கு நெஞ்சே குமுறுதுடி ஆயி. பதறி பதறி போகுது. ஆத்துல போனானே அவன் இருந்தான்னா இன்னிக்கி ஒனக்கு புருஷன் பார்த்து கல்யாணம் பண்ணி வெச்சு ஓங்க அப்பனையும் இழுத்து கட்டி இஞ்சயே நிறுத்தியிருப்பான். இப்ப ஓங்க ஆயி ஒரு பக்கம், அப்பன் ஒரு பக்கமா பொலந்துகிட்டு போயிருக்குதுவ. நீ தன்னந்தனியா நிக்கிறியே, அம்மா ஆயி. இந்தா கையில புடி"ன்னு சொல்லி வெள்ளிக் காலாஞ்சியில இருந்து ஒரு கொத்து வெள்ளி ரூபாய அள்ளி அவள் கையில வெச்சது, இன்னமும் மாயிக்கு ஞாபகம் இருக்கு. கண்ணுல கண்ணீர் சேருது. நெஞ்சு திக்குன்னு அடைக்கிது. இது என்ன உறவச்சொல்லியா? இப்பவும் இல்லேன்னுதான் எல்லாரும் சொல்றாங்க. பாவா சாகிபு கடை கண்ணீரால கோடு கோடா மறையிது. கையெ எடுத்து கண்ணு தண்ணிய கையால தொடக்கிறதுக்குப் பாத்தா, எல்லாரும் சுத்தியும் பாப்பாங்க. ஆனாலும் அழுகை உந்தி எழும்பியது. அப்பன் சிலத்தான் எவளோடயோ போயி திருக்காட்டுப் பள்ளிக்கும் போனப்ப, ஆயி கிளியம்பாளும் கோவிச்சுகிட்டு கரமுண்டாரு வூட்டுலப் போயி பூந்துகிட்டு அலுச்சாட்டியம் பண்ணிக்கிட்டு இருந்தப்பவும், பள்ளக்குடியில தெருத்தெருவா திரிஞ்சுகிட்டு இருந்தப்பவும், இதே அழுகையெ யாராவது பார்த்தாங்களா? பசி பசின்னு திண்ணை திண்ணையா நின்னது இன்னமும் ஞாபகம் இருக்கு. பாவா சாகிபு ராத்திரிலே அரிக்கன் லைட்டோட ஒரு நாள் ஆத்தாங்கரையில உட்காரப் போனப்ப, எதிர புள்ளுக்கட்டோட வந்த மாயிய மெதுவா தட்டி, "உங்க அம்மா எங்கடீ. இப்ப ஒன்னெ தனியாத் திரிய உட்டுட்டாளா"ன்னு கேட்டதும் கூட ஓட்டமா ஓடினதுங்கூட அப்பகூட எல்லாரும் ஒரே மாதிரியா இப்படித்தான் இருந்தானுவ. எப்பவும் எஞ்சியும் இப்படித்தான் இருக்கானுவன்னு

இப்ப புரிஞ்சு போச்சு. ஆனா இதையெல்லாம் வுட்டு கலியன் இத்தனை வருஷத்துக்கப்பறம் திரும்பி இழுத்திருக்கானே, அது எத்தனை ஆச்சரியமான ஆனந்தம். பள்ளிக்கூடத்துல ஒரு ஏப்பும் ராங்கியுமா இருப்பான். யாருகிட்டேயும் பேசவே மாட்டான். மாயி பக்கம் திரும்பவே மாட்டான். மாயி கரமுண்டாரு வூட்டுக்கு வேலை செய்யிறதுகூட அவனுக்கு அறவே பிடிக்காது. வாயத் தெறந்து சொல்லமாட்டான். போகாதேன்னு தடுக்க மாட்டான். எண்ணெ தடவி வழிச்ச சிலை மாதிரி எப்போதும் பளபளன்னு இருப்பான். மாயி நிமிந்தே பாக்க மாட்டா. இப்ப அவன் நிமிர்ந்து பார்ப்பானோ, மாட்டானோ? பயமாத்தான் இருக்கு. இந்த ஊரு செம்பாட்டம் பள்ளனுவ எப்போதும் ஒரு மாதிரி. இன்னது பண்ணுவானுவோன்னு சொல்ல முடியாது. குடியான வூடுவல்ல தகறாருன்னு கௌம்புச்சின்னா குடியானவனுவ அடிச்சிக்கமாட்டானுவ. அவன் வூட்டு பள்ளனும், இவன் வூட்டு பள்ளனும் அடுச்சுக்குவானுவோ, குத்திக்குவானுவ, கொன்னுக்குவானுவ. ஆதிரியார் வூட்டுக்கும், வன்னியர் வூட்டுக்கும் தகராறு வந்தப்போ பள்ளகுடி பள்ளனுவ ஒருத்தன் வூட்டுக்கு ஒருத்தன் தீ வெச்சிகிட்டு அலைஞ்சானுவ. அதெல்லாம் இன்னைக்கும்–ஜாதி சண்டென்னு அரசியல் காரனுவளால இன்னைக்கும்–ஒடுங்காம ஊரு ஊருக்கு விதவிதமா கிளைச்சிகிட்டு இருக்கு. கரமுண்டாரு தெருவத் தான்டி ஆரியத் தெரு திரும்பினா இலுப்ப தோப்பு, முந்தி கரமுண்டாரு வகை. இப்போ யாருக்கோ கைமாறிடுச்சி. ஆனா இன்னும் ஆளுகை கரமுண்டாருக்குத்தான் இருக்கு. இலுப்ப தோப்பில பூந்து தான்டி போனாதான் பள்ளக்குடிக்கி போற ஒத்தயடி பாத வரும். ஆனா இலுப்ப தோப்பு வரப்போற மரநெழல்ல கயித்துக்கட்டில்ல படுத்துக் கெடக்கறது யாரு? கண்ணுரெண்டும் அப்படியே மூடியிருக்கு. பால் மாதிரி ஆட படர்ந்த முகம், கலியனா? கலியன் தானா? மாயி ஒடம்பெல்லாம் சூடு பறவுது. நெஞ்சு படபடங்குது. குப்புன்னு நெத்தியெல்லாம் வேர்வை. சரியா பார்த்தா சுத்தி முத்திலும் இலுப்ப தோப்புக்குள்ள கண்ணுக்கெட்டுன தூரம் வரைக்கும் ஆரயும் காணும். ஹோன்னு இலுப்ப நெழல் எங்க பார்த்தாலும். ஒரு வசந்த இருட்டு. வட்டவட்டமா காசு சிதறி கெடக்குறாப்புல வெயில் தோப்புக்குள்ள சிதறிக் கெடக்கு. அம்பது அறுபது இலுப்பமரம் இருக்குமா? நெஞ்சுக்குள் ஒரு பயம். யாரதுன்னு எந்திரிச்சு ஒக்காந்தான் தெலகராஜு. அட இது கலியன் இல்லியா. அடையாளம் தெரியாதபடி வளர்ந்துட்டானே... தெலகராஜு இல்லியா இவன்? கலியனுக்கும் இவனுக்கு வித்தியாசம் தெரியாம

போச்சு எனக்கு. இவனும் நல்ல ஓயரமா இருக்கானே, கலியனைவிட நல்ல செவப்பு, பணக்கார வூட்டுப் பிள்ளையில்ல அதான் ஆளு நல்ல தாட்டிகையா, மொழு மொழுன்னு இருக்கான், அஞ்சினி பயலுவ மாதிரி. மேல சட்டை போடாம இடுப்பு வேட்டியோட இருக்கானே, ஆனா கலியன் மாதிரியே இவனும் கட்டுமஸ்தா இருக்கான். ஆனா நெறம்தான் வேற. குணமும் வேறயாதான் இருக்கும். கரமுண்டாரு வூட்டு புள்ளையாச்சே. அவுங்க ஆயி வடுவாம்பா ஒரு தடவை கொதிக்கிற கஞ்சியெ வீசி மூஞ்சில அடிச்சி வெந்து போனது, இன்னும் ஞாபகம் இருக்கே. ஆனா பாரேன் ஆளெ அப்புடியே தூக்கி முழுங்கிறது மாதிரி பாக்குறான். இந்த ஊரு பயலுவ மாதிரி மீசெ வேற. கண்ணு ரெண்டும் செவந்து கெடக்கு, குடிச்சிருப்பானோ, பயமாத்தான் இருந்தது. அவுங்க அம்மாவை சீலத்தான் கட்டுனதே சாராயக்கடையிலதானே? மெதுவாக இலுப்பைத் தோப்புக்குள் மெது மெதுத்த இலை சருகுகள் மேல தயங்கி தயங்கி கால் வைத்து அவனைக் கடந்து போயிடலாம்ன்னு ஒரு நெனைப்பு. பள்ளியூடத்துல படிச்ச காலம் காலேஜுக்கு போன காலம், உத்தியோகம் பாத்த காலம், அதிகாரமா சம்பளம் வாங்குன காலம்... எல்லாம் மாறி இத்துப் போயி இவன் முன்னால இப்படி வந்து ஒரு சாதாரணமான பள்ளச்சியா நிக்க வேண்டி வருமோன்னு மாயி நெனைச்சா. நெனைக்கிறதுக்கு முன்னாடியே அங்கேருந்து கரகரத்த குரல்ல தெலகராஜு அவளெ பார்த்து "எஞ்சியோ ஆபிசர் வேல பாக்குறன்னாங்களே சீலத்தான் மவ மாயியா நீ"

"எதுக்க கேக்குறிங்க? நீ பள்ளச்சின்னு சொல்லிக் காட்டத் தானே?"

"ஏய்... ஏய்... நான் ஒன்னும் ஒன்ன பள்ளச்சின்னு சொல்லிக் காட்ட வேண்டான்டீ. இந்த ஊர்ல நீ இருக்குற வரைக்கும் எல்லாரும் அப்படிதான் கூப்புடுவாங்க. இல்லென்னாலும், கலியன் ஒன்ன கட்டிக்கப் போறானா என்ன?" என்றபடியே கயிற்றுக் கட்டிலின் கீழே இருந்து கலையம் ஒன்றை வெளியில் எடுத்து ஆள்காட்டி விரலால் மேலே படர்ந்திருந்த ஆடையைப் சுண்டி விட்டு வாயில் வைத்து ஏதோ காப்பி அருந்துவது போல உறிஞ்சி நிதானமாக குடித்துவிட்டு கலையத்தை மணலில் உருட்டிவிட்டான். மாயி திகைத்தபடியே மேலே போக ஆரம்பித்தான். அவன்விடவில்லை.

"எல்லாம் போலாம் இரு உன்னைய ஒன்னும் பண்ணிட மாட்டேன். ஊருக்குள்ள ஓங்கிட்ட பேச முடியாது. மூணு

மாசமா எனக்கு பேச ஆளு இல்ல. கரமுண்டார் வூடு எப்படீன்னு ஒனக்குத் தெரியும். யாரும் என்னோட பேசுறது இல்ல. அந்தக் காலத்துல நான், நீ, எல்லாம் ஒண்ணா படிச்ச காலத்துல இருந்தத விட இப்ப இன்னும் யாரையும்விட மாட்டேங்கிறாங்க. கள்ளென்னு, பள்ளென்னு, பறையன்னு, ஒளறிகிட்டே, ஒருத்தன ஒருத்தன் எட்டி எட்டி விலகிகிட்டே, போறாங்க. ஆனா நான்தான் பைத்தியாரப் பயலா இருக்கேன். நீ முன்ன மாதிரி இல்லெ. பெரிசா கண்ணுகொள்ளாம வளந்து இருக்க. தாங்க முடியாத அளவுக்கு தல முடியும், பாரமுமா பெரிய பொம்பள மாதிரி ஆகிட்ட. பள்ளியோடத்துல படிச்ச காலத்து ஒன்னோட நான் பேசினதே இல்லெ. அது கள்ளத் திமிரு எனக்கு வேணும்ன்னா வேணும் வேண்டாமுன்னா வேண்டாம். இப்பகூட ஒன்னோட பேச என்னென்னமோ பண்ணுது. ஒண்ணும் முடியலெ. பேசாமலும் போயிற முடியல. பயப்புடாத. இன்னும் ரெண்டு நாளுல நான் அஞ்சினிய வுட்டு போயிடுவன். அதுக்குள்ள இங்க என்னென்னமோ நடக்கப் போவுது. முக்கியமா அதுக்கு ஒரு சாட்சி வேணும். அது நீ தான்டி மாயி. நான் போயிட்டாலும் எல்லாத்துக்கும் சாட்சியா நீ இருக்கணும். இருப்பியா? நான் ஒன்னோட எந்தக் காலத்துலயும் சிரிச்சுப் பேசுனது இல்ல. ஆனா ஒன்ன எனக்கு ரொம்பப் பிடிக்கும். நீ என்னா நெனைச்சாலும் சரி, அஞ்சினியில இருந்து ஓட்டமா ஓடிப்போகப் போறேன். கரமுண்டாரு வூடு, அடியோட ஆத்தோட இடிஞ்சு, ஆத்தோடப் போப்புது. யாரும் காப்பாத்த முடியாது. எங்க அம்மா வடுவாம்பா பத்தரத்த நாலா மாத்தி எழுதப் போறா. பெரிய கரமுண்டாரு மல்லாந்து உழப்போறாரு. கரமுண்டாரு வூட்டு சின்ன மருமவ கலியனோட ஓடப் போவுது. திரிசியம்பாவும், நாகலெட்சுமியும், அத்தையெல்லாம் அவுங்க அவுங்க ஊருக்கு ஓடப் போறாங்க. கரமுண்டாரு வூட்டு ஜனம் பூரா தெருவுல எறங்கி நிக்கப் போவுது. கலியனத் தேடி மரக்கழுவுல வெச்சி காலு வேற கையி வேறயா வெட்டப் போறாங்க பள்ளனுவ. ராமுக் கரமுண்டார பள்ளக்குடியில இருந்து புடிச்சாந்து, தலைவேற முண்டம் வேறயா வெட்டி, அவரு பள்ளச்சியுவள அடைச்ச வெச்சிருந்த கொட்டடியிலேயே குழிவெட்டி, புதைக்கப் போறானுவ. கரமுண்டாரு வூட்டு புள்ளைவ தெருவெல்லாம் ஓடி நடக்கப் போவுது. எல்லாருக்கும் வாரி வாரி வழிச்சு விட்ட பெரிய கரமுண்டாரு ஒடம்பு, தன்னெந்தனியா அண்டாரங்காட்டுக்கு அந்தப் பக்கம் ஆப்சர்வேரி கட்டடத்துக்கு அப்பால காவேரி மடுவுல மெதக்கப் போவுது. ஓடிப் போன உமாமஹேஸ்வரிய

தொரத்திக்கிட்டுப் போயி புடிச்சாந்து மணல் திட்டுக்கு இழுத்துகிட்டுப் போயி சுப்பாக் கரமுண்டாரு அவளெத் துண்டு துண்டா நறுக்கி ஆத்துல அழிச்சுவிடப் போறாரு. பாப்பாரத்தெரு ஜனங்க கரமுண்டாரு வூட்டு ரத்தம் ஆறெல்லாம் போவுதுன்னு ஆத்துக்குள்ள எறங்க மாட்டாங்க. குளிக்க மாட்டாங்க. முழுவ மாட்டாங்க. என்னடா ஒளர்றான்னே அப்டீன்னு பாக்குறியா. காலம் மாறிருச்சு. மனுஷங்களம் மாறிட்டாங்க. எஞ்ச பாத்தாலும் கொடி பறக்குது. எல்லாரும் சமம்ன்னு கிராமம் கிராமமா ஓட்டு சீட்டு பறக்குது. பொண்டுவ கூட கொடத்துக்கும் பொடவைக்கும் ஓட்டு வாங்குறாங்க. பள்ளக்குடி ஓட்டுக்கு வெல ரொம்ப மளிச்சம். கரமுண்டாரு குடி ஓட்டுக்கு வெல ரொம்பக்கூட, பெருமாள் கோயில் கொடை எல்லாம். இப்ப பள்ளனுவளுக்கும் பங்கு. குடிச்சிட்டு ஒளறல மாயி. என்னெ நம்பிரியில்ல நீயி?"

அப்படியே விக்கித்துப் போய் நின்றுபோன மாயி, அவனையே வைத்த கண் வாங்கமாமல் பார்த்தாள். அவளுக்குத் திகிலை ரத்தத்தில் பரவவிட்டான் தெலகராஜு. முன்பின் பழக்கம் இல்லாவிட்டாலும், தெலகராஜு ஒரு கனவு. எத்தனையோ நாட்கள் ஒரே வில்லு வண்டியில் தெலகராஜு, திரிசியம்பா, தொரச்சியாத்தா, காத்தாயம்பா, மாயி, எல்லாருமாய் பலதடவை கரமுண்டார் கோட்டைக்கு ராத்திரி பகலா பயணம் பண்ணிட்டு வந்திருக்காங்க. நாள் கணக்கா ஆவும் திரும்பி வர. மரத்தடியில சமையல் நடக்கும். ஓடியாடி வேலை செய்வா மாயி. சமையல் எல்லாம் முடிஞ்சப்பறம் மாயியும், கலியன், கலியனோட அப்பா எல்லாம், தூரமாப் போயிடுவாங்க. அப்புறமா மூணு நாலு மணி நேரத்துக்கு அப்புறம், தனியா கலியன், மாயி அவுங்க அப்பா எல்லாம் சாப்புட ஒக்காருவாங்க. கஞ்சிதான் குடிப்பாங்க. இருந்தாக்கூட அந்த ராவே ஆச்சரியமான சந்தோஷம். பாத்துக்கிறதும், ஊமை ஜாடையா பழகுறதும் மாத்திரமே இருந்தாலும், அப்பக்கூட இவனுக்கும் தனக்கும் ஏதோ ஒரு உறவு இருக்கத்தான் இருந்தது. இவன் ஏதோ மனுஷப்பிறவி இல்லேங்குற மாதிரி ஒரு நெனப்பு. மாத்தி மாத்தி யாராவது இவனுக்கு சேவகம் பண்ணிக்கிட்டே இருப்பாங்க. பூரணி காளை பூட்டுன வண்டியில வரிசையா குலதெய்வத்துக்கு பூஜைக்கு போன காலம் போயி காரு, பஸ், ப்ளஸரு எல்லாம் வந்துட்ட இந்த காலத்துல, பூஜையும், குலதெய்வமும் அத்துதான் போச்சு. இவன் சொல்றது நெசமா இருக்குமா? பாவி இப்படி எல்லாம் நடக்குமா? துரோகி, கலியன். ஏங் கலியன் உமாமஹேஸ்வரிய இழுத்துகிட்டு ஓடுமாக்கும். நம்ப முடியலியே. நம்ப முடியலியே மகமாயி. மனுஷாளே அண்டாத

பிறவியா ஆயி, அப்பன், இல்லாத அனாதயா தெருத் தெருவா கள்ளக்குடி பள்ளக்குடி வித்தியாசம் இல்லாம கையில கப்பறைய ஏந்திக்கிட்டு சோத்துக்கு வூடு ஊடா அலைஞ்சனே அப்பக்கூட, நெனைக்கலியே எப்படியாச்சும் ஒரு நாளும் வரும். நம்ப வூட்டுக்கு நாமளே திரும்புவோம்ன்னு. கலியன் மறக்காது. நிச்சயமா திரும்பி விடும்ன்னு நெனைச்சனே. இப்ப நானும் அனாதையாகிப் போறோன். பெரிய கரமுண்டார்கிட்டேயே கேக்குறேன். இதே மனசுல வெச்சிகிட்டு தானேங்க படிச்சேன். இதெ நெஞ்சுல ஏத்திக்கிட்டு தானங்க, உசுற கையில புடிச்சுகிட்டு இருக்கேன்.

"ஏய் என்னத, நான் சொல்றது காதுலு விழுவலயா? என்னாத்துக்கு அப்படி முழிக்கிறே? ஒன்ன யாரு என்னா பண்ணிப்புடுவாங்க. நாஞ் சொன்னத நம்பலையா? நானும் ஒன்னய மாதிரி புதுசா வந்தவன்தான். வந்த புதுசுல ஆச்சரியமாத்தான் இருந்தது. இப்ப நீ முழிக்கிற மாதிரிதான் நானும் முழிச்சேன். அந்த கழுத காத்தாயி இருக்காளே அவ, இஞ்ச இருக்க வரைக்கும் என்னால எங்கியும் போவ முடியாது. அது பேயி, மோகினி பேயி, காளி என்னால அந்தண்ட இந்தண்ட நவுட்ட முடியாது. ஜாதி, மதம், இனம்ன்னு நம்ப பயலுவ ரொம்ப புத்திசாலித்தனமா பிரிச்சு வெச்சிருக்கானுவளே, எதுக்கு தெரியும்ல்ல? அப்படியே ஒண்ணுக்குள்ள ஒண்ணு பூந்துக்கிறதுக்குத்தான். நீ வேற நான் வேறங்கிறான். உள்ளுக்குள்ள பாத்தா ஒன்னுக்குள்ள ஒன்னா இவனே போயி மாட்டிக்கிறான். கேட்டா அதெல்லாம் ஒன்னுமில்லேம்பான். வெளிய தெரிஞ்சாத்தான் ஜாதிங்கிறது, மதங்கிறது, புருடாவுடுறது எல்லாம். வெளிய தெரியாம என்ன வேணாலும் பண்ணிக்கலாம். உமாமஹேஸ்வரிய இழுத்துகிட்டு ஓடுற மாதிரி என்னால ஏன் ஓட முடியல? அது உச்சினி மகாகாளி. அஞ்சினி காளி அது. எல்லாரையும் ஓட்டும். அது என்னோட ஓடி வராது. ஆனா பாரேன், உமாமஹேஸ்வரிய வெட்டி வெட்டி கூறு போட்டாலும் கலியன் சுண்டி சுண்டி கூப்பிட்டா போதும் வேறு எதுக்கும் பயப்படாம ஓடப்போறா. ஏன்னா அதுவ ரெண்டும் ஒண்ணுமேல ஒண்ணு உயிர வெச்சிருக்குதுவ. எனக்கு யாரும் இல்லெடி மாயி. நான் தனி பைத்தியம், கிராக்கு, நான் ஏன் இங்க வந்தேன்? எட்டு வயசுல அந்த தேவடியா முண்ட காத்தாயம்பாள பாத்ததுல இருந்து இவ ஒனக்குத்தான்டா, இவ ஒனக்கு தான்டான்னு சொல்லிச் சொல்லி உருவேத்திவிட்டு, இப்பவும், எப்பவும் எட்டிஇருந்தே பாக்கணுன்டா கிட்ட போவாத, தொடாத, தொட்றாத. அவ ஓம் பொண்டாட்டிதான்டா. கெணத்து தண்ணிய ஆத்து தண்ணி

தள்ளாதுடா. தொடப்புடாது எட்டியிருந்தே பாரு. பாத்துக்கிட்டே இரு. காலமெல்லாம் பாத்துக்கிட்டே இரு போதும்ன்னு சொல்லிச் சொல்லி வெறும் காத்தாயிய வெளக்கு மாதிரி தூக்கி புடுச்சி காட்டி காத்தாயம்பாளா ஆக்கிட்டானுவ. அந்த முண்டெச்சியும் அண்டவுடாம எட்டி இருந்தே பெருமூச்சுவிட வெச்சு, என்னால நம்ப முடியல. அழுவுற புள்ளெக்கி முந்தானய கொடுக்கற மாதிரி, தூக்கி கொஞ்சி கொஞ்சிகிட்டு தூளியில போடுற குழந்தை மாதிரி, என்னெ தூக்கி எறிஞ்சிட்டு பின்னாலயே அலையவிட்டுருக்கா காத்தாயம்பா. எனக்கு கல்யாணந்தான் ஆகலியே தவிர, மத்ததெல்லாம் ஆயிடுச்சு. பாவம் உனக்கு இதுவும் புரியாது. B.A., M.A., ன்னு பாஸ் பண்ணிபுட்டு டைரக்டரா வேலைக்கு போயிட்டேன்னு சொன்னாங்க. அப்புறம் எதுக்கு இந்த கிராமத்து இடுக்குல வந்து வுளுந்தே? கலியன தேடிக்கிட்டா, ஏண்டீ ஒனக்கென்ன பைத்தியமா? என்னால ஒனக்கு இந்த உதவிதான் செய்ய முடியும். ஏன்னா கலியன் ஓம்மேல அந்தக் காலத்துலயே ஆசை வெச்சிருந்தான். பைத்தியக்காரத்தனமா இருக்குல்ல? அதுவும் கலியன்தான். இவனும் கலியன்தான். அவன் ரெண்டு பேரையும் நம்பாத, ரெண்டு பேரும் திருடனுவ. கலியன் மாதிரி நான் பள்ளன் இல்லெ. காத்தாயிகிட்ட ஏமாந்த ஒரு ஏமாளிப்பய நானு. கரமுண்டாரு குடி குப்புற வுழும் போது சுத்து பட்டு பத்தம்பது கிராமமும் எட்டிப் பாத்து சிரிக்கப் போவுது. ஒரு ஒரு பொண்ணும் ரத்தத்த ஊத்தி கரமுண்டான் குடிக்கு வச்சு அஸ்திவாரம் அடியோட பேத்துக்கிட்டு ஆத்தோட போப்போது. ஆசையெல்லாம் இப்படித்தான் முன்னத்து அம்பது வருஷம். கொடி கட்டி, வாழ்ந்த குடி, என்னால ஏங்காலத்துல மண்ணோட மண்ணா வுழுவப் போவுது. பாக்குறதுக்கு நானு இருக்க மாட்டேன். இந்த மூணு மாசம், மூணுமாசம் இல்லேடி மாயீ. எனக்கு முண்ணூறு வருசத்துக்கு சமம். காவேரி வச்ச மண்ணு. யாராவது நம்புவாங்களா? ஆனா காவேரியும் வத்திக்கிட்டு வருது. கரைகொள்ளாம ஓடுன காவிரியா இது. மைசூருல அணைகட்டிட்டான்டீ. கன்னடக்காரன் மாயீ. இது எல்லாத்துக்கும் சாட்சி நீதான். நீ வருவேன்னு இந்த சாராயத்தோட கிளியம்பா சொன்னா. ஒன்ன பாக்கணும்ன்னுதான் இலுப்ப தோப்புல பதுங்கியிருந்தேன். ஒன்ன கலியனுக்கு கட்டணும்ன்னு ஆசை எல்லாருக்கும். எனக்கு மட்டும் புடிக்கலெ. கலியன் உமாமஹேஸ்வரியோட ஓடுனாத்தான் கலியுகம். இது 1989 இல்ல. இந்த வருஷத்துல ஜாதி ஒழிஞ்சுடுச்சு, மதம் ஒழிஞ்சுடுச்சு. மனுஷனோட வேத்துமையெல்லாம் போச்சு, அப்படீன்னு

ஒவ்வொரு கட்சியும் ஒவ்வொரு தலைவனும் சொல்லிக்கிட்டு திரியிரானுவல்ல இஞ்ச வந்து எங்கள பாக்கச்சொல்லு. தொன்டாஞ் சாவுடி, கீழபொணவாசல், சாத்தாளஞ்சேரி, உம்மன்னாமுடு இப்டி எல்லாம் பள்ளக்குடியும், இன்னும் பத்து நாளுல பத்திக்கிட்டு எரியப் போவுது பாரு. புழுதி நாலா பக்கத்துலயும் யானை மிதிச்சா மாதிரி கிளம்பப் போவுது. அப்ப வந்து இவனுவளெ பாக்கச் சொல்லு. என் கைல எதுவும் முடியாது மாயீ. நான் இங்கேயிருந்து ஓடப்போறேன். நான் ஒரு கோழை; நான் கள்ளனும் இல்ல, பள்ளனும் இல்ல, பறையனும் இல்ல, மனுஷனும் இல்ல. காத்தாயம்பா என்ன கால்ல கட்டி அடிக்கிறா. நான் அவ கால்ல நக்கிகிட்டு பொறண்டுகிட்டு கெடக்கறேன். நீயும் கலியனுக்காக காத்துருக்காத. இனிமே ஒனக்கும் அஞ்சினி வெறும் மண்ணுமேடுதான் ஓடிப் போயிரு. ஒன்னோட காலம் முழுசுக்கும் எங்க எல்லாரு ஞாபகமும் போதும். ஒன்னோட அழகையும், குணத்தையும் கரமுண்டான் வூட்டு பள்ளன் காலடியில போட்டு சிதைச்சுப் போடாத. நான் சொல்றது எல்லாம் கலியனுக்கும் தெரியும். இஞ்ச நின்னியின்னா யானை மிதிக்கும் போது நீயும் புழுதியா போவ..."

கதறியபடி கயித்துக் கட்டிலில் குப்புற விழுந்தான் தெலகராஜு. நெஞ்செல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக நெருப்பேர மாயீ கண்கள் இருண்டது. ஒரே நேரத்தில் அஞ்சினி கிராமம் முழுவதும் யானைப் பாதங்கள் அடியில் மிதியுண்டு புரண்டது போல் புழுதிப் படலம். ஆத்துக்கரையில் பரிசல்கள் வந்திறங்கிக் கொண்டிருந்தன. இலுப்பை தோப்பு இருண்டு மூடுண்டது. மாயீ அவனை நெருங்கி அவன் தோள்களைத் தொட்டாள். அவன் புரண்டு அவள் காலடியில் விழுந்தான். மேலும் செய்வதறியாது திகைத்த மாயி அவன் தோள்களைப் பிடித்து எழுப்ப முயன்ற போது தூரத்தில் பெருமாள் கோவிலில் இருந்து ஒலிபெருக்கியின் மூலம் எழுந்த உச்சிக் கால சேவை மந்திரங்களும், பாசுரங்களும் பெருகி வழிந்து இது மனிதர்கள் வாழும் உலகம்தான் என்றன. சாராய வாடையும், வியர்வை கமறலும் உளறிய உளறல்களும் மாயியை இந்த உலகில் இருந்து எங்கோ தள்ளிக் கொண்டு சென்றன. கலியனுக்கு என்ன துணிச்சல்? கரமுண்டாரு வூட்ல பொண்ணெ–அதுவும் கலியாணம் ஆன பொண்ணெ–இழுத்துக்கிட்டு ஓடப்போறானாமே. குடிக்கு வெக்கிற கொள்ளியா? அட பாவி மனுஷா, குடியானவனுவத் தள்ளு. செம்பாட்டம் பள்ளனுவ சும்மா விடுவானுவளா? கொளுத்திட மாட்டானுவளா கொளுத்தி. ஒனக்கு ஏன் இப்படி புத்தி போவுது? இத்தனை வருஷமா என்னிய ஞாபகம் வரலியா

ஒனக்கு? அந்த வெள்ளத் தோல்காரி உன்னெ இழுத்துட்டாளா? இதுதானா ஒன்னோட வீரம். நீ ஓடுனா, குடிச குடிசயா பள்ளக் குடிவ எரியுமே தெரியுமா? யாரு என்னா செய்ய முடியும்? ஓடிட்டா போச்சா பள்ளக்குடியும் கள்ளக்குடியும் சேந்து எரியும் அவ்வளவுதான் மிச்சம். வா நான் ஒன்ன ஓட வுடமாட்டேன். அப்படி ஓடுறதா இருந்தா நானும் வருவென். அவளெ குத்திட்டு நானும் சாவேன்...

கீழே கிடந்த தெலகராஜு மெல்ல எழுந்து பெருமூச்சு விட்டபடி அவள் புடவையில் இரண்டு துடைகளுக்கிடையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு இறுகப் புதைந்து கொண்டான் என்பதை அவள் எதிர்பார்க்கவே இல்லை. சுற்றிலும் முற்றிலும் பரபரப்பில் திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே, ஒருவித ஸ்பரிச வேதனையுடன் அவன் கைகளைப் பிரித்துவிடப் பிரித்துவிட தெலகராஜு அவள் இடுப்பைச் சுற்றி மீண்டும், மீண்டும் கைகள் பாம்புவளைப் போல் சுற்றிச் சுற்றி இறுக்கிக் கொள்ள, “விடுங்க, விடுங்க” என்றபடி தன்னைக் கழற்றிக் கொள்ளமுடியாமல் தவித்த மாயி, ஒரு சில நிமிடங்களிலேயே நெஞ்சு வலிக்க அவன் மார்புக்குள்ளே பயங்கரமாய்ப் புதைந்து போனாள். மீண்டும் மீண்டும் “விடுங்க விடுங்க” என்ற மவுனமான குரலுடன் அவள் எழ ஆரம்பித்தாள். அவளுக்குவிடவும் முடியவில்லை. ஒதுங்கவும் வழி இல்லை. அவன் மார்பில் ஓங்கி, ஓங்கி குத்தியும் கைகளில் வலி. அவள் நெஞ்சிலே தாக்க உடல் கோடி முனை ஒவ்வொன்றிலும் கொஞ்சம் கொஞ்சமாக தெலகராஜு அவனுக்குள்ளே மலருகின்ற கொடூரமான அதிசயத்தை அவளாலேயே நம்ப முடியாமல், அவன் முகத்தில் காரித்துப்பினாள். அவளை விட்டு விட்டு மணலில் விழுந்தான் தெலகராஜு. பசி அடங்கியதும், குழந்தை தாயை விட்டு விடுவதில்லை. மேலும் பாலை முண்டிக் குடிக்கிறது. அதன் வீரியம் தாயின் மார்புகளில் இருந்து உடலெங்கும் பரவுகிறது போல, ஒரு குழந்தையாகி தெலகராஜுவின் மடியில் மாயி புரண்டு கிடந்தாள். இந்த உடல் எத்தனை பரிசுத்தமோ அத்தனைக்கு அசுத்தம் என்பதை தெலகராஜுவிடம் ஒரு மிருகம் போல மூச்சு இன்றி மாயீ கற்றுக் கொண்டாள். இலுப்பைத் தோப்பு முழுவதும், விட்டு விட்டு அடிக்கும் ஓர் இலை மணம் அப்போதும் அவள் நாசியைத் தாக்கியது. வெகுநேரம் அவனிடம் அவள் கண்டு கொண்ட சொல்ல முடியாத உணர்ச்சிக் கலவைகள் இப்பொழுது மனசில் அடிக் கசப்பாய் முனை வரை கசந்தன. எவ்வளவு சாதாரணமாக அவன் அவளை உருவி இழுத்துக் கொண்டு விட்டான். எவ்வளவு சுலபமாக அவன் கால்களில்

விழுந்தான். காலைக்கட்டிக் கொண்டு "என்னை மன்னிச்சிடு மாயீ" என்று புலம்பி எவ்வளவு சுலபமாகவே அவளை எடுத்துக் கொண்டு விட்டான். எங்கும் போக முடியாது. முன்னே ஒரு அடி வைக்க முடியாது. இப்போது அவன் போட்ட வளையத்துக்குள் கைதியாகிப் போனாள் மாயீ. உடம்பு முழுவதும் வியர்வை, முதுகு முழுவதும் இலுப்பைத் தோப்பு மணல் ஒட்டியிருந்தது. சற்று நேரத்திற்கு முன் இப்படி நடக்கும் என்பது அவளுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது போல் இருந்தது. வேண்டும் என்றே யாரையோ பழிவாங்குவதற்காகவே காத்திருந்தவள் போல் கால்களில் அவன் வந்து விழுந்ததும் நெஞ்சம் முழுவதும் நிறைந்து அவனை தாங்கித் தூக்கி தன்னோடு சேர்த்துக்கொண்டு தன்னையே வேண்டும் என்றே அந்த இலுப்பைப் புதரில் அவனை அங்கம் அங்கமாகப் பிரித்து அறிந்து கொண்டாள் மாயி. நூற்றாண்டுகளாய்க் காத்திருந்த வேகமும், வெறியும், அவளுக்குள் இருந்து பொங்கியது. யோசித்துப் பார்த்தால் அபத்தமான கேவலம்தான். அவளே இந்தப் போராட்டத்தில் இந்த ஊரை விட்டு ஓடினவள்தான். ஊரைவிட்டு ஓடியதற்கு என்ன காரணமோ அதே காரணம்தான் கலியனைத் தேடி திரும்பி வந்ததற்கும். கலியனைத் தேடி வந்த காரணம் என்னவோ, அதுவேதான் இப்போது தெலகராஜுவைக் காலடியில் போட்டு மிதித்து, அவனோடு ஒன்றாய் அவனுக்காகவே அந்த இலுப்பைத் தோப்பைப் பிளந்து தந்ததற்கும். ஒரே காரணம்தான். இது புரியுமா, யாருக்காவது? கலியனும் தன்னைப் போலவேதான் உமாமஹேஸ்வரியிடம் சுத்தமாக கழட்டி அறிந்திருப்பான் என்று மாயியின் மனதில் மின்னல் அடித்தது. சுற்றும் முற்றும் பார்த்தாள். நீண்ட நேரம் ஆகியிருக்கும் என்று தோன்றியது. அவள் உடலெங்கும் புது அனல் பரவ, கண்ணுக்கெட்டிய தூரம் வரை இலுப்பை மர நிழலில் இருட்டு உருவாகிக் கிடந்தது. தெலகராஜு இன்னும் விழிக்காமல்தான் கிடந்தான். எத்தனையோ வருடங்களுக்குப் பின் இப்படி நினையாது வந்து கணத்தில் புகுந்து விடுவான் என்று அவள் எதிர்பார்த்து இருந்தாள் என்றே அவளுக்குத் தோன்றியது. நேத்து வரை நெஞ்சில் குடிகொண்டிருந்த, உடம்பெல்லாம் நினைவாகிக் கலந்திருந்த கலியனை இந்த இரண்டு மணி நேரங்களில் தெலகராஜு பெயர்த்து எறிந்துவிட்டான். இப்பொழுது யாரைப் பற்றியும் நினைவில்லை. வெற்றுடம்பாய் மணலில் ஒரு குழந்தை போல் உறங்கும், ஐந்தடி பத்தங்குல உயரம் தாட்டிகையும் கொண்ட இந்த உருவத்துக்குத் தானா இத்தனை ஆவேச வெறி. அவள் வெற்றி கொண்ட தெலகராஜு. இனி யாரும் வெற்றி கொள்ளமுடியாது என்பதைத்

தெளிவாகவே உணர்ந்து கொண்டாள். ஆத்தோரத்தில் வலியன் சிடுசிடுத்தது. வெயில் இறங்கியிருந்தது. நேரம் போனது தெரியாமல் அவனுடன் மயங்கிப் போனாள் என்பது இப்போது அச்சம் பெற வைத்தது. இனி கலியனையும் சந்திக்க வேண்டும். அவனுடைய வேகத்துக்குத் துணை செய்ய வேண்டும். அவன் போருக்குத் துணை நிற்க வேண்டும். என்றெல்லாம் நெஞ்சில் ஆக்ரோஷம் கனன்றாலும் இனி அவள் என்னவாகிப் போவாள் என்பதும் அவளுக்குத் தெரிந்தே இருந்ததால், மீண்டும் குனிந்து அவனை மெல்ல எழுப்பினாள். அவன் இன்னும் தூக்கத்தில் இருந்தும் மயக்கத்தில் இருந்தும் முழுவதுமாக விடுதலை அடையவில்லை. மீண்டும் அவன் தோள்களைப் பிடித்து உணர்ச்சிக் கலப்புடன் அவன் மேல் ஓயிலாகச் சாய்ந்து உந்தி, அவனை உணர்வுநிலைக்கு கொண்டு வர முயன்றாள் மாயீ. தெரு வழியாக இலுப்பைத் தோப்பை நோக்கி யார் யாரோ பேசிக் கொண்டு கூட்டமாய் வருவது போல் சப்தமும் செடி கொடிகளில் உலைச்சலும் அவனை விட்டு விட்டுப் போனால் இவனும் தன்னைவிட்டுக் கரைந்து மயக்கத்தில் இருந்த அவனைக் கொஞ்சமும் அஞ் சாமல் அப்படியே கட்டித் தழுவித் தூக்கினாள். இப்போது ஆட்கள் வரும் அரவம் நெருங்க ஆரம்பித்தது. மாயீ பதட்டப் படாமல் தன் பலம் மிகுந்த புஜங்களில் கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து பள்ளத்தில் வயல்களுக்கு மத்தியில் தூரத்தில் தெரியும் பள்ளக்குடியை நோக்கி அவனைக் கொண்டு சென்றாள். தனியாக அவனைக் கொண்டு செல்வது லேசாக இருக்க வில்லை என்பது உண்மைதான். அவன் மிகப் பெரிய உடலை வரப்புகளிடையே தூக்கிச் செல்வதும் அசுரத்தனமா ஒரு வேலையாகவே இருந்தது. பள்ளக்குடி முழுவதும் ஆளற்று வெறிச்சோடிக் கிடந்தது. ஏழெட்டு வரிசை குடிசை குடிசையிலோ ஒன்றில் கொண்டு போய் அவனைக் கிடத்திய போது, ஆச்சரியமான வெறி அவள் முகத்தில் சுடர்ந்தது. காதோரங்களில் வியர்வை கோடு வழிந்தது. வாசலில் நின்று இதுவரை யாராவது அவளைக் கவனித்து இருப்பார்களோ என்று அச்சுற்று சுற்றும் முற்றும் பார்த்தாள். தூரத்தில் எறும்புகள் புற்றுக்குச் செல்வது போல் வயல்களில் பள்ளர்கள் வேலை செய்து கொண்டிருப்பது தெரிந்தாலும், அவர்கள் கவனம் இங்கே திரும்பவில்லை என்பது அச்சத்தைக் கொடுத்தது. ஒரு வேளை இன்னும் சிறிது நேரத்தில் அவள் அம்மா சாராயப் பாட்டில்களுடன் இங்கே வரலாம். மீண்டும் குடிசைக்குள் வந்து அவனை உற்றுப் பார்த்தாள் மாயீ. ஒரு பானையில் இருந்த தண்ணீரை எடுத்து அவன் முகத்தில் தெளித்தாள்.

லேசாக நெளிந்து கொடுத்து முனகிப் புரண்டான் தெலகராஜு. மெதுவாக அவன் கன்னங்களைத் தட்டி, தோள்களைப் பிடித்து உலுக்கி, கைகளைப் பிடித்து உலுக்கி அவனை நினைவுக்குக் கொண்டு வந்தாள். அவனைத் தூக்கி வந்த சுமை இன்னும் ஆச்சரியமாய் அவளுக்கு மூச்சு வாங்கியது. யாரும் பாராத வண்ணம் அவனைக் கொண்டுவந்தது எதற்காக? ஏதோ நேரக் கூடாத தவறுபோல் நடந்து அவனோடு தனக்குக் கிடைத்த அந்த அனுபவத்தை அவள் விட்டுவிடத் தயாராக இல்லை என்பதால்தான். இதெல்லாம் இந்த உலகத்தில்தான் நடக்கிறதா? என்ற சந்தேகம் அவளுக்கு உண்டு. உறவுகளின் கோரமே இதுதான். தோன்றும் வரை இது பரிசுத்தம்தான். தோன்றியதும் அதன் தூய்மை இன்னும் நெருக்கமாகி, அதற்கு சற்றும் சம்பந்தம் இல்லாத வேறு ஒரு பாதையில் தன்னைப் புதுப்பித்துக் கொண்டு விடும். ஏனென்றால் மாயிக்கும் தெலகராஜுக்கும் இடையில் இருந்த உறவு வெறும் ஆண், பெண் உறவு மட்டும் அல்ல. நூற்றாண்டுகளாய்க் காத்திருந்த பகை, வெறி, ஒன்றை ஒன்று கவ்வி விழுங்கி இல்லாமல் ஆக்கிவிடுகின்ற தாமே, என்பது புரிந்தேதான் மாயீ, யாரும் வரும் முன்பாக தீவிரமான ஓர் அவசரத்துடன் அவனைக் கையாண்டாள் மாயீ. அவன் பூரணமான தெளிவுடன் விழித்து அவளைப் பார்த்தபடியே இரு கைகளையும் நீட்டி மாயீயைத் தன் அகன்ற புஜங்களுக்குள் அணைத்து இறுக்கியபடி "அடிப்பாவி. என்ன தலைக்கி மேல தூக்கிட்டு ஓடியாந்தியா என்ன? ஒனக்கு என்ன தைரியம். வரப்போட என்ன தரதரன்னு இழுத்துக்கிட்டா வந்த? என்ன கொழுப்பு? படிச்சு பட்டம் வாங்கினாவளா நீ. இல்ல வெறும் செம்பாட்டம் பள்ளச்சிதானா? என்னா கெப்புறு இருந்தா என்ன இழுத்துக்கிட்டு வருவ" என்று கொஞ்சியபடியே அந்த செம்பாட்டம் பள்ளச்சிய மேல் கவிழ்ந்து கவர்ந்து கொண்டான் தெலகராஜு. அவளது பற்கள் வெளேர் என்ற வைரம் போல் இருந்தன. எந்த காலத்திலும் அவன் கண்டறியாத பேரழகு அவள் அவிழ்ந்த தலைமுடியில் கொத்து கொத்தாய் சுருண்டன. அவளது மேனி முழுவதும் இயக்கத்தின் வேகத்தால் அலைப்புண்டது. சீரும் நாகம்போல் அவனின் மேலேறி குதறினாள் மாயீ. மீண்டும் மீண்டும் உலகம் அவர்களை விட்டு வெகுதூரம் சென்றிருந்தது. அவள் பெரிய பெரிய விழிகளை அதன் கரிய நாவல் பழம் போன்ற திரட்சியை அவன் உதடுகளால் மூடினான் தெலகராஜு. அவனுக்கு அவளது வேகம் பயம் தந்தது. சுத்தமாக ஒரு பிசகு இல்லாமல் செதுக்கிய கருங்கல் சிலைபோல் ஆனால் கல்லின் ஜில்லிப்பு இல்லாமல்

சதையும் ரத்தமுமாய் கொதிக்கக் கிடந்த அவளை, இதற்கு முன் எப்போதும் அறிந்ததில்லை. சுத்தமாக அவன் போதை இறங்கி இருந்தது என்பதைவிட இறக்கியிருந்தாள் மாயீ என்பதுதான் உண்மை. வெளியே கோழிகள் கெக்கறித்தன. கோழிகளைத் துரத்தியபடி சேவல்கள், சேவல்களைத் துரத்தியபடி நாட்டு நாய்களும் போய்க்கொண்டிருப்பது அவனுக்கு மிக நன்றாக உணர முடிந்தது. எங்கு என்ன நடந்ததோ தெரியாவிட்டாலும் இங்க இது நடந்தது என்பது அவன் மனதில் தெளிவாய் உருக்கொண்டது. இப்போது அவன் எழுந்து நின்றான். அவளும்கூடவே எழுந்து உலைந்து நின்றாள். இவ்வளவு உயர்ந்த இடங்களுக்கு அவனை யாரும் கொண்டு சென்றதில்லை. இது வெறும் இருட்டில் புரளும் வெறி அல்ல. "இந்தா அது முழுசும் ந ர. இது எல்லாம் உனக்குத் தருகிறேன்" என்று அள்ளித் தந்திருக்கிறாள் மாயீ. உலகம் கொஞ்ச கொஞ்சமா நினைவில் உறைக்க தன்னையே மீண்டும் அருவருப்பான கசப்பாய் உணரத் தொடங்கினான் தெலகராஜு. இதெல்லாம் என்ன? ஏன் இப்படி நடக்க வேண்டும்? உபயோகம் அற்ற தன் வாழ்வில் இது என்ன கோளாறு? இவனையும், இவள் தன்னையும் இப்படி ஆக்கியிருக்க அவசியம் என்ன நேர்ந்தது என்று தனக்குள்ளாக குமைந்து போனான் தெலகராஜு. அவளைப் பார்த்தபடியே "யாரும் வர்றதுக்கு முன்னால போயிடுவோம். யாரும் பாக்கறதுக்கு முன்னால நீயம் ஓடிடு. யாருக்காவது தெரிஞ்சா என்னா ஆவும் சொல்ல முடியாது" என்று பதறினான் தெலகராஜு. ஆனால் இந்தப் பயம் எல்லாம் அவளிடம் காணோம். அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டு தொங்கியபடியே, "என்ன அப்ப மட்டும் என்னா ஆகும். நீ பயப்புடாத தெலகராஜு. ஒன்ன நீன்னுதான் கூப்பிடுவேன். இஞ்ச என்னா நடந்தது தெரியுமா? நம்ம ரெண்டு பேருக்கும் இடையில இருந்த ஏதோ ஒண்ணு செத்து போச்சு, ஒனக்குப் புரியுதா, எனக்கு இனிமே வெற ஒண்ணும் வேண்டாம். இது மட்டும் போதும். கலியனும் வாண்டாம். ஏன் நீ கூட வாண்டாம். நீ துணிஞ்ச என்ன, ஒன்ன ரெண்டையும் சாகடிச்சிட்டியே, அது போதும். நான் இனிமே இங்க இருக்க மாட்டேன். புறப்பட்டுட்டேன். ஒனக்கு வேணுமானால் ஒண்ணும் இல்லேன்னு தோணும். எனக்கு நீ என்னுடைய ஆபீஸ்ல இருபது முப்பது குமாஸ்தா வேலை பாக்குறான். ரொம்ப குறைச்ச காலத்துலியே நான் ஒரு கெசட்டட் ஆபீஸ்ஸரா அதிகாரம் பண்ண ஆரம்பிச்சு, இப்ப முக்கியமான டைரக்டர்கள்ல முக்கியமான ஒருத்தியா ஆயி இருக்கேன். ஒருத்தர ஒருத்தர் அடிமை கொள்ளப் பாக்குற பதவி மாத்திரம் என்ன!

அது ஜாதி இல்லியா? அங்கேயும் பல ஜாதிகள் உண்டு. யாரும் வர்றதுக்கு முன்னாடி போயிருன்னு அதனால்தான் சொல்லுறே. அஞ்சினி கிராமம் இன்னும் அதே மாதிரி எறனூறு முன்னூறு வருஷத்து பழசோட அப்படியேதான் இருக்கு. அதனாலதான் எதுவும் இங்க புதுசா உலுத்துப் போயி கொட்டிக் கிட்டே இருக்கு. யாரும் வர்றதுக்கு முன்னால சீக்கிரமாவே நீ போயிறது நல்லது தெலரகராஜு. ஒங்க கரமுண்டாரு வூட்ட தேடி ஓடினாலும் சரி, இல்லெ தஞ்சாவூரு தான்டி வடக்க ஓடினாலும் சரி. இல்லெ திரும்பி திரும்பி ஒங்க முப்பாட்டனுவ செஞ்ச மாதிரி இந்த 'பள்ளக்குடியெ கோலி கோலி சுத்தினாலும் சரி. ஓடிப் போ. அவள் கண்கள் வைரம் போல் சுழன்றன. ஐந்தரையடி உயரம் உயரம் தெரியாத வாளிப்பான ஓர் உடலும் திரும்பத் திரும்ப அவனை மெய் மறக்கச் செய்த அவள் இளமையும் எழிலும், ஆச்சரியமாய் உந்தின அவனை. தூரத்தில் ஆற்றொரமாய்

மஞ்சள் சிட்டுகள் அணியணியாய் பறந்து சென்றது இங்கிருந்தே தெரிந்தது. மௌனமாக அவளை மீண்டும் மீண்டும் இறுகப் பிடித்து முத்தமிட்டு வேறெதும் பேசாமல் குடிசையை விட்டு வெளியேறி வரப்பின் மேல் வேகமாய் நடந்து சென்றான் தெலகராஜு. இரண்டு வயல்களைத் தாண்டும் முன் எதிரே கிளியாம்பாளுடன் இரண்டு மூன்று கரமுண்டாரு வூட்டு பள்ளச்சியவளும் எதிரே நடந்து வந்தார்கள். வயலில் ஒதுங்கி சேற்றில் இறங்கி மரியாதையுடன் அவனுக்கு வழி விட்டார்கள். ஆனால் அதற்கு முன்பாகவே அவர்களுக்கு வழி விட்டு அவனும் சேற்றில் இறங்கி ஒதுங்கியதை அவர்கள் ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். இருவருக்கும் நடுவில் அமைதியாக நீண்டு கிடந்தது வரப்பு. அதற்கு ஒரு முடிவில்லை.

## கரமுண்டார் வூடு - 8

கரமுண்டார் வூடு ஆள் அரவம் அற்றுக் கிடந்தது. யாரையுமே காணோம். யாரையுமே காணோம் என்றால் யாருமே இல்லை என்று அர்த்தம் அல்ல. எப்போதும் போலவே தொரச்சியப்பாயியும், சந்தனப்பாயியுமாக இன்னும் நாலஞ்சு கிழங் கட்டைகள் எல்லாம் வூட்டில் எட்டாங்கட்டில் முத்தத்தில் உட்கார்ந்து கிடந்தார்கள். சந்தனப்பாயி எப்போதும் போல ரோடு இஞ்சின் மாதிரி கப்கப் என்று சுருட்டுப் புகையை விட்டுக் கொண்டிருந்தது. பெரிய பித்தளை உரலில் கை விரல் மொத்தம் பித்தளை உலக்கையினால் 'நிங் நிங்' என்று வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு எல்லாவற்றையும் போட்டு வெண்ணெயாய் உருட்டிக் கொண்டிருந்தது தொரச்சியப்பாயி. முத்தத்தில் மாஞ்சி பள்ளி பெரிய கரமுண்டாருக்காக பிஸ்தா, பாதாம், முந்திரி, சாலமிசிரி அக்குரோட் க்ரோசானி வெள்ளரிவிதை, பரங்கி வித்து, இன்னும் பிள்ளை பிறக்க என்னென்ன விதைகள் வேண்டுமோ, அத்தனை விதைகளையும் கிலோ கணக்கில் முத்தத்தில் கொட்டி ஜமுக்காளத்தில் நாள் முழுவதுமாக உலர்ந்தவற்றைப் பிரித்தெடுத்து அவற்றைப் போலவே இன்னும் பல கடைச் சரக்குகளை சேர்த்து இடித்து அரைத்து திரித்து வஸ்த்ரகாயம் செய்து, தேனில் ஊறவைத்து, காய்ந்த பழங்களுடன் கலந்து, தினமும் இரவிலும் காலையிலும், ஒரு மரத்து கள்ளுடனும் ஒரு பசுவின் பாலுடனும் கலந்து, அளவுடன் பெரிய கரமுண்டாரை தாங்கச் செய்கிற வேலையை பூராவாக மாஞ்சி

ஏற்றுக் கொண்டிருக்கிறாள். முற்றத்து விளிம்புகளில் எல்லாம் ஒவ்வொரு தூணைச் சுற்றி இரண்டிரண்டு பள்ளச்சிகள் நின்று பெரிய பெரிய பானைகளில் அடர்த்தியான மோரை நீண்ட மத்து கொண்டு கடைந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களில் ஒருத்தி ஒவ்வொரு பானையின் கீழ் உட்கார்ந்து கைகளில் பந்து பந்தாக வெண்ணெய் திரட்டியபடி, ஒவ்வொரு மத்தின் விளிம்பில் இருந்தும் விரல்களால் வழித்து வழித்து வெண்ணெயை திரட்டி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆறாம் கட்டு முற்றத்தில் தொடங்கி ஏழாம்கட்டு முற்றம் வரை வழக்கம் போல் நெல் பரவிக் கிடந்தது. நெல்லின் மேல் குனிந்து நாலைந்து பள்ளத்திகள் கைகளால் கிண்டிகிட்டு ஒரே மாதிரியாக உலர்த்திக் கொண்டிருந்தார்கள். முற்றம் முழுவதிலும் நெல்லின் பவுன் நிற சூரிய வெளிச்சத்தின் வேகம், நான்கு சுவர்களிலும் பரவி பிரதிபலித்துக் கிடந்தது. வழக்கம் போல் வாசல் திண்ணையில் கால்மேல் கால் இட்டபடி பெரிய கரமுண்டார் சந்திரஹாசர் தனது வயோதிகத்திலும். தனது ராத்திரி பகடை விளையாட்டுக்கு உச்சி வேளையில் இருந்தே சிங்காரித்துக் கொள்ளத் தொடங்கிவிட்டார். கட்டிலின் மேல் பரப்பிய கருங்காலிப் பெட்டியைத் திறந்து அதில் பதித்திருந்த பெல்ஜியம் கண்ணாடியை இழுத்து சாய்மானப் படுகையில் வைத்து அந்தப் பெட்டியில் இருந்த சிறிய சிறிய டப்பிகளில் இருந்து ஜவ்வாது, அரகஜா, பொன் அம்பர், காக்கைப் பொன், சந்தனத் தூள் போன்ற பல வாசனாதி திரவியங்கள், போதாதற்கு நவீன காலத்து வெளிநாட்டு செண்ட் வகைகள், ஆகியவற்றை அடுக்கடுக்காய் ஒவ்வொன்றாய், எடுத்து தனது வெற்றுடம்பில் அங்குமிங்குமாக மிக மிக மெலிதாகப் பூசிக்கொண்டார். ஒவ்வொரு நாளும், இப்படியே மணக்கும் இரவுகளாகத்தான் அவருக்கு விடியும். அந்த வூட்டில் அந்த ஓர் ஏக்கம் அவருடைய நாலு மனைவிகளுக்கும் எப்போதும் இருந்து வந்தது. அந்த கரமுண்டாருகுடிக்கு வேண்டியிருந்தது, ஒரு வாரிசு. அன்றுகூட கரமுண்டார் வூட்டில் ஒண்ணாங்கட்டு முற்றத்தில் தர்மக் கல்யாணம் ஒண்ணு தடபுடல் பட்டுக்கொண்டிருந்தது. பத்து வருடத்துக்கு முன்னால் எல்லாம் மாசத்துக்கு பத்து கல்யாணம் தர்மத்துக்கு செய்து வைப்பார் கரமுண்டார். இப்ப அதுவும் தேஞ்சு போச்சு. ஒன்னோ ரெண்டோவாக குறைந்து கல்யாண தடபுடலும் கொறஞ்சு போச்சு. முந்தி எல்லாம் சுத்துப்பட்டு கிராமங்கள்ல யாருக்காவது கல்யாணம் ஆகலியின்னா கரமுண்டாரு வூட்டுக்கு போன்னு சொல்லுவாங்க. பழைய காலம்ன்னா வர்ற போற ஜனங்க அந்த வூட்டு குத்து செங்கல்ல தொட்டு கும்புட்டுப்

போவும். வூட்டு நுழைவாசல்லேயே சங்கு சக்கரம், நாமம், எல்லாம் பெரிசா வரைஞ்சு வெள்ளி தட்டுல அடுக்கியிருக்கும். இதுவளுக்கும் போற காலம் இன்னும் வரலெ. ஆனாலும் எந்தக் காரியமும் இன்னும் தடைபடல அப்படின்னு எல்லாருக்குமே தெரியும். பெரிய கரமுண்டாரு செயலில்லாம போயிடல, ஏன்னா அவரு என்னிக்கிமே திண்ணையில இருந்துதான் கார்வாறு பண்ணுனாரு. திண்ணையைச் சுற்றி மேல் திண்ணையிலேயும் கீழ்த்திண்ணையிலேயும் பத்து பள்ளனுவ நிக்கிறானுவ. வூடு இன்னைக்கும் ஜேஜேன்னுதான் இருக்கு. அந்தி மயங்குற நேரம். ஊடே என்னமோ ஒரு அமைச்சலா இருக்க சாயங்கால வெய்யில்ல காவேரியில கொஞ்சம் தண்ணிதான் ஓடினாலும், அதுல சூரிய வெளிச்சம் தகிடு தகிடா மஞ்சப்பாளம் போடுது. பாசி பிடிச்சு கோட்டை ஏறின கரமுண்டாரு வூட்டு செவத்துல, சூரிய வெளிச்சம் ஆத்துல விழுந்து செவத்துல ஓடுது.

காத்தாயம்பா எங்க? வூட்டுக்குள்ற வழக்கம் போல பத்தாயக்கட்டுக்குள்ள இருட்டுக்குள்ற கெடக்கறா. வானத்தப் பாத்து மல்லாந்து கெடக்குறா. ஒரு பத்து பதினைஞ்சு நாளா ஆச்சு தெலகராஜ பாத்து. அண்டாரங்காட்டு பாம்பு புத்துக்குப் போற சாக்குலகூட அவனெப் பாக்க முடியல. ஏன்னா அவன் போப்போறானாமே. நெஞ்சுக்குள்ள அப்படியே அவன் கால்ல விழ நெனைச்சாலும், அவளால நேரில் வந்தா ஒண்ணுமே முடியலியே. மனசுல உள்ளதை எல்லம் அவன்கிட்ட கொட்டணும்ன்னுதான் பாக்குறா. ஆனா அவ கரமுண்டாரு குடி பொண்ணாச்சே. குடியினால குடிக்கும் பெருமையா, இல்லென்னா பேருனால புகழ்னால ஒரு குடிக்குப் பெருமையா, அவளுக்குத் தெரியல. ஆனா அவன் கேக்குறதை முந்தானியில தர காத்தாயம்பாளால் முடியாது. அவன் கேட்டு முட்டி முட்டி அலுத்துதான் போயிருப்பான். ஆனா சந்தியிலே முந்தி விரிக்க அவளால் முடியாது. ஆனா இப்பக்கூட அவனைத் தவிர, வேற ஆம்பளைய ஆம்பளையாக்கூட அவளால நினைக்க முடியாது. வடுவாம்பாளுக்காகக்கூட கரமுண்டாரு வூட்ட பங்கு வெக்க முடியாது. நாளைக்கி வடுவாம்பா வர்றா. எது எப்படி போனாலும் கல்யாணமே நின்னாலும், காத்தாயம்பா அதுக்கு ஒத்துக்க மாட்டா.

தரை ஜில்லென்னு இருந்தது. அவள் உடல் கொத்துப் புரண்டு புரண்டு எவ்வளவு நேரம் கிடந்தாள் என்று அவளுக்கே தெரியாது. வூடு முழுவதும் கோலாகலமாய் என்றைக்கும் போல் நம்பிக்கையாய், கரமுண்டார் வூடு வாழ்ந்து கொண்டிருந்தது. வூடு முழுவதும்

குழந்தைகள். எல்லாம் தாயாதிகள். இங்கும் அங்குமாக ஓடி, குழந்தைகள் சப்தம் போட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் காத்தாயம்பாளுக்குத்தான் என்ன வேலை? என்றே தெரியவில்லை. ரெண்டு நாளாக ஏழு மணியானால் காத்தாயம்பா மேல் மகமாயி வர ஆரம்பித்து இருந்தது. சமீபத்தில் இது மாதிரி வந்ததில்லை. அஞ்சினி வைத்தியம் ஹக்கிம் ராவுத்தர் முதல் தஞ்சாவூர் டாக்டரம்மா பவானி வரை வந்து பார்த்து ஒன்றும் இல்லை என்று சொல்லியாகிவிட்டது. அவளுக்கு செல்லி வேண்டும். செல்லியை இப்போதெல்லாம் அடிக்கடி காண முடிவதில்லை. எனவே, ஆளை விட்டுத் தேடி பார்த்ததில் அவள் புனவாசலுக்கு ஓடிப்போய் விட்டதாகச் செய்தி வந்து சொன்னார்கள். இந்த சூழலில் ராமுக் கரமுண்டாரையும் நாலு நாளாகக் காணோம். ராமுக் கரமுண்டாருதான் இங்க உள்ள நெலத்துக்கெல்லாம் அதிகாரி; கார்வாரு. சிங்காரச்சாரி மவனுவ எல்லாம் படிச்சு லண்டனுக்கும், ஸ்டேட் அமெரிக்காவுக்கும் வேலைக்கிப் போய் பணம் அனுப்பிவைக்க ஆரம்பித்தவுடன் கரமுண்டார் வூட்டு சாகுபடி எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாய் கொறைஞ்சு போச்சு. ஏன் நெலம் எங்கேன்னு கேக்குற வடுவாம்பாகிட்ட இந்தான்னு சொல்லி தூக்கி எறியணும்ன்னாக்கூட, அதுக்கு ராமுக் கரமுண்டார் வேணும். உச்சி உருமம் ஆனாலும், நட்ட நடு ராத்திரியானாலும், மோட்டார் பைக்குல ஊர கோலி கோலி வர்ற சுப்பாக் கரமுண்டாரு இதுல ஒண்ணும் பட்டுக்கமாட்டாரு. உமாமஹேஸ்வரி பாவம், நடுராத்திரியில சொட்டச் சொட்ட நனைஞ்சிகிட்டு எங்கேயோ பொய்ட்டு வரா. இந்த ஒடம்பு என்னா அத்தனை தாங்காததா என்ன? கலியன் கையில சிக்கியிருக்குறதா பள்ளச்சிவ சொல்றது உண்மையா இருக்குமா? அவ்வளவு தூரத்துக்கு பொய்ட்டாளா? பெருமாளே. இந்தக் கரமுண்டாரு குடி இடிஞ்சு தெகஞ்சு போகாதா? நாட்டுல கள்ளக்குடிவ எத்தனையோ இருக்கத்தான் இருக்கு. அதுல எத்தனையோ வூடும் பேரும், ஆளும் அம்புமா, வளர்ந்து ஓங்கத்தான் ஓங்கியிருக்கு ஆனா அதுலயும் எத்தினிகுடி அடியோட அழிஞ்சு போயிருக்கு. சத்தியமா இருக்கணும். பொய் உதவாது. ஞாயமா நடக்கணும். இப்படி எல்லாம் யார் நம்பிகிட்டு இருக்கா? இப்ப? எனக்கு எம்மாமந்தான் வேணும். ஆனா கரமுண்டாரு குடிய தொடச்சு வித்துபுட்டு போற கொடூரம் ஆகுமா? ஒரு குடும்பமா, ரெண்டு குடும்பமா, அட கரமுண்டாரு வூட்ட தள்ளு. இந்த வூட்டுக்குள்ள இருக்குதே ஜனம்? எத்தனை குடும்பம்? அலைமாதிரி மூணு மாடியிலும் எட்டுக்கட்டிலுமா கொறைச்சலா நூறு

குடும்பமாவது இருக்காது? மொதல்ல இப்படி வாழ முடியுமா? கூடுமா? பொறந்ததிலேருந்து இன்னிய தேதி வரைக்கும் அவளெ அம்மா வளத்தாங்களா? பாட்டியோ வளத்துச்சா? இல்ல அவளெ அம்மாவும் அப்பாவும் தூக்கித்தான் கொஞ்சுனது உண்டா? யாராவது தூக்கி பால் கொடுப்பாங்க. அனேகமா பத்து பேருகிட்ட அவள் பால் குடிச்சிருக்கா. அந்த நேரத்துல கரமுண்டாரு வூட்டுல புள்ளெ பெத்த ஒவ்வொருத்தியும் அவளெ தூக்கி கொண்டாடியிருக்காங்க. எல்லாருமே கொஞ்சி தலைக்கு மேல தூக்கிட்டு ஆடியிருக்காங்க. கரமுண்டாரு வூடு அவளெ வளர்த்தது. இப்ப இது யாருக்கும் புரியாது. தலைக்கி எண்ணெய் தேய்ச்சிகிட்டு ஒக்காந்தா போதும். ஒரு அண்ணி தலை சீவும், ஒரு அண்ணி வாசனை எண்ணெய் பூசும், இன்னொரு கரமுண்டாரு குடி வாசனை சீயக்காய் தேய்ச்சிவிடும். குளுப்பாட்டும். யாரும் அவள் பாதத்த தரையில ஊனவிடமாட்டாங்க. காலந் தேஞ்சு குறுகுனப்போ அவள் வளர ஆரம்பிச்சா. அந்த குடியோட மூல விக்கிரகம் காத்தாயம்பாதான். அவளுக்கே சொல்லிக் கொடுத்தது வேற யாரும் இல்லை. இந்த கரமுண்டாரு குடி பொண்டுவதான். இப்போ எல்லாம் தலைகீழா மாறிப் போச்சு. பணம்தான் பவுசுன்னு ஆகிப்போச்சு. கரமுண்டார்குடி வரவெல்லாம் தேஞ்சு போச்சு. கவரமேட்டு கேணிப்பட்டறை பந்தயத்துல எப்பவுமே கரமுண்டாருகுடி தோத்ததே இல்லேங்குமே, சின்னப்பாயி தொரச்சி அப்ப எப்பமாவது ஜெய்ச்சிருக்கா? ஜெயிக்கவும் இல்லேங்கிறது உண்மைதான்.

காத்தாயம்பா நெஞ்சு வெந்து கொண்டிருந்தது இந்தக் கேள்விகளுக்கு எல்லாம் எந்தப் பதிலும் இல்லை. இதற்குப் பதில் சொல்லக் கூடியவன் தெலகராஜு மட்டும்தான். ஆனால் அவனும் இப்போது காத்தாயம்பாள தேடி வர்றதே இல்லை. அவனைத் தேடி வயலுக்கோ, மடுவுக்கோ, பாலத்துக்கோதான் காத்தாயம்பா வெட்கத்தைவிட்டு ஓடவேண்டியிருந்தது.

உலகம் எப்பவும் போலதான் சுழன்று கொண்டிருந்தது. அதில் எந்த மாற்றமும் இல்லை. பாப்பாரக் குடிகள்ல பலகுடி மேடேற டவுன் பக்கமா நவுந்து போச்சு. அக்ரஹாரம் இப்ப பேருக்குத்தான். ஆளில்லாத பழைய ப்ராமணன் வூடுகளை காதர்பாட்சா சாகிப்பு துபாய் பணத்தை வெச்சு வாங்குறாரு. இங்கே இருக்குற பாப்பாரக் குடிவ டெல்லி, பம்பாய்ன்னு போயிடுச்சு. எல்லாம் பொழப்பு, எனம்பாத்து, ஜனம்பாத்து இன்னம் பொழச்சு இட்டு இருக்குற கரமுண்டாரு குடி சரியிது. சரிஞ்சுகிட்டே போவுது. எல்லாரும் பரலோகம் போனம்ன்னுதான் பெரியவரு ராமானுஜரு

சொன்னாராம். முன்னூறு நானூறு வருஷமா, எல்லாரையும் கரையேத்தணும்ன்னுதான் பாடுபடுறாங்க. ஒரு வழியா, எல்லாருமே கரையேறனும்ன்னா பெரிய படகு வேணும். அஞ்சினிக்கு வர்ற ஒவ்வொரு கட்சிக்காரனும், இதேதான் சொல்றான். பெருமாள் கோயில்ல இதேதான பாசுரமாப் பாடுறாங்க? பெருமாளுகூட செத்த தூங்கிதான் பாக்குறாரு.

திடுக்கிட்டு காத்தாயம்பா நினைவுகளில் இருந்து மீண்டாள். யாரோ அடிபடுற சத்தம், ஓவென்ற கூக்குரல் ஓயாது கேட்டது. குழந்தைகள் ஒருவரை ஒருவன் அடித்துக்கொண்டு புரள்கிற மாதிரி இருந்தது. ஒவ்வொரு அசைவிலுமே அவள் யாரையோ எதிர்பார்த்தாள். அது யாரை? அது யாராய் இருக்கும்? எதற்காக எதிர்பார்க்கிறாள். அவள் பயந்தாள். நாளை இந்த கரமுண்டார் வூடு எப்படி பிரியப் போகிறது? எப்படி புகையப் போகிறது? என்பதை யாரும் உணரவில்லை. நான்கு நாட்களாக, ராமுகரமுண்டார் வராதது ஏனோ அவளுக்கு பயங்கர பீதியை அளித்தது. ராமு கரமுண்டாரைத் தெரியாதா, எப்போதும், பள்ளகுடியை சுற்றித்தான் அவரது நோக்கமும், போக்கும். பத்து நாள்கூட வராமலிருப்பார். ஆனால் இந்த நான்கு நாட்கள் ஏனோ காத்தாயம்பாள பீதியில் ஆழ்த்தியது. இதே போல் இன்னொரு பீதி எதிர் வரக் காத்திருந்தது. அதுதான் வடுவாம்பா. அனேகமாக சாயங்காலமாக அவள் வரலாம். திடுக்கென்று பத்தாயக்கட்டு குறுகின் வாசலில் நிழல் தட்டியது. யாராய் இருக்கும். அவளுக்குத் தெரியும், காத்தாயம்பா உள்ளே இருந்தால் யாரும் பத்தாயக் கட்டு வாசல் பக்கமே வரமாட்டார்கள் என்று. வூட்டில் யாரும் இல்லையா? அந்தி சாய்ந்த வேளை. பத்தாயக்கட்டு முழுவதும் இருள் பரவியிருந்தது. சமீப காலங்களில் அவளுக்கு இந்த இருள்தான் சுகம். சோம்பலை மிகவும் அழகாக இங்கதான் வளர்த்துதக் கொள்ள முடியும். ஒதுங்கின துணியெக்கூட மூடிக்கொள்ள வேண்டாம். உடம்பை முறுக்கிக்கொண்டு எப்படியோ திரிக்கிக் கொண்டு, இஷ்டம் போல் குப்புற புரண்டு கிடப்பாள். இருட்டு இதற்கு ரொம்ப துணையல்லவா? மேலேயுள்ள பிறைவாசல் சன்னலைகூட அதிகமாகத் திறப்பதில்லை. அவள் எதிர்பார்க்கும் முன் அந்த சிறிய வாசல் வழியே உள்ளே நுழைந்தது ஒரு நெடிய உருவம். இந்த உலகம் இடிந்து விழுந்து விட்டதா? கரமுண்டார் வூடு ஆற்றோடு கரைந்தே போய்விட்டதா? காத்தாயம்பாளுக்கு விளங்கவில்லை. ஒரு கணத்தில் வாரி சுருட்டிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். கரமுண்டார் வூட்டில் இருந்த ஆண் பெண் அடங்கலும் எங்கே போய்விட்டார்கள்? ஏன் அமைதி? உள்ளே நுழைந்தவன் அவளை

நெறுங்கும் முன் ஓரத்தில் கிடந்த வீச்சருவாளை லாவி எடுத்து அவனை நோக்கி வீசினாள் காத்தாயி. வந்தவன் சற்றும் அஞ் சாமல் அவளை நோக்கி முன்னேறினான். "யார்ரா அது? வெளியே போடா... இது கரமுண்டார் வூடு. தெரியும்ல்ல?" என்று கத்தினாள் காத்தாயம்பாள். வந்தவனின் உருவம் தெரியவில்லை என்றாலும் அந்த இருட்டிலும் அவன் கால்களைப் பரப்பி நின்ற முறை, இருட்டிலும் தெரியும் அவன் சுருட்டை முடி ஆகியவை நீண்ட காலம் அவளுக்குள்ளயே நினைவில் இருந்த ஓர் ஆண் உருவம் என்பது, அவளுக்கே கசந்தது. அவள் அடியோடு வெறுத்தாள். ஆற்றங்கரையோரங்களிலும் வயல் மேடுகளிலும், அவள் அடியோட வெறுத்த அவன், இப்போது ஏன் இங்க வந்திருக்கிறான்? உலகில் என்ன நடந்துகொண்டிருக்கிறது? மூன்ற நாளாக மாஞ்சியுடன் இந்த பத்தாயக் கட்டுக்குள் அவள் சாமியோட்டிக் கொண்டிருந்த போது உலகம் காத்தாயம்பாளுக்கு மூடுண்டு போய் இருந்ததா? வடுவாம்பா வந்திருந்தாளா? என்ன நடந்ததோ? தன்னைப் போலவே முழுக்க முழுக்க ஏமாற்றப்பட்டிருந்த அந்த பசித்த உடம்புக்காரி மாஞ்சி. அவளைப் போலவே இந்த மூன்று நாளும் சாமியாடிப் போனது எவ்வளவு பயங்கரம்? கலியன்... இவனுக்குத்தான் என்ன தைரியம்... வூட்டுக்குள் புகுந்து எதற்காக... இங்கே... நுழைகிறான்? "ஏய் அங்கேயே நில். கிட்ட வராதே" என்று கத்தினாள். "ஏய் யார்ரா இஞ்ச? லெஷ்மனா எவனாவது ஓடியாங்கடா." கத்தியபடி இங்கும் அங்குமாய் பாய்ந்தாள். மறு கையில் அவன் கிட்டே நெருங்கா வண்ணம் வீச்சருவாளை சுழற்றினாள். இருட்டில் கலியனின் முகத்து உணர்ச்சிகள் எதுவும் தெரியவில்லை. என்ன நடந்தது? வீடே பேய் அமைதியில் ஆழ்ந்து போனதன் காரணம் என்னவாக இருக்கும்? கலியன் எதைப்பற்றியும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவள் கையில் இருந்த வீச்சருவாள் கூர்ந்த வளைந்த நுனி, அவன் மார்பில் ஒருமுறை கீறிவிட்டது. ரத்தம் வடிந்திருக்கலாம். இருளில் அதுவும் தெரியவில்லை. ஒரு கணம் தன் "எங்க பொண்ணுவள கள்ளனுவ கொண்டுபோயி கொட்டடியில போட்டு கும்மி எடுக்கும்போது எங்களுக்கு எப்படி இருந்திருக்கும்? ஆனா உன்னெ நான் வுடப்போறதில்லெ. ஏன்னா நீயிதானே கரமுண்டார் வூட்டுக்கே சாமி"

"வேண்டாம் கலியா. வேண்டாம்... ஏன்னா அக்கிரமம் இது? வூட்டுல யாரும் இல்லெ. யாரும் பாக்குறதுக்கு முன்னாடி ஓடிப் போயிடு. நான் உமாமஹேஸ்வரி இல்லெ. எம்மாமன் பாத்துச்சுன்னா உயிரோட உன்னெ புதைச்சிடும்..."

"நீயி இந்த உலகத்துலதான் இருக்கியா? திருக்காட்டுப் பள்ளிக்கு படிக்கப் போன பொண்ணு நேத்து ராமுகரமுண்டார் கொட்டடியில பொணமா கெடக்கு. ராமுக் கரமுண்டாரக் காணோம். என்ன பாக்குறதுக்கு டவுன்ல இருந்து வந்த மாயி பொண்ணு எஞ்ச இருக்கான்னு தெரியாது... உம் மாமன் கொண்டு போயிருக்கான்னு சொல்றாங்க. உயிரோட பொதைக்கிறது உங்களுக்கு மட்டும்தான் முடியுமா? பள்ளக்குடியில புழுங்கிகிட்டு இருக்கானுவ. இது வரைக்கும் யாருக்கும் எதுவும் புரியல. எனக்குகூட தெரியாமத்தான் இருந்திச்சு? இப்படியே இருக்க முடியாது. எங்களுக்கும் இது முடியும் தெரியும்...விடமாட்டோம்... 18 வயதுகூட நெரம்பாத அரும்பு மாதிரி பொண்ண கரமுண்டாரு கொண்டு போயி கூறு போட்டுருக்காரு. எனக்கு ஒரு ஞாயமும் வேண்டாம். இதோ இப்ப நான் ஒன்ன தூக்கிட்டு போப்போறேன். ஒங்க அத்த, ஒங்க அத்த புருஷன் வூட்டுக்காரங்க எல்லாம் வந்து முன் கட்டுல பஞ்சாயத்து நடக்குது. வூட்டு ஆம்பளைவ எல்லாம் அஞ்ச கூடி கெடக்குதுவ. நேரம் தெரிஞ்சுதான், ஓரடி நெலத்துக்கும் ரெண்டடி நெலத்துக்கும் எல்லாம் பயலும் கத்திக்கிட்டு இருக்கான். கரமுண்டார் குடி பொம்பளைவ எல்லாம் அஞ்சதான் பாராயி நிக்கிறாளுவ. கெழவியகூட அஞ்சதான் நிக்கிது. பள்ளனுவ - பறையனுவ எல்லாம் வாசக்கட்டுல நிக்கிதுவ. ஊரு ரெண்டு பட்டு கெடக்குறப்ப கரமுண்டானுவளுக்குள் எனக்கு ஒனக்குன்னு குத்து வெட்டு. இஞ்ச என்ன நீயி வீச்சருவாள வீசி பாக்குற. மூணாம் பேருக்குத் தெரியாம ஒன்ன கொண்டு போயி என்ன செய்யிறேம் பாரு. எங்க செல்விப் பொண்ண கழுத்தை முறிச்சு ஆத்துல மெதக்கவுட்டான் ராமுக்கரமுண்டான்... முந்தா நாள் பொணத்த அள்ளிக்கொண்டு போனப்ப சொல்றான்: "செல்வி தங்கச்சி எங்கடா கலியா? அனுப்பிச்சு வெக்கிறியா?" என்ன கெப்புறு இருக்கணும்? இன்னக்கி இப்ப நான் கொண்டு போகப் போறன். கொண்டு போயி ஒன்ன பள்ளச்சியாக்கப் போறன். என்ன செய்யப் போறானுவ பாக்குறேன். மூணு நாளா ராமுகரமுண்டாரத் தேடுறேன். அம்புட மாட்டேங்கிறான். ஓம் மாமன் எங்கே? கத்திக் கூப்புடு. இல்ல வேற எந்த கள்ளனையாவது கூப்புடு. எவனாவது வரட்டும் - ஒவ்வொருத்தன் இடுப்பையும் முறுச்சு அடுப்புல சொறுவுறேன். ஆசை வந்தாலும் பள்ளச்சிய தேடிகிட்டு போறது - கோவம் வந்தாலும் பள்ளச்சிய தேடிப் போறது—ஆத்திரம் வந்தாலும், வஞ்சம் வச்சாலும் தாங்க முடியலைன்னாலும் எதையாவது எறக்கி வைக்கிற மாதிரி பள்ளச்சி ஒடம்பத் தேடிகிட்டு போறது போனீங்களேடீ? வீச்சருவாளையா எடுக்குற? ஒன்ன

என்னா செய்யணும்ன்னு எனக்கு தெரியும்டீ. வா... நேரே என் நெஞ்சுல வீசு. மொதல்ல ரத்தத்தெ பார்ப்போம். நானும் ஒன் ரத்தத்த குடிக்கத்தான் வந்திருக்கேன்." என்றுகூறிய படியே லாவகமாகத் தாவி அந்த இருட்டிலும் ஒற்றைச் சேலையுடன் இருந்த காத்தாயம்பாளின் கொத்து கூந்தலைப் பிடித்து இழுத்தான் கலியன். அவள் கையில் இருந்த வீச்சருவாளின் நுனி கலியனின் புஜத்தில் பதிந்தது. சாதாரணமாக அதைப் புடுங்கி இருளில் எறிந்தான் கலியன். காலடி வரை தொங்கிய அவள் கூந்தலை பந்தாக சுருட்டி அவள் வாயிலெ திணித்தான். அவள் மூச்சு முட்டியது. வாய் முழுவதும் மயிர்க்கற்றை.

திண்ணை பூரா ஒக்காந்திருந்த கரமுண்டார் வூட்டு பங்காளிய, எதிர் திண்ணையில ஒக்காந்திருந்த ஊர் பங்காளிய, கள்ளனுவ பாத்து கசமுச என்று கை நீட்டி கை நீட்டி கத்தி கொண்டிருந்தார்கள்... காத்தாயம்பாவ கூப்புடணுமின்னு யாருக்கும் தோணல. அவ திரௌபதி மாதிரி வூட்டுக்கு தூரமாகி ஒத்தை புடவையோட விலக்காகி பத்தாயக் கட்டுக்குள்ள படுத்திருக்குறதா எல்லாருக்கும் நெனப்பு. ஆனா அதே நேரத்துல காத்தாயம்பாள ஆத்தோரமா நாணல் காட்டு வழியா இருட்டுல யாருக்கும் தெரியாத அண்டாரங்காட்டுக்குள்ள கொண்டு போய்க் கொண்டிருந்தான் கலியன் என்பது யாருக்குத் தெரியும்?

கற்றையாக அவள் தலைமுடியைத் திணித்து தொண்டைக் குழி வரை அது இறங்கியது. இறங்கி அடைத்துக் கொண்டது. அவளது கைகளை பின் கட்டாக இறுக்கி அவள் திமிற திமிற அவளை தோள்களிலே தூக்கிக் கொண்டு, வடிந்த ரத்தம் கட்டி கட்டியாக விழுந்து கொண்டிருக்க, நடு முற்றத்தில் இருந்து பத்தாயப் பிறை வழியே மேலேறினான் கலியன். இரண்டே தாவலில் முற்றத்தின் மேல் விளிம்பு வழியே ஓடி நன்றாக இருட்டிய அந்த வேளையில் அவளுடன் இறுக கட்டிக் கொண்டபடியே யாரும் இல்லாத அந்த வூட்டின் எட்டாங் கட்டின் மேல் முற்றத்தில் இருந்து அவளோடு ஆற்றில் குதித்தான் கலியன். அதே நேரத்தில் கரமுண்டார் வூட்டின் முன் கட்டில் கடுமையான கூச்சலும் விவாதமும் நடந்து கொண்டிருப்பது யாருக்கும் தெரியாமல் போயிற்று. கட்டிலில் சிலைபோல் உட்கார்ந்து சுவரில் சாய்ந்து கிடந்த சந்திரஹாச கரமுண்டாருக்கு இந்த வூட்டின் மூல விக்கிரகம் படியேறிப் போய்விட்டது தெரியுமா? ஆக்ரோஷமாய் நிலத்தைக் கொடுக்கக் கூடாது என்று கத்திக் கொண்டிருக்கின்ற கரமுண்டாத்திகளுக்குத் தெரியுமா? தலை நரைத்து விட்ட திரிசியம்பாளுக்குத் தெரியுமா?

காத்தாயம்பா பள்ளப்பயலோட ஓடிப் போயிட்டான்னு? இனிமே அப்படித்தான் சொல்லப்போறாங்க... கள்ளன் வூட்டுக்குள்ள பூந்து ஒரு கள்ளச்சிய இழுத்துகிட்டு போனா? இழுத்துக்கிட்டு பொய்ட்டாங்கன்னு யாரும் சொல்ல மாட்டாங்க... ஓடி பொய்ட்டாங்கன்னு சொல்வாங்க. கலியனோட காத்தாயம்பா ஓடிப்பொய்ட்டாளாம் – ரொம்ப நாளா இது நடக்குதாமுல்ல? அப்படித்தான் சொல்வாங்க ஆம்மா! கரமுண்டாரு வூடு பூரா முன் கட்டுல கூடிகிடக்கு. வாசக் கொறட்டுல எல்லாம் ஆளு நிக்கிதுவ. பள்ளப் பயலுவ எல்லாம் பயந்துகிட்டு கொல நடுங்கிக்கிட்டு நிக்கிறானுவ. எத்தனை தல உருள போவுதோ? நடுங்கிட்டே பறையனுவ நிக்கிறானுவ. கூட்டங் கூட்டமா தூணோரமா

சாஞ்சிகிட்டு நிக்கிறாரு. நடவக் கரமுண்டார காணும். ஆனா எல்லாரும் பஞ்சாயத்து பேசுறதுக்கும் முன்னாடியே பெரிய கரமுண்டாரு கட்டுல்ல ஒக்காந்துகிட்டே இந்த நூறு வேலி நெலத்து பத்திரத்த வடுவாம்பா கால்லெ எடுத்து வீசிப்புட்டாரு.

"ஏன்? நெலம் எஞ்ச இருக்கு? காட்டுங்க"ன்னா வடுவாம்பா. இதோ அஞ்ச இருக்குடி. எடுத்துகிட்டு போ"ன்னு வீசிப்புட்டாரு. ஆனா அதுக்கப்புறம்தான் எல்லாரும் பேசு பேசுன்னு பேசுறாங்க. ஆத்துல தண்ணியே வராட்டிக்கூட ஓயாம வெளையிற நெலம். எப்போதும் ஈரம் காயாத பூமி. வருஷத்துக்கு நாலு போவமும் வெளையுற நெலம், கரமுண்டாரு வூட்டு கடைசிச் சொத்து. தூக்கி எறிஞ்சுபுட்டாரு பெரிய கரமுண்டாரு. எப்படி எறியலாம்முன்னு யாராச்சும் கேக்க முடியுமா? எல்லா பொம்பளைவளும் மொண மொணன்னு வடுவாம்பாள காய்ச்சி எடுத்துகிட்டு இருக்குவ. தைரியமா ஒண்ணும் வெளிய சொல்றதுக்கு ஒண்ணுத்துக்கும் முடியாது. ஆனா பெரிய கரமுண்டாருக்கு ஒண்ணும் பயம் இல்லெ. அவரு மோட்டு வளைய பாத்துகிட்டு அப்படியே ஒக்காந்திருந்தார். அப்பாயிவ ரெண்டும் வூட்டுக்கு வெளிய வராமலியே முத்தத்துல நின்னுகிட்டு சும்மா பாடுபாடுன்னு பாடுதுவ. அப்பகூட பெரிய கரமுண்டார ஒண்ணும் சொல்லாம வடுவாம்பாளத்தான் வறுத்துக் கொட்டுனுதுவ. பெரிய கரமுண்டாரு அப்படியே விருமுத்தி புடிச்சது மாதிரி செங்குத்தா திண்ணைக்கி வெளியே தெரியிற மானத்தையே பாத்துகிட்டு அப்டியே உக்காந்துகிட்டு இருக்காரு. கீழே கிடந்த நூறு வேலி நெலம் பத்திரத்தை யாருமே சீந்தல்லியாம்.

# கரமுண்டார் வூடு - 9

மேலப்புனவாசலில் பள்ளக்குடியும், பறக்குடியும் பவுஞ்சு பவுஞ்சாக பற்றி எரிய ஆரம்பித்தது. கடந்த மூன்று நாட்களாக தஞ்சை மாவட்டத்து திருக்காட்டுப்பள்ளி கரையோரம் காவிரி பிரியற இடமெல்லாம் குடிசைகள் பள்ளச்சேரிகளும் பறச்சேரிகளும் பற்றி எரிய ஆரம்பித்தன. தொடக்கம் அஞ்சினியிலதான் என்றாலும் ஜாதி அஞ்சினியில் தொடங்கி அஞ்சினியிலே தானா முடிகின்றது? அது எங்கும் வியாபித்து படர்ந்து கிடக்கின்ற விஷமாகவே இருக்கின்றது. ஒவ்வொரு கதையிலும் பள்ளர் சேரிகள் பற்றி எரிந்தன. கொளுத்தி விட்டவர்களும் அவர்கள்தான். எங்கு பார்த்தாலும் புகை வெள்ளம். காலம் ஆக ஆக இருட்டினால் வெளியே யாரும் இறங்க முடியாது என்ற நிலை ஏற்பட்டது. அஞ்சினியில் காலையில் இருந்து சாயங்காலம் வரை தெருவெல்லாம் வெறிச்சோடி கிடந்தது.

வானளாவ ஆத்துக்குள்ள இருந்து எழும்பி நின்ற கரமுண்டார் வூடு, இப்பொழுது புகை நடுவே முண்டிக்கொண்டு எழும்பி தெரிந்தது. வூடு முழுவதும் பெண்கள்தான், அதுவும் பள்ளப் பெண்கள். பயந்து ஓடி வந்து பதுங்கிய பள்ளக்குடி பெண்கள், நூற்றாண்டுகளாக தொடர்ந்து வரும் பயம். வூட்டுக்குள்ள இருக்கும் ஆண்கள் யாரும் இல்லை. கையில் கம்புடனும் குந்தம் சூலம் வீச்சருவாள் என ஆயுதங்களுடன் களுந்துகொளுத்திக் கொண்டு

இரவில் கையில் வேல்கம்புடன் திரிந்தார்கள். வயல் வரப்புகளில் காவல் இல்லாததால், தெரிந்தே இப்பொழுது திருட்டு நடந்து கொண்டிருந்தது. தோப்புகளில் எல்லாம் குலை குலையாய் தேங்காயும், மாங்காயும் வெட்டித் தள்ளப்பட்டன. நடக்காது என்று நினைப்பெல்லாம் போய், எதுவும் நடக்கும் என்ற நிலை வந்தது. அடிக்கடி ஒரு கூட்டம் இன்னொரு கூட்டத்தைத் துரத்திக் கொண்டு, வயல் வரப்பு என்று பாராமல், காடு மேடு என்று யோசிக்காமல், ஆறு வாய்க்கால்கள் என்று தயங்காமல் பறந்து பறந்து குத்தினார்கள்; வெட்டினார்கள். போலீஸ், காவல், நம்ப அரசாங்கம், எல்லாமே எங்களுக்கு ஆத்துக்கு அப்பாலேதான்னு பொண்டுவ சொல்லிக்கிதுவ. ஆற்றில் கரிந்த பிணங்கள் மிதந்தன. பள்ளப் பெண்கள் மயிரை அறுத்து, வெட்டி முண்டங்களாக மிதக்கவிடப்பட்டார்கள். கள்ளக்குடி பெண்கள் மரங்களில் தொங்கினார்கள். முஸ்லீம்களோ, பிராமணர்களோ காணோம். அஞ்சினி அல்லோலகல்லோலப்பட்டது. பகல் நேரத்தில்கூட பதுங்கி பார்த்து போக நேரிட்டது. வேற்று ஊர் பள்ளர்களும், உள்ளூர் பள்ளர்களும் மோதிக்கொண்டு வெட்டிக்கொண்டனர். ஆனால் வெளியூர்க்காரர்கள் யாரும் வர முடியவில்லை. உள்ளூர் கள்ளர்களை வெட்ட வெளியூர் கள்ளர்கள் வரவில்லை. அதற்கும் வெளியூர் பள்ளர்களே வேண்டியிருந்தது. ஊர் ஊராகப் பரவிக் கொண்டிருந்த கலகத்திற்கும் உள்ளூரில் பரவிக் கிடந்த பகைக்கும் எந்தவிதமான சொந்தமும் பந்தமும் இல்லை. எல்லா கலகங்களும் கோபங்களும் கடைசியில் எரியும் நெருப்பிடம்தான் சாத்தியமாகின்றன. அஞ்சினியில் கரமுண்டார் வூடு முழுவதும் ஹோவென்று மயான அமைதி பூண்டு கிடந்தது. மூன்று நாளாக சுத்துப்பட்டு சேரிகளில் எல்லாம் எரியும் நெருப்பிற்கு பதில் சொல்லிக் கொண்டிருந்தது கரமுண்டார் வூடு மட்டும்தான். இன்னும் சங்கு சக்கரதாரியாக நுழையும் இடத்திலேயே காட்சியளித்துக் கொண்டு வெளிச்சிட்டு கிடக்கிறது கரமுண்டார் வூடு. எப்போதும் வாசல்ல பள்ளனுவ. கொல்லையில் பத்து பதினைஞ்சு பள்ளனுவ. ஒவ்வொரு கட்டு முத்தத்துலயும் பத்து பதினைஞ்சு பள்ளனுவ. பள்ளனுவ திண்ணையில இரட்டைக் கட்டில் பட்டு மெத்தை கொசுவலை சந்திரஹாச கரமுண்டாருடைய வெள்ளியில செஞ்ச எச்சில் காலாஞ்சி, அவருது தங்கப் பூணு போட்ட கை பெரம்பு, நாலு கால் வெச்சு பஞ்சலோக பித்தளைப்பெட்டி, அந்த கரமுண்டார் வூட்டு அடுக்கு திண்ணை நெரம்ப நிக்கிற சின்ன கரமுண்டாரு, அப்பாயி, கௌவிய, தொரச்சி, சந்தானம் ஒருத்தரையும் யாரையும்

காணம். சந்திரஹாச கரமுண்டாரு, அவரோட ராஜ்யபாரம் எதையும் இப்ப காணும். வீடே பகல்ல இருண்டு கெடக்கு. உள்ளுக்குள்ள யாரு இருக்காவளோ தெரியல்ல. ஆனா வூடு விழுந்துடல. மூனே நாள்ளெ எல்லாம் இப்படி தலை கீழா திகிடு மாறி போயிடுமா? ஊர்ல இன்னமும் பள்ளக்குடியில பறக்குடியில குடிசைங்க பத்திகிட்டு எரியிது. யாரோ அடங்காம தன்னை எரிச்சுகிட்டே இருக்கான். கூட்டம் கூட்டமாய் வூட்டுக்குள்ளாற பொண்டுவதான் பேசிக்கிட்டு நிக்கிதுவ. யாரோ திடு திடுன்னு ஓடியார சத்தம் கேக்குது. வாசல்ல நின்னுகிட்டு ஓடி வந்து பரங்கிபழத்தை கீழப் போட்டாப் போல் தொரச்சியப்பாயி கத்தி பொலம்பிகிட்டே கீழ விழுந்து உருண்டு புரண்டு.

"என்ன கொண்டு போவாம ஒன்னெ கொண்டு போனானே என் ராசா. இதை எல்லாம் என் கண்ணால பார்த்து மண்ண வாரி போடணுமா? என் கண்ணுமணி நாலு பேரையும் விட்டுபுட்டு போவ ஒனக்கு எப்படிய்யா மனசு வந்துச்சு? நாளுன்னு பாக்கலியே பொழுதுன்னு பாக்கலியே, அளுன்னு பாக்கலியோ, அரசுன்னு பாக்கலியே ஒன்னையும்இல்ல கொண்டு போ நீரு பாக்கலியே, நெருப்பு பாக்கலியே என் ராசாவே... என்ன பெத்த ராசா என்ன விட்டு போனில்லே"

கதறியபடியே ஓலம், நேரமாக நேரமாக பெருக, கரமுண்டாரு குடி பொண்ணுவ பூரா சுற்றி வந்து ஒப்பாரி வெக்க பெண்கள் ஒருவர் தோளில் ஒருவர் கைகளை போட்டு அணைத்துக் கொண்டு கட்டி கதறி இடுப்புக்களை கட்டிக் கொண்டு முன்னும் பின்னுமாய் அலையோட்டம் போல் அசைந்து அசைந்து கதறலானார்கள். திரிசியம்பா வெளியே வரவே இல்லெ. நாகலெக்ஷ்மியும், ராதையும் பெண்களின் சங்கிலித் தொடரின் நடுவில் அவிழ்ந்த கூந்தலும், மோதி தலையுமாய் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டும் அழுதார்கள். சுற்றி சுற்றி உட்கார்ந்து இருந்த பெண்கள் ராதையையும், நாகலெக்ஷ்மியையும் கட்டிக் கொண்டு மோதி மோதி அழுதார்கள்.

ஆற்றின் மடுவில் மிதந்த பெரிய கரமுண்டாரின் உடலை கல்லணையில்தான் போய் வாங்க வேண்டியிருந்தது. அதற்குள் ஒரு நாள் இரவும் பகலுமாய் அவர் உடல் பூதாகரமாய் தண்ணீரில் ஊறி தோல் உரிந்து, அவரது ரத்த நாளங்கள் வெளித் தெரிய உடல் நீல நிறமாய் விஷ வடிவாய் நீலம் பாரித்து உப்பிப் போய்விட்டது. ஆற்றில் பரிசலில் தூக்கிப் போட்டு கரைவழியே பள்ளர்கள் இழுத்துக் கொண்டு ஓட, அஞ்சினி வந்து சேரும்

முன்பே கரமுண்டார்கள் மூவருமாய் கேணிப்பட்டறைகளில் கரையோரமாக, முன்னே பள்ளர்கள், பறையர்கள் என்று செய்தி கரமுண்டார் வூட்டை தேடித் தேடி வந்து சேர்ந்து, ஊர் முழுவதும் பரவுவதற்கு ஊர் ஊராக இல்லை. ஒருவர் துக்கம் இன்னொருவருக்குப் பரவ அஞ்சினியில் இன்னொருவர் இல்லை, ஒருவர் துக்கம் கொண்டாட. யாரும் வெளியில் வராமலேயே ஊரைச் சுற்றிலும் ஆற்றங்கரையோரம் புகை மண்டிக் கிளம்பி, அதன் புகைக்குள் புகையின் விளிம்பெல்லாம் கரையிட்டது போல் செந்தழல் நெருப்பு கோடு போட்டது போல் அனலுடன் சுழன்று பகலிலும் கனிந்தது. ராமுகரமுண்டார் உடம்பு இன்னும் அகப்படவில்லை. ராமுகரமுண்டார் காணாப் பொணமாகி போய்விட்டார். அஞ்சினிப் பள்ளனுவ தேடிக்கிட்டே அலையிறானுவ. ராமு கரமுண்டாரு பொண்டாட்டி, பொணத்த பாக்காமலேயே தாலிய உருவி வச்சுட்டா. வெளிய தெருவ எங்க பார்த்தாலும் ராமுகரமுண்டாரு பொணம் அஞ்ச கெடக்குது, இஞ்ச கெடக்குதுன்னு ரகசியமா பேசுறாங்க. வூட்டுப் பொண்ணுவ ஒண்ணும் ஒண்ணோட பேசுறதுக்கே நேரம் இல்ல. அதுவளுக்கு சாதாரணமாகவே அழுவுறதுக்கு நெரம் பத்தாது. பலதுவ ஆயி வூட்ட திலும்பி போய் பாக்குறதுக்குகூட நேரம் இல்லாம இஞ்சயே அலுந்தி போய்ட்டுதுவ. கரமுண்டார் குடி பொண்டுவளா ஆயிப்போனதுவ. மூணு நாளா அதுவளுக்கு அழுவுறதுக்குக் கூட தொண்டையில விழுதில்லெ. கட்டிப்புடிச்சு அழ இன்னொரு பொம்பள இல்லெ. கரமுண்டானு பூரா கையில கத்தியோட ஆத்து மடுவுல வயல் சேத்துல எறங்கி தேடி தேடி வெட்டிகிட்டு திரியிரானுவ. கரமுண்டாரு எப்போ திண்ணையில இருந்து எறங்கி தெருவுக்கு போனாருன்னு யாருக்கும் தெரியாது. திரிசியம்பா எப்போ முத்தத்துல விழுந்து கெடந்ததுன்னு எவளுக்கும் புரியலை. விடியகாலம்பற அஞ்சு மணிக்கு திரிசியம்பா வாசல்ல வந்து பாத்தப்ப என்னைக்கும் இல்லாத திரு நாளா திண்ணையில் இருந்த சாமான் எல்லாம் உள் முத்தத்துல கவிழ்ந்து கெடந்தது. அவ்வளவு பெரிய கட்டில், பஞ்சு எல்லா சாமான்களையும் ஒன்டியாளா எப்பத்தான் தூக்கி கொண்டாந்து உள்ளே விட்டேறிஞ்சாருன்னு யாருக்கும் தெரியல. ராத்திரி ஊரு பூரா ஒரு கீலு வாடை தார், வாசனை குபுகுபுன்னு எஞ்சியோ என்னமோ பத்திகிட்டு வெடிச்சு எரியிற சத்தமும் கெலம்புனதும் திரிசியம்பா உள் முத்தத்துல இருந்து எந்திரிச்சு வந்து பார்த்தா. வாசல் கதவு ஆன்னு தெறந்து கெடக்கு. திண்ணை ராஜாங்கத்துல இருந்து கட்டில்ல இருந்து எச்சில் காலாஞ்சி

வரைக்கும் கொண்டாந்து முத்தத்துல போட்டுபுட்டு எஞ்ச போனாரு, சந்திரஹாச கரமுண்டாரு? திண்ண படிய வுட்டு அவரு கீழ எறங்கி போயி எத்தனையோ வருஷமாச்சே? திண்ணையில யாரும் இல்லேன்னாலும் ரெட்டைத் திண்ணைக்கு கீழ ரோட்டுல நிக்கிற ரெண்டு லாந்தர் கம்புல இருக்கிற கண்ணாடி பெட்டியில இருந்து முணுக்கு முணுக்குன்னு எரியிற ரெண்டு லாந்தர்லயும் இருந்து வர்ற வெளிச்சம், திண்ணையில லேசா தெரியிது. திண்ண வெறிச்சோடி கிடக்குது. திரிசியம்பாளுக்கு திகீர் என்றது. உள்ளே ஓடிப்போய் நாகலெக்ஷ்மியை உசுப்ப, இவளும் ஓடி வந்து பார்க்க ஓட்டு திண்ணையில் காவலுக்கு படுத்து கிடக்கிற பத்து பன்னெண்டு பள்ளனுவளையும் காணும். கீழ திண்ணையில இருக்கிற பறையனுவளையும் காணும். எங்க பார்த்தாலும் தார் டின்னு பத்திகிட்டு எரியற வாசனை. திருக்காட்டுப் பள்ளியில் இருந்து ரோடு போட கொண்டு வந்து பஞ்சாயத்து போர்டுல எறக்கியிருக்கிற தார் டின்னு எல்லாம் ரெண்டு நாளா வெடிக்கிது, எரியுது. பள்ளன் மட்டம் இல்லியாம், பறையன் கீழ இல்லையாம் கவர்ன்மெண்டு, கட்சிக்காரன்க எல்லாம் பேசுறாங்க. ஆனா ராமுகரமுண்டாரை பள்ளனுவளா, பறையனுவளா, கள்ளனுவளா யாரு கொண்டு போனது?ன்னு தெரியல. கூட்டம் ஓடும். எல்லாரும் வூட்டு கதவ இறுக்கி அடைச்சிக்குவாங்க. கதவு ஜன்னல் வழியா எட்டிப் பார்த்தா நடு ரோட்டுல தடதடன்னு ஒரு தார் டின்னை உருட்டிக்கிட்டு ஓடி வருவாங்க. ஒருத்தன் அருவாளால தார் டின்னு பாயப் பாத்து ஓங்கி ஒரு போடு, தார் குபு குபுன்னு பொங்கிட்டு எழும்பும், கையில் இருக்கிற சுளுந்து பந்தத்தால பொங்கி வர்ற தார் வாயில கொளுத்துவானுவ. கூட்டம் செதறி, ஓடிப்போயிடும் அவ்வளவுதான் தார் கிளம்பி எரியும். திடீர்ன்னு பொகையும், தாரும் நாலா பக்கமும் நெருப்பும், தார் டின்னு வெடிக்கும். டொம்முன்னு அதிர்வேட்டு மாதிரி சத்தம். அவ்வளவு பெரிய தார் டின்னு நூறு நூத்தம்பது அடி ஒயரத்திற்கு ஜிவ்வுன்னு மேல போயி வெடிச்சு நாலாபுறமாய் அக்கினி மழையா தார் எரிஞ்சுகிட்டே வூடுகள் மேலெல்லாம் செதறி, வேட்டு செதர்றது போல பத்தி எரியுற டெக்கினிக்கை யார் கண்டு புடிச்சான்னு தெரியல. ஆனா இந்த ரெண்டு நாளா ஊரு பூரா தாரு வாசனையும், சீல் பொகையும் எங்க பாத்தாலும் வூடுகள் எரியிறதும், அடங்கவே இல்லை. பஞ்சாயத் போர்ட் ஆபீஸ்ல இருந்த அம்பது டின்னும் இப்படி வேட்டு தீத்துட்டானுவ. பள்ளக்குடி போற ஒத்தயடி பாதையையே வெட்டி சாச்சுட்டானுவ. எங்க பார்த்தாலும் பகை இது மட்டும்தான்

மிச்சம். மண்டி தார் எரிஞ்சு அடங்குறதுக்கு நாலு அஞ்சமணி நேரமாகும். சிதறி விழுவுற தார் போய் விழுகிற இடமெல்லாம் நின்னு நிதானமா கொளுத்திகிட்டே எரியும். திரிசியம்பா வெளியே வந்து பாத்தப்போ கரமுண்டார் தெருவுலயும் ரெண்டு கிழிஞ்சு போன தார் டின்னு நடு தெருவுல கெடந்து எரியுது. அந்த வெளிச்சத்துல கரமுண்டார் வூட்டு திண்ண வெறிச்சோடி கிடந்தது. என்ன காலத்துக்கோ இதெல்லாம்இப்படி நடக்குது. கனவு மாதிரி இருக்கு. ராத்திரி பூரா யாரும் தூங்க முடியல. மாட்டை எல்லாம் தொழுவத்துல கட்டி வைக்க முடியல. ஒவ்வொரு தடவை தார் டின்னு வெடிக்கிறப்பவும் மாடுவ தும்ப அறுத்துகிட்டு எஞ்சியோ ஓடுதுவ. நாயுவ ஓயாம கொலைக்கிது. பெரிய கரமுண்டார் எங்க போயிருப்பாரு? யாருக்குத் தெரியும்? கூட பத்து பதினைஞ்சு பள்ளனுவளையும் காணும். எங்க போயிருப்பாரு? கடைசியா விடிஞ்சதும்? வேல் கம்பும் ஆளுமா, பள்ளனுவளோட சுப்பாக் கரமுண்டாரு கௌம்பிப் போனாரு. திரும்பி வரும்போது எத்தனை கொலை உளுவுமோ? என்ற பயம் எல்லாருக்கும் தோன்றத் தக்கதாக எல்லார் கைகளிலும் வீச்சருவாளும் சுருளி கத்தியுமாய் போனதும் வந்ததும் இதற்காகத்தானா? என்று எண்ணும்படி கல்லணை மடுவில் சந்திரஹாச கரமுண்டார் பிணம் மிதந்தது. எல்லாமே எதிர்பார்த்து நடந்ததுபோல் அஞ்சினி முழுவதுமே வாய் மூடிக்கொண்டது. அஞ்சினி முழுவதும் போய் அமைதி உருக்கொண்டது. யார், யார் பக்கம்? என்று தெரியாதபடி மனிதர்கள் ஒருவரை ஒருவர் தேடித் தேடி அலைந்தார்கள். தன் மாதிரி இல்லாதவன் எதிர்படும்போது எல்லாம் ஒருவரை ஒருவர் வெட்டினார்கள். வேற்றுமைகள் ஏதும் இல்லை. ஜாதிகள் ஏதும் இல்லை என்று ஓயாமல் புலம்பிக் கொண்டார்கள். கட்சி பேசிய போதெல்லாம், கை தட்டினார்கள். தெருவில் பிணமாக கரமுண்டாரைத் தூக்கி வந்தபோது பல பெண்கள் தெருவில் விழுந்து கும்பிட்டார்கள். மண்ணை அள்ளி தலையில் போட்டுக் கொண்டார்கள். நெற்றியில் திலகமாக இட்டுக் கொண்டார்கள். எங்கிருந்தோ தாரை தப்பட்டையுமாக கொப்பும் குந்தலுமுமாய், பறையர்கள் கூட்டமாய் வாசலில் கூடினார்கள். பறையடிக்கும் சத்தமும், குந்தத்தின் கொட்டோசையும், இடை இடையே கொம்புகளும், அடி வயித்தை புடுங்குகிற பெண்களின் ஒப்பாரி கூக்குரலும் அடர்த்தியாய் மேல் எழ, ஊர்கூட மறுத்தும் பச்சை மூங்கில் பல்லாக்கு வாசலில் தயாராகி நின்றது. முதலாங்கட்டு முற்றத்தில் கிடத்தி இருக்கின்ற கரமுண்டாருக்கு ஒரு மாலைகூட இல்லை. கரமுண்டார் மூஞ்சியே இல்லாமல் கோரமான ஒரு

உருண்டை சதை கோளம்தான், அங்கே முகத்துக்கு பதில் இருந்தது. சிறு குழந்தைகள்கூட கிட்டே நெருங்காமல், நாலு மனைவியரும் நெருங்காமல் அதை பிணம் குளிக்காமல் கொள்ளாமல் காட்டுக்குப் போகத் தயாராகிக் கொண்டிருந்தது. பெண்களின் ஓலம், அழுகுரலும், நீண்டு கதறியது. சாதாரணமான நாட்களாக இருந்திருந்தால் ஊரே இங்குதான் நின்றிருக்கும். இப்போது ஊரே அங்குதான் பார்த்துக் கொண்டிருந்தது. ஆனால் ஊர்தான் இங்கு வரவில்லை. சடங்குகள் சம்பிரதாயங்கள் ஒன்றை ஒன்று கவ்வி விழுங்கிக் கொண்டிருந்தன. நடுவ கரமுண்டார் தலையில் எல்லாம் இடிந்து விழுந்தது. கூட்டம் நெருக்கடியாக எதிர்பார்த்து கும்பல் கும்பலாகத் திண்ணையில் நின்றார்கள். யாரையோ எதிர்பார்த்து எல்லாருமே காத்துக்கொண்டிருப்பது போல் நின்றார்கள். பிணத்தில் இருந்து வடியும் நீரும், நாற்றமும் பரவிக் கொண்டிருந்தது. தெலகராஜையோ, சிங்காரச்சாரிரையோ காணோம். வடிவாம்பாளையோ, மற்ற தங்கைமார்களோ யாரும் வந்ததாகத் தெரியவில்லை. பெரிய கரமுண்டார் பிணத்தைக் கொண்டு வந்து முற்றத்தில் போட்ட போது எல்லாரும் காத்தாயம்பாளை பத்தாயக் கட்டுக்கள் போய்த் தேடலானார்கள். நாகலெஷ்மி வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு அழுவ கிழவிகள் ரெண்டும் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு அழுது கொண்டிருந்த நாகலெஷ்மியை வாயை பொத்தி அமுக்கி மூடி "வாயை திறக்காதேடி முண்டச்சி. வெளியே தெரியக் கூடாது. காணும்ன்னு ஓலம் போட ஆரம்புச்சுட்டியா? இஞ்சதான எஞ்சியாவது இருப்பா, ஊர கூட்டாத, பார்ப்போம். எஞ்ச போயிடப்போறா? அவளுக்குத் தாங்கி இருக்காது. இப்படியா அழிவானுவ? கரமுண்டாரு குடி இப்படியா விழுவும்? அவ கேட்ட வொடன மானம் போயிடும்ன்னு பூமியே தூக்கி எறிஞ்சிட்டு இப்படியா போயி பள்ளனுவ கையாலெ சாவணும். அடப்பாவி. இப்படியா போச்சு ஒங்கதை."

மங்களப்பாயி தரையில புரண்டு கதறியது. "எட்டு கண்ணும் எரியிற வூடு. இப்படி தூந்து மண்ணடிச்சா போவும்? பெருமானே. தெனமும் ஒனக்கு நெய்அவுசேகமும், பால் அவுசேகமும் ஊற்றி ஊற்றி தேனும் சந்தனமுமாய் காப்பு கட்டினானே சந்திரஹாசன். அவனையா மெதக்க வுட்ட? தாலி கட்டாத பொண்ணுவளுக்கெல்லாம் கல்யாணம் பண்ணி வெச்சுக் கரையேத்துனானே அவன் கரையா ஒடச்சு விட்டே பெருமானே நீ நின்ன திக்க இனி நான் கும்புடமாட்டேன்."

கிழவி அடி வயிறு பற்றி எரிந்தது. குண்டலம் குண்டலமாக தொங்கிய பெரிய மார்புகளில் 'பளார் பளார்' என்று அறைந்த ஓங்கி ஓங்கி வயிற்றில், அடித்துக்கொண்டு தொரச்சியப்பாயி கதறியபடியே முன்னே ஓடியது. காத்தாயம்பாளைக் காணுமாம். காத்தாயம்பாளைக் காணுமாம், காத்தாயம்பாளைக் காணுமாம். பெண்கள் குமிந்து கிடந்த அந்த மூன்று கட்டு முற்றங்களிலும் ரகசிய குசுகுசுப்பாய் காத்தாயம்பாள் காணாமல் போனாள். மீண்டும் மீண்டும் பலமுறையாகக் காணாமல் போனாள். ஒவ்வொரு பெண்ணுமே ரொம்ப உற்சாகமான ருசியோடு காத்தாயம்பாள் காணாமல் போனதை இன்னொரு பெண்ணிடம் "காத்தாயம்பா ஓடிப்பொய்ட்டாளாம். ஓடிப்பொய்ட்டாளாம்." திரும்பி திரும்பி தாங்களே ஓடிப்போன சுகத்துடன் சொல்லிக் கொண்டார்கள். கள்ளக்குடியில ஒண்ணும் ஒண்ணுமே காத்தாயம்பாளே எந்த காலத்துலயுமே எரிச்சலோடதான் பாத்துகிட்டு இருந்தாளுவ. இப்ப காத்தாயம்பா ஓடிப்பொய்ட்டா. இது சர்க்கரை மாதிரி இனிப்பா இருக்கு. யாரு கூட ஓடுனா? அப்படீங்கிற கேள்வி புறுத்தி உப்பிப்போன பெரிய கரமுண்டாரு காதுலயும் வுளுவ அத்தாச்சியில இருந்து சித்தி வரையிலயும், எல்லா செறுக்கியுவளும் காத்தாயம்பா சேலையை உருவி ,அஞ்சேயே பெரிய கரமுண்டாரு முன்னாலயே எல்லா பெண்களுமா சேர்ந்து பேசி சந்தோஷப்பட்டு போனாளுங்க. வெளியே 'டன்டனக்கு டனக்குடனக்கு டனக்கு'ன்னு தப்பட்டை பறையனுவளோட வேகத்தோட முன்னம் பின்னுமா அவனுவளுடைய ஆட்டத்துக்கு ஏத்தாப் போல, தஞ்சாவூர் பறையாட்டம் போட்டு ஆடி ஆடி இடையிடையே கொம்பு ஓசையும் குமுக்கியது. நடுவில் நின்று பறைய மூப்பன் பாடும் ஒலி தன்னந்தனியே எழும்பியது. பெரிய கரமுண்டாரைப் பற்றி அவன் புகழ்ந்தது.

"எட்டு கோட்ட நெல்லளந்த நீயி
கொட்டி கொடுத்த மவராசா...
எட்டு கட்டு வூட்டு முத்தமெல்லாம் நெல்லு
கட்டு கட்டா நாத்து, ஓம் முத்தமெல்லாம் சோறு
முத்தமெல்லாம் வைரம், ஏங் ராசா
ஓங் கழனி எல்லாம் முத்து
காவேரி முத்து"

தன்னிந்தனியான அவன் குரலோடு சேர்ந்து பறையர்களின் குந்தலத்தின் கொட்டோசையும், அடி வயிற்றையே கலக்கியது.

பெண்களின் கூக்குரலும் ஒப்பாரியும் போட்டிபோல் உள்ளிருந்து எழும்பியது. வாசலில் குத்து செங்கல் அருகே இன்னொரு பறையர் கூட்டம் அடுத்து வரிசைக்காக பட்ட பறைகளுடன், தயாராக நின்றார்கள். அந்த கூட்டம் பாடி முடிந்ததும், தாரைகள் நீண்டு ஒலித்தன. உடனே இந்த கூட்டம் பாடலை ஏற்று வாங்கி பாடியது.

"கரமுண்டாரு குடி முத்தமெல்லாம் சோறு
ஓரங்கொண்டவன் நெஞ்செல்லாம் வைரம்
நெஞ்செல்லாம் மாலை, மாலையெல்லாம் பவுனு
பவுனல்லாம் பவுசு, எம்மவராசா...
உன் நெஞ்செல்லாம் பூவு
அள்ளிக் கொடுத்ததெல்லாம் காசு"

மீண்டும் கொம்புகள் ஒலிக்க, நடுத் தெருவில் சுற்றிச் சுற்றி வந்து பறையர்கள் குதித்தார்கள். கும்மி கொட்டி சுற்றி, பாடையைச் சுற்றி பாடி ஆடினார்கள் பறையடித்துக் குதித்தார்கள். கும்மி கொட்டி சுற்றி, பாடையை இன்னொரு பிரிவு குறுக்காக பிறந்தது போல் முன்னும் பின்னுமாக அசைந்தாடி கும்மனி கொட்டினார்கள். அதே நேரத்தில் அந்த விடியல் நேரத்தில் இரவு முழுவதும் பகல் முழுவதுமாய் தேடி தேடிய உமாமஹேஸ்வரி அகப்பட்டுவிட்ட வெறியோடு, எங்கிருந்தோ அவள் மயிரை பிடித்து இழுத்து வந்து கரமுண்டாரு வூட்டுக்குள் தள்ளி மிதித்தார் சுப்பாக் கரமுண்டார். அழுகைக்கிடையிலும் பெண்களின் கூட்டத்தில் 'குசுகுசு'என்று எழுந்தது பேச்சு.

"வந்திருக்கா பாரு தேவுடியா மாதிரி. எங்க போனாளோ என்னா பண்ணாளோ, தேவுடியா கரமுண்டாரு குடிய இடுச்சு தள்ளிபுட்டுதான் போவா"ன்னு 'குசுகுசு'ன்னு கள்ளச்சிவ பேச ஆரம்பிச்சாளுவ. மூணாங்கட்டு உள்ள கொண்டு போய் ரூமுக்குள்ள தள்ளுனாரு சுப்பாக் கரமுண்டாரு. கதவ காலாலெ உதைச்சு சாத்துனதுதான், வெளிச் சத்தமெல்லாம் ஒடுங்கிப் போச்சு.

"எஞ்சேடி காத்தாயம்பா, வக்காளி பதில் சொல்லல மயிர அறுத்துடுவேன்டி, எஞ்சடி போனா அவ? நீயி எப்படியாவது போயி தொலை. காத்தாயம்பா எங்க?"

"தெரியாது" பளீர் என்று விழுந்தது. அறை 'பளிச் பளிச்' என்று மாறி உமாமஹேஸ்வரிய அறைந்து அவள் மயிரைப் பிடித்து உலுக்கியதில் அவள் சில்லு மூக்கு வழியும் வாய் வழியும்

ரத்தம் ஒழுகியது. மேலும் மேலும் அறைந்து கொண்டிருந்தார் சுப்பாக் கரமுண்டார். ஒவ்வொரு அறைக்கும் 'தெரியாது' என்ற பதிலையே ஒவ்வொரு அறைக்கு இடையிலும் உமாமஹேஸ்வரி சொல்லிக்கொண்டிருந்தாள். அறைவதை நிறுத்திவிட்டு அவளை சுவற்றோரமாகத் தள்ளி அவள் கழுத்தை பிடித்து இரண்டு கைகளால் நெறித்தபடி, "நீ எவனோட போன? எங்கே அவன்? அடுத்த பொணம் ஒன்னுடையதுதான்" என்று கூறியபடியே முழுவதும் நனைந்த ஈரச் சேலையுடன் ஈர உடலாய் இருந்த அவளை எட்டி உதைத்தார். தூரத்தில் இருந்த தேக்கந்தூணில் போய் மோதி விழுந்த அவளை உருட்டி, அவள் சேலையை உருவி முறுக்கி அந்தத் தூணோடு சேர்த்து வைத்துக் கட்டி, கை கால்களை முறுக்கி சேர்த்து பிணைத்து, அந்தத் தூணோடு நிறுத்தினார் சுப்பாக் கரமுண்டார். "உயிரோட தப்பிச்சுடலாமுன்னு நினைக்காதே. கண்டந்துண்டமா வெட்டி, ஒன்னெ இஞ்சேயே புதைச்சிட்டுத்தான் மறுவேலை. சந்து சந்தா கழிச்சு ஒம் சதையை கூறு போடல... நான் சுப்பாகரமுண்டான் இல்லெ" என்று கத்தியபடியே அவளை மீண்டும் ஒரு முறை அவள் மார்பில் எட்டி உதைத்து விட்டு கதவை அடைத்துக்கொண்டு வெளியேறினார். சுப்பு என்கிற சுப்பாக் கரமுண்டார். கூடத்தில் இருந்த எல்லாரும் சுப்பாக்கரமுண்டாரையே பார்க்க சுப்பாகரமுண்டாரோ முன் கட்டு முற்றத்துக்கு வந்து, நீலம் பாரித்து, யாரையோ ஜெயித்து விட்ட பெருமிதத்தில் சாய்ந்து விட்டது போல் பெருமை சரியக் கிடந்த பெரியக்கரமுண்டாரப் பார்த்து. "ஏன்ணே இப்படி பண்ணீட்டீங்க?"ன்னு தானே தன் முகத்தில் அறைந்து கொண்டார். இன்னும் விடியவில்லை. சாவு வீடாகவே அது இல்லை. சொந்தக்காரர்கள்கூட, ஆண்களாவது யாரையும் காணோம். எல்லாரும் பம்மி பதுங்கி விட்டாற் போல் முக்கியமான மனிதர்கள் யாரையும் காணோம், இனிமேலும் காலம் தள்ள முடியாது. புகைந்து கொண்டுதான் அன்றும் விடிந்து கொண்டிருந்தது. இனிமேல் காலம் தாழ்த்த முடியாது. வெயிலேறினால் பிணம் தாங்காது. போலீஸ் ஸ்டேசனுக்கு பணம்கொடுத்து அனுப்பியாகிவிட்டது. அங்கெல்லாம் போலீஸுக்கு என்ன வேலை? அவர்களாகவே வரமாட்டார்கள். வந்துதான் என்ன செய்யப் போகிறார்கள்? வெள்ளக்காரன் காலத்துக்கு முன்னால இருந்து, போலீஸ்காரனுங்க மட்டும் இல்ல, எல்லா அரசாங்கத்து ஆளுவ எல்லாம், கள்ளனுவ சொத்துதான். உள்ளவங்களுக்கு உடுக்கடிக்கிறதுக்குதான் அரசாங்கம், கட்சி, ஜாதி எல்லாம். இதுல முன்ன என்னா? பின்ன என்னா? நடுவ கரமுண்டாரு திண்ணையில சாஞ்சு குலுங்கி குலுங்கி அழுதுகிட்டு இருக்காரு.

திடீர்ன்னு எஞ்ச இருந்தோ பள்ளனுவ திடுதிடுன்னு ஓடியாரானுவ. பத்து பத்து பேரா ஓடியாரானுவ. "ஆண்டெ ஆண்டெ சின்ன ஆண்டெ கருப்பு கரமுண்டாரை கண்டுபிடிச்சிட்டோம். இந்த பாருங்க ஆண்டெ. எந்த பாவியேலோ என்ன செஞ்சுதுவோளோ? கண்றாவிய பாருங்க ஆண்டெ. நாசமத்து போவானுவ, என்னா பண்ணியிருக்கானுவ பாருங்க" தூக்கிக்கொண்டு வந்து பத்து பள்ளர்களும் கயிற்றுக் கட்டிலை மெல்ல கரமுண்டார் வூட்டு முற்றத்தில் இறக்கினார்கள். அவ்வளவுதான் வீடே அமளிபட்டது. வூட்டுக்கே உயிர் வந்து விட்டது போல் எல்லாரும் வெளியே ஓடி வந்து திண்ணையில் ஏறி எட்டிக்கொண்டு பார்த்தார்கள். உள்ளே இருந்து கதறிக் கொண்டு வயிற்றில் அடித்துக் கொண்டு பதறினாள் பார்வதி. நீண்ட அந்த கட்டிலில் உடம்பு முழுவதும் துண்டு துண்டாக நறுக்கப்பட்ட ராமுகரமுண்டாரின் அவயங்கள் கூறு கட்டியது போல் சதைத் துண்டங்கள் சிதைத்து தள்ளப்பட்டிருந்தன. கோரம், கோரம் குரூரம். யார் செய்தது? ஏன் செய்தார்கள்? சந்தேகம் யாருக்கும் தோன்றவில்லை. தலை வேறு, முண்டம் வேறு, கால் வேறு, கை வேறு . வேறு வேறு வேறு எத்தனை ஆத்திரம், எத்தனை வேகம், எத்தனை கோபம், எத்தனை பழி, எத்தனை பாவம், எத்தனை பகை, எத்தனை வஞ்சம்? ஒரு பள்ளப் பொண்ணையும் இஞ்சே காணோம். நான் இவரு பள்ளச்சின்னு சொல்லிகிட்டு இருந்த ஒரு பள்ளச்சிகூட காணோம். மூணு நாளைக்கு முன்னால இதே மாதிரி ஒரு பள்ளக்குட்டி ஒரு சின்ன பொண்ணே இதே மாதிரி கூறு போட்டு ஏன் செத்தான்னு தெரியாம அவுங்களுக்கே திருப்பி கொடுத்தப்ப இது ராமு கரமுண்டாருக்கே தோனியிருக்குமோ என்னவோ பார்வதி அண்ணி கதறல் தன்னந்தனியா கேட்குது. அதுக்குள்ற பொம்பளைங்களுக்குள்ள கசமுசான்னு பேச்சு கொஞ்சம் கொஞ் சமாய் பேச்சு பெரிசாகிகிட்டே போவுது. 'அப்படியா? அப்படியா இருக்குமா, நிஜமான்னு?' ஒரு ஒரு பொண்ணும் மூக்கு மேல விரல வெச்சு இன்னொருத்திகிட்ட குனிஞ்சு, "இப்படியாமில்ல. இருக்குங்குற நீயி?" என்று மாற்றி மாற்றி ஒருத்தரை ஒருத்தர் உசுப்பிகிட்டாங்க. யாருக்கும் நம்ப முடியலெ. நம்பாம இருக்க முடியவும் இல்லெ. வேற ஒண்ணும் இல்லெ, செத்து மல்லாந்து கெடக்குற கரமுண்டாருக்கு ராதை வயிற்றுல புள்ளெ உண்டாகி இருக்குதுன்ற விஷயம்தான் அது. அட கரமுண்டாரெ இதையும் விட்டு வெக்கலியா நீ? யாருக்கும் நெல கொள்ளல. வெளியே சொல்லாம இருந்தா தலை வெடிச்சிடும் போல் இருக்கு. சொல்லவும் புடிக்கலெ. கள்ளக்குடி பொண்டுவளுக்கு மூச்ச

முட்டுது. இந்த குடி வுழுதான்னு யோசிச்சுகிட்டு இருக்கும்போது, இந்த் காலத்துல ஒரு கள்ளக் கரு எந்திரிச்சுருச்சு பாத்தியான்னு எல்லா எல்லா செறுக்கியலும், ஒருத்திய ஒருத்தி கையைப் புடிச்சு நெருக்கிகிட்டு பேசிகிட்டு நின்னாலும், உள்ளறையில மயங்கி விழுந்த ராதெம்பா சந்தோஷத்துல நெஞ்சு ஓமட்டு வந்து கதறி அழ ஆரம்பித்தாள். அந்த சந்தோஷமான்னு அவளுக்கே தெரியலே. துக்கத்தெ யாருகிட்டேயும் சொல்லிக்க முடியலெ. இம்சையை அந்த எழுபது வயசுக்கிழவனோட தினமும் போட்டுப் பொறட்டி எடுத்த ஓமட்டலை எப்பவுமே மறக்க முடியலெ. பகல்லெ எத்தனை நல்ல மனுஷன்? ராத்திரியில எத்தனை குரூரமான வெறி கொண்ட மிருகம் என்று நினைத்துப் பார்த்த ராதையம்பாளுக்கு எல்லாம் இந்த ஒரு சந்தோஷத்துக்காகத்தான் என்று நினைவு வந்தபோது, அவளுக்கு சந்தோஷத்தில் சாகலாம் போல் இருந்தது. அப்படியே அவளை கட்டி தூக்கிக்கொள்வார் மகிழ்ச்சியும், முரட்டுத்தனமும், வெறியும் கொண்ட மனிதர். அப்படியே அவளை, அவள் நகர்ந்து வெளியே போய் கரமுண்டார் பிணத்தின் மேல் விழுந்து, "கரமுண்டார் வூட்ட முந்தி வாரிச கொண்டாந்து எம்மடியில போட்டீங்களே எஞ்ச பொய்ட்டீங்க?" என்று கதறி அழுதாள். விடிய ஆரம்பித்த போது சூரியனிலிருந்தும் ரத்தம் பரவி ஓடுவது போல் எங்கும் செம்மை கலந்து வடிந்த போது கரமுண்டார் வூட்டில் இருந்து, பேரக்குழந்தைகள் நெய் பந்தம் பிடிக்க, கூட்டமே இல்லாமல் பெண்கள் கூட்டம் வூட்டு வாசலில் நின்று கதறி அழ, கரமுண்டாரு வூட்டில் முதல் இரண்டு வாரிசுகளும் பெரும் பயணம் துவக்கினார்கள். வூடுகளில் இருந்து ஒன்றிரண்டு பேர் வந்ததோடு சரி, வேறு ஒரு மனிதர்களும் இல்லாமல் பள்ளக்குடி பள்ளர்கள் கொஞ்சம் பேரும், பறையர்களும் மட்டும் சடங்கு செய்ய, எங்கிருந்தும் வராத ஓலங்களுடனும், இரண்டு பாடைகள் கரமுண்டார் வூட்டை விட்டு சுடுகாட்டை நோக்கி நகர்ந்தன. நடை பாவாடை, விரிக்க ஆள் இல்லை. வழியெல்லாம் பூக் கொட்ட ஆள் இல்லை. பிணம் முன்னும் பின்னுமாய் அசைய ஆற்றோரமாகவே இரண்டு பிணங்களும் எடுத்துச் செல்லப்பட்டன. எங்கோ மேட்டுத் தெருவில் எரிந்து கொண்டே ஒரு தார் டின் வெடிக்கிற பேரோசை 'டொம்' என்று கேட்டது. மேலே போய் வானத்தில் அது வெடித்து சிதறும் ஒளிவெள்ளம் கடைசிப் பயணத்துக்கு பெரிய கரமுண்டாருக்கு விளக்கு போட்டது போல் இருந்தது. கீழே விழுந்து புரண்ட பெண்கள் கீழிருந்து மண்ணை எடுத்து தலையில் போட்டுக் கொண்டு, சுற்றி சுற்றி வந்து கும்பிட்டார்கள் மண்ணை சிலர் ஒரு துளி நெற்றியிலும்,

ஒரு துளி வாயிலும் போட்டுக் கொண்டார்கள். இன்னும் தெலகராஜு வரவில்லை என்பது எல்லாருக்கும் உறுத்தலாகவே இருந்தது. அஞ்சினி பள்ளக் குடியில் எழும்பிய நெருப்பு இன்னும் அடங்கவில்லை. கிராமம் கிராமமாக பகையாக ஜாதி நெருப்பாக படர்ந்து, பந்தலித்து அக்கினி மேடேறி, கொளுந்து விட்டுச் சுடர்ந்தது. அக்கினி கோளம் சுழன்ற போது, யார் பொசுங்கி எரிந்து போனார்கள்? யார் கருகி கட்டையானார்கள்? என்றெல்லாம் கணக்கு பார்க்க முடியவில்லை. போலீஸ்களும், வேன்களும் வந்து வந்து போனார்களே தவிர, உருப்படியாக யாரையும் பிடிக்க முடியவில்லை. ஏனென்றால் அவர்களுக்கே தெரியும். யார்? யார்? என்று புரியும். விசாரணை என்ற பெயரிலும், குற்றவாளிகள் என்ற பெயரிலும் அவர்கள் கைகளில் நிறைய, பேர்களை அந்தக் கிராமம் ஒப்படைத்தது. ஆண்களும், பெண்களுமாக நிறைய செத்தது போக, அரசு பொறுப்பில் நிறையப் பேர் குற்றவாளிகளாக தாங்களே வந்து சேர்ந்தார்கள். தாங்கள்தான் செய்ததாக ஒப்புக் கொண்டார்கள். எனவே போலீஸ் துறைக்கும் கட்சிக்காரர்களுக்கும், அரசியல்வாதிகளுக்கும் நிறையப் பேசுவதற்கு விஷயம் கிடைத்தது. இவை எல்லாம் ஏதும் புரியாமலேயே சுடுகாட்டில் நூற்றாண்டுகளாக இருந்த பகைக்கு, ராமு கரமுண்டாரும் சந்திரஹாச கரமுண்டாரும் அழகான பழியாக எரிந்து, காற்றோடு காற்றாய் கலந்து கொண்டிருந்தார்கள் என்றாலும் காத்தாயம்பாளைத் தேடிக் கொண்டு இன்னும் விடியாத இந்தப் புலர் காலையில் நாணற்காட்டில் யாரையோ தேடிக்கொண்டு அலைந்து கொண்டிருந்த, தன்னந்தனியே பழி தீர்க்க திரிந்து கொண்டிருக்கும் தெலகராஜுவை அவர்களுக்குத் தெரியுமா? அவர்கள் எரிந்து கொண்டிருந்தார்கள்.

# கரமுண்டார் வூடு - 10

அண்டாரங்காடு. நெருக்கமான மரங்கள், ஆள் நுழைய முடியாத இருட்டு. வெற்றிலைக் கொடிகளும், குண்டு மணிக் கொடிகளும், படர்ந்து பிரம்பு சடைத்து வளர்ந்து பாம்புகளாய் முறுக்கிக் கொண்டு கிடக்கும் சதுப்பு நிலங்களும், நீண்ட மூங்கில் மரங்கள் காடுகளாய் வளர்ந்து பின்னிக் கிடக்கும் பாறை மரங்களும், பூ மரங்களும், வளர்ந்த இத்தி புதர்களும், சப்பாத்திகள்ளி குத்துச் செடிகளுமாய் நெடுக வளர்ந்து ஊரின் வேண்டாத பகுதியாய் நீண்டு கிடந்தது. இந்த பகுதியில்தான் மனிதர்கள் அண்டுவதில்லை. இதிகாச காலத்தில் வரும் கானகமல்ல என்றாலும் மனிதர்கள் அண்டாத இருட்டு புதர். ஏனோ இப்படி அண்டாத காடானதால்தான் அண்டாரங்காடாகியது. காட்டுக்குள்ளே பல பகுதிகள் மேட்டு நிலமாகி, சில பகுதிகள் சதுப்பு நிலமாகி பள்ளமாகியும் போயிருந்தது. அங்கே ஒரு மூங்கில் கொத்துகுள்ளே ஆயிரம் மூங்கில்கள் நாலாபுறமும் வளைந்து, தன்னிஷ்டம்போல் வளைந்து பிரிந்து போன இடத்தில், அறுபதடி உயரத்தில் விரிந்துபோன ஒரு மூங்கில் கொத்து இருட்டில் இரண்டு உருவங்கள் தென்படுகின்றன. நான்கு புறமும் மூங்கில்கள் பிரிந்து நெறுங்கி உயர்ந்ததால், நடுவில் ஏற்பட்ட இடைவெளி, நாலுபுறமும் சுவர் வைத்தது போல், நடுவில் ஒரு குகை போல் அமைந்திருந்த அந்த மேடையில் காத்தாயம்பாளும், அவளருகே கலியனும் அமர்ந்திருந்தார்கள். இரண்டு நாளாய் அவர்களைத்

தேடி இந்த அண்டாரங்காட்டுக்குள்ளும் வேல் கம்புகள் குறுக்கும் நெடுக்குமாய் பாய்ந்து கொண்டுதான் இருந்தன. எங்கும் கொண்டிருந்த வெறுப்பும் கோபமும், அவளுக்கு இல்லாமலேயே ஆகிப்போய்விட்டன. கலியனுடன் இப்படி ஓடி வந்து சீரழிவோம் என்று அவள், எண்ணியவளே அல்ல. தன்னை வேறொருவன் தொட்டால் எரிந்து, அந்த நெருப்பிலேயே எரிந்து சுடர்ந்து போக வேண்டும் என்று எண்ணியவள்தான் காத்தாயம்பாள். கலியன் அவளை வேறு ஒரு பெண்ணாய் மாற்றியிருந்தான். இரவு இவன் அவளை இந்த காட்டுக்குள்கொண்டு போன போது அவள் நினைவிழந்திருந்தாள். அவன் இடம்தேடி ஒளிந்து கொள்ள பறந்தபோது பின்னே பள்ளர்கள் எரியும் பந்தங்களுடன் துரத்தி வந்து வழி காட்டினார்கள். வெளிச்சம் பின்னே துரத்தி வர வர ஓடுவதற்கும் ஒளிவதற்கும் அண்டாரங்காடு வசதியாக இருந்தது. சதுப்பு நிலங்களில் முழங்கால் அளவு சேற்றில் அவளைத் தூக்கிக் கொண்டு ஓடுவது மிகச் சிரமமாக இருந்தது. அதற்காக பக்கத்தில் இருந்த மூங்கில் கொத்து ஒன்றைத் தாண்டும் போது, இந்த மரப் பொந்து இருந்தது தெரிய வந்தது. அதற்குள் புகுந்து கொள்வதும் சுலபமாகியது. அன்னியன் ஒருவனின் துணை, முதல் முறையாக நிஜமாகியபோது, காத்தாயம்பாள் செத்தாள். அந்த ஆழ்ந்த இருளில், இந்த மூங்கில் கொத்துக்குள்ளே காத்தாயம்பாளாக பதினைந்து ஆண்டுகளாக கொலுவேறி இருந்த தெய்வம் மனுஷியானது. கலியனுக்கு ஆத்திரம். பதின்மூன்று வயதுகூட நிரம்பாத அந்த மாரிப் பொண்ணை அறுபது வயதை நெறுங்கும் கருப்பு கரமுண்டார் ஈவு இரக்கமின்றி, அவரது கொட்டடி பள்ளத்தில் கொண்டு போய், கதற கதற கற்பழித்து பிணமாக்கி தூர எறிந்து விட்டுப்போன மிருகத்தனத்தை வேறு எப்படித்தான் அவர்களுக்குப் புரிய வைக்க? இதோ காத்தாயம்பா. நூறு வருடமாய் ஆயிரம் வருடமாய், அவளை நாங்கள் பூஜை செய்வது யாருக்குத் தெரியும்? ஆனால் இப்பொழுது பூஜை விக்கிரகங்கள் உலேகங்களுக்காக கொள்ளையடிக்கப்படுகின்றன. இந்த ஜாதி நாய்களுக்கும் தெரிய வேண்டும். இதற்கும் ஒரு முடிவு வேண்டும். இவளும் பள்ளச்சியாகி வயலில் நிற்க வேண்டும். அப்பொழுது நான் இருக்க மாட்டேன். இருக்க வேண்டிய அவசியம் இல்லை. இரண்டு முறை காத்தாயம்பா அவனிடமிருந்து தப்பியோட பார்த்தாள். அவனை வெறுப்புடன் காறித் துப்பினாள். ஆனால் வெகுநேரம் அது நடக்கவில்லை. ஆற்றில் இருந்தோ, மடுவிலோ மலை உச்சியில் இருந்தோ, சாகவேண்டும். அழிந்து இல்லாமல் ஆக வேண்டும். இவன் கையில் இருந்து சின்னா பின்னமாகி

எல்லாராலும் ஒதுக்கப்பட்டு வாழ முடியாது. சாகவேண்டும். இவன் நம்மை கொன்று விடுவான் என்று எண்ணிக் கொண்டாள், காத்தாயம்பா. ஆனால் அவன்விடவில்லை. முதன் முறையாக ஓர் ஆணின் ஆக்கிரமிப்பில் காத்தாயம்பா அலறினாள். அண்டாரங்காட்டின் அமானுஷ்ய வெளியில் மூங்கில் பொந்தில் கலியன் என்கிற ஆண் அவளை பலவந்தமாய் புரிய வைத்து, கதற வைத்தான். தப்பி ஓடவும் துரத்திப் பிடித்து இழுத்து வந்து மடக்கிப் போடுவதுமாய், ஆணும் பெண்ணுமாய் அவர்கள் மூச்சு வாங்க ஓடினார்கள். ஓட ஓடத் துரத்தி பிடித்து இழுத்து வந்து அவன், அவளை கொஞ்சம் கொஞ்சமாய் புரட்டிப் போட்டான். காத்தாயம்பா அவனை வெறுத்தாள். நெஞ்செல்லாம் வெறுப்பு. மாறிமாறி அவனை உதறிக் கதறியும் கலியன் காத்தாயம்பாளை மூர்ச்சையடையும்படியாக, மறுபடி மறுபடியுமாய் பலவந்தமாய் அவள் அந்தரங்கத்தை உடைத்தான். விடிகிற நேரம் விழிப்பு வந்தபோது அவள் நெஞ்சின் ஓலத்துக்கு யார் பதில் சொல்ல முடியும்? காத்தாயம்பா இப்போது காத்தாயம்பாளே அல்ல. மதி மயங்கிப் போயிருந்தாள். உடம்பின் ரகசியம் புரிந்து ஜாதியின் சாவு புரிந்து விட்டது அவளுக்கு. நீண்ட நேரம் அழுது தீர்த்தபோதும் அவனை விட்டு எங்கும் போக முடியவில்லை அவளால், சாகவும் ப்ரியமில்லை. கலியனின் மாசுமருவற்ற உடம்பின் வலிவான சுகம், கசங்கிக் கசங்கி, அவனோடு கலந்து போன தன்னை மறக்கடித்த, தன் ஜாதியைச் சாகடித்த, நூறு நூறு வருஷமாய் உடம்புக்குள் பரவிக்கிடந்த ஜாதி கொழுப்பைக் கரைத்த அந்த சுக மயக்கத்தை, ஏன் மறுக்க வேண்டும்? இல்லை பொய்யாக எழுந்து ஓடியிருக்கலாமே, உதறி எறிந்து மிதித்துத் தள்ளிவிட்டுப் போயிருக்கலாமே? அட சின்ன ஜாதி பயலே. என்று ஒரு தடவை கூப்பிட்டிருந்தால்கூட விட்டுவிட்டு அவனே ஓடியிருப்பானே. காத்தாயம்பா மனதுக்குள் தீ புகுந்து விட்டது உடம்பிலும் பரவி, கனல் பரப்பும் கசங்கல் நேர்ந்து கலந்து விட்டது. இனி என்ன செய்வாள் பேதை? இந்திரன் புகுந்ததே போல் புகுந்து விட்டானே கலியன்? அனல் வெள்ளம் மனசையும் மனசுக்கு அப்பாலிருந்த அத்தனை மாசுகளையும் எரித்துக் கடத்தி விட்டதே. என்ன செய்வாள்? ப்ரச்னைகளை வைத்துக் கொண்டு கணக்குப் பார்த்துக் கொண்டிருந்த எத்தனை கால அபத்தம், அவளுக்கே இப்போதுதான் புரிந்தது கரமுண்டார் வூடு அவளுக்கு. உள்ளேயிருந்து தூரப்போய் விழ விழ அவளை அகண்டு பரவிக்கொண்டான் கலியன் என்கிற சாதாரண மனுஷன். விடிந்த போது அவள் கைகளையும் கால்களையும் கட்டிப்போட்ட

போது, காத்தாயம்பா சிரித்த போது அவன் பயந்தான். வெறி கொண்டவன் போல், "எங்க மாரிப்பொண்ணே இப்படித் தான்டி ஒங்க கரமுண்டார் பயலுவ கெடுத்துக் குட்டிச் செவுராக்குனானுவ. இப்ப புரியிதா? இப்ப தெரியிதா?" என்று காத்தாயம்பாளே மறுபடியும் பொந்துக்குள் தள்ளி முரட்டுத் தனமாக அவள் பவழம் போன்ற மார்புகளைப் பிடித்துக் கசக்கி கீழே தள்ளி, பேச்சற்ற முரட்டு மயக்கத்தில் வலிக்க வலிக்க காத்தாயம்பாவை கலியன் உருட்டி எடுத்தபோது வீரியம் மிக்க அந்த கள்ளக்குடிப் பெண் அவன் வீரியத்தை ஒரு நிஜமான வீரப்பொண்ணுக்கே உரித்தான தைரியமான சுகத்துடன், அவனை உள்ளடக்கி வாங்கிக் கொண்டபோது, கலியன் சுகத்தின் உச்சியில் அவளை கொண்டுபோய் சிறகடித்துச் சேர்ந்தான். இம்முறை அவனை அவளே கட்டியணைத்துக் கொண்டு கொஞ்சி மயங்கிப்போனாள். இத்தனை புதிய ஒருத்தி இவளென்று புரியாத அவனுக்கு மிச்சம் வைக்காமல் வாரி வாரி ஊட்டினாள். அவளை கற்பழிப்பதாய் ஏமாந்து போய் கலியன் கொஞ்சம் கொஞ்சமாய் அவள் காலடியில் விழுந்து போனான். அத்தனை தூய்மையும் பரிசுத்தமுமாய் அவனுக்கானாள் காத்தாயம்பா. இவளை ஜாதிக்குள் வைத்துப் பூக்க வைத்து, காயவிட்டு, சிதைத்துக் கொண்டிருந்தவர்களுக்கு இனி இவளைத் தர முடியாது என்று தனக்குள்ளே இற்றுப் போய் கரைந்தான் கலியன் என்கிற சாதாரண மனிதன்.

"காத்தாயி. என்னெ மன்னிச்சுடு. நாஞ் செஞ்சதெல்லாம் தப்பும்மாடீ. ஒன்னை கொண்டுபோயி வெச்சுட்றேன் தாயி. என்ன மன்னிச்சேன்னு சொல்லிடு."

"அது முடியது மாமா" பளிச்சென்று பொரிந்தாள் காத்தாயம்பாள்.

"மாமா வா?"

"அஞ்ச இருந்தவன்ல்லாம் மாமாவாவ முடியுமாங்க? என்னெச் செறை எடுத்துகிட்டு வந்தவருதான் எனக்கு மாமன், புருஷன் எல்லாம். நீங்கதான் அது."

"வாண்டாம்மா. திலும்பி கொண்டு போயி ஆர கண்ணும் படுமுந்தி வெச்சிடுறேன். நாஞ் செஞ்ச தப்பெல்லாம் மன்னிச்சுடு. நானு எஞ்சனா ஓடிப் போயிடுறேன்"

"சரி வாங்க. நானும் நீங்க எஞ்சப் போறிங்களோ அஞ்ச ஓடியாறேன்." திகைத்து நின்றான் கலியன். என்ன பெண்

இவ. சிறை எடுத்தவன்தான் புருஷன் என்கிறாளோ. நேற்று கூப்பிட்டிருந்தால் வந்திருப்பாளா இப்படி?

"சரி நேத்து ஒன்னக் கூப்டுருந்தா வந்திருப்பியா இப்டி?"

"அதுக்கென்ன? வந்திருப்பேன்னுதான் வெச்சிக்குங்களேன்."

"ஓம் மாமன் பயல் தெலகராஜு வந்து கூப்புட்ருந்தா அவனோட போய்ருப்பியா? மாட்டியா?"

"போயிருப்பேந்தான்."

"அது மாதிரி இப்பமும் வந்து கூப்புட்டா பொய்டு. நான் ஒன்னெ அப்படியே உட்டுட்டு ஓடியே போய்டுவேன். நீ வூட்டுக்குப்போயி ஒங்க ஜாதி ஜனத்தோடப் போயி சேந்துரு. அதாம்மா ஒனக்கு நல்லது."

"முடியாது. இனிமே எவன் வந்து கூப்புட்டாலும் போவ நானு தேவுடியா இல்லெ. நீங்க போற எடத்துக்குத்தான் ஒங்க பின்னால வருவேன். அது எஞ்சன்னாலும் சரி, வருவேன் ஆனா இனிமே கள்ளக்குடிக்கிப் போவமாட்டேன்."

"நாந்தான் தப்பு பண்ணீட்டேன்டி. என்னெ மன்னிச்சுடு. உட்ரு. ஒன்னோட வாழ்க்கையையே நாசம் பண்ணீட்டேன்டி. பாவி. என்னெ நம்பாதே. ஒன்னெ கெடுக்கணும்ன்னா தூக்கிட்டு வந்தேன்? ஒரு வெறியில ஜாதித் திமிர்ல ஒன்னெ கெடுத்தேன்டீ. என்னெ வுட்டுடு ஓடிப்போயித் தப்பிச்சுக்கோ."

"மாட்டேங்கிறன்ல்ல மாமா? நேத்து சொல்லியிருந்தா நம்பிக்கூட இருக்க மாட்டேன். இப்ப எனக்கு நீங்க போதும். இனிமே நானு கள்ளக்குடி பொண்ணு காத்தாயம்பா இல்லெ. இனிமே அஞ்ச போவ கீவ முடியாது. நீங்களும் போவ முடியாது தெரியும்."

"எஞ்சியுமே போவ முடியாதுடி. வெட்டி ஆத்துல மெதக்க வுட்டுடுவானுவ."

"உடட்டும். அப்படியாவது ஒங்களோட மெதந்து போறேன்"

பேச்சில்லாது மௌனம் சூழ்ந்து மூடிக்கிச்சு. அப்படியே உக்காந்திருந்தான் கலியன். அவளை அந்தக் காலை நேரத்து வெளிச்சத்தில் அப்போதுதான் பார்த்தான். அவனை அப்போதுதான் பார்த்தாள் காத்தாயம்பாளும். ஆயிரம் வருஷம் ஆனது போலிருந்தது அவளுக்கு மூங்கில் நடுவில் இயற்கையின் மடியில் யாரும் காணாத காட்டில்...

கலியனுக்குப் அவளைப் புரிந்து கொண்ட பின், பேச முடியவில்லை. இனி என்ன செய்வது? திகிலும் பயமும் உறுத்த இடைவெளி விடாத மூங்கில் நெருக்கத்தில் அமைந்த அந்த இருட்டுப் பகலிலும் லேசான மங்கல் இருட்டாகவே இருந்தது. காத்தாயம்பா அவனை நெருங்கி வந்து உட்கார்ந்து கொண்டாள். இத்தனைக்கு இழைந்தும் தழைந்தும் போவாளா?

"ஏன்டி நீ கள்ளச்சிதான? இப்படியா நீ தாழ்ந்து போவே."

"நான் எவளானா என்ன? இனிமே நான் கள்ளச்சியில்லெ பள்ளச்சிதான். போதும்ல்ல?"

"ஊரையே கொளுத்தப் போறானுவ. பத்திகிட்டு எரியப்போவுது. நீயி எஞ்சப் போப்போறே?"

"ஏம் மாமா நீங்க பயப்படுறிங்க. நீங்க பாட்டுக்கு பாஞ்சு போய்கிட்டேயிருங்க. நானும் ஒங்க பின்னாடி வந்துகிட்டேயிருப்பேன்ல்ல? என்ன காப்பாத்த நீங்க நின்னு திரும்பி ஒரு அடி நிக்க வாண்டாம். போய்கிட்டே இருங்க, ஒங்க பின்னாலதான் நானு வருவேன்."

"என்னையும் புடிச்சு வெட்டி எரிச்சுடுவானுவ. நீயி எரிய வாண்டாம். ஓடிப்போய்டு. இப்பேயே ஓடிப்போய்டு"

"மாட்டேன். ஒங்களை எரிக்கும் போது என்னையும் சேத்து எரிக்கட்டும். ஒங்களப் போல என்னையும் வெட்டட்டும். நானும் ஒங்களோட சாவேன்."

"இப்படித்தான் பேசுனா உமாமஹேஸ்வரியும் கொண்டு போய்ட்டானுவளே. ஏங்கூட ஓடணும்ன்னு ஒனக்கு என்னா தலை விதிங்கிறேன்? காத்தாயம்பா வாண்டாம்மா. தெலகராஜ" பைத்தியமா இருட்டுல ஒனக்காவ சுத்திகிட்டுத்தான் திரியிறான். ஏமாத்தாதே. ஏமாந்து பொய்டாத என்னெ நம்பி."

"அப்ப என்னெ இப்டி நட்டாத்துல உட்டுட்டு ஓடப்போறிங்களா?"

"ஆமா. நீ நாசமாகக் கூடாது. பொய்டு. ஓடிப்போயி கள்ளக் குடிவளோட சேந்துடு."

"அப்ப நீங்க?"

"நானு. நானு இப்டி எஞ்சியாவுது... ஓடி..."

"மாமாவ. பள்ளியூடத்துலருந்தே ஒங்கள எனக்குத் தெரியும். நீங்க தொண்ணாந்துகிட்டு எனக்காவ ஏங்கிட்டு திரிஞ்சதும்

தெரியும். என்னமோ வாண்டாம் வாண்டாம்ன்னு பொலம்புறிங்க. பொட்ட செறுக்கி நானே ஓடியாரேங்கிறேன்ல்ல. இனிமே என்ன? பள்ளனாவுது கள்ளனாவுது. சாவணும்ன்னா சொல்லுங்க தோ... ஆத்து மடுகாத்துகிட்டு இருக்கு வாங்க சேந்தே சாவோம்... ல்லெ. சேந்தே நீஞ்சி அக்கரைக்கிப் போவம். எனக்கு அஞ்சினிக்கு

அந்தாண்டெ எதுவும் தெரியாது. எஞ்சியும் போனதில்ல யாரையும் தெரியாது. ஆனா நீங்க எஞ்ச போனாலும் அஞ்ச என்னால வர முடியும், அவ்வளவுதான்." அப்படியே வாரி அவளை அள்ளிக்கொண்டு மூங்கில்களுக்கிடையில் உட்புகுந்து கொண்டான். ஆவி சேர காத்தாயம்பாளும் கலியனைக் கட்டிக்கொண்டாள். உடம்பின் ரகஸ்யங்கள் புரியாத இளமையின் ஆழம், கலியனை திக்குமுக்காட வைத்தது. எந்த ஆணும் தொடாத செப்பு முலைகள் – பாலில் முழுகி எடுத்ததுபோன்ற காத்தாயம்பா தோள்கள் – கனவு போல சரியும் சின்ன சின்ன இடுப்பு வளைவுகள் – பருத்தி துடைகளின் வலிமை எல்லாமே அவன் மேல் கிடந்த அந்தப் போதில் அவனைக் கவிந்து கொண்டது. கருங்கற் சிலையைத் தழுவிக்கொண்ட பாலாடை போல் அந்த மூங்கில் வளைந்த இருட்டறையில் காத்தாயம்பாளின் மாசு மறுவற்ற பெண்மை கலியனை ஆட்கொண்டு அழித்து உருத்தெரியாமல் அவளுடன் இணைத்துக் கொண்டது.

மூங்கில்களின் உரசல் கிறல் கிறல் என்று பாடின குழல்கள் சப்தித்தன. இது தனியுலகம். அண்டாரங்காட்டுக்குள் இன்னும் சிறுத்து, அவர்களுக்கேயான தனிப் பிறையாக குறுகிவிட்டது. குகைக்குள்ளே ரெண்டு உயிர்...

"மாமாவ்."

"ம்?"

"என்ன மாடா நீங்க?"

"இப்படித்தான் கட்டிக்கிறதும் வுட்டுறதுமாக்கும்? என்ன அப்படியே கட்டிகிங்க மாமா? இப்படி உட்டுட்டா... செத்துடுவா காத்து. இறுக்கிக் கட்டிக்குங்க மாமாவ்." அள்ளி வாரிக் கொண்டான். தங்க குடங்கள் வெயில் வெளிச்சம் மூங்கில்களுக்கிடையில் பாய்ந்து முயங்கிக் கிடந்த கலியன் இடையிலும் காத்தாயம்பா இடையிலும் வந்து புகுந்தது. கருங்கற் சிலை வெள்ளைப் பாலாவியை உருவ முழுப்பாலில் விழுந்தது. நாலு புறமும் சிதறச் சிதற உட்புகுந்து சிலையின் கருமை காத்தாயின் வெண்மைக்குள் மறைந்து, புகுந்து போயிற்று. தண்ணீரை வாரி

இறைத்து, மூங்கில் நிழல்களில் வெயிலோடு விளையாடும் ஆற்றில் நீண்ட நேரம் காத்தாயி விளையாடிக் குளிப்பது, பொன் மீன் ஒன்று தண்ணீருக்குள் மேலும் தண்ணீருக்குக் கீழுமாய மாறிமாறி வளைந்து வளைந்து முழுகி, துள்ளி விளையாடுவது போல் இருந்தது கலியனுக்கு. மூங்கிற் புதர்கள் ஆற்றுக்குள் இருந்து கிளம்பி வானளாவ எழும்பி மீண்டும் தண்ணீருக்குள்ளே நனைந்து ஆற்றின் வேகத்தோடு முன்னும் பின்னுமாய் அசைந்து கொண்டிருந்தது. மனிதர்கள் யாரும் இந்த பகுதிக்கு வருவதில்லை. எவ்வளவு தண்ணீர் வந்தாலும், இந்த கரையில் மூங்கிற் புதர்கள் அணைத்துக் காக்கும். மீன் பிடிக்கிறவர்கள்கூட இங்கே வலை போட முடியாது. தண்ணீருக்குள் மூங்கில் மரங்கள் நீண்டு எழும்புவதால் பாக்க மனோகரமயமாய் இருக்கும். ஆனால் ஆபத்தான இடம். ஆற்றில் தவறி விழுந்து விட்டால் பிணங்கள் சிக்குவது இங்குதான். கலியன் பல பிணங்களை பலருக்காகவும் இங்கு நீந்தி வந்து இழுத்து கரை சேர்த்திருக்கிறான். அபாயமான மடுவும், சுழலும், வீச்சுமாய் தண்ணீர் அஞ்சினில தண்ணீர் கரை கடக்கிற இடம் இதுதான். இங்குதான் மங்களப்பாயீ என்கிற மங்களம் தன்னைப்போல் வாலிப பருவத்தில் மானங்காக்க மடுவில் குதித்து தன்னுயிரைத் தானே எடுத்துக் கொண்டாள் அல்லவா, காத்தாயம்பாளுக்கு 'திகீர்' என்றது வெள்ளைக்காரன் பார்த்தான்கிறதுக்காகவே, படம் புடிச்சாங்கிறதக்காகவே இதே மடுவல குதிச்சு செத்து காட்டுனாளே அவளோட பரம்பரை? தானே தான் வந்த பரம்பரையும்? ஒரு பள்ளப் பயனோட ஓடியாந்துட்டு தானும் மங்களமும் ஒண்ணா? இஞ்சருந்து மூங்கிகாட்டு கரையோரமா நாலஞ்சு மயில் தூரம் நடந்தா மங்களத்த போட்டோ எடுத்தானே வெள்ளக்காரன் அவனோட ஆப்சர்வேரி கட்டடம் போயி சேந்துட்டா... மங்களம் மாதிரியே அங்க இருந்து அப்படியே ஓடிடலாம். குறுக்குல நீஞ்சினா ரெண்டு மயில்தான் கொள்ளிடம்... அதுலயும் நீஞ்சினா முக்கால் மணி நேரத்துல திருச்சி ரோட்டுல ஏறிடலாம் அப்புறம்...

"என்னடீ தண்ணியையே முழுச்சு பாத்துகிட்டு இருக்க? உனக்கு பசிக்கலியா? அது என்ன கெலக்கால பாத்தியா, ஒரே பொகையா எழும்புது. ஊரெ கொளுத்தி இருப்பானுவ. படை படையா பொகை குப்பய கொளுத்தி வுட்ட மாதிரி குபுகுபுன்னு ஊரு பக்கம் பூரா சுருண்டு எழும்புது பாத்தியா?" என்றான் கலியன்.

நெஞ்சு வேக கலகல வென்று சிரித்தாள் காத்தாயம்பா. "என்னான்னு தெரியலியா நீங்க என்ன இழுத்துகிட்டு ஓடியாந்து

மூணு நாளாச்சு. ராத்திரியில நாம ரெண்டு பேரும் மூங்கி காட்டுக்குள்ள பதுங்கியும் ராத்திரி எல்லாம் அண்டாரங்காடு பூரா ஆளுவ சுளுந்து கொளுத்திகிட்டு தேடுதுவ. யாரு கையில அம்புட்டாலும் அஞ்சயே வெட்டி பொழி போட்டுடுவானுவ மாமா. இந்த மூணு நாளும் எத்தினி சந்தோஷமா இருக்கேன் தெரியுமா? என்னோட ஆம்பளை நீங்க. இந்த ஒலகத்துல இனிமே எவனும் எம்மனசுல இல்லெ. பெத்ததுல இருந்து என்னெ கேணிப்பட்டறை பந்தயத்துக்கு வளர்க்கிற குதிரை மாதிரி ஊட்டி, வளர்ந்து கள்ளச்சி கள்ளச்சின்னு சொல்லி, இவன் ஒனக்குத்தான்னு சொல்லி கடைசியா என் கொலையருத்தானுவ. இந்த பாருங்க எதிர்கரை பொண வாசல் எரியுது. அந்த பக்கம் பாருங்க. ஆயுகுடி பள்ளனுவ கவரமேட்டுக்கு மேற்கால பள்ளக்குடிய கொளுத்தி வுட்டுருக்கானுவ. மணல் மேட்டுக்கு மேல பொக பூதம் பூதமா கூத்தாடுது பாருங்க. இந்த பக்கம் கீழ குடி பக்கம் பாருங்க ஆத்துக்கு கெழக்க ஆனதாண்டபுரம் வெல்லோனம் பக்கம் பாருங்க குமிஞ்ச தீ பத்திகிட்டு எரியிறது, ஆத்து தண்ணியிலேயே பத்திகிட்டு எரியிராப்புல ஆறே செவந்து தெரியுது. எல்லாம் யாருக்காக இந்த பொட்ட செறுக்கி காத்தாயிக்காவதானே? காத்தாயி செத்து போய்டான்னு பொணம் கெடைக்கிற வரைக்கும் உடமாட்டமானுவ. கரமுண்டார் வூடு துண்டு துண்டா பேந்து ஆத்து கட்டுல குமிஞ்சு இருக்கும். ஆதிரியாரு வூடு, வன்னியர் வூடு, மழவராயர் வூடு எல்லாம் காத்தாயம்பா கதை சிரிப்பா சிரிச்சு சில பேனு குத்தியிருக்கும். இஞ்ச என்னடான்னா... ராத்திரி பகல் தெரியாம மூங்கில் குத்துக்குள்ள ஓங்களோட சேந்துகிச்சு தாம்பாளம் கொட்டிகிட்டு இருக்கேன்னு நானு...

நடுவ கரமுண்டாரு வேலு கம்ப எடுத்துகிட்டு நூறு நூத்தம்பது பள்ளனுவளோட விடிய காலம்பற அஞ்சுமண இருட்டுலகூட அண்டாரங்காட்ட கலக்கிகிட்டு இருந்தப்ப, மூங்கில் குத்துக்குள்ள ஓங்கள எம்மடியில போட்டு யாரு காத்தாயம்பாதானா? கரமுண்டாத்திதானா? தெரியலையே மாமா? தெரியலையே. ஓடியாங்க என்ன கட்டி பிடிச்சுக்குங்க. எனக்கு கொல வெறி வருது. இந்த மூங்கி சிவலயே குத்திகிட்டு சாவணும் போல இருக்கு. இந்த மூங்கி புதருலயே பொணமா சிக்கிகிட்டு மெதக்கணும் போல இருக்கு. ஓங்களோட ரெண்டு இல்லாம, ராத்திரி எல்லாம் ஓங்களோட ஒண்ணா கெடந்தேனே, பயமா இருக்கே. ஓங்களக் குத்தி கொல்லணும்ன்னு வெறி வருதே. ஓடியாங்க மாமா. யாருக்கும் இந்த ஒலகத்துல யாரு கண்ணுலயும் படாம எஞ்சியோ ஒரு மூலையில கள்ளச்சியா இல்லாம, கரமுண்டாத்தியா இல்லாம

வெறும் பொம்பளையா ஒங்களோட மட்டும் வாழணும். என்ன தூக்கிங்க. இறுக்க கட்டிக்குங்க. என்ன இந்த தண்ணியில தனியா உடாதீங்க. இல்லன்னா இந்த தண்ணீலயே முக்கி என்ன கொன்னுடுங்க... இல்லென்னா என்னால சாகவும் முடியல... பாவி என்ன கட்டிக்க ஓடியா. இல்லென்னா கழுத்த நெரிச்சு தண்ணியில முக்கவா..."

கழுத்தளவு தண்ணீரில் அவளையே பார்த்துக் கொண்டு நின்ற கலியனுக்கு அவள் விடைசொல்லிவிட்டாள் என்று தோன்றியது. அங்கிருந்தே பாய்ந்து தண்ணீர் அலைகள் நாற்புறமும் சிதறித் தெளிக்க எழும்பி, தண்ணீரிலேயே அவளைத் தழுவிக் கொண்டு நீந்தலானான் அவர்கள் இருவருமாய் ஆற்றில் வேகமாக நீந்தினார்கள். கொஞ்சம் நேரம் ஆனதும் ஆற்று கரையோரமாக 'திபு திபு' என்று பள்ளர்கள். கூட்டம் ஏறி நின்று இவர்கள் நீந்தும் பாதையை பார்த்தபடி இருபுறமுமாய் 'ஏய் கேய் கேய்' என்று கத்தியபடி ஓடி வந்து கொண்டிருந்தார்கள். கரை நெடுகிலும் ஆட்கள் தெரிய தெரிய இருவரும் வேகமாக நீந்தினார்கள். 'ஹோ' வென்ற வெள்ளம் அலை வீசி அவர்கள் அடித்துக் கொண்டு பாய்ந்து, மூணு மைல் குறுக்களவு உள்ள கொல்லிடத்தில் காவிரி பாய்ந்த போது, காத்தாயி தன் கரங்களால் நீந்துவதை நிறுத்திவிட்டு முழுவதுமாய் அவனைப் படர்ந்து அவன் கழுத்தைத் தன் இரு புஜங்களும் நெறுங்கும் படியாக இணைத்துக் கொண்டாள். அவன் கால்களைத் தன் கால்களால் பின்னி அவன் பாதங்களில் தன் கால்களால் உதைந்து பின்னிக் கொண்டாள். இப்போது அவன் சுத்தமாகவே நீந்தவில்லை. கலியனால் நீந்த முடியவில்லை. ஆற்றின் வேகம் மின்சாரம் பாய்ந்தது போல் அவர்களை மேலோட்டத்திலேயே தள்ளிச் சென்றது. நீந்த வேண்டிய அவசியம் இருவருக்கும் இல்லாமல் நீரின் ஓட்டம் அவர்களை சுழற்றிச் சென்றது. நடு ஆறு தாண்டும்போது அலை ஒன்று மேலே தள்ளியது அவ்வளவுதான். காத்தாயி இப்பொழுது அவனை மின்னல் போல் இறுகக் கட்டிக் கொண்டாள். அவளது முழு கூந்தலும் அவன் கழுத்தைச் சுற்றி படர்ந்திருந்தது. நீரின் ஓட்டம் மேலோட்டத்தை மிஞ்சும் அடியோட்டம். கலியனுக்கு சரியாக இனம் காண முடியாது கொள்ளிடத்தில். அவர்கள் போகும் போதே இருபுறமும் இருந்து வரும் நீரால், நீர் யானை ஒன்று ஆற்றில் தண்ணீருக்குள் இருந்து வாய் பிளந்து மூடுவது போல், ஒவ்வொரு சுழலும் அவர்கள் இருவரையம் சுழன்று வந்து அணுகும் போதும் காத்தாயி கத்துவாள். "மாமா நீஞ்சாதீங்க.

நீங்சாதீங்க மாமா. உள்ள பொய்ட்டு மேல வந்துடலாம்" அவ்வளவுதான் பேரலை ஒன்று இரண்டு பேரையும் தலை கீழாக சுழற்றி கீழிறங்கும். 'சளப்' என்று உள்ளே போவார்கள். தண்ணீரின் அடியோட்டம் முன்னையும்விட வேகமாய் சுழற்றியபடியே கீழிறங்கும் கலியனுக்கு ஆச்சரியமாய் இருக்கும். சாவு தலைமேல் காத்து சுழன்று கொண்டிருக்கும் போதும் இவள் கைகளுக்கு எத்தனை வீரியம்? ரப்பர் துண்டு போல் சூழலின் இழுப்புக்கும் தலைமேல் அமுக்கும் பாராங்கல்லாய் கீழ் இறங்கும் அடியோட்டத்துக்கும் மணலில் கால் புதைந்துமேல் எழும்பம் அற்புதத்துக்கும் ஒரே நேரத்தில் பதில் சொல்லும் இந்த பெண்ணின் உயிரின் தைரியத்துக்கும் எல்லையே இல்லை என்று கலியனின் நெஞ்சம் விம்மும். எப்பேர்பட்ட தைரியசாலிக்கும் ஒரு நிமிஷத்தில் பயம் தந்து விடும். காவிரியின் அடியோட்ட சுழல்களுக்கு ஈடு கொடுத்து மேலே வரும் போது, அனேகமாக அரைவாளி தண்ணீர் குடித்திருப்பார்கள். யாராய் இருந்தாலும் கையை விட்டு, அவனை விட்டு ஒரு கணம் பிரிந்து, மேற்பரப்பிற்கு வந்து நீந்தும் அவளை வியப்புடன் பார்த்தபடி கைலாகு கொடுக்க, மீண்டும் நெறுங்கும் கலியனைப் பார்த்து, "மாமா அதோ இன்னொன்னு குழி கிணறு மாதிரி நெருங்கும் பாருங்க நீஞ்சுங்க" என்று கத்தியபடியே மின்னல் இடைவெளியில் மீண்டும் ஒரு முறை அவனை ஆசையாக பார்த்தபடி 'சளப்' என்ற சத்தத்துடன் மீண்டும் வந்து இறுக்கிக் கொள்ளும் அவள் தந்திரத்தின் சுவை. காவிரி தண்ணீரின் ஓட்டத்தின் சுழல் எல்லாம் படித்த அவளின் திறம் தண்ணீரிலேயே பிறந்து தண்ணீரிலேயே வளர்ந்த அந்த சேற்றுப் பள்ளனுக்கும்கூட ஆச்சரியம். ஐந்து நிமிடத்தில் இருபதடி நீண்டு சுழலும் பள்ளமான அந்தமடுவின் சுழற்சியின் அடியில் போய் மண்ணை தொட்டு எந்திர பற்சக்கரங்களில் சிக்கி திருகியபடியே மேல் எழும் இந்த விசித்திரம் விட்டு பிரிதலும், மீண்டும் தழுவுவதுமாய் சாவுக்கும் வாழ்வுக்கும் இடையில் ஏறத்தாழ ஆறுமுறை நீர் யானை கலியனையும் காத்தாயம்பாளையம் விழுங்கி விழுங்கி ஏப்பம் இடத்துடித்தது. கூழையாறு, காவிரி, ரெண்டும் கொள்ளிடத்தில் சேருகிற இந்த இடத்தில் நீந்தித் தப்ப பள்ளர்களால் மட்டும்தான் முடியம். வீட்டு குத்து செங்கல் இறங்காத காத்தாயம்பா, இதை 'பூ' வென்று ஊதி தள்ளி விட்டாளே! கொஞ்சம் அசைந்தாலும்,அசந்தாலும் பிணமாய் கொள்ளிடத்து நாற்பது கண் பாலத்தில் நாளையோ, நாளை மறுநாளோ பூதாகரமாய் நீலம் பாரித்து மிதக்க வேண்டிய அந்த இரண்டு பூக்களும், வியப்பாய் அந்த பகலில்

வெளிச்சத்தில் ஒன்றை ஒன்று தழுவியபடியே மீண்டும் மீண்டும் நீரில் விளையாடியபடியே அஞ்சினிக்கு வெகு தூரம் தெற்கே கடல் நோக்கி ஓடிய காவிரியின் நீரோட்டத்தில் சுழற்சி எல்லாம் குறைய பாய்ந்து கொண்டிருந்த காவிரிக் கரையோரம் வெள்ளண்டார் கோவில் கிராமத்தின் கரை மணலில் ஒதுங்கிய போதுதான் கலியராஜனுக்கு தெரிந்தது தான் நீந்தி வரவில்லை; அடித்துக்கொண்டு வந்திருக்கிறோம் என்று. ஆச்சரியத்தால் அலமந்து போன இரண்டு பேரும், கதறி அழுதபடியே கரை மணலில் கட்டிக்கொண்டு விழுந்து போனார்கள். அவள் உதடுகள், நெஞ்சங்கள், கழுத்து நெஞ்சின் முன்மேடு, மார்பு கூடு என்று கண் மண் தெரியாமல் அவளை இறுக முத்தமிட்டுக் கொண்டிருந்தான். கலியன் திரும்பி பார்த்த போது வானத்தில் அக்கினியின் கருமேகங்கள் புகைந்து கொண்டிருந்தன. உடம்பு வலி துண்டு துண்டாக வெட்டியது போல வலிக்க, கலியன் அப்படியே மணலில் சாய்ந்துகிடந்தான். வெள்ளண்டார் கோவில் பதினெட்டு மயில் தள்ளி கிடக்கிற ஊருக்கு வெளியே, காவிரி மண்ணில் கிடந்த காத்தாயம்பா கண் விழித்த போது நன்றாக இருட்டி முகம் தெரியாத இருளில், அவள் அருகே மணலில் கிடந்த கலியனை இனம் கண்டு கெண்டாள். எழுந்த அவன் மார்புக்குள் புதைந்தாள். குளிர் அவளை நடுங்கியது. அவன் அவளை இறுக அணைத்துக் கொண்டு புரண்டு படுத்துக் கொண்டான். நீண்ட நேரம் இருவரும் ஏதும் பேசவில்லை. அவன் நெஞ்சுக்குள் ஒரு அடுப்பு கனல் விட்டு எரிய, அவன் உடல் பரப்பும் உஷ்ணத்தில் அவள் குளிர் பறந்தது. கொஞ்சம் கொஞ்சமாக ஊடாடி அவனுக்குள்ளே புகுந்து கெண்டது போல அவன் நெஞ்சில் முடங்கிக் கொண்டாள். அவன் நெஞ்சில் எத்தனை பெரிய குளிர் காயும் அனல் காத்திருந்தது, அவளுக்குத் தெரியாது. அவனுக்கும் காத்தாயம்பா இத்தனை பெரிய நெருப்பென்பது தெரியாமல் இருந்தது. பனி கொட்ட கொட்ட அவர்கள் இருவரும் எங்கும் போகவில்லை. ஒருவருக்குள்ளே ஒருவர் புகுந்துவிட்டார்கள். உறவு என்பதும் துணை என்பதும் இதுதான் என்பது அவர்கள் இரண்டு பேருக்குமே அப்பொழுதுதான் புரிந்தது. ஜாதி என்பதும், கூட்டம் என்பதும் இந்த தனி உறவின் மேல்தான் நிற்கிறது என்பது காத்தாயம்பாளுக்கு முதல் முறையாக பயம் தந்தது. நூற்றாண்டுகளாகத் தொடங்கி வந்த சங்கிலியில் இருந்து அவள் பிரிந்து கொண்டாள். வெறும் பெண்ணாகிப் போனாள். சிறகடித்துப் பறந்தாள். எத்தனை ஆண்டுகள் கரமுண்டார் வூட்டு சுவர்களுக்கிடையில்... எத்தனை ஆண்டுகள் வெள்ளிக்கிழமை

விரதங்களில்... எத்தனை பெருமாள் சேவையில்... எத்தனை ஆண்டுகள் பூஜைகள்... கழிந்தே போயின. விடியற்காலை நாலு மணிக்கு முன்னம் எழுந்து, இரவு பன்னிரெண்டு மணிக்கு கரமுண்டாரு வூட்டு கதவு அடைக்கும் வரை அவள் மனதில் இருந்ததெல்லாம் கரமுண்டார் வூடு ஒன்றுதான். இதோ கலியன் மேல் கிடக்கும் இந்த ஆகாய வெளியின் சுகத்தில காற்று இப்படி தன்னைப் போல எத்தனை பெண்கள் மூலையிலும் முடுக்கிலும், இடுக்கிலும், இருளிலும் இந்த சிறகில்லாமலேயே அழுந்தி போய்க்கொண்டிருப்பார்களோ. இனி யாரையும் பார்க்க முடியாது. சந்தனப்பாயி நீங்கல்லாம் பார்க்காத ஒலகத்துக்கு நான் போய்கிட்டே இருக்கேன். ஓங்க ஊரு எரிஞ்சு பொகையுறது இங்கே இருந்தே பாக்குறேன். அதை எல்லாம் எரிச்சிருந்தா என்னைப் போல குப்பைகளை எல்லாம் கூட்டி தள்ளி கொளுத்துங்க. அப்பா. இனிமே கரமுண்டாரு குடிய யாரும் காப்பாத்த முடியாது என்று வாய்க்குள் முனகியபடியெ உளறியபடியே அவன் காதுகளில் புலம்பினாள். இன்ப மின்சாரம் பாய்ந்து உடலின் கத கதப்பில் பனிக்காற்றை விரட்டிய கலியராஜன் எழுந்து நின்றபடி, "வா" என்றான். சொல்லும் முன் சேர்ந்தாள் அவள். ரெண்டு பேரும் நடக்கலானார்கள். "எஞ்ச போறோம்" என்று அவன் காதுகளருகே கிளி போல மிழற்றினாள் காத்தாயம்பாள். "ரொம்ப தூரம்" என்றான் கலியன். பின்னே திரும்பிப் பார்த்தாள் காத்தாயம்பாள் ஆறு அப்பொதும் ஓடிக்கொண்டிருக்க வெகு தூரத்தில் அப்போதும் மலைகளுக்கு அப்பால் தீ படர்வது போல் எரிந்து கொண்டிருந்தன.

"ரொம்ப தூரம்ன்னா"

"ரொம்ப தூரம்தான்... அவனுங்க கண்ணுங்க எட்டாத தூரம்"

"கண்ணெட்டாத தூரம்ன்னு ஒண்ணு உண்டா?"

"ஆம்மா உண்டு, அங்க நானும் நீயும் மட்டும்தான் இருப்போம்"

"நானும் நீங்களும் மட்டுமா? பயமா இருக்காதா?"

"பயமா... ஒனக்கா? இது வரைக்கும் பயந்தவளா நீ?"

அவள் ஒன்றும் பேசாமல் நடந்தாள். ரோடேறி கடந்த போது, "இதோ போறாங்க புடிங்கடா அவுங்கதான்" தொடை வரை தூக்கி கட்டிய வேட்டிகள் நெருப்பு பந்தங்களின் வெளிச்சத்தில் வாழை மரங்களின் ஊடே ஓடி வருவது தெரிந்தது... கலியனின் கால்களில் சக்கரம் சுழன்றது. காத்தாயி ஓடினாள். எங்கென்று

தெரியாமல் 'திடு திடு' என்று பாய்ந்து இருவரும் ஓடினார்கள். கேணிப்பட்டறை வண்டிகள் தார் ரோட்டில் கடகடத்து பாய்ந்து வந்து கொண்டிருந்தன. ஓட முடியாமல் தடுமாறி விழுந்து புரண்டு ஓடி ஆரம்பித்த போது கலியன் காத்தாயம்பாளைத் தோளில் தூக்கிக்கொண்டு பாய்ந்து ஓடினான். இப்பொழுது அது ஓட்டமாக இருக்கவில்லை. இரவு முழுவதும் நன்றாக உறங்கிய பின் சுழன்று வரும் அலையோட்டத்தை நிகர்த்து இருந்தது அவன் ஓட்டம். நாலு கால் பாய்ச்சலில் ஓடும் வெறி கொண்ட வேங்கையென அவன் பாய்ந்தான். விளக்கெண்ணெய் மணம் வீசும் பந்தங்களின் தீ கங்கங்கள் நாற்புறமும் தெறிக்க இரவு முழுவதும் அவர்களைத் தேடி வந்தவர்களின் கால்கள் கலைக்க, ஒரு வேங்கையின் பாய்ச்சலாக அவன் ஓட்டம் காடு கரை மீறிப்படர்ந்தது. காத்தாயம்பா அழ ஆரம்பித்தாள். இனி அவளைவிட அவனால் முடியாது. இனி அந்த பயம் அவனைப் பீடித்தது. பிடி கொடுக்க முடியாத அவளையும்விட முடியாது. வியர்வை ஆறாய், ரத்தமாய் வழிந்தது. அவன் மார்பில் பதிந்து அவன் வியர்வையைக் குடித்தாள் காத்தாயம்பாள். காற்றைவிடக் கடுகி விரைந்த அந்த கால்களின் வைரங்கள் அவள் நெஞ்சில் பதிந்தன. அவளைத் தூக்கிக்கொண்டு ஓடும் அந்தப் பாதங்கள் என்றென்றைக்குமாய் அவள் நெஞ்சில் பதிந்து கொண்டன. அவன் அவளை நெஞ்சில் தாங்கியபடியே ஓடிக்கொண்டே இருந்தான். பின்னால் நீண்டு வந்த குரல்கள் 'பிடி பிடி' என்று ஓலம் நீண்டு வந்த வேல்கம்புகள் துரத்தி வந்த சுருளி கத்திகள், எல்லாமே வெளிச்சம் பரவியபோது இல்லாமல் ஆகிப்போயின. காலை மேட்டில் ஏறிய போது தஞ்சாவூர் பஸ் ஒன்று சென்னை போகும் போக்கில் திரும்பி வந்தது. விடியல் நேரம் ஆறாக வடியும் வேர்வையுடன் அவளைக் கீழிறக்கி ரோட்டின் குறுக்கே நின்று ஒரு பெரும் சிலை ஒன்று வழி மறித்தது போல் பஸ்ஸை மறித்து நிறுத்தினான். மூச்சு வாங்கியபடியே அவன் நின்றதைப் பார்த்து பயந்து போனாள் காத்தாயீ. பஸ் அவர்களின் வெகு அருகே வந்து நின்ற போது இன்னும் யாரோ துரத்தி வருவது போல் நெஞ்சம் பதைபதைத்தது. வியர்வையில் குளமாய் நனைந்திருந்த கலியராஜன், அவளை மீண்டும் ஒரு தெய்வ விக்கிரத்தைத் தூக்குவது போல் தூக்கி பஸ்ஸில் ஏறிக் கொள்ளும் அந்த இணக்கத்தையும் இணைப்பையும் பஸ்ஸில் இருந்தவர்கள் கனிவுடன் ஏற்றுக் கொண்டது போல் இருந்தது. பஸ் வடக்கே போகும் பாதையில் வெகுவேகமாய் திரும்பி ஆற்றோரத்து தார்

இட்ட ரோட்டிலேயே வெகு வேகமாய்ப் பாய்ந்தது. எல்லாம் கனவு போல் மயக்க காத்தாயம்பா கலியராஜன் ஜன்னல் ஓரமாக உட்கார்ந்தபின் ஜில்லென்று வீசிய காற்றிலும் காலைச் சூரியனின் முதல் கிரணங்களிலும் தங்களை மறந்தாலும், பின்னே திரும்பி ஜன்னல் வழியாக பார்த்துக் கொண்டே இருந்தார்கள். அவன் கைகளில் தன் கைகளை கோர்த்துக்கொண்டு காத்தாயம்பா அடங்காத அவன் நெஞ்சின் படபடப்பை அழுத்தி அடக்கிக் கொண்டு "என்ன மாமா இன்னும் பயந்துகிட்டு? இனிமே எவனாவது வந்தா ஓட வேண்டாம். ஆளுக்கு ஒருத்தன குத்திட்டு நாமளும் சாவுவோம்" என்றாள் காத்தாயம்பாள்.

# கரமுண்டார் வூடு - 11

அஞ்சினி அடங்கிப் போய் இருந்தது. சுற்று வட்டமாக இருபது முப்பது கிராமங்கள், பள்ளச் சேரிகளும், பறையர் சேரிகளும் எரிந்து அடங்கியிருந்தன. கரமுண்டார் வூடு ஆற்றுக்குள் இருந்து கம்பீரமாக இன்னும் நின்று கொண்டிருப்பதுதான் ஆச்சரியம். என்ன நடந்தது என்று யாராலும் சொல்ல முடியவில்லை. வூட்டு லெக்ஷ்மி ஒரு பள்ளனோட ஓடிப் போனான்னு சொல்றதுக்கு இப்பகூட எல்லாரும் பயப்படுறாங்க. இத்தினி வருஷம் இல்லாம அஞ் சினி ஆத்து மேட்டுல புதுசா போலீஸ் ஸ்டேசன் தொறந்திருக்காங்க. அஞ்சினி பள்ளனுவளும். புனவாசல் பள்ளனுவளும் சண்டை போட்டுகிட்டதா, குத்திக்கிட்டதா கேஸ். அம்பது நூறா பொணம் விழுந்திருக்கு. ஆத்து கரையோரமா ஊரைச் சுற்றி எப்பப் பாத்தாலும் கழுகும் கூவையும் பறந்துகிட்டு இருக்கு. கவரமேட்டு பக்கத்துல இருந்து, மணக்காட்டுல இருந்து எப்பப் பார்த்தாலும் எங்கிருந்தாவது ஒரு பொணத்த கொண்டாந்து போட்டு அடையாளம் கேட்டுகிட்டு இருக்காங்க. ஊரை சுத்தி ஒரே போலீஸ் விசாரணை. கரமுண்டர் வூட்டுல என்ன நடந்தது? யாரும் சொல்ல மாட்டேங்கிறாங்க. சாலியத் தெருவுல போலீஸ் கும்பல் கும்பலா போயி பள்ளனுவள புடிச்சுகிட்டு வராங்க. அஞ்ச இஞ்சன்னு துலுக்கத் தெருவுல இருந்துகூட ரெண்டு பறையனுவள புடுச்சுகிட்டு வந்தாங்க. விசாரணையில யார், யாரு, யார் யாரை குத்துனா, யார் குடலை

யார் எடுத்தா? அப்படின்னு லிஸ்ட்டு எடுத்தாங்களே தவிர, போலீஸ் இன்ஸ்பெக்டர் அகமது குட்டி ராவுத்தருக்கு ஒண்ணுமே புரியல. கேசுன்னு எடுத்தா, "நான்தான் குத்துனன். நான்தான் கொலை பண்ணினேன்"னு ஒடனே ஒடனே ஆளுங்க வந்து அவுங்களே சரண்டர் ஆகிடுறாங்க. உமாமஹேஸ்வரியோட பாடி போஸ்ட்மார்டத்துல உடம்பு பூரா சூரி கத்தியால குத்தியிருக்க, யாரோ தொரத்தி தொரத்தி குத்தியிருக்காங்க. ஒரே ஆள் குத்தியிருக்கறதாதான் தெரியிது. ஆனா கேஸ் விசாரிச்சா பத்து பதினைஞ்சு பள்ளனுவ, நான்தான் குத்தினேங்கிறான். யார வுடுறது? யார புடிக்கிறது?ன்னு தெரியாம ஒரு கள்ளன்கூட இதுல எல்லாம் சிக்காம பள்ளனுவளையும், பறையனுவளையுமே சிக்க வெக்கிற சாமர்த்தியம் இன்ஸ்பெக்டர் ராவுத்தருக்கு முன்னமே தெரிஞ் சதுதான். ஆனா இந்த கேஸ்சுல அரசியல் வேற கலந்துருக்கு. ஒவ்வொரு கட்சிகாரனா வந்து தானே சிக்கிக்கிற இந்த டெக்னிக், இந்த தந்திரம் எதுக்காகன்னு புரியவே இல்லை. கரமுண்டார் வூடு பெரிய சவாலாகவே இருக்கு. சுப்பாக் கரமுண்டாரு என்கிற கடைசி பையன் ஆள் இன்னும் அகப்படவே இல்லை. பெரிய கரமுண்டாரு பொண்டாட்டிய நாலும் தலிய அறுத்துடுச்சுவ. இதுவ புருசன யாரு கொன்னிருப்பான்னு கேட்டா, எந்த பள்ளனும், எந்த பறையனும் பெரிய கரமுண்டார குத்தல. நல்லா தெரியுங்குதுவ. அழுவுதுவ. பள்ள குடியில போய் கேட்டா, "எங்க ஆம்பளையதான் குத்துனானுவ. தூக்கி போட்டு மிதிச்சதுல உயிரு பொய்ட்டுது. அப்புறமா ஆத்துல தூக்கி எறிஞ்சிட்டானுவ. இன்னாருதான் செஞ்சான்னு தனியா சொல்ல முடியாது. ஆனா கரமுண்டார கொன்னதுக்கு நாங்க நல்லா இருக்க மாட்டோம்" அப்படின்னு சொல்லி குடிசை குடிசையா பள்ளக் குட்டிவ கத்துதுவ. கரமுண்டாரு வூட்டு பள்ளச்சிவ மாரி, செவத்த, மாஞ்சி நாச்சி, சேனை எல்லாரையும் புடிச்சு வீராச்சாமி, நலவன், கிட்டான், சுப்புரமணி, கரிமேட்டான், மண்ணுதின்னி, வெங்கடாசலம், காத்தான், சிலத்தான், பெரியசாமி இப்படி எல்லாம் செம்பாட்ட பள்ளனுவளையும், பள்ளச்சிவளையும் கொண்டாந்து உட்டாச்சு. அஞ்சினியிலேயே ஆக்ரோஷமா உண்மையப் பேசுறது கரமுண்டாரு வூட்டு கிழவி தொரச்சிதான். ஆனா அதுவ சொல்றத நிரூபிக்கிறதுக்கு ஆதாரம் இல்லெ. பள்ளப்பய கூட போனதுனால உமாமஹேஸ்வரியெ இழுத்துப் போட்டு சுப்பாக் கரமுண்டாருதான் குத்தி தள்ளினாராம். செம்பாட்டம் பள்ளக்குட்டி சின்ன மணியெ கொட்டடியில கொண்டு போயீ கெடுத்ததுக்காக, நடு ராத்திரியில பள்ளனுவ

ஓடிவந்து பெரிய கரமுண்டாருகிட்ட தாக்கீது சொன்னதுனால, என்னைக்குமே படி எறங்காத பெரிய கரமுண்டாரு இந்த கலிகாலத்துலயும் தம்பின்னு கவலைப்படாம, தன்னோட வேல் கம்பு கைத் தடிக்குள்ளே இருந்து கை வேலை உருவி எடுத்து, கொட்டடிக்கே நேரடியாக ஓடிப்போய் ராமுக்கரமுண்டாரு வயித்துல ஒரே சொருவா சொருவி உருவி எடுத்து, கொடல் சரிய எடுத்துபுட்டு, "கள்ளன் திருடலாம்; எந்த அழிமானமும் செய்யலாம் ஆனா சொன்ன சொல்லு மாறக்கூடாது. குடியே அழிஞ்சாலும் சொன்ன சொல்லு மாறக்கூடாதுடா பாவி, நம்ப பாட்டன் பூட்டன் காலத்துலயிருந்து பள்ளக்குடி நம்ப குடிடா, அதுவ வேற நம்ப வேற இல்ல. அதுவள நாம காப்பாத்தறது இருக்க நம்ப தாத்தா, பாட்டன் பூட்டன் சொன்ன சொல்ல தவற வுடுறியா ஒழிஞ்சு போ"ன்னு கத்திகிட்டே குத்தி குத்தி மூணு தடவை கொடலை உருவி வெளியே தள்ளினாராம் பெரிய கரமுண்டாரு சந்திரஹாசன். F.I.R.ல போலீஸ் ரெக்கார்டுல இதுக்கெல்லாம் ஆதாரம் ஒண்ணும் இல்ல. தொரச்சி கிழவி சொல்லுது "நீ நேரா பாத்தியான்னா போய்யா. கூறு கெட்ட மனுஷா! இதுதான் நடந்தது. தெரிஞ்சு வெச்சுக்க. கேஸ்சு போட முடியாது. எந்த காலமா இருந்தாலும் எங்களை எல்லாம் மீறி ஒரு கேசு போட முடியுமா ஒன்னால? ஒனக்கு ஏண்டுகிட்டு இந்த பத்து அம்பது கிராமத்துல யாராவது ஒரு குஞ்சு குளுவான் சாட்சி சொல்லிடுமா, நீயும்தான் புடிச்சிடுவியா? ஜாதி கலவரம் அது இதுன்னு சொல்லி ஊர ரெண்டு பண்ணப் பாக்குறிய? கரமுண்டாரு குடி வுளுவலைய்யா, வுளுந்து போயிடல, அது வுளுவாது. ஏன்னா நாங்கல்லாம் ஜாதி பார்க்காதவங்கதான், என்னைக்கும் வேத்தும பாக்குறவங்க இல்லெ. நீங்கெல்லாம் ஜாதி இல்லேங்கறிங்க. ஆனா ஒங்களுக்குள்ளதான் வேத்தும ஜாஸ்த்தி. கலரு கலரா கட்சிக் கொடி தூக்குறிங்க. ஒரே கலருக்குள்ள பல ரெட்டை கலரு மூணு கலரு எல்லாம் புடிக்கிறிங்க. இது எல்லாம் ஜாதி இல்லாம என்னவாம். ஜாதீன்னா உயிரு. ஜாதின்னா மனசுக்குள்ள இருக்க வேண்டிய தைரியம். கள்ளன்னா எல்லாருமா கள்ளன்? சந்திரஹாச கரமுண்டாருதான் கள்ளன். குத்துனாம் பாருய்யா... சொந்த ரத்தமுன்னு தெரிஞ்சும் குத்துனாம்பாரு. அதுதான்ய்யா கள்ள கரு. நீ போலீசுதான். இன்ஸ்பெக்டருதான், காக்கிசட்டை போட்டிருக்க, ஒன்னால இத்தனை கொலைக்கி காரணம்தான் சொல்ல முடியிது. ஆள கண்டு பிடிச்சியா? உமாமஹேஸ்வரி பொணம், செல்விப் பொணம், அப்படின்னு கொண்டாந்து பொணத்த அறுத்து பாத்துக்கிட்டு இருக்கிங்க.

அவள குத்துனாளே சுப்பு அவனைப் புடிக்க முடியுமா? முடியாது. அவன் கலியனை தேடிகிட்டுப் போயிருக்கான். வந்தாரு குடி பய. கரமுண்டாரு வூட்டு லெட்சுமியல்ல தூக்கிட்டுப் போயிருக்கான். அவ முடிய அறுத்து இதே வூட்டு முத்தத்துல திலும்பி அவ புருசனோட இளுத்தாந்து போட்டு வெட்டுறானா? இல்லையா? பாரு. அதுக்கப்புறம் புடுச்சுக்கடா. அது வரைக்கும் நீயில்ல, ஓங்க பாட்டன் இல்லே, எவன் வந்தாலும் சரிதான் சுப்பாக் கரமுண்டான எஞ்சியும் புடுச்சுடவே முடியாது. கரமுண்டாரு குடி அழிஞ்சா போயிடும்? அந்த பெருமாளுக்கு என்ன புத்தி எறவானத்துலயா இருக்கு, ராதையம்பா வயித்துல ஒரு பூச்சி வெக்காமலா இருந்தது. கள்ள கரு திலும்பியும் வருது பாரு. எந்த காலம் வந்து, எது எப்படி திரும்பிப் போனாலும், கடலு வத்தி காவிரி காஞ்சு வந்தாலும், இனுசுபெக்டரு நேத்து கள்ளன் நெனைப்ப நாளைக்கு கள்ளன் வந்தாலும் மாத்த முடியாது" என்று கீழே வுழுந்து புரண்டு மார்பில் அறைந்து கொண்டு அந்த கிழவி கக்கின விஷம், இன்ஸ்பெக்டர் ராவுத்தருக்கு பகலிலும் இரவிலும்கூட கிலி அடிச்சுது.

போலீஸ் நாய்கள் வந்தன. பத்தம்பது ஊர் கள்ளர்களிலும் பள்ளர்களிலும் ஏராளமான பேர் கைதானார்கள் ராவுத்தருக்கு ஆச்சரியம். சொல்லி வைத்தாற் போல் விதவிதமான கதைகளை ஒவ்வொருவரும் சொன்னார்கள். கட்சிக்காரர்கள் சொன்ன சாட்சியங்கள் வேறு. இந்த நவீன காலத்திலும்கூட இத்தனை ஜாதி கட்டுமானம். மேல் கீழ் அமைந்து வருவது விசித்திரமாகத்தான் இருந்து, அவர் அவர்களுக்கிடையில் மட்டும் அல்ல. கீழ் ஜாதிகாரர்களிடையும் கூட கரமுண்டார் வூட்டிற்கு எதிராய் எந்த சமாச்சாரமும் வெளி வர மறுத்தது. பேப்பர்களில் எல்லாம் ஜாதி வெறி தாண்டவமாடுவதாயும் கள்ளர் எனும் ஜாதி இந்துக்களின் ஜாதி திமிர், அறியாமை நிறைந்த மக்களின் கொலைக்கு காரணம் என்னும் செய்தி. பத்திரிகைகளில் மந்திரிகள் கூக்குரல் இட்டார்கள். கள்ளர்களும், பள்ளர்களும், பறையர்களும் தங்கள் ஜாதிகளை சரியாகவே பாதுகாத்துக் கொண்டுதான் இருந்தார்கள். அவர்கள் யாரிடமும் போய் முறையிடவும் இல்லை. வழக்காடவும் இல்லை. கரமுண்டாரு வூடு முன்னால் கோலம் இல்லை. காத்தாயம்பா போனதில் இருந்து சிக்கு கோலங்களோ ராஜரதங்கள் கோலங்களோ எதுவும் காணும். ரெட்டைத் திண்ணையில் கட்டிலில் உட்கார்ந்து ராஜ்யபாரம் பண்ணின சந்திரஹாச கரமுண்டாரையும் காணோம். அடுக்கடுக்காக ரெட்டை திண்ணையில் ஏவலுக்கு நிற்கும் பள்ளர்களையும்

பறையர்களையும் காணோம். எப்பொழுதும் வாசல் குரட்டில் கிடக்கும் இரண்டு மூன்று மோட்டார் பைக்குகளையும் லாயத்தில் எப்பொழுதும் கனைத்துக்கொண்டு இருக்கும் பீட்டன் குதிரைகளையும் கேணிப்பட்டறைகளையும் காணோம். ஆற்றில் தண்ணீர் இல்லாததினால் ஏகமாய் பாசியால் கறுப்படித்து போய் நீண்டு போன கரமுண்டாரு வூட்டு சுவர்களும் கரமுண்டார் வூட்டு மதில் சுவர்மேல் ஏறி ஓடி தண்ணீரில் 'சொருக்கு' அடிக்கும் சிறுவர்களையும் காணோம். வூட்டின் மூன்று மாடி ஜன்னல்களும் 'ஆ'வென திறந்து ஏதோ ஒரு சோகம் கலந்து அமைதியாகக் கிடந்தது. நூற்றைம்பது குடும்பங்கள் இருந்த அந்த வூட்டில் இந்த கலகத்தினால் தாலி அறுத்த பெண்கள் மட்டும் முப்பதுக்கும் மேலே. காலையில் இருந்து சாயங்காலம் வரை கொண்டு வந்து போட்ட கரமுண்டாரு வூட்டு ஆம்பளைங்க பொணங்கள் நாற்பதுக்கு மேலே. மங்களப்பாயி ஒவ்வொரு பொணத்தையும் கொண்டு வந்து போடும் போதும் வயித்துல அடிச்சிகிட்டு கீழ வுளுந்து பொரளும், கீழயிருந்து மண்ணெ வாரி அள்ளி தெருவுல தூத்தும். "பள்ளப்பயளோட ஓடுனியேடி எத்தனை கரமுண்டான் கொடல, உருவணும்ன்ன காத்துகிட்டு ஓடுனியடி நீ கண்டாரலி, ஒனக்கு இஞ்ச ஆம்பளையாடி இல்லெ. பள்ளனுவள தேடிகிட்டுப் போனியா. இந்த பாருடி, எத்தன கள்ளன் வேணும்?" என்று கதறும். வூடு பூரா கரமுண்டாத்தியுவதான் மிச்சம் இருக்குதுவ. கெழவனுவளையும், புள்ளெ குட்டிவளயும் தள்ளிபுட்டா ஆம்பளைன்னு மிச்சம் இருக்கிற ஆம்பளைய கொஞ்சம்தான். அதுவளையும் போலீஸ் ஸ்டேசனுக்கு இழுத்துகிட்டு போயி கும்மி எடுத்துகிட்டு இருக்கானுவ. ராதையம்பா வவுத்துல குழந்தை முண்டுற சத்தம் கரமுண்டாரு வூட்டு பொண்டுவளுக்கு இன்பமா கேக்குது. ஒவ்வொருத்திக்கும் தனக்குத் தானே வேத்து வலி தெரியிது. ராதெயம்பாளை சுத்தி சுத்தி திரிசியம்பா, நாகலெட்சுமி, மூணு பொண்டாட்டிவளும் அடைக் காக்குதுவ. பொறக்கப் போறது நிச்சயம் ஆம்பள பிள்ளைதான். பொம்பளை புள்ளையா, காத்தாயம்பாளா பொறந்துடக் கூடாது. வளர்ந்துடக்கூடாது. எல்லாரும் முன்கட்டு, ஒண்ணாங்கட்டு முத்தத்துல சாய்வு நாற்காலியில நடுவ கரமுண்டார் ஒக்காந்து இருக்கார். ஆயிரம் வேலி கண்டு முதல் பண்ணுன எடத்துல, இப்போ நூறு வேலி குத்தகைதான் மிச்சம். என் நெலம் எங்கேன்னு கேட்ட வடுவாம்பா, அண்ணன் உயிர வாங்குன நெலம் எனக்கு வாண்டாம்ன்னு தூக்கி எறிஞ்சுபுட்டு போயிட்டா. தெலகராஜு என்னா ஆனான்? இந்த கூட்டத்துலயும் கொலையிலயும் அது

ஒண்ணுதான் தெரியலை. போலீஸ் விசாரணையிலயும்கூட அந்த ஊரு, கள்ளனுவளையும் பள்ளனுனுவளையும் மாதிரியே எனக்கு ஒண்ணும் தெரியாதுன்னுதான் வாக்கு மூலம் கொடுத்தான். இந்த கொலை எல்லாம் நடந்ததுக்கு அவன்தான் காரணம்ன்னுகூட பள்ளக்குடிவள்ள பேசிக்கிறாங்க. இந்த சங்கதிகள் எல்லாம் நடந்ததுக்கு அப்பால அவன் கரமுண்டாரு வூட்டுக்கே வாரதில்ல. இலுப்ப தோப்பே கதின்னு கெடக்குறான். இலுப்ப தோப்புக்கு கள்ளக்குடியில இருந்து அவனுக்கு சோறு போவுது. அவன் நூறு வேலி நெல பத்திரத்த எனக்கு வாண்டாமுன்னுட்டான். வடுவாம்பா மகன் மொகத்துலயே முழிக்கமாட்டேன்னு போய்ட்டா. இலுப்ப தோப்பு வழியா இப்ப யாரும் போறதில்ல. கயித்து கட்டிலில் எப்போதும் அதே போதையிலேயே கிடப்பான். ராத்திரி ஒம்பது மணிக்கு மேல் அவன் எங்கும் போக கூடாது என்று போலீஸ் ஆர்டர். கேஸ் முடிகிற வரை அவன் ஊரைவிட்டுப் போக முடியாது. ராத்திரி கடைசியாக வரும் தஞ்சாவூர் பஸ் காவிரி பாலத்தை தாண்டி வூருக்குள்ள வந்து நின்றால், பாலத்தடியிலேயே மாயியை அந்த கடைசி பஸ்ஸில் இருந்து இறக்கி, பஸ் வந்த பாலத்திலேயே ரெண்டு பேரும் வெகு தூரம் பேசிக்கொண்டே நடந்து போவார்கள். மெல்லிய அமெரிக்கன் ஜார்ஜெட் புடவையும் ஒல்லியாக ஒடிசலாக ஒற்றைப் பின்னலுடன் கொஞ்சம் மல்லிகைப்பூவுடன் ஒரு பிராமணப் பெண் போல் அந்த இருட்டு நிலவில் காட்சி தருவாள் மாயி.

“குடிக்கிறத நிறுத்தமாட்டீங்களா”

“என்ன தேடிகிட்டு வராதேன்னு எத்தனை தடவ சொல்லியிருக்கேன். மாயி நீ நெனைக்கிற மாதிரி நான் ஆம்பளை இல்லெ. நீ நெனைக்கிற மாதிரி இந்த காலத்துலகூட என்னோட ஒன்ன வாழ வுடமாட்டானுவ. ராமுக் கரமுண்டாரு என்ன அவருக்கு வாரிசா தயார் பண்ணிவுட்டுட்டாரு. என்ன எப்போ எந்த பள்ளன், பறையன் குத்தி சாய்க்க போறான்னு தெரியாது. எனக்கும் பள்ளக்குடி சகவாசம் வுட்டுப் போகாது. நண்டு, நத்தை தின்னுகிட்டு மாஞ்சி பொண்ணுக்கு குட்டி போட்டுட்டேன். வீணா என்ன நம்பி கோலி சுத்தினியன்னா, ஒன்னையும் புடுச்சு போலீசுல வெச்சு ஒன்னையும் மாட்டி பள்ளச்சின்னுடுவான்.”

“நான் பள்ளச்சிதானே. அதுல என்ன பயம். மாஞ்சிக்கு குழந்தை பிறந்தது எனக்கு முன்னாலயே தெரியும். அதுனால என்ன? ஒங்களெ உட்டுடுவேன்னு பாத்திங்களா? அது முடியாது.”

“என்னா செய்யப் போறே”

"செய்யிறதுக்கு என்னா இருக்கு? ஒங்க ஆசையெல்லாம் மண்ணாப் போச்சேன்னுதான் என் வருத்தம். காத்தாயம்பாளே எப்படி ஆசை பட்டுகிட்டு இருந்தீங்க? ஒனக்குதான் நான், ஒனக்குத்தான் நான்னு சொல்லிச் சொல்லி கடைசீல இப்படி நட்டாத்துல வுட்டுட்டுப் பொய்ட்டாளே, அயோக்கிய முண்டெ."

முழு ஆற்றிலும் தண்ணீர் ஓடவில்லை. எங்கு பார்த்தாலும் மணற் காடாக வற்றிக் கிடந்தது. மணலில் இருவரும் இறங்கி நடந்தார்கள். ஒரு கனவு போல் அவன் பின்னால் வந்து பின்னால் இருந்தே அவன் முதுகு வழியே தழுவிப் பற்றி மெல்லென அணைத்தபடி அவன்கூட நடந்தாள் மாயி. மெல்லிய அவள் உடம்புக்குள் இருந்து அவன் நெஞ்சுக்குள் ஏதோ பாய்ந்தது போல் இருந்தது. சிலு சிலுவென்ற குளிர்காற்று அவளை வளையம் இட்டபடி, தன் கனல் இருக்கும் இடத்தை ஞாபக மூட்டினான் தெலகராஜு. வெகுதூரம் நடந்தனர். தண்ணீர் ஓடினாலும் ஓடாவிட்டாலும் அவர்களுக்கு காவிரி ஒரு வரப்பிரசாதம். அதுவே அவர்களின் நாடக மேடை, அரங்கு, அறை, அந்தரங்கம், மறைப்பு எல்லாம். ஒவ்வொரு இரவும் இருபத்தைந்து முப்பது மைல் பஸ்ஸில் வந்து பயணம் செய்து அவனை வந்து அடைகிற பரபரப்பு லேசில் அடங்காது. சில வேளைகளில் மோட்டார் பைக்கில் இரவோடு இரவாக தடதடவென்று தஞ்சாவூர் வரை பயணம் செய்து ஈவு இரக்கம் இன்றி அவளது YWCA ஆபீசில் உயர் பணிபுரியும் பெண்கள் விடுதியில் ஒன்றுமே இல்லாதது போல் கொண்டுபோய் தள்ளிவிட்டு வந்துவிடுவான். அவளுடைய சினேகிதிகள்கூட, "என்ன ஆம்பளையாடி இவன்?" என்று சொல்வார்கள் என்றாலும், இந்த தெலகராஜுவின் வீம்புதான் அவளுக்கு பைத்தியமாகி இருந்தது. பைத்தியம் ஆக்கியது. நிஜமாகவே யாராவது ஒரு கள்ளப் பெண் அவனைக் கல்யாணம் செய்து கொண்டு நன்றாக வாழவேண்டும் என்று மாயி ஆசைப்பட்டாள். தஞ்சாவூர் வரை சில நேரங்களில் கொண்டு வந்து விடும்போது நேரம் நடு இரவைத் தாண்டிவிடும். ஆதலால் ஹாஸ்டல் இரும்பு கேட்டின் வெளியே வெகு நேரம் நிக்க முடியாது. ஆபீசர் என்ற ஹோதாவில் கவர்ன்மெண்ட் ரெஸ்ட்ஹவுசில் அவள் தங்க தயார்தான் என்றாலும், அவன் ஒப்புக்கொள்ளாமல் 'பெயர் கெட்டுவிடும்' என்பதால், திரும்பவும் இலுப்ப தோப்புக்கே கொண்டு வந்து சேர்க்கும் போது மணி நாலாகி விடும். இதெல்லாம் அஞ்சினியில் ராக்காவல் பார்க்கும் செங்குழியாண்டி தேவனுக்கு மட்டும்தெரியும். கலகல வென்ற மாயியின் சிரிப்பொலியில் பல ஆண்டுகளாக காத்திருந்த அவளது

இளமை அவனுக்குத்தான் சொந்தம் என்று செங்குழியாண்டி தேவனுக்கும் தெரியும். போலீஸ் விசாரணை தீவிரமாகிக் கொண்டிருப்பதால், தெலகராஜை தேடி வருவதை மாயி ஒன்றும் நிறுத்தி விடுவதில்லை. அவளுக்கு இனிமேல் அவன் இல்லாமல் முடியாது.

பசி கொண்ட வேங்கை போல் அவனைச் சுற்றி வந்தாள் மாயி. அவன் பகல் நேரங்களும் போலீசில் மிரட்டல் விசாரணையில் இருந்து, ஒவ்வொரு நாளும் விடுதலை அடையும்போது, மதியம் நாலு மணிக்கு மேல் இலுப்பைத் தோப்புக்கு வந்து சேரும் போது, அங்கே கண்ணை கரிக்க கையில் சோறு குழம்பு கட்டின மூட்டையோடு கரமுண்டாரு வூட்டுல இருந்து மாஞ்சி வந்திருப்பா. கேசுக்கு அப்பறம்கூட மாஞ்சி கரமுண்டாரு வூட்டுப் பள்ளச்சிதான். எத்தினியோ தடவை ஆயி அப்பனும் வந்து கூப்புட்டும்கூட அவ போகல. இப்பக்கூட ஆய்குடி செம்பாட்ட பள்ளன் பண்டாரம் மவன் பாண்டியன் வந்து பொண்ணு கேக்குறான்னு மாஞ்சியுடைய ஆயி அப்பனும் வந்து வந்து கூப்புடுறாங்கன்னு தெலகராஜுக்குகூட தெரியும். பல தடவை சொல்லிச் சொல்லி வெரட்டியும், அவ போறதா இல்லெ. ஒவ்வொரு தடவை மத்தியானமும் சில வேளையில ராத்திரியிலகூட தெலகராஜுக்காக ஓடி வந்து காத்திருப்பா "ஏன்டி எல்லாருமா சேர்ந்து என்ன கொல்றிங்க? மூஞ்சியிலயே முழிக்கதே தேவுடியா நாயே" என்று அடித்து மிதிப்பான் தெலகராஜு. கண்டபடி அவனிடம் அடிவாங்குவாள் மாஞ்சி. அது என்னவோ அப்படி ஒரு ஜென்மம். அடிவாங்கி வீங்கிய கன்னங்களோடு லேசான சம்மங்கி வாசனை மணக்க இரவின் பின் நேரங்களிலும் இலுப்பைத் தோப்புக்கு வந்து விடுவாள் மாஞ்சி. அதிக உயரம் இல்லாத அந்த சிறிய பெண்ணிடம் ஒவ்வொரு முறையும் எதையோ ஒன்றை இழந்ததை மீட்க முடியாமல், அதற்காகவே அவளிடம் போராடுவது போல், அவன் சண்டை இட்டும் அடித்தும், பிணங்கியும் இணைந்தும், ஒருவிதமாக அவளை கொஞ்சம் கொஞ்சமாக தனக்குள்ளாக்கிக் கொண்டிருந்தான். அவளும் பைத்தியம் விடாமல் அவனை அழித்துக் கொண்டிருந்தாள். இது எல்லாமே திரண்டு மாஞ்சிக்குள் கரு கொண்டது யாருக்கும் தெரியாது. பெரும்பாலான நேரங்கள் "கரமுண்டாரு வூட்டு ஆயிக்கு இந்த துரோகம் செஞ்சேனே, நான். உருப்பிடுவேனா?" என்று அவன் நெஞ்சில் அவள் அழும்போது அப்படியே அடித்து துவைத்து உருக்குலைக்க வேண்டும் என்றே தெலகராஜுக்கே வெறி மிஞ்சும். ஊர் ரெண்டு பட்டு கலகங்கள் மிகுந்த போது

தெலகராஜைத் தேடி குத்தி சாய்க்க பள்ள இளைஞர்கள் கத்தியோடும் வீச்சருவாளோடும் சுருளி கத்தியோடும் அலைந்த போதும், நெஞ்சு பதற... பதற, கையில் சோற்று மூட்டையுடன் அண்டாரங்காட்டு மாந்தோப்பில் இருந்து கவரமேட்டு ஆய்குடி வரை அலைந்து கொண்டு அவனைத் தேடியவள் இந்த மாஞ்சிதான். மூன்று இடத்தில் நேர்ந்த மோதலில் அவன் மண்டை உடைந்து கிடந்த போது, தப்பியோடி ஒளிந்தபோதெல்லாம், உள்ளே வைத்துப் பூட்டிக் கொண்டு புடவையில் மூடிக்கொண்டு "இஞ்ச ஒன்றும் இல்ல. இஞ்ச யாரெ மூடி வெச்சிருக்கா?" என்று வீர ஆக்ரோஷத்தோடு எதிர்த்து கேட்டவர்கள் இந்த மாஞ்சியும் செவத்தையும்தான். தலை முழுவதும் புகைந்தது தெலகராஜுக்கு. இந்த மனுஷனும் அவன் புத்தியும், அவன் அசிங்கமான ஆசைகளும் தெலகராஜுக்குப் பூரணமாகப் பழகிப்போய்விட்டன. இனிமேல் அஞ்சினியை விட்டு ஒரு வாழ்க்கை வாழ முடியும் என்று தோன்றவில்லை என்றாலும், அஞ்சினி தலைமேல் அழுத்துகிறது. நம்பவே முடியவில்லை. காத்தாயம்பாவா அது? இரண்டு ஆண்களை ஒரே நேரத்தில் அவளால் தூக்கி எறிய முடியும் என்று நன்றாக அவனுக்கு ஞாபகம் இருக்கிறது. அவனையே, அவன் திமிரையே, ஒரு நிமிஷத்தில் மூஞ்சியில் அறைந்து அவனுக்கு

உணர்த்தியவள் எப்படி கலியனிடம் அவளாக ஊறிப் போனாள். இங்கே மட்டும் எப்படி ஜாதி நினைவே இல்லாமல் போய்விட்டது? காத்தாயம்பா காலையும் மாலையுமாய் பொத்தி பொத்தி வைத்து பூக்க வைத்த அந்த பூ, கலியனுக்கு மட்டும் எப்படி மலர்ந்தது? கலியன், அவன் கதை முழுவதும் தெரிந்துகூட எப்படி போனாய்? எப்பொழுதுமே இதற்கெல்லாம் ஒரே பதில்தான். காத்தாயம்பா ஒரு பெண். இவன் ஓர் ஆண். வேண்டியது நேரம். அதற்கான அவகாசம் தனிமை. அங்கே ஆணும் பெண்ணும் என்கிற நினைவு மட்டும் போதும். ஜாதி, மதம், நிறம், குணம் எல்லாம் தூள் தூளாகிப் போகும். இந்த அவலங்கள் மத்தியில் இவ்வளவுதான் முடியும். இந்த வாழ்க்கை இதற்கான பொருள், இவ்வளவு நடந்தும் தொரச்சியப்பாயிக்கு ஒன்னும் முழுக்க புதிதாகிவிடவில்லை. அதுவே சொல்லுகிறது போல், என்னைக்காவது ஒரு நாள் காத்தாயம்பா தலை வேற முண்டம் வேறயா வெட்டி எடுத்துகிட்டு சுப்பாக் கரமுண்டார் இதே ஊருக்குள், இதே அஞ்சினிக்குள்ள நுழைவாராயிருக்கும். அப்போ காத்தாயம்பா கையில ரெண்டு வயசோ மூணு வயசோ கழிச்ச ஒரு குழந்தைகூட இருக்கலாம். தினமும் தொரச்சியப்பாயி இது தானே சொல்லுது. எத்தனையோ தடவ ஏங்கி ஏங்கி கேட்டப்போ, தனக்கு தரமாட்டேன்னா. ஆனா

கலியன்கூட ஓடினதும், வாரி குடுத்துட்டா. தனக்கு எங்கியோ கோளாறு இருக்குன்னு தோணுது தெலகராஜுக்கு. ஒவ்வொரு தடவ பள்ளக்குடியில ஓடி ஒளியும் போதும், இதே ஒவ்வொரு பள்ளப் பொண்ணுவகிட்டயும் பரிசோதிக்காம, தெலகராஜுவால் இருக்க முடியவில்லை. ராத்திரி பகலா தொரத்திக்கிட்டும் ஒருத்தன ஒருத்தன் வெட்டிகிட்டும், அலைஞ்சப்போ, இவனெ கொண்டு

போயி ஒரு செங்கல் சூளையில ஒளிச்சாளே நாச்சி மவ சோணை, அவகூட கடைசி வரைக்கும் இவன் இருந்த இடத்த சொல்லவே இல்லெ. போலீஸ் ஸ்டேஷன்ல நாச்சியையும் அவ மவெ சோணையையும் மூணு நாளா, போட்டு புரட்டி எடுத்தும் சாதாரணமா, அஞ்சாவது நாள் வந்து சேர்ற வரைக்கும் யார் மூலமாகவாவது அவனுக்கு சோத்து மூட்டை வந்துகிட்டே இருந்தது. எல்லாந்தான் முடிஞ்சு போச்சுன்னு இவளுகளை எல்லாம் விட்டுட்டு எஞ்சியாவது தொலைஞ்சா என்னன்னு அவனுக்குத் தோணாம இல்லெ. ஆனா தெலகராஜுவும் அங்கியிருந்து போய்ட்டா அப்பறம் இவளுகள இந்த போலீசும், இந்த நீதி நியாயங்களும் சும்மா விடாது. துரத்தி துரத்தி இந்த பொண்ணுங்களை நீ கீழ் ஜாதி இல்லேன்னு சொல்லி சொல்லியே இன்னும் கீழ் ஜாதியாக்கிவிடும். போலீஸ் ஸ்டேசனுக்கு போறப் பொண், இந்த சமதர்ம சமுதாயத்துல என்ன ஆவா? என்ன ஆவாளோ, அந்த சமத்துவ பாவத்துல அவளும் சமமாகி போவா, அது நமக்குத் தெரியாம போனாலும் மாஞ்சிக்கும் சோணைக்கும் நல்லாவே தெரியும். மாயி, பாவம். இதெல்லாம் விட்டுட்டு எங்கேயோ கூப்புடுறா. அங்க போக தெலகராஜுவுக்கு ஆசைதான். ஆனா அஞ்சயும் இதே சமுதாயம்தான், வேற பேருல காத்துகிட்டு இருக்கு, அப்படின்னு ஏனோ ஒத்துக்க மாட்டேங்கிறாங்க. மாயி இன்னிக்கி ராத்திரி வரும் போது நிச்சயமா அவள் கிட்ட சொல்லிடணும், இனிமே இஞ்ச வராதேன்னு. போன்னு சொன்னா போதாது. இந்த காலத்துலயும் கூட நம்ப ஒண்ணா வாழ முடியாது அப்படின்னு சொல்லணும். யாருக்காவது தோணும். இனி ஒரு வாழ்க்கை வேணும். முழுசும் சுத்தமா, முழுசும் அறிவார்த்தமா, முழுசும் சுதந்திரமா, யாருடைய கட்டுப்பாட்டுக்கும் இல்லாம முழுசும் நமக்கே நமக்கு. நாம் விரும்புற வாழ்க்கை. நமக்கே இது முழு நியாயமா, முழு சந்தோஷமா, யாரையும் ஏமாத்தாத, யாரையும் வற்புறுத்தாத, முழுக்க முழுக்க எல்லாருக்கும் சம்மதமாய், ஒரு கற்புடைய வாழ்க்கை வாழணும். அதுக்குத் தேவையான ஒரு சமூகத்தை உருவாக்குவதற்கேனும், நான் அவர்களுக்கு கற்பிக்க வேண்டாமா?

நாச்சிக்கும் சோணைக்கும் இப்படி கண்டவனோடல்லாம் படுத்து புரளணுமுன்னு ஆசையா? இல்லை தெலகராஜுக்குத்தான் அப்படி ஒரு முறையில்லாத வரையில்லாத ஆசையும் பெண் வெறியுமா? இல்லெ கள்ளனுவளுக்குத்தான் இப்படி அழிமானம் கழிமானமும் செய்து, கண்ணில் பட்ட பெண்களை எல்லாம் காலில் போட்டு துவைக்க வேண்டும் என்ற வெறியா? அது எல்லாம் ஒன்றும் இல்லை. தெலகராஜு நினைத்துக்கொண்டான். இந்த சமூகத்தில் இன்னும் நூற்றாண்டுகளுக்குப் பின் அந்த மாதிரி ஒரு சமாதானமான வாழ்க்கையும் காதலும், ஆசையும், பாசமும், ஆண்களிடையும், பெண்களிடையும் சாத்தியமேயில்லை என்றுதான் தோன்றியது. இல்லையென்றால், காத்தாயம்பாள் மூடி மூடி வளர்ந்த அவள் ஆசையை, அவளே ஏமாற்றிக் கொண்டு எங்கோ ஓட வேண்டும் என்று என்ன தலைவிதி? பாதுகாப்பாக பத்திரமாக கள்ள வூட்டு குட்டியாக கரமுண்டாரு வூட்டு குலதெய்வமாக இருந்தது போல் இருக்க, அவளுக்கென்ன கஷ்டம்? உலகத்தில் பெரும்பாலான பெண்கள் இந்த பயத்திலும் பாதுகாப்பிலுமே, பத்திரமாய் அவர் அவர் வூட்டு மூலை இருட்டில் அவர் அவர் குடும்பத்துக்குள் ஆசைகளைப் புதைத்துக்கொண்டு வாழாமலா இருக்கிறார்கள்? ஒழுக்கமாக, ஒழுங்காக, அடிமைகளாக வாழ ஆசை இல்லை. அதனால்தான் தன்னிடம் இருந்து காத்தாயம்பா பறந்து போய் விட்டாள். இது இன்று எல்லா சமுதாயத்திலும் உலகம் முழுவதிலும் நடந்து வருகிறது. தன்னில் இருந்தே விடுதலை அடைய ஒவ்வொரு பெண்ணும் துடிக்கிறாள். யாருக்கும், யாருடைய வாழ்க்கையிலும் பிடித்தமாக இல்லை. மாயி தன்னைச் சுற்றிய சுழல்களை எல்லாம் கழற்றிவிட்டு மேலேறிப் பறக்கத் துடிக்கிறாள். அதற்கொரு துணைதான் தெலகராஜு. ஆனால் தெலகராஜு ஆகிய தான் தன்னைவிட்டுதான் வெளியேற முடியாதபடி தன்னையே செய்திருக்கிற இந்த அஞ்சினியின் கரமுண்டார் வூடு இன்னமும் அவனுக்கு ஆச்சரியமாகவே இருந்தது. தான் பிறக்காத ஊர் என்றாலும், இந்த ஊர் எப்படி அவனோடு ஒட்டிப்போய் ஒன்றாகிப் போனது ஆச்சரியம். இந்த ஐந்தாறு மாதத்தில் தனது உள் உள்ளத்தை தனக்கே காட்டிய ஆச்சரியம், இன்னும் பயம் தந்தது. இந்த இருபத்து ஓராம் நூற்றாண்டிலும் முழுக்க முழுக்க அவனை அப்படியே பச்சையாக, அவன் உண்மை உருவத்துடன், அவனை நேசித்து, இந்த ஒன்று அறியாத பெண்கள், அவர்களின் வெறி கலந்த மனித ஆசை, உலகத்தின் எந்த மூலைக்கும் போனாலும் கிடைக்காத அவர்களின் ஆவேசமான ஈடுபாடு, வெட்டிப் பிரித்துக் கொண்டாலும் கூடவே

ஓடி வரும் இந்த குழந்தை போன்ற பிடிவாதம், அவனைத் திக்கு முக்காட வைத்தது.

இரவு வெகு நேரமாகி விட்டது. இருட்டில் யாரோ வருவது போல் தெரிந்தது. இரண்டு மூன்று மாதத்தில் இலுப்பைத் தோப்பில் பெரிய மாற்றங்கள் நிகழ்ந்திருந்தன. யாரும் வராததால் ஒற்றையடி பாதைகள் புல் வளர்ந்து மேடாகிப் போயின. மரங்களின் இடையில் தன்னிச்சையாக வளர்ந்த குத்துக் கள்ளிச் செடிகள் மேலும் வளர்ந்து, உயர்ந்து, பூத்துக் குலுங்கின. கள்ளிப் பூக்கள் ஆச்சரியமானவை. வெண்ணிறத்தில் செம்பளவில் இரண்டு கைகளையும் விரித்தாற்போல் குத்துக் கள்ளிச் செடிகளின் உடைந்து பூத்து தேன் சொரிந்தன. மகரந்தத்தின் வெறி எங்கும் படர்ந்து கொண்டிருந்தது. நிலவு ஒரு கீற்று வெளியிலும், பாதி உடலை உள்ளுக்குள்ளும் மறைத்துக் கொண்டு வெளிக்காட்டிய பாதி உடலை, ஒளி உடலாக ஆக்கி, இலுப்பைத் தோப்புக்குள்ளும், பால் வழிந்த போல் மயங்கிக்கொண்டிருந்தது. இடுக்கில் ஒரு சல்லடத்துடன் கயிற்று கட்டிலில் படுத்திருந்த அவனை நோக்க வந்தது யார்? இருளிலும் அடையாளம் தெரியும் அவனுக்கு. வந்தவளை இனங்கான சற்று நேரம் ஆகியது. வந்தவள் நடந்து வரவில்லை. ஓடிவந்தாள். புயல் போல் அவன் மேல் பாய்ந்தாள். நிலவில் அவள் தலை முடி மினுங்கியது. அவளது நெற்றியும், சின்னஞ்சிறிய பொட்டும் திருநீற்று குறியும் அவள் கழுத்தில் கட்டியிருந்த தாமரைப்பூவும் வெற்று மேனியும், அவனுக்கு பழக்கமான சோணைதான் அவள் என்று உணரும் முன் "இன்னக்கி ராவைக்கு ஒன்னெ இலுப்ப காட்டுல வெச்சு கண்ட துண்டமா வெட்டி போடப் போறனுவளாம் பள்ளனுவ. ஓடிப்போய்டு மச்சான். ஆதிரியாரு வூட்டுல பேசிக்கிட்டானுவ பள்ளக்குடிக்கி கள்ளனுவ தகிரியமா மேய வரமாட்டானுவ. ஒன்னெ வெட்டிப்போட்டாதான் இனிமே, பள்ளக்குட்டிவளுக்கும் பயம் வரும்ன்னு சொன்னானுவ. மாஞ்சியையும் வெட்டப் போறானுவ ஆள் சேர்ந்துடுச்சு. அதுதான் ஒங்கிட்ட சொல்லிட்டுப் போலாம்ன்னு வந்தேன். என்ன தொரத்திகிட்டும் வந்தானுவ மாமோவ். நான் தப்பிச்சிகிட்டு கவரமேட்டு பக்கமா போக்கு காட்டிட்டு அப்படியே ஆய்குடி வரைக்கும் ஓடிப்போயி ஒளிச்சு காட்டி அப்புறமாதான் ஊரெக் கோலிகிட்டு இஞ்ச வர முடிஞ்சது. இனிமே அஞ்சினியில இருக்காதே மாமா. பெய்யிடு. ஒங்க ஆயிதான் பெய்ட்டுதாமுல்ல. ஒங்க அப்பனும் ஆயியும் வெச்சு தாங்குறதுக்கு காத்துகிட்டு இருக்குறப்போ, இஞ்ச எதுக்கு பள்ளக்குடி சுத்திகிட்டு திரியிற? நம்ப ஊரு கள்ளனுவ இனிமே ஒன்னெ காப்பாத்த

மாட்டானுவ. ராத்திரியோட ராத்திரியா மாஞ்சிய காணாப் பொணமாக்கிடுவானுவ. மாஞ்சி தப்பணும்னா செம்பாட்டம் பள்ளன் எவனையாவது ஒடனே தாலியைக் கட்டிக்கணும். நீ மாஞ்சியை வெச்சிகிட்டா அவளெ காப்பாத்தவாவது செய்யணும். ஆனா நீ மாஞ்சியையும் நட்டாத்துல வுட்டுட்டே..."

"போதும் நிறுத்துடீ. என்னெ காப்பாத்திக்க எனக்குத் தெரியும், எவன் வேணும்ன்னாலும் வரட்டும். எவ யாரெ வேணாலும் கட்டிக்கிடட்டும். நான் என்ன பண்ண? மாஞ்சியெ நான் வெச்சிகிட்டு இருக்கல. அவதான்டி என்ன வெச்சிகிட்டு இருக்கா. எல்லாரும் நெனச்சிகிட்டு இருக்கானுவ. ராமுக் கரமுண்டார குத்தி தள்ளுனது பள்ளனுவ. கண்டந்துண்டமா கூறுபோட்டது பள்ளனுவன்னு எல்லா பயலும் நெனைச்சுகிட்டு இருக்கான். போலீஸ்லயும் அப்படித்தான் நம்பிகிட்டு இருக்கானுவ. ஆனா ராமுக்கரமுண்டார, என் சொந்த மாமன வெட்டி சந்து சந்தா கூறு போட்டது நான்தான்."

"மகமாயி" அலறினாள் சோணை.

"பின்ன என்ன, சத்தம்போடாத... யாருகிட்டயும் நீ வாய் உட்டுடாத. நானும் இன்னொரு ராமுக்கரமுண்டாருதான். பள்ளக்குடி நத்தைக் கறி ருசியும் சேத்து மீனு ருசியும் கவர்ச்சியும் எனக்கு பழக்கிவிட்டவரே ராமுக்கரமுண்டாருதான். ஆறு மாசத்துக்கு முன்னாடி வந்த வேகத்தோட எனக்கு கல்யாணம் பண்ணியிருந்தானுவன்னா, இந்த கெதி ஆகியிருக்கமாட்டேன். காலம் மாறிடுச்சு. மனுஷங்க சடங்கு, ஜாதி, சம்பிரதாயம், எல்லாம் மாறிடுச்சுங்கிறாங்க. ஆனா நானும் மாறலெ. நீயும் மாறலெ. வேற பேரு வேற உருவம் மாதிரின்னு மாறியிருக்கும். நான் கொலை பண்ணுவேன்னு யாராவது நம்புவாங்களா? நீ நம்புவியா?"

"இல்ல மச்சான் நீ செஞ்சிருக்கவே மாட்டெ"

"என்னா உறவுலடீ என்ன மச்சான்னு கூப்புடுற? இப்படித்தான் ஆண்டெ. ஆண்டென்னு கூப்புட்டீங்க ராமுக்கரமுண்டாரு ஒங்க எல்லாருக்கு என்ன மச்சானாக்கிப்புட்டாரு. கட்சிகாரனுவ எல்லாம் கிராமத்துல வந்து பூந்து, கள்ளன் இல்ல, பள்ளன் இல்ல, ஜாதி இல்லன்னு எல்லா ஜாதியையும் குத்தி கொலப்பிவிட்டு நான் ஒஸ்த்தி, நீ மட்டம்ன்னு ஒருத்தன ஒருத்தன் குத்தி உட்டானுவ. ராமுக்கரமுண்டாரு மட்டும்தானா பள்ளக் குடியெ கோலி திரிஞ்சாரு. எங்க பாட்டன் பூட்டன் வையாபுரி கரமுண்டாரு மட்டும் பத்து பள்ளச்சியெ வெச்சிருந்தாராம். பத்து பள்ளச்சிவளும்

கரமுண்டாரு வூட்டுக்குள்ளதான் இருந்தாளுவளாம். அவுங்க எல்லாம் படிச்சவங்க இல்லெ. யாரு ஒஸ்த்தி, யாரு மட்டம்ன்னு கொழப்பமே இல்ல அவுங்களுக்கு. இப்போ எல்லாரும் சமம். எல்லாரும் ஒண்ணுன்னு எல்லாரும் பேசுறாங்க. ஆனா யாரு ஒஸ்த்தி, யாரு மட்டம் இந்த கேள்வி மட்டும் என்னைக்கும் இருக்கு. எவன் ஜெயிக்கிறானோ, அவன் மட்டம். பள்ளப் பயலுவ என்னெ குத்தணும்ன்னு வெட்டி சாய்க்கணும்ன்னு வந்தானுவன்னா வரட்டும். நான் தான்டா வெட்டுனன் ராமுக்கரமுண்டார. நாந்தான் வெட்டுனன் அப்படீன்னு சொல்லுவேன்"

"ஏம் மச்சான். சத்தியமா சொல்லு ராமுக்கரமுண்டார நீயா வெட்டுன? ஏங்கிட்ட மட்டும் சொல்லிப்புடு..." கண்களில் நீர்வழிய கெஞ்சினாள் சோணை. அவள் மார்பு விம்மி விம்மி தணிந்தது.

"ஏன் நம்பமுடியலியா? முட்டாள்களாலெ எதையும் நம்ப முடியாது"

"அப்போ போலீஸ்ல நீ மாட்டிகிட்டின்னா நான் என்ன பண்ணுவேன் மச்சான்?"

"மட்டி கழுதெ, நீ ஏம் பொண்டாட்டியா மாரடிச்சு அழ? இன்னைக்கி ராத்திரி நீயே சொன்னாப்பல பள்ளனுவ என்ன சந்து சந்தா வெட்டி குமிச்சா அப்ப மட்டும் மாஞ்சியும், ஓங்க ஆயியும், மாயியும் என்னா பண்ண போறாங்க? காத்தாயி ஓடிப்போனாளே, அதெகூட நான் நம்பல. கலியன் இழுத்துட்டுப் போனாங்கிறாங்க. அதுலகூட எனக்கு நம்பிக்க வர்லெ. இந்த ராத்திரி வேளை என்ன வெட்டப் போறாங்கன்னு ஓடி ஓடி வயிறு எரியிற மாதிரி வந்து எனக்கு தகவல் சொல்றீயே, இதெல்லாம் யாரும் யோசிச்சு திட்டம் போட்டு அமைப்பா அமைஞ்சதில்லெ. நீயி, ஓங்க ஆயி, நாச்சி எல்லாம் எம் மேல இப்படி ஒரு பேய்த்தனமான ஆசை வெச்சுகிட்டுத் திரியுறிங்களே, இதுக்கெல்லாம் ஏதாவது காரணம் இருக்கா என்ன? நிச்சயமா இல்லெ. ஒசந்த ஜாதிகாரன் அப்படீங்கறதக்காக நீங்க ஓடி வர்றிங்களா? இல்ல நிச்சயமா இல்ல. இதெல்லாம் வேற எப்படியும் நடக்க முடியாது. ராமுகரமுண்டார நான் குத்தாட்டா, அவரு என்னெ குத்தி தள்ளியிருப்பாரு. அதுதான் நடந்திருக்கும். நான் ஒன்னெ தூக்கி களத்து மேட்டுக்குப் போகலன்னா ராமுகரமுண்டாரு, கொண்டு போயிருப்பாரு. பாவம் ராமுக்கரமுண்டாரு புரியாமலேயே தனக்கு விரோதியா, போட்டிக்கி–அவரே தெரிஞ்சிக்காமெ என்னெ தயார் பண்ணிட்டாரு."

"போதும் மச்சான் இனிமே இஞ்ச இருக்காதெ ஓடிப் பெய்யிடு. அஞ்சினிக்கே வராதெ எஞ்சியாவது ஓடிப் பெய்யிடு."

"எஞ்ச ஓடினாலும், இனிமே நான் தப்ப முடியாது. கள்ளனுவளும் என்னெ வெட்டித் தள்ளணும்ன்னு யோசிக்க ஆரம்பிச்சிட்டானுவ. இவனுவளுக்கு என்னமோ வெட்டுறதும், குத்துறதும் சர்வ சாதாரணமாய் போச்சு. இது வரைக்கும் அம்பது அறுபது கள்ளனுவளெ குத்தி தள்ளியாச்சு. எவன் எவனோ நான்தான் குத்துனேன்னு கோர்ட்டுல போய் சாட்சி சொல்லிக்கிட்டு இருக்கான். போலீஸ் சுத்திச் சுத்தி வந்து என்னுகிட்டே விசாரிச்சுகிட்டே இருக்காங்க. எல்லாருக்கும் உண்மை என்னன்னு தெரியும். பள்ளனுவ சொல்லமாட்டானுவ. சொன்னாலும் கள்ளனுவ இல்லேன்னுடுவானுவ. யாருக்கும் உண்மை வேண்டாம்."

"நீயும் உண்மையச் சொல்லிடாத, மாமாவ். எங்கிட்ட சொன்னாப்ல வாயெ தெறந்து யாருகிட்டேயும் சொல்லாத. வேண்ணா நான் போய், போலீஸ்ல நான்தான் குத்துனேன்னு ஒப்புத்துக்கிறேன். நீ தஞ்சாவூரு சீமைக்கி ஓடி பெய்யிடு" அவள் சொல்லிவிட்டு கண்களைத் துடைத்துக் கொண்டு பிழிய பிழிய அழுதாள்.

"அழாதேடி முண்டம், ஒன்னோட ஒப்பாரிய கேட்டுட்டுதான் எவனாவது வந்து என்னெ புடுச்சு இழுத்துக்கிட்டு போப்போறான். பாத்துக்க"

"எவனாவது வந்து, ஒன்னெ புடிக்க வந்தா அவனெ இதே எடத்துல இதால சொருவிப்புடுவேன் சொருவி" என்று கூறியபடியே தன் வயிற்றுக்கடியில் மறைந்து வைத்திருந்த குத்துவாள் ஒன்றை எடுத்துக் காட்டினாள் சோணை. அந்தக் குத்துவாள் அந்த இலுப்பைக் காட்டு இருட்டிலும் சோணையின் கண்களைப் போலவே பளபளத்து மின்னியது.

"இப்படியே இந்த கத்தியை புடுங்கி ஒன்னெ ஒரே குத்துலெ குத்தி, ஆத்தோர நாணல் காட்டலெ எறிஞ்சுட்டா என்னன்னு எனக்கு வெறி வருது" என்றான் தெலகராஜு.

"குத்து மாமா, ஒரு பக்கம் பள்ளனுவ தொரத்திகிட்டு இருக்கானுவ. இன்னொரு பக்கம் கள்ளனுவ இளுத்துகிட்டு இருக்கானுவ. ராமுக்கரமுண்டாரு உயிரோட இருந்த வரைக்கும் ஒரு பய இந்தாடின்னு கூப்புட்டது இல்லெ. தைரியமா ஒருத்தனும் கண்ணடிச்சதும் இல்லெ. ஏன்னா நானு கருப்பு கரமுண்டாரு

பள்ளச்சி. கள்ளனே நெனைச்சாகூட எவனும், திலும்பி பாக்க முடியாது. இப்ப நானு நாயி திங்கிற கறியாகிப் போனேன் மாமா. போலீஸ்காரன் இளுத்துகிட்டு போறான் மாமா. பஞ்சாயத்துன்னு சொல்லி பள்ளக்குடி ஆலமரத்துக்கு பள்ளனுவளும் இளுக்கிறானுவ. ஜாதி இல்லெ, ஜாதி இல்லென்னு நம்ப ஊருக்கு வர்ற கட்சிக் காரனுவளும் ரோட்டு தெருவு எஞ்சன்னாலும் சரி கேலி பேசுறான், பின்னால சிமிட்டா கொடுத்து கூப்புடுறான். நீயி 'ச்சீ'ப் போடீங்கறே. ஏன்டி வர்றேங்கிறே. போய்த் தொலையலாம்ன்னா எங்க ஆயிக்காரி செம்பாட்டம் பள்ளனுவளுகிட்ட ஆளு பார்த்து கட்டி கொடுக்க அலையிறா. எல்லாப் பய மவனுக்கும் ஏம் மேல கண்ணு இருக்கு. கட்டிகிட்டாலாவது அவனோட போகலாம்ன்னு பார்த்தா அவனும் சும்மா வுடமாட்டான். ஆயி வூட்டுக்கும் பள்ளக்குடிக்குமாய் அலைய வுடுவானுங்க. ஒரு புள்ள பெக்குற வரைக்கும் சோறு கெடைக்கும், அப்புறம் எல்லாப் பயலும் தொரத்த தொரத்த இஞ்சயும் அஞ்சயுமா ஓடி ஓடி பொணவாசலுக்கு ஓடினாளே செல்வி, அது மாதிரி நாதியத்த நாயா அலையணும்."

"பின்ன ஏன் என்னெ கோலிகிட்டு சுத்தற. நான் எக்கேடு கெட்டா என்னா? எஞ்சியாவது போயி பள்ளனுவ சொல்லுறபடி கேட்டு பொளச்சு போ. என்னெ சுத்தாதெ என்னெ யாரும் காப்பாத்த முடியாது."

"நான் காப்பாத்துவேன் மாமா. நீ மின்னடி போயிகிட்டேஇரு சூரிக்கத்தியோட இருட்டுள்ள நானு ஒனக்கு காவலா வந்துகிட்டே இருக்கேன். இன்னைக்கி ராத்திரிக்குள்ளாற எத்தினி பொணம் வுழுவுதுன்னு பாக்குறேன். கடைசி மூச்சு இருக்க வரைக்கும் ஒரு பய ஒன்னெ தொட முடியாது. குத்தி தள்ளிட மாட்டேன்"

"இன்னும் செத்த நேரத்துல நீ சொல்றாப்பல மாஞ்சியெ பள்ளக் குடியில வெச்சு போட்டு தள்ளிட்டா, அவ கைப்புள்ளெ இதே அஞ்சினியிலெ அனாதையா சோத்துக்கு அலையும். அதுக்கு என்னாப் பண்ணப் போறெ?"

"என்ன என்னா இளுச்சவாச்சின்னு நெனைச்சியா? அவளை பங்கிடு பண்ணாம இஞ்ச வருவனா நானு. ஒன்னையும் அவளெயும் ஆத்துக்கு அக்கரைக்கி கொண்டு போய் சேத்துட்டுதான். இந்த ஒடம்பு கீழ விழுவும்" கையில் இருந்த கத்தியை ஓங்கி சுழற்றினாள். இருட்டுக்குள் யாரையோ எதிர்பார்த்து நின்ற அந்த பள்ளக்குடிக்குப் பெண் சோணை, அந்தக் கணத்தில் மனுஷப் பிறவியாகவே தெலகராஜுக்கு தோன்றவில்லை. இல்லென்று

அடித்த காத்தில் ஒருவித மழை குணம் தெரிந்தது. இவள் சொல்வதிலும் மனம் லயிக்கிற அளவுக்கு அவள் மேல் ஆறாத ஒரு வேக வெறி பிறந்தது. சோணையின் தலையில் சூடியிருந்த இருளில் அவள் கழுத்தில் கிடந்த பெரிய தாமரைப் பூ மணம் இலுப்பெண்ணெய் வாசனையுடன் அவனைத் தாக்கியது. இலுப்பைத் தோப்பின் விசேஷம் அது. தோப்பு முழுவதும் அடர்ந்து இருட்டு அவர்களைத் துரத்துவது போல் இருந்தது. தூரத்தில் பறக்குடியில் இருந்து வயல்களுக்கு மத்தியில் பறையைக் காய்ச்சி கொட்டும் பறையோசை 'டனக்கு டனக்கு' என்ற தெறிப்பாக எழுந்து கொண்டிருந்தது. படித்த படிப்பெல்லாம் எப்படி அவனுக்கு உதவாமல் போயிற்றோ, அது போலவே அவனது சக்தி எல்லாம் இந்த பெண்ணைக் காப்பாற்ற எந்தவித சக்தி இல்லாமலே போயிற்று என்பது பயங்கரமான சோகத்தை அவனுக்குள் உந்தியது. எல்லாம் கனவு போல் ஏதோ ஒரு அர்த்தத்துடன் ஆனால் அர்த்தம் கண்டுபிடிக்க முடியதபடி இலுப்பைக் காட்டு இருள் போல் கவிந்து இருந்தது.

"மாமாவ் செம்பாட்டனுவ"

"வரட்டும்"

"வா ஓடிடுவோம், அவன் கையில அம்புட்டுயின்னா..."

"வரட்டும். நான் ஓட முடியாது. ஓடினா போலீஸ் புடிக்கும். கள்ளனுவளும் காத்துகிட்டு இருக்கானுவ. நின்னு எல்லா பயளுவளயும் குத்துவேன். நானு இப்ப தெலகராஜு இல்ல. ராமுகரமுண்டான் சீடன். வாத்தியாரையே ஜெயிச்சாச்சு. இந்த பயலுவ எனக்கு பெரிசில்ல."

பேசிக்கொண்டு இருக்கும்போதே சோணை நாலு புறமும் விருவிருவென்று இருட்டுக்குள் குத்துவாளைப் பாய்ச்சினாள். ஒரே நேரத்தில் நான்கு புறம் இருந்தும் இலுப்பைக் காட்டு இருளில் நான்கு பேர் 'ஆ வென்ற ஒலியுடன் சாய்ந்தனர். எங்கிருந்தோ இருட்டில் பாய்ந்த வேல் கம்பை தன் தோளில் இருந்து பறித்து எடுத்து வேல் கம்பையே சிலம்பாக, கழியாக சுழற்ற ஆரம்பித்தான். சுற்றிலும் எத்தனை பேர் என்பது சிலம்பத்தில் கணக்கு இல்லை. ஒரு கல் எறிந்தால் அந்த கல்கூட கழியில் பட்டு தெறிச்சோட வேண்டும். அவன் வாத்தியார் சின்ன வயசிலேயே அவனுக்கு இதைப் பழக்கியிருந்தார். நாலு பேர் சுற்றிலும் இருந்து வாளியில் இருந்து குவளைகளில் தண்ணீரை எடுத்து விசிறி அடிப்பார்கள். ஒரு பொட்டு தண்ணீர்கூட தெலகராஜு மேல்

படாது. சிலம்பு கழியில் பட்டுதான் நான்கு புறமும் தெறிக்கும். கல்லூரியில் அவனுக்கு இந்த வித்தையால் பெரிய பாராட்டும் புகழும் உண்டு. மடு கட்டுதல், மடுவலைப் பின்னுதல் என்று சிலம்பகூடத்தில் சொல்லுவார்கள். ஒரே குச்சியால் பின்னுகிற மடு, வூடு கட்டி அடிக்கிற மடு, என்றெல்லாம் சொல்வதுண்டு. தாத்தா கரமுண்டாருடன் சிறுவயதிலேயே கம்பெடுத்து சுற்றி எல்லாரையும் அயரடித்தவன் தெலகராஜு. இலுப்பைக் காட்டு இருட்டுக்குள்ளே அவனைச் சுற்றி எத்தனை பேர்? தெரியாது. தெரிய வேண்டாம். தோலில் குத்திய வேல் கம்பு, இரும்பு உறையுடன் நல்ல கனம். ஆனாலும் தெலகராஜு தன்னைச் சுற்றி உள்ள சமுதாயத்தை–தன்னைச் சுற்றிய எதிரிகளை–தன் எண்ணத்தை சுற்றிய பகைவராய் உருவகப்படுத்திக் கொண்டு சிலம்பக்கழியை மின்னல் வேகத்தில் சுழற்றுவது போல் வேல் கம்பை சுற்றினான். பக்கத்தில்இருந்து சோணையைக் காணோம். உற்றுப் பார்க்க நேரமில்லை. நான்கு புறங்களிலும் சுருளி கத்திகள் சுழலுகின்றன. தீட்டப்பட்ட நீண்ட சுருள்கள் அவை 'கரச் கரச்' என்ற சுருளிக் கத்தியின் சுழல் தெலகராஜு தலைக்கு மேல் சுழன்றன. இருளின் அந்தகராத்தில் சோணையின் குத்துவாள் யாரோ ஒரு பள்ளனின் வயிற்றுக்குள் புகுந்து நின்றது. 'ஆ' வென்று அலறல் கிளம்பும் முன் இன்னொருவன் கழுத்தில் தெலகராஜு. அவன் கையில் சுழலும் சிலம்பம் அவனுக்கு தன்னை எதிர்த்து கம்புகளைச் சுழற்றிக் கொண்டிருப்பவர்கள் இருபது அல்லது இருபத்தைந்து பேராக இருக்கலாமோ என்று தோன்றியது. ஆனால் அவர்களுக்கு பின்னும் இருளில் பலர் கம்புகளோடு நின்றன். சிலம்பம் என்பது ஒருவித சாகசப் போர். அதை வேல் கம்பை சுழற்றும் போதே உணர்ந்தான் தெலகராஜு. ம்..... ம்..... ம்..... என நாலா புறங்களிலும் கம்பு சுழற்றி வருபவர்கள் அதிகமாகி வருவது போல் இருந்தது. நிச்சயம் இந்த சண்டையில் அவர்கள் அத்தனை பேரையும், ஜெயித்துவிட முடியும். முழுநேரமும் இந்த பள்ளர்கள் தெலகராஜுவுடன் சிலம்பம் சுழற்றிக் கொண்டு இருக்கமாட்டார்கள். ஆனால் சண்டையில் நெறுங்கி வந்து, அவனை வளைத்துப் பிடித்து, சண்டைக்கிடையிலேயே அத்தனை பேருமாக அவன்மேல் விழுந்து, அமுக்கி பிடித்து அவனை வெட்டித் தள்ளி அவனை அள்ளிக்கொண்டு போகப் போகிறார்கள் என்று தெலகராஜுக்கு தலையில் மின்னல் அடித்தது. தந்திரம் புரிந்ததும், அவர்கள் தந்திரத்தை ஒரு மந்திரத்தால் ஜெயிக்க போகிற எக்களிப்பு கள வெறியும் வெறியும் தெலகராஜுவின் உள்ளத்தில் 'குபீர்' என்று எழும்பியது. சிலம்பத்தின் கர்ணம்

என்பது அற்புத ஆச்சரிய வித்தை. நெஞ்சுரம் தைரியமும் உள்ளவர்களிடம்தான் ஒருவன் கடைசி வரை சிலம்பம் ஆட முடியும். ஆயிரம் பேர் சுற்றி நின்று நென்றியுடன் சட்டங்களை அனுசரித்து கழியெச் சுழற்றினால்தான் போராடலாம். தந்திரத்தால் ஒருவனை மேலே விழுந்து பிடித்து வெட்ட முயன்றால் இங்கே கழி சுற்றிக் கொண்டிருக்க முடியுமா? கையில் இருப்பது சிலம்பக் கழி இல்ல. குந்தம் என்னும் வேல் கம்பு. கம்பின் நுனியிலே பட்டை தீட்டப்பட்ட வேல் சொருகப்பட்டிருக்கிறது. தந்திரம் புரிந்து பின்னர் பின் வாங்க முடியுமா? சிலம்பக் கழி இப்பொழுது குறுக்கு வாட்டில் இறங்கியது. திடீர் என்று பக்கவாட்டில் இருந்தவன் வயிற்றில் வேல் பாய்ந்தது. பாய்ந்த வேகத்திலேயே வேலைப் பிடுங்கி, இரண்டாம் மடு கட்டி சுழற்றியபடியே மின்னல் வேகத்தில் அடுத்தவன் நெஞ்சில் பாய்ந்தது. "அய்யோ" என்ற அலறலுடன் இரண்டு சடலங்கள் விழுந்தவுடன், சுற்றி சுழன்று வந்த சிலம்ப கூட்டம் கழிகளுடன் பின் வாங்கின. மரண கோலமும், ரத்தச் சிதறல்களும் இருட்டில் எல்லாருக்கும் புரிந்தது. அடுத்து வந்த ஆறு பேர்களின் வயிற்றை குறுக்கில் பிளந்தபடி, வேல் கம்பு இப்பொழுது நடு மட்டத்தில் சுழன்றது. விம்மும் நேரத்தில் ஏழாவது மனிதன் வயிற்றில் பாய்ந்தது. ஒரே நேரத்தில் வேல் கம்பாகவும் சிலம்பக் கழியாகவும் மாற்றி பிரயோகித்த அந்த விசித்திர தந்திரம் அவன் பூட்டனார் வையாபுரி கரமுண்டாருடையது. அவன் ரத்தத்தில் கலந்தது என்று தொரச்சியப்பாயி சொல்லும். வியர்வை காடாகப் பெருகி அவன் மேனி எங்கும் வழிந்தது. மாற்றி மாற்றி கால் வைத்து ஆடிய சிலம்ப நடனம், நாலு மூலை வூடுகட்டி சுழற்றி சுழலடித்த அவன் வீரம், நாலு மலைகளிலும் வியர்வையாய் கொட்டியது. வேல் கம்பு இப்பொழுது மின்னல் கம்பாய் ஆனது. ஆற்றுக்கு அப்பால்– வெகு தூரத்துக்கு அப்பால்–தார் ரோட்டில் திரும்பிய தஞ்சாவூர் கடைசி பஸ்ஸில் உட்கார்ந்து இருந்த மாயிக்கு இது தெரியுமா? உயிர் போராட்டத்தின் சிலம்ப ஓசை எட்டும் முன், காரின் வெளிச்சம் இலுப்பைத் தோப்பை அறுத்து வுள்ளே நுழைந்தது. கண நேர வெளிச்ச திருப்பலில் கண்கள் தன்னந்தனியே நின்று நாலைந்து பள்ளர்களுடன் போராடிக் கொண்டிருக்கும் சோணையை இனம் கட்டின. பதினெட்டு வயதுகூட நிரம்பாத சிறு பெண் அவள். நான்கு பேர் அவளை இலுப்பை மரத்தோடு சேர்த்து கழுத்தை நெறித்துக் கொண்டிருந்தார்கள். அவ்வளவுதான் கையில் இருந்த வேல் கம்பு சுழன்றபடியே அவர்களை நெறுங்கியது. தன்னை அறியாமல் நாலு மலை வூட்டில் இருந்து வேல்... கம்பை

தரையில் ஊன்றி தலைக்கு மேல் கர்ணம் அடித்துச் சுழன்று, அதே வேலை உருவி அந்த நால்வரின் முதுகிலும் கீறல் விழ, வேலைச் சுழற்றிக் குத்தத்தான் நினைத்தான் தெலகராஜு. என்ன நேர்ந்தது என்று அவனுக்கே தெரியாது.

"ஓடுறான் ஓடுறான் புடி புடி" என்ற கூக்குரல்கள் கேட்டன. வயல்களில் குதித்து பயிரை மிதித்துக்கொண்டு ஓடுவது தெலகராஜுவுக்கே ஆச்சரியமாய் இருந்தது. அவளை இழுத்துக் கொண்டு ஓடுவது லேசாய் இருக்கவில்லை. தோள்களில் இருந்து ரத்தம் வழிய, உயிரை கையில் பிடித்தபடியே அவர்கள் ஓட, பின்னால் இருந்து வரப்புகளில் ஆட்கள் துரத்தி வந்தனர். உயரமாக வளர்ந்து இருந்த கள்ளிச் செடிகளில் விழுந்தும், தாவியும், ஓடுவது தெலகராஜுவுக்கு பயங்கர வெறியையும் உத்வேகத்தையும் ஏற்படுத்தியது. உடம்பெல்லாம் கத்தாழை முட்கள், நாயுருவி கடுகு செடிகள் அறைபட, உடம்பில் குத்து கத்தாழை கள்ளிச் செடிகள் கீறி விளையாட, இருளில் அவன் கால்களுக்குச் சிறகுகள் முளைத்தன. அவள் ஓடி வருகிறாளா என்றுகூட பாராமல் இரும்பு பிடியால் அவளைப் பிடித்து இழுத்தெரிந்தபடி அவன் ஓடிக்கொண்டிருந்தான். கால்களின் சிறகுகள் ஓடும்பொழுதே சுருங்கிக் கொண்டன. ஆறு வந்துவிட்டது. இருட்டில் கரிய உருவங்கள் இன்னும் துரத்தி வந்தது, தெரிந்தது. ஆற்றில் விழுந்து தொடர்ந்து ஓடிப் போக முடியாது. எனவே ஆற்றில் இறங்காது நாணல் புதர்களுக்குள், இடுப்பளவு சேற்றில் அவளுடன் துளைந்து இறங்கி, ஆள் உயரம் உயர்ந்த நாணல்களுக்குள் உள்ளே முங்கி, கழுத்தளவு புதைந்து மறைந்து கொண்டான் தெலகராஜு. இப்பொழுதுதான் தோள்களின் வலி ரத்தத்தின் எரிச்சல் சேறுபட்டதும் புரிந்தது. அவனை இறுகத் தழுவிக்கொண்ட சோணை, "மாமா இஞ்சயே ஒளிஞ்சிக்கிட முடியாது. எப்படியும் இன்னைக்கி ராத்திரி பூரா நாம்பளத் தேடி குத்திபுடுவாங்க. சேத்துக்குள்ள எறங்கி தேடுவானுவ. நாணலும் சேறும் பள்ளக்குடிக்கு புதுசு இல்ல. அதனால நாணலுக்கு உள்ளேயே சேத்து வழியாகவே இப்படியே நவுந்து போயிகிட்டே இருக்கணும். ஆம்புட்டோம், தொலைஞ்சது. வெட்டி துண்டம் போட்டு இந்த சேத்துக்குள்ளேயே திணிச்சு வெச்சுடுவானுவ. இப்படியே நாணல் காட்டுக்குள்ளயே நீஞ்சிகிட்டே போயி ராத்திரி முழுக்க போக்கு காட்டிட்டா விடியாலம்பற அத்தனை பள்ளனுவளையும் வளைச்சிடலாம். ஆளு சத்தம் கேக்க கேக்க நவுந்துகிட்டே இருக்கலாம். நாணல் காத்துல அசைய அசைய இப்படியே நவுந்துகிட்டே இருக்க வேண்டியதுதான். தைரியமா

முன்னால நவுந்து போயிகிட்டே இருங்க. யாராவது வந்தா நான் பாத்துக்கிறேன். நாணல் அசையிறதுலகூட அவனுவ நம்மள கண்டுபிடிக்க முடியாது. தண்ணியையும் சேத்தையும் கலக்காம நவுந்துகிட்டே போங்க" என்று சொல்லிக்கொண்டு அவனை நகர்த்திக் கொண்டு இருந்தவளை வியப்புடன் பார்த்துக் கொண்டு நாணலுக்குள் துழாவியபடியே மறைந்து போனான் தெலகராஜு. அவனை முன் விட்டு, மெல்ல மெல்ல திரும்பி நகர்ந்துகொண்டே இருந்தாள் சோணை. பின்னால் 'திமு திமு' வென்று ஆட்கள் ஓடிவரும் ஒலியும் தீப்பந்தங்களின் ஒளியும் தொடர்ந்து கொண்டேயிருந்தன. முன்னே சென்ற தெலகராஜுவை இப்பொழுது காணோம்.

# கரமுண்டார் வூடு - 12

**வி**டிந்தது. மறுபடியும் பள்ளனுவ பந்தத்தோட ஓடாம இருக்குறதுக்கு போலீஸ் பள்ளக்குடி பக்கம் காவல் நிக்கிது. தெலகராஜுவை மாயி, மாஞ்சி எல்லாரும் படுகாயத்தோட தஞ்சாவூர் ராஜா மிராசுதார் ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கு. குத்துயிரும் கொலை உயிருமாய், சோணையும் அட்மிட் ஆகி இருக்கா. கலகம் இன்னும் ஓயலேன்னாலும் அப்ப அப்ப கொலை விழுந்துகிட்டேதான் இருக்கும். ரெண்டு பட்டுக் கிடந்த ஊரு, இனிமே பண்றதுக்கு ஒண்ணும் இல்லேன்னு ஆனப்பறம் கொஞ்சம் கொஞ் சமா அடங்குறது எல்லாருக்கும் தெரிஞ்சது. ரெண்டு மாசம் ஓயாத குத்து வெட்டு கலவரம். ஊருக்கு கலெக்டரு வந்து கேம்ப் அடிச்சு, எல்லாரையும் கூப்பிட்டு விசாரிச்சதுக்கு அப்பறம் கொஞ்சம் கொஞ் சமாய் அடங்குனுது. யாருக்கு யார் மேல கோபமுன்னு தெரியல. எல்லாருக்கும் எல்லார் மேலயும் எரிச்சலும் கோபமும் இன்னமும் எரிஞ்சுகிட்டுதான் இருக்குன்னு எல்லாருக்குமே ஞாபகம் இருந்தது. ஆனா பகை ஒடுங்கிடுச்சு. ஒரே நேரத்துல கரமுண்டாரு குடி ஒண்ணும் இல்லாம போச்சுன்னு எல்லாருக்கும் திகிலா இருந்தது. எல்லாருக்குமே கரமுண்டாரு குடி ஒண்ணும் இல்லாமப் போனதுல சம்மதம் போல் ஆகிப்போச்சு. அதக் காரணமா வெச்சு பள்ளனுவளும் பறையனுவளும் ஒருத்தன ஒருத்தன் வெட்டிகிட்டு, கட்சி ஆடறது... கோர்ட் ஏறிசாட்சி சொல்லி ஆட்டம் போட்டது. ஊரெ கொளுத்தி ஒருத்தன ஒருத்தன்

தீர்த்துகிட்டது இல்லாத பகையை நெஜமாகவே உருவாக்கி ஒருத்தன் தீர்த்துகிட்டது, இல்லாத பகையை நெஜமாகவே உருவாக்கி ஒருத்தன ஒருத்தன் பொசுக்கிட்டது, எல்லாருக்கும் நீண்ட காலமா நெலச்சு நிக்கிற கரமுண்டாரு குடி காரணமாப் போச்சோன்னு எல்லாரும் நெனச்சது, இப்ப எவ்வளவு பெரிய தப்பாப் போச்சு. பெரிய கரமுண்டாரு சந்திரஹாசன், கருப்பு கரமுண்டாரு ரெண்டு பேரையும பலி கொடுத்தாச்சு. கரமுண்டாரு வூட்ட தூணா தாங்கிட்டு நின்ன பங்களாளிக நாற்பது அம்பது ஆம்பளைவை... கரமுண்டானுவ பலியாகி அதை தொடர்ந்து இந்த ரெண்டு மாசத்துல சுத்துவட்டு கிராமம் முழுவதிலும் கிராமம் உள்பட பள்ளக்குடிவ எரிஞ்சும் பொசுங்கி போயி, இப்படி இவனுவ ஆடுற ஆட்டத்துக்குக் காரணம், என்னன்னு இதுவரைக்கும் சட்டத்தாலயும் அதிகாரத்தாலயும் கண்டு புடிக்கவே முடியல. ஏனோ தெரியலெ, ஜாதிக்காரன் தன் ஜாதிய குத்தம் சொன்னான். பள்ளனுவ கள்ளனுவ குத்தம் சொன்னானுவளே ஒழிய, இன்னாருதான்னு காட்டிக் கொடுக்கமாட்டானுட்டானுவ. ஊருக்கு புதுசா கலகத்தோட போலீஸ் ஸ்டேசன் வந்துச்சு. கலெக்டர் வர்றதுக்கு ஆத்து கரையோரமா புதுசா சிமெண்ட் ரோடு போட்டாங்க. பாதையோட எலக்ட்ரிக் லைட் வந்துச்சு. எலக்ட்ரிக் லைட் ஊருக்குள்ளயும் நின்னுகிட்டு இருக்கு.

கொலை, குத்து, வெட்டு, கலகம் இஞ்ச புதுசு ஒண்ணும் இல்ல. ஆத்துல தண்ணீ வந்தா மேல வயல் கீழ வயலுக்கு தண்ணீர் பாச்சுறதுனாலேயே முந்தி எல்லாம் இப்படி ஊரு ரெண்டு பட்டு போறதுண்டு. இப்ப கள்ளன் பள்ளன்னு ஜாதி பேரை சொல்லிக்கிட்டு ஊருல முன்னூறு நானூறு பேரு மேல கேசு, வாயிதா, ஈரங்கி எல்லாம் இருக்கு. தெலகராஜு மேலயும், நடுவ கரமுண்டார் மேலயும், ஏழெட்டு கொலை கேஸ் பதிவாயிருக்கு. வடுவாம்பா நாலஞ்சு தடவ வந்து தெலகராஜுவை தஞ் சாவூருக்கு கூப்பிட்டுப் பார்த்துட்டா. பள்ளனுவ மேல ஆயிரம் கேசுக்கு மேல பதிவாகியிருந்த கலவரம், அழிமானம், கொலை சம்பந்தமான எல்லா கேசுகளையும் நடுவ கரமுண்டாரு கொஞ்சம் கொஞ்சமா வாபஸ் வாங்கிட்டாரு. ஜாதி கலவரமுன்னுசொல்லி எந்த கட்சிக்கானும் உள்ள நொழஞ்சு போட்ட ஆட்டத்தை எல்லாம் நடுவ கரமுண்டாரு தலைய உட்டு ஒடைச்சிட்டாரு. கட்சிகாரனுவ இன்னும் வட்டம் நடத்தி எல்லாம் ஜாதி இந்துக்களோட சதி வேலைன்னுதான் விளக்கம் சொல்லிகிட்டு இருக்காங்க. அஞ்சினியில இப்ப யாருக்கும் கலகம் பண்ண

இஷ்டம் இல்லயோங்கிற அளவுக்கு, அமைதி வந்துடுச்சு. பள்ளப் பொண்ணுவ பழையபடி தைரியமா ஊருக்குள்ள வந்து ராவுத்தரு கடையில தனி கவுண்டர் வழியா சாமான் வாங்குதுவ. பழையபடி பெருமாள் கோவில்ல மணி அடிச்சு பெருமாளுக்கு நேரா நேரத்துக்கு தளிகையும், வெஞ்சனமும், சாத்துபடியும் நடக்குது. நாலு மாசமா அஞ்சு மாசமா மூடியே கெடந்த கள்ளக்குடிய வூட்டு கதவுகள் எல்லாம், தைரியமா தொறந்திருக்கு. கொஞ்சம் நாளாவே பயிர் செலவு பண்ணாமெ கரடு புடிச்சு கெடக்குற நெலம் எல்லாம், பள்ளனுவ எறங்கி வேலை செய்யிறானுவ. ப்பாலத்தடி டீ கெளப்புல இன்னும் பறையனுவ தனியாத்தான் ஒக்காந்து டீ குடிக்கிறானுவ. கரமுண்டார் வூடு 'ஜே ஜே'ன்னு பழையபடி இல்லென்னாலும் இடிஞ்சு வுழுவுல. திடீர்ன்னு ஒரு நாள் தெலகராஜு ஓடி வந்து நடுவ கரமுண்டாரு கால்லெ வந்து வுழுந்தான். கரமுண்டாரு கண்ணுல தண்ணி கொட்டுச்சு எதுமே பேசல. கரமுண்டாரு அழுது தெலகராஜு பார்த்ததில்லெ. தொரச்சி அம்மாயி ஓடி வந்து தெலகராஜுவைக் கட்டிகிட்டு 'ஹோ'ன்னு ஒப்பாரி வெச்சு அழுதது. தெலகராஜு கையோடு கொண்டு வந்திருந்த விடுதலைப் பத்திரத்த நடுவ கரமுண்டாரு கையில கொடுத்து "என்ன மன்னிச்சிடுங்க மாமா" என்றான்.

"எதுக்குடா ஒன்ன மன்னிக்கிறது? நீ என்ன தப்பு பண்ணிபுட்டெ. இனிமே நீ தான்டா இந்த வூட்ட பாத்துக்கணும். என்னான்னமோ நடந்து போச்சு. நீயும் என்னான்னமோ பண்ணிபுட்டே. மனுஷன்னா இப்படி எல்லாந்தா நடக்கும். இப்படி எல்லாம்தான் இருக்கும். அதுக்காவ, குடிய வுட்டுட்டு, கள்ளன் பாரம்பரியத்த வுட்டுட்டு ஓடணுமாடா? ஒங்க ஆயிக்கி குடுக்க வேண்டிய நெலத்த குடுத்துபுட்டோம். வடுவாம்பா கல்யாணத்தோடயே கொடுத்து இருந்தா, இதெல்லாம் நடந்து இருக்காது. கண்ணு மண்ணு தெரியாம நெலமும் நீச்சுமா இருந்துடா. இருந்ததுனால கரமுண்டாம் பயலுவளக்கு எரநூறு வருஷமா என்ன பண்ணுறதுன்னு தெரியில. என் செய்யிறதுன்னு தெரியாம ஒரு ஆட்டம் அவரக்கா அறுத்தானுவ. கரமுண்டானுவ சுத்திலயும், மழவராயனுவ கண்டபுள்ளையுவ சேதிராயனுவ வன்னியனுவன்னு நம்பள பார்த்து சிரிக்கிறதுக்குன்னு நம்ப ஜாதி கார பயலுவளே நிக்கிறானுவ. பணம் இல்லேன்னா ஜாதி இல்லே. எதுவும் இல்லேன்னு நெனைச்சுட்டானுவ. தஞ்சாவூர் ராஜா ஆண்ட காலத்துலயே கரம் குடுத்து பேரு வாங்குனவனுவ கரமுண்டானுவ. குடுத்து குடுத்து அழிஞ்ச ஜாதி கொஞ்சம் கொஞ்சமா பேரு வாங்கி அழிஞ்சு போகும்ன்னு நெனைச்சானுவளா.

எல்லா அழிமானமும் தேய்மானமும் இஞ்சயும் நடந்தது. ஆனாலும் கரமுண்டாரு குடி அழியில. எரநூறு முன்னூறு வருஷமா தலைமுடி எழுந்திரிச்சு நின்ன குடி, அழியிறதான்னுதான் கடைசி நெலத்தையும் கேட்டதும், எழுதி தூக்கி எறிஞ்சாரு பெரிய கரமுண்டாரு. கரமுண்டாரு குடியில பொறக்கலையின்னாலும், இன்ன வரைக்கும் இந்த நெலம் வேண்டாம்ன்னு தூக்கி எறிய பாக்கிற நீயி? எறிஞ்சிட்டு என்ன பண்ணப் போறே? ஒன்னாலே கரமுண்டாரு குடிய காப்பாத்த முடியுமா? நெலத்தை நீட்டி வாங்கிட்டா என்னா ஆயிடப்போவுது? முந்தியாவது காத்தாயி இருந்தா நெலமும் காத்தாயியும் நீயும்... இஞ்ச இருக்கலாம். காத்தாயியும் ஓடிப்பொய்ட்டா. அவகூட கரமுண்டார் வூட்ட இனிமே காப்பாத்த முடியாதுன்னு சொல்லித்தான் ஓடியிருப்பா. நீயும் ஓடப் பாக்குற. எல்லாருமே ஓடிப்போய்ட்டா இந்த குடியை என்ன செஞ்சு காப்பாத்துறது? எனக்கும் வயசு ஆயிடுச்சு. ஆனா நெஞ்செல்லாம் பதைக்கிது. பெரிய அண்ணாரு சந்திரஹாச கரமுண்டாரு நாலு பொண்டாட்டியையும் உட்டுட்டு பொய்ட்டரு. நீ இல்லாம, காத்தாயம்பா இல்லாம, நாங்க நெலத்த வெச்சிக்க முடியாது. நீயும் எவளாவது பள்ளக்குட்டிய கல்யாணம் பண்ணிகிட்டு டவுனோட போய் அமெரிக்கா கிமெரிக்கா போய்யிகூட பெரிய வேலையில சேந்துடலாம். ஆனா கரமுண்டாரு குடி ரெண்டு பட்டு போகும். இல்லேன்னா துண்டு துண்டா போகும். காத்தாயி இருந்தா, உரிமையோட எதையும் செய்யலாம். ஊடுங்குறது நீங்கல்லாம் நெனைக்கிற மாதிரி வெறும் வூடு இல்லெடா, கரமுண்டாரு வூடுங்குறது வெறும் ஜாதி இல்ல. ஆயிரம் வருஷமா பல தலைமுறையா ஒரு மனுஷன் இன்னொரு மனுஷன் மேல வெச்ச நம்பிக்கை. தலைமுறை தலைமுறையா அது வெறும் ஆசை இல்லெ. நம்ப பரம்பரை பரம்பரையா வளர்ந்த கனவு. நம்ம மனுஷன் மேல, நம்ம மேல வெச்சிருந்த பக்தி, எந்த குடியாவதுதான் குடியையேதான் குடி அழிக்குமா? அழிச்சிருக்குடா பாவி. கரமுண்டார் குடியெ கரமுண்டானே அழிச்சிருக்கான்." அவர் குலுங்கிக் குலுங்கி அழுதார். ஆண்களால் நிரம்பி வழிந்த கரமுண்டார் வூடு இப்போது ஆண்களே இல்லாமல் பெரும்பாலும் வயசாளிகளும் கிழவன் கிழவிகளாலும் குழந்தைகளாலும் மட்டுமே நிரம்பிக் கிடந்தது. கரமுண்டாரு வூட்டில் வெளிச்சம் இல்லை. எட்டு கட்டு வூடும் ஒருவித அமைதியால் இருண்டு கிடந்தது.

"என்னெ, என்ன செய்யணும்ன்னு சொல்றிங்க மாமா? சொல்லுங்க செய்யிறேன். ஆனா இந்த நூறு வேலி நெலத்தையும்

நீங்க ஏத்துக்கணும். அதுக்காகத்தான் காத்தாயம்பா என்னெ வுட்டு ஓடுனா. பெரிய கரமுண்டாரு போயி ஆத்துல வுளுந்தாரு. ஒண்ணும் மறுப்பு சொல்லாம நெலத்த வாங்கிகிட்டு, கரமுண்டாரு குடிய வெளங்க வையிங்க மாமா."

தலையை குனிந்து கொண்டே கண்ணீர் சிந்திக் கொண்டிருந்த நடுவ கரமுண்டார பாக்க, தெலகராஜுக்கு ஆத்திரமாக வந்தது. நடுவ கரமுண்டார் எப்போதுமே இப்படித்தான் சின்ன வயதில் இருந்தே தெரியும். குடும்ப சமாச்சாரமாக எதுலயும் தலையிட்டுக்க மாட்டார். பத்து விரல் மோதிரமும் பதினைந்து பவுன் நீண்ட மைனர் சங்கிலியுமாய் இடுப்பில் தங்க அரைஞாணுமாய் நடுவ கரமுண்டார் சின்ன வயசில் இருந்தே மைனர்தான். ஆனால் கரமுண்டார் குடி முழுகிப் போயிட்ட இந்த காலத்தில் அழுகிற ஆம்பளையாக அவரை பார்க்க தெலகராஜுக்கு அருவருப்பாக இருந்தது. கலியராஜனை இழுத்துகிட்டு ஓடுன காத்தாயம்பாவைகூட அவனுக்கு சகித்துக் கொள்ளலாம் போல் இருந்தது. ஆடி, கிழமாகி விழுந்து போகிற நிலையிலும் கரமுண்டாரு வூடு, கரமுண்டாரு வூடு என்று வூட்டை கட்டிக்கொண்டு புலம்புகிற நடுவ கரமுண்டாரை நினைக்கப் பாவமாய் இருந்தது. இவருக்கும் ரெண்டு பொண்டாட்டி. இவரு ஒரு பயந்தாங்கொல்லி கரமுண்டார்தான். பொண்டாட்டி வூடு தாண்டி, இந்த பக்கம் எங்கும் போக மாட்டார். எப்பப் பார்த்தாலும் தோட்டத்துலயே நிப்பார். நாலஞ்சு பூரணி காளைகள் வளர்ப்பார். அழகான வில்லு வண்டி. எப்பப் பார்த்தாலும் எதுவோ வேலை இருக்குறாப்புல சில்க் ஜிப்பா காத்துல பறக்க, கழுத்துல சுத்துன ஜரிகை துப்பட்டா நீட்டமான கொடி மாதிரி பறக்க, மோட்டார் பைக்குல தஞ்சாவூர் போவார், திருச்சிக்கு போவார். மெட்ராசுக்குக்கூட போவார். ஒரு தப்பு தண்டா செய்ய மாட்டார். அங்கே இங்க நிக்க மாட்டார். கை நெறைய காசு. கண்டதையும் வாங்குவார். வூட்டுக்கு கொண்டு வந்து குவிப்பார். விதவிதமா சோபா செட்டு, புது புது கெடிகாரம், வெளிநாட்டு ரேடியோ, காமிரா, இன்னும் அவரே ஒரு தடவைக்கு மேல உபயோகிக்காத கத்தி கப்படான்னு யாருக்கும் உபயோகம் இல்லாத ஆனா பாக்குறதுக்கு அழகா இருக்குற சாமானாப் பாத்து வண்டி வண்டியா கொண்டு வந்து எறக்குவாரு. இப்ப மூணுமாசமா இந்த சாமான் எல்லாம் தஞ்சாவூரு காரைக்குடி செட்டியாருன்னு வந்து வந்து அள்ளிகிட்டு போயிட்டு இருக்காங்க. தெலகராஜுவுக்குத் தெரியும். படுத்தா தெரியும் கரமுண்டாரு பொழப்பு. ஒண்ணு ஒண்ணா விக்க, இத்தனை வருஷமா வேலி வேலியா நெலமும்

தோப்பும் தொரவுமாய் இருந்தது. தெலகராஜுவுக்குத் தெரியும் துபாய் போயி வந்த அஞ்சினி துலுக்கனுவ வெளி நாடு போயி படிச்சுட்டு வந்த பாப்பானுவ கையில எல்லாம் கரமுண்டாரு வூட்டு தோப்பும் நெலமும் நீச்சுமா மாறி போச்சே. என்ன செய்ய, தொரச்சயம்மாயி, சந்தானம்மாயி ரெண்டு பேரும் இன்னைக்குகூட சோர்ந்து போகல. கரமுண்டாரு குடி விழாதுன்னு சொல்லிகிட்டு இன்னமும் நிமுந்து நிக்கிதுவ. நடுவக்கரமுண்டாரலெ இனிமே ஒண்ணும் பண்ண முடியாது. கரமுண்டாரு குடிக்குள்ள ஓடி வந்து சேர்த்துக்கணும்ன்னு எது வந்து தெலகராஜுவை தொரத்துச்சு? இந்த மூணு மாசத்துல தெலகராஜு தப்பிச்சுக்கவே முடியாம இந்த அஞ்சினியிலேயே நிக்கணும்ன்னு யாரு கட்டாயப்படுத்துறா? காத்தாயம்பா? அவதான்னு தோணுது. இந்த கணக்குக்கு இன்னும் தெலகராஜுவுக்கு வழி கண்டு பிடிக்கவே முடியலெ. அதோட விடையும் தெரியலெ. எத்தனையோ தடவை குத்துபட்டும் அவன் சாகலெ. அன்னைக்கி அந்த பள்ளக்குட்டி சோணை இல்லாம போயிருந்தா... விடிய விடிய சேத்துக்குள்ளெ முங்கி முங்கி கூழை ஆத்து வழியா, கரையேறி செம்படவனுவ குடிசைக்குள்ள மூணு நாள் ஒளிஞ்சிருந்து, போலீஸுக்கும் பள்ளனுவளுக்கும் கடுக்கா கொடுத்து, மாயியோட ராத்திரியில தப்பிச்சு, அப்பவம் மாயியெ பள்ளனுவ குத்தித் தள்ள, அவளையும் தூக்கிட்டு மறுபடியும் ஒளிஞ்சு. ஆஸ்பத்திரியில போட்டாங்களே அப்பயில இருந்து ஆஸ்பத்திரிக்கே வந்து "நீதான்டா கரமுண்டாரு குடிய வெளங்க வைக்கணம், உங்க அம்மா வெச்ச தீயை நீயிதான்டா அணைக்கணும். காத்தாயீ ஓடிப்போன அவமானத்தெ நீ தான்டா இழுத்துகட்டி நிக்கணும். வாடா. அங்க ஆம்பளை இல்லேடா. ஒரு ஆம்பளை இல்லெ. காத்தாயீ வெச்ச தீயிலெ, அம்பது கரமுண்டான் தன்னையே வெட்டிகிட்டு தீயிலெ குதிச்சு இருக்கானுவடா. இப்ப கரமுண்டான் குடியிலெ தாலி அறுத்த பொம்பளையிவ அம்பது பேருக்கு மேல இருக்குவடா. எல்லாம் எஞ்ச போயி சாவும்? ஒண்ணு ஒண்ணு அதுலெ நிறை சூலியா இருக்கு. கரமுண்டான் குடி தேஞ்சு போச்சு, தேஞ்சுகிட்டே போவுது. தாலி அறுத்ததுவ வயித்துல ஒண்ணு, இடுப்புல ஒண்ணுன்னு நாலு நிக்கிதுவ. ஜாதி ஜனத்தையும் காப்பாத்தணும்ன்ன ஒவ்வொருத்தனும் போயி செத்தான். இனிமே அவன் குடும்பம் நடுத்தெருவுல நிக்கிது. ஆயிரம் வேலி நெலம் கட்டி அடிச்சு கண்டு முதல் கண்ட குடும்பம்டா. நீ தான்டா இது அத்தனைக்கும் ஆம்பளை. நடுவ பய ஒரு திருட்டுத்தனம் செய்யிறதுக்குகூட யோக்கிதை இல்லாதவன்டா. நல்லா தின்னு

தின்னுட்டு ஊர சுத்தி வருவான். ஊரு குடி எல்லாம் வளர்ந்து நிக்கிது. ஒரு கவளம் சோத்துக்கு ரோக்கித இல்லெ கரமுண்டான் குடிக்கி."

ஆஸ்பத்திரி வார்டில் தொரச்சியம்மாயியும், சந்தனம்மாயியும் ரெண்டு கௌவிகளுமா ஒண்ணா சேர்ந்து தெலகராஜுவை உருவேத்தினது, அஞ்சினிக்கு வார வரைக்கும் தெலகராஜுவுக்கு புரியலெ. அஞ்சினிக்கு வந்து, கரமுண்டாரு வூட்டுக்குள்ள வந்து பூந்ததுக்கு அப்பறம்தான் என்னா நடந்துகிட்டு இருக்குன்னு தெலகராஜுக்கு புரிந்தது. கொலை கேசு அவனை முன்னையும், பின்னையும் போக விடாது. இன்னும் எத்தினி வருஷத்துக்கு கேசாடணும்ன்னு தெரியாது. தஞ்சாவூரு போனாலும் மாயியோட போக முடியாது. கேசு முடியிறவரைக்கும் தப்பிக்க முடியாது. பழையபடி பள்ளனுவ வேலைக்கு வந்துட்டாலும் முந்தி மாதிரி வேலை வாங்குறது சுலபமாக இல்லெ. வயல்லெ எல்லாம் அடிக்கடி செவப்பு கொடி குத்தி நிறுத்துறாங்க. செவப்பு கொடி குத்தின வயல்ல சரியான கூலி கொடுக்கிற வரைக்கும் யாரும் வேலைக்கு வர்றதில்லெ. கூலி ஒசந்துகிட்டே போகுது. தகராறும் வளர்ந்துகிட்டே போகுது. கட்சிகாரன் வீடேறி வந்து அரசியல் பேசி பழையபடி மெரட்டுறான். எல்லாரும் ஒண்ணு; ஜாதி எல்லாம் இல்லையின்னு சொன்னாக்கூட–ஒத்துக்கிட்டாகூட–பழைய மரியாதை இல்லெ. வூட்டு வேலைக்கி வர்றெ பள்ளச்சிங்க இப்ப கூலி ஞாயம் பேசுறாங்க. யாரையும் எதுத்துத் திட்ட முடியாது. ஆனா காசு கொடுத்துட்டா, யாரையும் என்ன ஈனத்துக்கும் ஆளாக்கலாம். ஒண்ணும் செய்ய முடியலெ. எஞ்சயும் போக முடியலெ. கொலை கேசுல தப்புச்சுலங்கிறாரு வக்கீல். ஆனா பள்ளனுவ கேசு ஆடுறதெ விட்டாச்சு. கள்ளனுவ கேசு ஆடுறத வுடல. பள்ளக்குடி புள்ளைவளுக்கு ஸ்கூல் வந்தாச்சு. கேசுல இருந்து தெலகராஜு தப்ப முடியாது போலவே கரமுண்டாரு குடியில இருந்தும் தப்ப முடியாது போல இருக்கு. ஆனா அவனெ சும்மா வூட்டுக்குள்ள கூட்டிக்க முடியாது. யோசிக்கிறதுக்கு ஒண்ணும் இல்ல. சந்தனப்பாயீ சொல்லிச்சு "காத்தாயீ ஒருத்திதான் பொண்ணாடா? ஒரு காத்தாயம்பாளுக்கு ஈடா கரமுண்டான் பொண்ணுவ ரெண்டு இருக்கு பாத்தில்லியா நீயி? நடுவ கரமுண்டான் பொண்ணு மூணு இருக்கு. மூணையும் வேணா கட்டிக்க. கரமுண்டான் குடிக்கு எப்பல்லாம் ஆவத்து வருதோ, அப்பல்லாம் இப்படி பொண்ண குடுத்து பொண்ண எடுத்துத்தான் குடிய ஓங்கி நிறுத்துறது பழக்கம். நீ கள்ளக் கருதான்டா. இந்த அஞ்சயும் கட்டுடா. ஒண்ணு ஒண்ணும்

வைரம்டா. இந்த காலத்துல கேலியா இருக்கும். கரமுண்டான் குடி ஒழியணும்ன்னு பங்காளிகள் அத்தனையும் பார்த்துகிட்டே நிக்கிதுவ, உட்டுறாதெ. பள்ளக்குடி எல்லாம் செதறி போச்சுன்னு நெனைக்காத பள்ளனுவளும் பறையனுவளும் எந்தக் காலமானாலும் கள்ளனுவ சொத்து. எதோ இப்ப தெரியாத்தனமா முறுக்கிட்டு நிக்கிறானுவ. இத்தனை கேசு, இத்தனை கொலை, இத்தனை அழிமானம், எத்தன குடி எரிஞ்சுது. இன்னும் ஒன்னெ எந்த பள்ளனாச்சு காட்டி கொடுத்துருக்கானா? பங்காளி பயலுவளுக்குப் பொறுக்கல்லெ. காத்தாயம்பாளெ ஒரு பள்ளன இழுத்துகிட்டு போவ வாவதுன்னு எல்லா கள்ளனுவளுக்கும் பங்காளிகளுக்கும், உருத்துகாரனுவளுக்கும் அடி வயித்துல நெருப்பு பத்திகிச்சுதுடா, அதான் குடி குடியா கொளுத்தி, ஊர் ஊரா எரிச்சான். இப்பதான் பள்ளனுவளுக்கும் கள்ளனுவளுக்கும் உண்மை புரியுது. ஒன்னெ ஒரு பய காட்டி கொடுக்கமாட்டான். வெட்டுபட்டவன்கூட காட்டி கொடுக்கமாட்டான். ஒனக்கு அதிசயமா இருக்கு. அதான் இஞ்ச ஞாயம். ஒரு பயலும் ஒன்னும் பண்ண முடியாது. நீ வந்து கரமுண்டாரு குடிய தூக்கி நிறத்துடா சாமி. பெருமாளு வந்து சக்கராயுதத்தெ எடுத்துகிட்டு சர்ரு சர்ன்னு விட்ட மாதிரி வேண்டாதது எல்லாத்தையும் வெட்டி தள்ளுடா சாமி. இப்படியே பாதியிலேயே போட்டுட்டு ஓடிடாதெடா தெலகராஜு. ஓடிடாதெ. பள்ளக்குட்டியள தொரத்திக்கிட்டு தாலி கட்டுறதுக்கு ஓடாதெ. அவளுவ எங்கியும் ஓடி போயிட மாட்டாளுவ. கள்ளத் துமுருல சொல்லலடா தெலகராஜு. அவளுவ எஞ்சயும் ஓடமாட்டாளுவ. நாம பள்ளக்குடியில போயி பொலப்பு நடத்த முடியாதுலா, அவளுவதான் எங்க போக முடியும்டா? ஒன்னோட ஆசையை உட்டுபுட்டு, அவளுவதான் எந்த டெல்லிக்கு போயி ராணி ஆயிட போறாளுவ. எந்தக் காலத்துல கள்ளனுவ அவளுவளுக்கு குட்டி போடாம இருந்திருக்கான்? அதுவ பாட்டுக்கு அதுவ. நம்ப குடிவளோடதான் எத்தனை வருஷம் ஆனாலும். மாஞ்சிய பள்ளனுவ இழுத்துகிட்டு போ வுட்டுடுவோமா? என்னக்கி நீயி அவளெ கையெப் புடுச்சு இளுத்தியோ அன்னையில இருந்து காத்தாயம்பாளே மாஞ்சியெ புடுச்சாந்து ஒனக்குன்னு கரமுண்டாரு வூட்டுக்குள்ள அடைக்கலியா? அதுக்குன்னு இதுவளெ தாலி கட்டிக்க முடியுமா? நீ என்னா அனாமத்து பயலாடா ராசுகோல்? நீ உட்டுட்டுப் போனியின்னா மெட்ராசுக்குத்தான் போவலாம். கரமுண்டாரு குடியில இருந்தியன்னா, இந்த பள்ளக்குடியில யாரும் தூக்கிட்டு போயிட மாட்டானுவ. ஒங்க தாத்தன் பாட்டன் காலத்துல இருந்தே இன்னைக்கும் நாளைக்கும் இதுதான் நடக்கும்.

நாங்க பார்க்காததா? ஒங்களுக்கும் தெரியாததா? தெலகராஜு எத்தனை காலம் ஆனாலும் பொம்பளைய ஆம்பளையா மாத்தி, ஆம்பளைய பொம்பளையா மாத்தி, சந்தோஷப்பட முடியாதுடா. மாத்தினா அசிங்கமாத்தான் இருக்கும். கரமுண்டாரு குடி என்னைக்கும் அழியக் கூடாதுடா. ஒங்க ஆயி வடுவாம்பா ஒரு கரமுண்டாத்தி இல்லையா? ஒனக்கு கரமுண்டான் ரத்தம் புரியலையா? ஒங்க அம்மாயி தொரச்சி இந்த தள்ளாத வயசுலயும் வூட்டுக்குள்ளே நொழைஞ்ச ரெண்டு கள்ளனுவளையும் வெட்டி சாச்சுது தெரியுமா? என்னால பேச முடியலெ. ஒனக்கு சொல்லு கௌவிக்கு ஒண்ணும் புரியாது. நீயே யோசிச்சு பாருடா. எங்க காலம் போச்சு. எங்களுக்கு தெரிஞ்சது இதுதான். ஓடிப் பெய்யிடாத, அவ்வளவுதான் சொல்லுவேன் நாம பேசக்கூடாதுடா. நம்ம ரத்தம் பேசணும் கரமுண்டானுவளுக்குப் பேசத் தெரியாது."

சந்தனம்மாயியின் இருண்ட கண்களில் தீ பற்றி எரிவது தெரிந்தது தெலகராஜுக்கு. அந்த தீ அப்படியே கண்களில் வழிந்தது கண்ணீராக. கண்ணீர் இருண்ட குனை புனத்தில் இருந்து கிளம்பி வடிந்த கண்ணீர் ரத்தம் போல் சிவந்து நெருப்பாய் சுடர்வதாய் அந்த கிழவியின் மார்பில் சொட்டியது. முழு நிர்வாணமாய் மாராப்பு சேலையை உதறியபடி குண்டலம் குண்டலமாய் தொங்கிய மார்புகளில் 'பளார் பளார்' என்று அறைந்து கொண்டு அந்த தொண்டு கிழம் அழுது கொண்டு ஒப்பாரி வைக்கத் தொடங்கியது. இரண்டு பெண்கள் அதற்கென்றே காத்திருந்தது போல் "வேண்டாம்மாயி வேண்டாம்மாயி அழுவாதிங்க, அழுவாதிங்க. மாரு அடைச்சிக்கப்போவுது, அழுவாத கௌவி நிறுத்து, நிறுத்துங்கிறேனில்ல..." என்று சொல்லிக் கொண்டே ஓங்கிய கைகளுடன்கூடவே நின்ற சற்றே பெரிய பெண்ணை முதல் முறையாய் திரும்பி பார்த்த தெலகராஜு, இந்தக் காட்சி காட்சியாய் இந்த ரெண்டாங்கட்டு முற்றத்தில் சுற்றியிருந்த எட்டு தூண்களிலும் பிடித்துக் கொண்டு ஒசிந்து நின்ற ராதெயம்பா, திரிசியம்பா, நாகலெட்சுமி, தனம்,ஜெயா இன்னும் அத்தைகள், மாமனின் மனைவிகள் என்று எல்லாருமே கண் கலங்க அவனையே சுடர்ந்து பார்த்து வெறித்ததை பார்த்து பயந்து போனான் தெலகராஜு. ஒவ்வொரு பெண்ணும், ஒவ்வொரு அத்தையும், ஒவ்வொரு மாமியும், ஒவ்வொரு கொளுந்தியாளும், ஒவ்வொரு மைத்துனியும், இந்த கரமுண்டாரு வூட்டு வீரியத்தை தாங்கி தெலகராஜுவின் காலடியில் கண்ணீராக்கி கொட்டினார்கள் என்பது போல கரமுண்டாரு வூடு நிறைந்த அந்த அடங்கலில் பெண்கள் தெலகராஜுவை மூர்த்தியாக்கி வணங்கி குவிந்தது

போல் ஒரு கணத்தில் தெலகராஜு அந்த கரமுண்டாரு வூடு முழுவதும் நிறைந்து போனான். அந்த வூடு அவனை நோக்கி நெட்டுயர்த்திப் பெருமூச்சுவிட்டது. வாழ்ந்து கெட்ட ஊடல்ல இது. அவன் கண்ணெதிரே செயல் அற்று உட்கார்ந்திருந்த நடுவக்கரமுண்டார், ஏதோ தெரிந்தவர் போல் அமைதியாக தன் மைனர் பெரம்பெடுத்து ஊன்றியபடி வெளியேறிச் சென்றார். ஏதோ தெய்வீகக் குரலுக்கு ஆட்பட்டவர் போல் தூணுக்கு தூண் நின்ற அவனையே பார்த்திருந்த அந்த கரமுண்டார் குடி பெண்களும் ஒவ்வொருவராய் மெல்ல மெல்ல உள் வாங்கி, ஏதோ ஒரு இக்காலத்து அதைவுக்கு இசைவது போல் வெளியேறினார்கள். முற்றத்தில் படர்ந்து கிடந்த கொடிமுல்லை கொத்து கொத்தாக மலர்ந்து முற்றத்துக்கு மேல் விரித்திருந்த கோடைப்பந்தல் வழியாக பாய்ந்து வந்த மாலை இளம் காற்று ஏதோ இல்லாத ரகசியத்தை தெலகராஜுவின் காதுகளில் சொல்ல, இருக்கும் ரகசியத்தை அவன் யாருக்கும் சொல்ல மறுப்பது போல் தலையசைத்துக் கொண்டான். அவன் நெஞ்சுக்குள்ளயெ அந்த ரகசியம் கேளியாடியது. அவனை இனிமேலும் குழப்பி கேளியாட முடியாது. ஓடிப்போன காத்தாயீயெ நிச்சயமா சுப்பாக் கரமுண்டாரு கொண்டு வராம இருக்க மாட்டாரு. சந்தனம்மாயி மாதிரி இதெல்லாம் இப்படித்தான் இருக்கும் வர்றப்ப வரட்டும். விடியும்போது விடியட்டும் என்று தலையை குலுக்கிக் கொண்டபோது, அவன் பக்கத்தில் இருந்து குளித்து புது சீயக்காயின் தசாங்கத்து நறுமணமும் ஸ்நானப்பொடி தேய்த்து உசிலம்பொடி குழைத்து தலை தேய்த்து முழுகின பரளி மஞ்சள் கமறலும், மாலையில் பூத்த புது மல்லிகை தலையில் சூடிய ஈரக்கூந்தலில் லேசான காய்ச்சிய தேங்காய் எண்ணெய்யும் கமறலும் கலந்த அற்புதமான பெண் வாசனை அவனைத் தூக்கி அடித்தது. முற்றத்து மேடையில் அமர்ந்து இருந்த அவன் திரும்பி பார்த்த போது, அந்த ரெண்டு பெண்களும் அவன் வெகு அருகில் நின்று வெள்ளித் தட்டில் வைத்த நெய்ப் பணியாரங்களுடன் அவனை அணுகி "சாப்பிடுங்க மாமா, காப்பி நான் கொண்டு வரவா? ரெங்கம்மா கொண்டு வரட்டுமா? இல்லெ ரெண்டு பேரும் கொண்டு வரட்டுமா?" என்றாள்.

ரெண்டு பேரும் பதட்டமே இல்லாமல் அவனிடம் கேட்ட கேள்விக்கு அவனால் பதறாமல் பதில் சொல்ல முடியவில்லை. நிமிர்ந்து பார்த்தபோது முற்றத்தின் கைப்பிடி சுவரைப் பிடித்துக்கொண்டு நடுவகரமுண்டாரின் மற்ற மூன்று பெண்களும்,

அவன் கண்ணெதிரே நின்று அவர்களைக் காட்டியது, அவனால் தாங்க முடியாத விசித்திரமாய் இருந்தது. அவர்கள் எல்லாரையும் முதல் முறையாக பார்த்துவிட்டு உள்ளே இருந்து வந்து கொண்டிருந்த தொரச்சியம்மாயியைப் பார்த்து லேசாகச் சிரித்தான் தெலகராஜு. மனதில் பொங்கிய ஆத்திரமான மகிழ்ச்சியும், தவிப்பான பயமும், கோபமான தவிப்பும் இன்னதென்று சொல்ல முடியாத, யாருக்கும் புரியாத ஏன் அவனுக்கேகூட புரியாத மகிழ்ச்சியில் அவனை ஆழ்த்தியது. அவன் அருகே நின்ற ரங்கம் என்ற ரங்கம்மாளை மறுபடியும் நிமிர்ந்து பார்த்தான். முற்றத்தில் சுற்றும் முற்றும் பார்த்தான். பளபளத்த தேக்கந் தூண்களில் எந்தப் பெண்களையும் காணோம். ஜன்னல்களிலும் யாரும் மறைந்திருக்கவில்லை. கரமுண்டாரு வூடு முழுமையும் அவனுக்காகவே மவுனத்துடன் காத்திருந்துபோல் இருந்தது. அவனுக்கே தான் சொல்லப் போகும் முடிவு எல்லாருடைய வாழ்க்கையையும் எப்படிப் பாதிக்க போகிறதென்று நன்றாகத் தெரிந்தது. ரங்கம்மாள் என்கிற ரங்கம் பச்சைக் குழந்தைபோல் அவனை ஆசையாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். முற்றத்தின் கைப்பிடிச் சுவரைப் பிடித்துக்கொண்டு நின்ற முதலில் நின்ற விஜயத்தை அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அந்த மூவரில் விஜயம் ஓடி வருகிறவள் போல், அவனைப் பார்த்து நின்றாள். கொலைக்காரனாக இருக்கும் இந்த நிலையிலும் அவனுக்காக காத்து நிற்கும் இந்தப் பெண்கள்–இந்த நிலையிலும் அவனை நேசிக்க நிற்கும் இந்த மனித அடிமைகள்–அவனை பயங்கொள்ளச் செய்தனர். இனிமேலும் தவிக்கவிட தப்பித்துப் போக அவனும் தயாராக இல்லை. அவனைத் தெரிந்து எடுத்துக்கொண்ட அந்த ரெண்டு பெண்களையே அவனும் தெரிந்து எடுத்துக்கொண்டது அவனுக்கே ஆச்சரியமாய் இருந்தது. இந்த ஒரு குளத்து நீரில் இந்த காலத்திலும் அவனுக்குப் பிடிக்கவே பிடித்தது.

“ரங்கம் விஜயத்தை கூட்டிகிட்டு போய் அவ கையில காப்பிக் கொடுத்து வெத்தல தாம்பாளத்த நீ எடுத்துகிட்டு வாயேன், ரெண்டு பேருமா வரலாம். யோசிச்ச நிதானமா புடிச்சிருந்தா வர்லாம் மத்த யாரும் எதுவம் கொண்டார வேண்டாம்.”

முத்தத்தில் நின்ற தொரச்சியம்மாயி “அடப்பாவி பயலே இஞ்ச ஒன்னு அஞ்ச ஒண்ணுன்னு மூத்ததா பாத்து பொறிக்கிட்டியேடா பாக்கி எல்லாத்தையும் ஊரானுக்கா குடுக்கப்போறடா... போவுது போ, காத்தாயிதான் வேணும்ன்ன நட்டுகிட்டு நிக்காம போனே...” என்று கொல்லென்று சிரித்தது.

ஒரு கையில் வெள்ளி தம்ளரில் காப்பியும், மறு கையில் வெற்றிலைத் தாம்பாளமுமாய் ரெண்டே நிமிடத்தில் பட்டுப்புடவையும், மூக்கில் சுடரும் வைரமுமாய் முன்னே ரங்கம் வர, அவள் பின்னாலயே சற்றே சிறிய சாயலில், ரத்தம் போல் சிவந்த முகமும், வெட்கத்தில் துடிக்கும் உதடுகளுமாய், எரியும் சுடர்போல் அந்த பெண்ணும் பட்டும் நகையுமாய் விஜயம் பின் நடந்து வந்து, முற்றத்து மேடையில் குனிந்து, வெற்றிலை தட்டையும் காப்பியையும் வைத்துவிட்டு முற்றத்தில் இருந்த துளசி மாடத்துல இருவரும் விழுந்து வணங்கியபோது, துளசி செடியில் இருந்து ஒரு பூ உதிர்ந்ததை ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டு உட்கார்ந்து இருந்தான் தெலகராஜு. உள்ளே இருந்து வந்த வெள்ளைப் புடவை கட்டிய அத்தை கனகம் கையில் ஒரு சாவி கொத்தையும், பழைய நகைப்பெட்டி ஒன்றையும் அவனிடம் கொண்டுவந்து கையில் கொடுத்து, "எல்லாத்தையும் நீ தாம்பா பாத்துக்கிடணும். இனிமே எல்லாம் ஒஞ் சொத்து, ஒஞ்சொகம். இனிமே நீதான் அஞ்சினி கரமுண்டாரு. நீ கரமுண்டாரு இல்லேன்னாக்கூட நம்ப நெலத்தையெல்லாம் போயி பாரு. ஒன்னையும் வுடாத. ஆண்டு அனுபவிக்கிறதுக்கு இல்லாம ஆள் இல்லாம எல்லாம் காடாகி கெடக்கு. காவல் இல்லாமல் தோப்பெல்லாம் திருட்டுப்போயி கெடக்கு. பயிர்ச் செலவு பண்ணக் கணக்கெல்லாம் ஏட்டுல கடனாகி போயி கெடக்கு. பள்ளனுவ ஒருத்தனும் வர்றதில்லெ. எல்லாரையும் புடிச்சாந்து வரப்பு படி, ஒசத்தி தண்ணியெ பாச்சு, வரி கட்ட ஆள் இல்லேன்னு கோர்ட் கேசாகி கெடக்கு. செத்துப் போன கரமுண்டாரு குடி ஆம்பளைவளுக்கு எல்லாம், கல்லு நட்டாம கருமாதி பண்ணாம எல்லாம் அப்படியே கெடக்கு. மொதல்ல ரங்கத்து கழுத்துலயும், விஜயத்துக் கழுத்துலயும் தாலிய கட்டு. கரமுண்டாரு குடி பொம்பளைவ ஒருத்தியும் சப்பை இல்லெ. சவுரு இல்லை. எல்லாரையும் களத்துல எறக்கு. நாங்க எல்லாரும் உனக்கு வேலை செய்ய காத்துகிட்டு இருப்போம். நீ பொம்பளை வளத்த புள்ளெ. ஒனக்கு பொம்பளைவ கஷ்டம் புரியும் ராஜா. குடி குடியா முழுவுன. நம்ப கரமுண்டாரு பொம்பளையுவ தூக்கி நெறுத்திடுவாளுவ" என்று சொல்லியபடியே அழுது கொண்டே மூக்கை சிந்தி எறிந்தபடி கண்களை மேலும் துடைத்துக் கொண்டு "என்ன ஆவுமோ ஆம்பளை இல்லாத இந்த குடி என்னைக்கி நாறி நக்கலிஞ்சு துண்டு துண்டா ஒடைஞ்சு தெருவுக்கு வருமோன்னு ஒவ்வொரு பங்காளி குடியிலும் காத்துகிட்டு இருக்கு. ஊடான ஊடு எல்லாம் தேஞ்சு இந்த கரமுண்டாரு ஊடு தான்டா மிச்சம்"

என்று அவள் கதறிய போது அவள் நெஞ்சில் இருந்தும் நீண்ட ஏக்கமும் கேவலுடன் பிறந்தது. சுகமான இந்த பயமும், இந்த கரமுண்டார் குடிப் பெண்களின் அலட்சியமான தைரியமும் தெலகராஜுவை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. மெல்ல எழுந்து நின்ற படி, "ஒண்ணும் கவலைப்படாதீங்க. அத்தை நான் சொல்லுறபடி நீங்க கேக்க வேண்டாம். நீங்க சொல்றபடி நான் கேட்பேன். எல்லாத்தையும் மாத்திக் காட்டுவேன். ஒண்ணையும் இடிஞ்சு வுழவிட மாட்டேன். கரமுண்டாரு குடியெ வுட்டுட்டு ஓட மாட்டேன். தாலியறுத்து நிக்கிற இந்த எல்லாரும்தான் எனக்கு அம்மா" என்று சொல்லியபடியே முற்றத்தின் வழியே இறங்கி நின்றான்.

செம்பை எடுக்கும் முன் ஓடி வந்த விஜயம், கையில் இருந்த செம்பை அவனிடம் நீட்டி "இந்தாங்க" என்றாள். முகம் கழுவி, வாரியடித்து மயிர் அடர்ந்த நெஞ்செல்லாம் கழுவிக் கொண்ட அவன் அருகே நின்று, துடைக்க துண்டு கொடுத்தாள் ரங்கம். ராஜகோபமாய் அதை வாங்கி முகம் கை கால்கள் எல்லாம் துடைத்துக் கொண்டு வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு கொல்லைப்புறமாக நடந்த அவன் பின்னே மெல்ல மெல்ல இரட்டை வெள்ளி கொலுசுகள் நான்கு பாத சரங்கள் தொடர்ந்து ஒலித்துக் கொண்டு வந்தன. மௌனமாக கொல்லையில் இறங்கி பக்கவாட்டில் நடந்தபோதும் கொலுசுகள் சப்தித்தன. பின்னே திரும்பிப் பார்த்தான் தெலகராஜு. ரங்கமும் விஜயமும், பின்னே...

திரும்பி நின்று "என்ன" என்றான்,

"எஞ்ச போனாலும் ராத்திரி சாப்புட வூட்டுக்கு வந்துடுங்க மாமா. நீங்க வல்லைன்னா அப்பாயீ ரெண்டு முத்தத்துல வந்து நிக்கும். படுக்காதுவ" என்றாள் விஜயம்.

"போங்கடி ரெண்டு பேரும். புத்தி சொல்ல வந்துட்டாளுவ"

"தாலி கட்டுனாத்தானா?" என்ற குரல் அவனுக்குப் பின்னே ரங்கத்திடமிருந்து ஒலித்தது. வரப்பில் தூக்கிக் கட்டிய வேட்டியுடன் மாலை வெயிலில் நடப்பது ரொம்ப இன்பமாய் இருந்தது. இப்படி எந்த சுமையும் இல்லாமல் நடந்து, காலம் பலவாகிவிட்டது. கனவு போல் நடந்ததெல்லாம். தன் இஷ்டம்போல் எதுவும் நடவாது. புதிர்களின் முடிவாய் ஒவ்வொன்றும். நாலு மூலை கட்டி, சிலம்பம் எதிர் வரப்பின் மேல்வரிசையாக பள்ளனுவ பத்துபேர் நடந்து வர்றெத பார்த்தான் தெலகராஜு. ஒடம்பு முழுவதும் முப்பத்து ரெண்டு எடத்தில் கத்தி குத்து வாங்கி,

மூணு மாசம் ஆஸ்பத்திரியில் கிடந்து பிழைத்ததும், இதற்கு காரணமான இந்த பள்ளர்களை ஏனோ சந்தோஷமாகப் பார்க்க ஒருவித பரவசத்துடன்... இருந்தது. அவர்கள் கண்களில் எல்லாம் அதே வியப்பு. "கும்புடுறோம் ஆண்டெ" என்று எல்லாரும் கத்தினார்கள்.

"ஆண்டெங்காதீங்கடா அடிமை ஜாதி பயலுவளா. இப்படி ஆண்டெங்கிறது. அப்பறம் நீ யார்டா ஆண்டெ? அப்படிங்கிறது. ஆண்டெயாவது, அடிமையாவது? வேலைக்கு எப்படா வர்றிங்க?"

"கூலி சம்பளம்..." என்று இழுத்தார்கள் பள்ளர்கள்.

"புது சம்பளம்தான். புது கூலிதான். இல்லேன்னாதான் வயல்லெ கறுப்பு கொடி செவப்பு கொடி குத்துவிங்களடா?"

"நாங்க எஞ்சியும் போமாட்டோங்க. நீங்க சொன்னா சரி. வேற குடிக்கி எங்கள் அடிமையா உட்றாதீங்க. எத்தனை காலம் ஆனாலும் நாங்க ஓங்க பள்ளனுவ சாமி"

"சாமி சாமிங்காதியடா பொட்டப்பயலுவளா."

"இல்லீங்க... இல்லீங்க... இல்லீங்க ஆண்டெ."

"ஆண்டெ கீண்டெ எல்லாம் போயிடுச்சுடா. இனிமே அது எல்லாம் வேண்டாம்"

"பல்லு குச்சி வேணா நான் ஒடிச்சாந்து தரட்டுங்களா? ஓங்களுக்கு மொசக்கறின்னா ரொம்ப புடிக்கும். பெரியம்மாவக்கு மொசக்கறியும் பழந்திண்ணி வௌவாலும் நான்தான் அடிச்சாந்து கொடுப்பேன். நாளைக்கி கொண்டாறேன்... ஆத்தாங்கரைக்கிங்களா? ஆத்துல தண்ணி மேடேறி பாயிதுங்க... பரிசல் வுட ரெண்டு நாளாவும் பரிசல் குத்தகைக்குகூட ஆளு கேக்குறாங்க, நாங்கதான் சொல்லிபுட்டோம், பரிசல் குத்தவைக்கு எல்லாம் கிடையாதுடா. ஆத்து தொறை எல்லாம் கரமுண்டாரு வூட்டுக்குன்னு..."

"சரி போங்கடா வேலை இருக்கு... ராத்திரி காவலுக்கு வந்து சேருங்க" என்று கூறியபடியே வரப்பின் வழியாக நடந்தான். திரும்பி பார்த்த போது கரமுண்டாரு வூட்டு கொல்லையில் நின்று இன்னும் அவனை மேய்ந்து கொண்டிருந்த ரங்கத்தையும் விஜயத்தையும் கண்ணெடுக்காமல் பார்த்துவிட்டு திரும்பி நடந்தான் தெலகராஜு. இப்படி வெறும் உடம்புடன் இடுப்பு வேட்டியுடனும் ஒரு கரமுண்டாரு கடி ஆம்பளையாக ரெண்டு பெண்களை கட்டிக் கொள்ளத் தயாராகி விட்ட ஒரு பழங்காலத்து மனுஷனை தனக்குள்ளே இடங்கொண்ட மட்டும் ஆராய்ந்து

பார்த்தபடியே மனுஷனின் ஆசைகளுக்கு இந்த இயற்கையும் ஒரு காரணம், அகந்தையும் தன் நெருப்பும் ஒரு காரணம், இந்த பலஹீனத்தை எல்லாம் கரமுண்டாரு குடி பெண்களிடம் கொண்டு வந்து வைத்திருக்கிற விதியின் சாகசத்தை எண்ணியபடியேதான் எங்கு வந்து நிற்கிறோம் என்று தெரியாமலேயே 'அங்கு' வந்து நின்ற அவனை ஒரு பிஞ்சு குழந்தை அவன் கால்களைக் கட்டிக் கொண்டு "அப்பா" என்றதும் அதிர்ந்து போனான் தெலகராஜு.

வயல் வெளிகளுக்கு நடுவில் இருந்த பள்ளக் குடியின் ஆற்றோரத்து முதற் குடிசையின் முன் நின்ற அவனை "வா மச்சான்" என்ற மாஞ்சியின் குரல் தூக்கி அடித்து நிலவுலகத்துக்கு கொண்டு வந்தது. அவனைப் போல் இருந்த துடியான அந்த குழந்தையைத் தூக்கி இறுக அணைத்துக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. குழந்தையின் வெற்றுடம்பும், தெலகராஜுவின் வெற்று மார்பும் ஒன்று சேர்ந்து இறுகுவதை அடக்கமாட்டாத வெறியுடன் பார்த்து ரசித்தாள் மாஞ்சி. குழந்தையின் உதடுகளை சப்பி சுவைத்து முத்தமிட்ட அவனை உடலெங்கும் பரவும் வெட்கப் பரவசத்துடன் "என்ன மச்சான் இப்பதான் வழி தெரிஞ்சுதா?" என்றாள் அவள். அவள் கழுத்தில் தொங்கிய ரோஜாப் பூ கொத்து அவனைப் பரவசம் கொள்ள வைத்ததும், அவிழ்ந்து முதுகெல்லாம் தொங்கிய அவள் தலைமுடியைக் கோதிக் கொண்டே அவளை இறுக அணைத்தபோது, குழந்தையின்மீது வீசிய அதே பால் மணம் அவள்மீது இருந்தும் மொச்சை அடித்தது. வளமான அவள் மார்புகள் பாலில் நிறைந்திருந்தது புரிந்தது.

"அப்பன் வரப்போவுது. எதிர் குடுசையிலும் ஆள் இருக்கு. நேரம் பார்த்த பாரு?" என்றாள் மாஞ்சி.

அவனாலும் ஆஸ்பத்திரியில் குத்துண்டு, கொலையுண்டு இறந்து போன சோணையை மறக்க முடியவில்லை.

"எப்ப மச்சான் ஒனக்குக் கல்யாணம்?" என்றாள் மாஞ்சி.

"எப்பன்னு தெரியாது. ஆனா சீக்கிரம் நடக்கும்."

"அப்பா நல்ல வேலை மட்டுக்கும் ஒத்துக்கிட்டியே. நேரா மாயி வாலை புடிச்சுகிட்டு ஓடப்போறென்னியே, அதெல்லாம் உட்டு தொலைச்சீல்ல?" மாஞ்சியின் மார்புகள் இறங்கி ஏறின. கண்கள் பளபளத்தன.

"யாரு வுட்டா? ஒனக்கு மாயியெப் புடிக்கலே. மாயி இனிமே இஞ்ச வரமாட்டா. ஆனா நான் அஞ்ச போவேன்"

“திருட்டு முண்டெ. இது மாதிரி எல்லாரையும் ஏமாத்திட்டே கடைசியில ஒன்னெ கோத்துகிட்டா. இப்ப நீ வுடமாட்டெ. பெரிய வூட்டு ஆயிவள்ள யாரெ கட்டிக்கப் போறே நீயி? அதச் சொல்லு.

“யாரையா இருந்தா என்னடீ?” என்று கூறியபடியே இருந்த குழந்தையை மறுபடியும் தூக்கி அவன் பால் மணத்தை நுகர்ந்தபடியே, மீண்டும் மீண்டும் குழந்தையை திண்ணையில் விரிந்திருந்த பாயில் கிடத்தி, அதன் வயிறு கழுத்து, வாய் என்று இடம் இல்லாமல் முத்தங்களை வாரி இறைத்தான் தெலகராஜு. குழந்தையின் கண்களும் அவனையே கூர்ந்திருந்தது. மாஞ்சியின் பரவசத்தை திரும்பிப் பார்த்தபடி “வரட்டுமா, வரட்டுமா” என்றான் தெலகராஜு. மாஞ்சியின் உடம்பு சிலிர்த்துக் கொண்டது, அவன் குரலுக்கு.

“எப்போ வருவே?” என்றாள் மாஞ்சி – கண்கள் அவனையே நட்டது. லேசாக சிரித்தபடி அவள் கன்னத்தில் அடித்தபடி அப்படியே வயலில் இறங்கி நடந்தான் தெலகராஜு. சூரியன் மங்கியிருந்த இருட்டு சுற்றி வந்து படர்ந்திருந்தது. அவன் எங்கு போகிறான் என்று அவனுக்கே தெரியும். கூழை ஆத்துக்கரையோரம் நாணல் காட்டைத் தாண்டி போகும் பொழுது மேட்டில் இருந்த குடிசையில் இருந்து ‘ஓ’வென்ற அலறலுடன் இவனைக் கண்டதும் ஓலம் வீறிட்டு எழுந்தது. அதுதான் நாச்சி. கையை காட்டி அழுகையை அடக்கியபடி தெலகராஜு மேலே நடந்தான். சோணைக்குட்டியைச் சாக கொடுத்ததன் பின்னாலே அவள் அம்மா நாச்சியை இப்பொழுதுதான் பார்க்கிறான் தெலகராஜு. அவனை இந்த பெண்கள் இப்படி அடாது நேசித்ததன் பலன் சோணைக்குட்டியின் சாவு என்று அவனுக்குத் தோன்றியபோதே இந்த சமுதாய அமைப்பை உடைத்து நொறுக்க வேண்டும் என்று மீண்டும் அவன் மேல் ஓர் ஆவேசம் பிறந்தது. நெருங்கிப் பார்த்தால் சோணைக்குட்டியும் அவன் வைத்துக் கொண்டிருந்த ஒரு பெண்தான். அவனுக்கு முன்பே இந்த சோணையையும் அவள் அம்மா நாச்சியையும் ராமுகரமுண்டார் இன்னும் பத்து பேரோடு சேர்த்து குட்டி போட்டு வைத்திருந்தார் என்பது அருவருப்பாக ஞாபகம் இருந்தது தெலகராஜுக்கு. நாற்பதாண்டுக்கால இது மாதிரியான வாழ்வில் ஓடி ஓடி ராமுக் கரமுண்டார் ரங்கத்தையும் பெற்றிருந்தார். வூட்டுக்குள்ளும் பெண்களைப் பெற்றெடுத்துக் கொண்டிருந்தார். ரங்கம் அப்படியே ராமுகரமுண்டார் வாகு. ரொம்ப தீவிரமாக அவனை அவள் விரும்புகிறாள் என்பது

வெளிப்படையாகவே அவனுக்குத் தெரிந்தது. ரெங்கம் உடல் வாகிலும் அப்பனைப் போலத்தான். கொஞ்சம் கொஞ்சமாக பொடி வைத்து ஊதி, மெருகு போட்டு திராவகத்தில் அலம்பி எடுத்துப் பொன்னால் தீர்த்த சிலை மாதிரி கரமுண்டாத்தி பொண்ணுகளுக்கே உரித்தான அந்த நிமிர்ந்த தோற்றத்தோடு அவனையே பார்த்துக் கொண்டு நின்ற நிற்பு, இப்போதும் மனசில் அப்படியே காட்சி தந்தது. சோணைக்குட்டியின் தோற்றத்திலும், இதே உறவு கொள்வது இரவுகளில் கண்களில்கூட சோணையின் நெய் மயமான உடல், ராமுகரமுண்டாரோட அவ, பயந்து பயந்து ஓடுகிற தோற்றங்கள். இப்போதும் தன் கண்ணெதிரே நின்று அழுது கொண்டிருக்கும் நாச்சியின் தோற்றத்தோடு பொருந்தி, அவளும் சேர்ந்து அழுவது போல் இருந்தது. இந்த விசித்திரத்தை ஒரு மாயம் போல் தரிசிக்க முடிந்ததே தவிர, இவற்றை எல்லாம் உடம்பில் இருந்தும், மனசில் இருந்தும் அவனால் நீக்க முடியவே இல்லை. சோணை செத்ததில் இருந்து நாச்சியும் பள்ளக்குடியை விட்டு வெகுதூரம் வந்து விட்டாள். அவளால் அங்கு வர முடியவில்லை. ராமுகரமுண்டார் செத்ததும், தாலி அறுத்தது போல் ஆனாள். அவளால் செம்பாட்டம் பள்ளனுவளுக்கு இடையில் சும்மா இருக்க முடியவில்லை. சோணை ஒரு புறமும் அவளை மறுபுறமாய் மேல் ஜாதிக்காரனும், கீழ் ஜாதிக்காரனும், அடிமட்ட ஜாதிக்காரனும் வெட்டியானுவ உள்பட துரத்திகிட்டுத்தான் திரிஞ்சானுவ. பொம்பளைக்கு மட்டும் எவனும் ஜாதி பாக்குறது இல்லை. அனுபவிக்க ஜாதி வேண்டாம். சமூகம்–சமுதாயம் எல்லாமே வெளித் தெரிஞ்சாத்தான் எதுவுமே தப்பு. வெளிய தெரியலைன்னா எல்லாருமே ஒசத்தி. இதெல்லாம் நாச்சி படிச்சவ இல்லெ, தெரிஞ்சவ இல்லெ, இந்த காலத்துலயும் அவளுக்கு பள்ளக்குடியின்னா பறக்குடியின்னா வேற வேறயாத்தான் தெரியும். எல்லாம் ஒன்றுதான். ரத்தம் எல்லாம் மண்ணுதான்... என்னைக்காவது ஒரு நாள் புழுதான். அப்படின்னு எந்த பள்ளிக்கூடமும் போவாமலே... மனுஷன் எப்பவும் எப்பவும் எந்தக் காலத்துலயும் இதெ எல்லாம் தின்னு தின்னு ஒவ்வொரு புழுவா பொறுக்கி முழுங்குறவதான் அப்படின்னு நல்லாத் தெரியும். அடக்க மாட்டாமல் அவன் முழங்கால்களைக் கட்டிக்கொண்டு அவள் அழுதுகொண்டே இருந்தபோது அவள் உடம்பெல்லாம் இன்னும் ஆறாமல் பழுத்துப் போயிருந்த பச்சைப் புண்களை தன் விரல்களால் தடவியபடியே, இன்னும் பச்சப் புண்ணாவே இருக்கே? இன்னுமா ஆறல?" என்றான் தெலகராஜு. எப்படி ஆறும் ஊமை அடியா? புடிச்சிக்கிட்டு

கொண்டு போனவன் எல்லாம் காயம்படாம ரத்தம் கட்டுற மாதிரி கம்பாலயே அடிச்சிருக்கானுவ. ஓட ஓட வெரட்டி அவள போட்டு கொஞ்சுனவனுவளே, மாந்து மாந்துன்னு மாந்தியிருக்கானுவளே. நெனைச்சு பார்த்தா அவனுக்கே வருத்தமாய் இருந்தது. ஒரு பொம்பளை அவளை தொரத்துராங்க, அவ ஓடுறா. ஓட்டமா ஓடி தன்னோட குடிசைக்குள்ள ஓடிப்போய் சேர்றா. அவளை சேர்ந்தவங்க நாலு பேரு கையிலெ கழியோட உள்ளற நிக்கிறான் மொந்து மொந்துன்னு அவளெ சாத்துராங்க. அலறிகிட்டு மறுபடியும் கீத்த பிச்சிகிட்டு ஓடுறா. ஓடி ஓடி கரமுண்டாரு குடி பக்கமா போகும் அங்கேயிருந்தும் தொரத்துறாங்க. "அவளெ புடி. அவளெ." என்று கூச்சலோடு சத்தம் போட்டுக் கொண்டே தடியை அங்கிருந்தே வீசினார்கள், கள்ளர்குடி வீரர்கள். சுழன்று வரும் குறுந்தடிகள் வளைதடிகள் அவள் இருப்பிலும், முதுகிலும் மார்பிலும் சரியாகப் பட்டு 'அய்யோ' என்று கதற வைத்தன. ஆறு முழுவதும் தண்ணீர் ஓட, கரையோரமாக மேடேறி, அவள் ஓடும் போது அவளுக்கு எங்கே ஓடுவது? என்று தெரியவில்லை. தஞ் சாவூர் காலேஜுக்கு பள்ளக்குடியில இருந்து பொண்டுவ போயி படிக்க ஆரம்பிச்சுடுச்சுவ. மொதல்லெ ஊரு தாண்டி போயி படிக்கக்கூடாதுன்னு ஊரு கட்டுமானம் இருந்தது. ஊருக்கே அஞ் சினி பள்ளியுடம் வந்திருச்சே. அப்புறம் என்ன செய்ய? காத்தான் மவ அஞ்சலை தாவணி போட்ட குட்டியா ஆத்து பரிசல் ஏறி காலேஜுக்கு போனப்பதான் ராமுக் கரமுண்டாரு நாச்சிகிட்ட கேட்டாரு... "யார்றீ இந்த குட்டி? யார் மொவ? நம்ப ஊரா இவ?" என்று கேட்டப்பவே நாச்சிக்கு பகீர் என்றது. "காத்தானுக்கு மவ காலேஜ் போறாளா"ன்னு நீட்டினார் சிலத்தானுக்கு ஒரு மவன். சின்னையன்னு பேரு. கருகருன்னு சொட்ட வாழை குட்டியாட்டம் மினுமினுன்னு இருப்பான். அவன் அஞ்சலைக் குட்டிய தேடிகிட்டு ஆத்தங்கரைக்கு வர்றது, நாச்சிக்கும் தெரியும். அஞ்சலைக்கு சுந்தரம் பயல்தான் வேணும்.

"டேய் காத்தான், இனிமே ஒம் மொவள காலெ ஒடிச்சு வூட்டுல போடு. திருக்காட்டுப்பள்ளியிலே எவனோடையோ சுத்துகிட்டு திரியிறாடா ஒம்மொவ. ஆதிரியார் வூட்டு பயல் சுந்தரம் வேற இவ மேல கண்ணு வெச்சுகிட்டு திரியிறான். ஏதாவது தப்பு தண்டா நடந்தது? பயலே, கொலைய அறுத்து புடுவேன்" என்று வெளிப்படையாக மிரட்டினாரே தவிர, அவருக்கும் அஞ்சலைக் குட்டி மேல் வெறி பிறந்திருந்தது என்பது விடிந்ததும்தான் நாச்சிக்கு தெரிந்தது. ஆத்தக் கரை எல்லாம், பள்ளனுவளும், அஞ்சலைக்காக தேடித் திரியிற அக்கிரமத்தை நாச்சி, யார் கிட்ட போய் சொல்லுவா?

எல்லாருக்குமே தெரியும். அஞ்சலைக்குட்டி இப்படி வெடிப்பா திரியும் போதெ பல பொண்டுவளுக்கும், அடி வயித்துலெ இது நல்லதுக்கு இல்லேன்னு புளிய கரைச்சுது உண்மைதான். அஞ்சலை பள்ளக்குட்டி மாதிரி இருக்கமாட்டா. நல்லா ஓசந்த ஜாதி மான் மாதிரி கூழை ஆத்து தேளி மீன் மாதிரி, கள்ளப்பொண்ணுவ சாயல்ல துமுரா அழகாத்தான் இருப்பா. சுந்தரமும் விடாம துரத்தி தஞ்சாவூரு ரிஜிஸ்டர் ஆபீஸ் வரைக்கும் கொண்டு போவான்னு நாச்சிக்குகூட நம்ப முடியலெ. சீலத்தான் மவனும் இதுக்கு உள் கை. சின்னையனுக்கும் அஞ்சலைய வேண்டியிருந்தது.

அஞ்சலைக்கு சுந்தரம் வேண்டியிருந்தது. கரமுண்டாருக்கு

அஞ்சலையை கொண்டாந்து சேர்க்க வேண்டிய வேலையை நாச்சி ஏத்துக்க வேண்டிவரும்ன்னு அவளுக்கே தெரியாமல் இருந்தது. சுந்தரத்தையும், சின்னையனையும் தஞ்சாவூருல இருந்தே,

அஞ்சினிப் பள்ளனுவ ரெண்டு நாளா உளவு பாக்குறானுவன்னு யாருக்கும் தெரியாதா? ஆதிரியாரு வந்து "மாப்ளே ஏம் பையன காப்பாத்திக் கொடுங்க... அப்படின்னு ராமுகரமுண்டாரு களத்து மேட்டுல சினி குளத்து கொட்டிகிட்ட வந்து கதறுனப்போ, ராமுகரமுண்டாரு ஆதிரியாருகிட்ட சொன்னது இப்பகூட நாச்சி வயித்த கலக்குது.

"கள்ளனுவம் - பள்ளனுவம் - பறையனும் - பாப்பானும், எல்லாப் பயலும் இஷ்டம் போல ஒண்ணடி மண்ணடியா கலந்துதான் வாழ்றோம் ஆள்றோம்... ஆதிரயாரே, ஜாதியாவது, மண்ணாவது. அப்படி எல்லாம் ஒண்ணும் இல்லை. ஆனா கலந்து கட்டி போட்டு எடுத்தா அதுனால எள்ளும் கொள்ளும் ஒண்ணாயிடுமா? கல்யாணம் வரைக்கும் பொய்ட்டான் சுந்தரம். நீங்க ஏன் கவலைப்படுறிங்க? சின்னையன் பய எதுக்கு இருக்கான்? அவன் உயிரோட இருக்கணும்ன்னா அஞ்சலையை அவன்

தாலிகட்டணும். நீங்க போங்க மாப்பிளெ, நான் பாத்துக்கிறேன்" என்ற வார்த்தைகள் வெளிப்படையாக நாச்சிக்கு புரிந்தது மாதிரி யாருக்கும் புரிய நியாயம் இல்லை. அது ஒரு பாஷை.

ரிஜிஸ்டர் ஆபிஸ்ல சுந்தரத்துக்கு சாட்சி கையெழுத்து போட்டது சின்னையன்தான். தஞ்சாவூர் கோட்டை ரிஜிஸ்டர் ஆபீஸ் வெளியில் நாலைந்து கள்ளப் பயலுவோ அடிதடி கலகம் என்றும் கலகத்தில் சுந்தரத்தின் மண்டை உடைந்து ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டான் என்றும், மணப்பெண் ஓட்டம் என்றும் அன்றைய மாலைப் பத்திரிகைகளில் பகிரங்கமாய் பிரசுரம்

ஆகியிருந்தது. அடித்த அடியில் சின்னையன் எங்க போனானோ, தெரியாது. நகரத்து வாசிகளுக்கு அடிதடி என்றால் ரொம்ப பயம். ரிஜிஸ்டர் ஆபீஸ்லேருந்து போன் செய்து போலீஸ் வருவதற்கு முன்னால் ராமுகரமுண்டார் ஆட்கள் தடிகளை குறுக்கும் நெடுக்குமாக வீசியடித்து வீச, சுந்தரத்தின் நண்பர்கள் காலேஜ் தோழிகள் எல்லாம் ஓடின ஓட்டம் ஒரு ஓட்டப் பந்தயம் போல இருந்தது. போலீஸ் வந்தபோது ரிஜிஸ்டர் ஆபீஸ் மயானம் போல் இருந்தது. நாச்சி இன்னும் நாலைந்து பெண்கள் திருக்காட்டுப்பள்ளி பஸ் ஸ்டாண்டில், தஞ்சாவூர் ரயில்வே ஸ்டேசனில் எங்கு பார்த்தாலும், நிறுத்தப்பட்டிருந்தார்கள். சின்னஞ் சிறிய பெண். தனியாக்கப்பட்டபின் எங்கே பறந்தோட முடியும்? அஞ்சலையின் ஒரே பலம் காதல். என்றைக்காவது காதலுக்கு என்று தனியே தந்திரம் இருந்திருக்கிறதா? இது நேரானது, தைரியம் ஆனது, போராட துடிப்பது. ஆனால் சுந்தரத்திற்கு இதெல்லாம் இல்லை. சின்னையனை கவரமேட்டுக்கு அப்பால் நான்கு நாட்களுக்குப் பின், பிடித்தார்கள். நாச்சி அஞ்சலையை திருக்காட்டுப்பள்ளியில் அஞ்சலையின் கல்லூரி சினேகிதி பிராமணப்பெண் ஒருத்தியின் வூட்டில் இருந்து சுதந்திரமாக வெளிக் கொண்டு வந்தாள். சின்னையனை அடித்து தொங்கவிட்டார்கள். நாச்சி அஞ்சலையைச் சமாதானம் பண்ணி, நாச்சியும் பேசி, யாருக்கும் தெரியாமல் காப்பாற்றி, சுந்தரத்திடம் சேர்ப்பதாகத் தடவிக்கொடுத்து ஏமாற்றி, பெண்ணுக்கு பெண்ணே வழியாக, அஞ்சலையைப் பதுக்கி கொண்டு வந்து சீனிக்குளத்துக் கொட்டடியில் கொண்டுபோய் அடைத்தாள்.

இது எல்லாம் தெலகராஜுவுக்கு தெரியுமோ? ஏன்னா ரொம்ப நாளா ராமுகரமுண்டாருக்கு மாஞ்சி மேலெ இருந்த ஆசை. இந்த பக்கம் மாஞ்சியை காத்தாயம்பா இழுத்து உள்ளே பூட்டிக்கிட்டது. ராமுகரமுண்டாரால எதுவுமே பண்ண முடியாம போச்சு. காத்தாயம்பா ஓடுனதும், நாச்சி காத்தான் மொவ அஞ்சலையைக் கொட்டடியில கொண்டு வந்ததும், ஒரே ராத்திரியிலதான் நடந்தது. காத்தாயம்பாளும், கலியராஜனும் ஓடுன அன்னைக்கித்தான், மாஞ்சியை ராமுகரமுண்டாரு கொண்டு பொய்ட்டாருன்னு சங்கதி சொன்னது சோணைக்குட்டி. சொல்லச் சொன்னது நாச்சி. அதே நேரம் கரமுண்டாரு வூட்டு பொண்டுவ எல்லாம் பெருமாள் கோவிலுக்கு தளிகைக்கு பொய்ட்டுது. ஊரு ரெண்டுபட போவுதன்னு நாச்சிக்கு மட்டும்தான் தெரியும். மாஞ்சியைப் பார்க்க காத்தாயம்பா வுடமாட்டா. சொல்லப்போனா மாஞ்சியை இனிமே தெலகராஜுக்கு விட்டு

கொடுக்கவேமாட்டா. தெரியும். காத்தாயி கல்யாணம் கட்டிகிட்டா மாஞ்சி கரமுண்டாரு வூட்டு எட்டாங்கட்டுல எப்பவும் மாட்டு சானிக்கூட செமக்க வேண்டியதுதான். காலம் காலமா கள்ளன் வூட்டுப் பொண்டுவளுக்கு இதுதான் வழி. தெரிஞ்ச தந்திரம். புருஷனுவள வளைச்சுப் போட இவளுவளையே வளைச்சு போட்டுறது? தெலகராஜு பேயா அலையிறது நாச்சிக்கும் தெரியும். காத்தாயம்பாளுக்கும் தெரியும். ஏன் மாஞ்சிக்கும் தெரியும். மூணு பேரும் தெலகராஜுவை அண்டவுட மாட்டாளுவ. மூணு பேரையும் சுத்திச் சுத்தி, அந்த ஆம்பளைக்கி ஒன்றும் மிச்சம் இருந்திருக்காது. மாஞ்சி அப்படியும் தனியா ஆம்புட்டுக்கிட்டா. இருட்டுல கொல்லைபுற படி தொரையில பயந்து பயந்து வேண்டாம் வேண்டாம்ன்னு மாஞ்சி, தெலகராஜுக்கு விட்டு கொடுத்தது, காத்தாயம்பா ஒத்துக்கிட்டுத்தான்னா, யாராவது நம்பமுடியுமா? காத்தாயம்பா காணாமப் போனதும், மாஞ்சி காத்தாயம்பாள தேடிக்கிட்டுதான் வெளிய போனா. இருட்டுல களத்து மேட்ட தாண்டிப் போகும் போது ரெண்டு பள்ளன்கிட்ட அவ மாட்டிகிட்டா – "சீ நாயிங்களா. வுடுங்கன்னு" ஓதறிக்கிட்டு ஓடும்போது, களத்து மேட்டுல இருந்து நாச்சி ஓடியார்றா. சீனி கொளத்துகிட்ட மதகடியில் தண்ணி, ஹோன்னு பாயிது. இருட்டு மினுக்கட்டாம் பூச்சி ஆத்தாங்கரை புளியமரம் எல்லாம் முணுக்கு முணுக்குன்னு வெளிச்சம் போட்டு மரம் எல்லாம் வெளிச்சமாகி தெரியிது. வெளிச்சம் திருதிருன்னு எஞ்ச இருந்தோ காத உரசிகிட்டு வேல் கம்பு பாயுது. யாரு மேலயும் குத்தாம இப்படி வேல் கம்பு பறக்குறதும் ஆச்சரியம். திடுதிடுன்னு யாரோ மாஞ் சியெப்புடிச்சு மதகடி ஓரமா கொட்டடிக்குள்ள தள்ளுறாங்க. அது ஒரு சின்ன குழி. திருட்டுத் தனமா ஒளிச்சு வெக்கிற கெடங்கு. சில சமயம் மாடுவளகூட அதுல அடைப்பாங்க. கொட்டடிக்குள்ள நாச்சி? கரமுண்டாரு? வெளியில இருக்குற குளக்கரையில நாச்சி என்னமோ ஒரு பயங்கரம் நடக்கப் போவுதுன்னு நாச்சி தலைமேலெ இடிச்சி சொல்லிச்சு. கொட்டடிக்குள்ள என்ன நடந்தது? யாருக்கும் தெரியாது. அஞ்சலை செத்துப்போவான்னு ராமுக்கரமுண்டாருகூட நெனைக்கல. இன்னும் செத்த நேரத்துல அவருகூட சாப்போறாருன்னு அவருக்குத் தெரியாது. ஆறடி ஒயரமும், மூணடி அகலமுமான அந்த பிரமாண்டமான ராமுக்கரமுண்டாருங்கிற ஒடம்ப, செத்த நேரத்துக்கு முந்தி காதல் காதல்ன்ன சிறகெ விசி ஏந்திரிச்சி பறக்கப் பார்த்த அஞ்சலைங்கிற – அந்த குஞ்சுப் பறவையை எப்படி ரெக்கையை புடுங்கி, ரத்தத்தை உறுஞ்சுனுதுன்னு தெலகராஜுக்கு மட்டும்தான் தெரியும். கம்மா

தூங்கி கிடப்பது போல் மயங்கிப் போன அஞ்சலை அப்படியே துவண்டு போய் நெஞ்சடைத்து நின்று போவாள் என்று அவளுக்கே தெரிந்திராதுதான். ஆனால் ராமுக்கரமுண்டாருக்கு அது சாதாரணம். உள்ளே வந்து விழுந்த மாஞ்சியை விடாமல் தடுத்து நிறுத்தினார். "இனிமே தப்பமுடியது" – என்றபடியே காலால் தட்டிக் கதவை எட்டி உதைத்து மூடி அவரது ராட்சத புஜங்களுக்குள் மாஞ்சியை கொண்டு வந்து நிறுத்தினார். விஷயம் புரிந்து, நாச்சி இருட்டில் ஓடி ஆரம்பித்தாள். எதிரே இருட்டில் ஓடி வந்த சுப்பாக் கரமுண்டார், "அண்ணே ஓடியாங்க. குடி முழுகி போச்சு. சின்னி குட்டி எவனோடையொ ஓடிப் போச்சு. பள்ளனுவ காடேறிட்டானுங்க. ஓடியாங்க. அஞ்ச யாரு? எலே சாம்பான்! யாரு அஞ்சே இருக்கிறது? அண்ணன் இருக்கா? வரச்சொல்லு"ன்னு கத்தினார். பள்ளனுவளுக்கு ஒண்ணும் புரியல. ஆனால் எதிர்புறமாய் மதகை விட்டு இறங்கி ஓடலானார்கள். ஒருபுறம் நாச்சியும் வயல் வெளியே ஓடப்போனாள். எதிரில் கையில் லாந்தருடன் ஓடி வந்த ஊர்க்காவல் செஞ்குணியாண்டித் தேவர், அவள் கையைத் தாவிப்பிடித்து "யார் டீ? ஏன் இப்படி ஓடியார்றெ?" என்று கத்தினான். தப்பிப்பதற்கு வேறு வழியே இல்லாமல் "பெரிய வூட்டு ஆயி காத்தாயம்பா யாரோ பள்ளனோட ஓடிப்பொய்ட்டுதாம்."

"என்னது ஓடிப் பொய்ட்டுதா? நிஜம்மாவா? எப்ப? எஞ்ச?" என்றான் செங்குனியாண்டி. அவனுக்கும் பதறியது. "அம்ப ஆயி காத்தாயியா?" "காத்தாயிதான்." அதற்குள் பின்னால் இருளில் 'அய்யோ' என்ற சத்தமும் 'திடுதிடு' என்று ஆட்கள் ஓடும் சத்தமும் பயங்கரமாய்க் கேட்டது. பின்னால் மதகடி மேட்டில் தோண்டப்பட்டு இருந்த அந்த கொட்டடி திடும் எனப்பற்றி எரிந்து திரு திரு என்று பக்கத்தில் இருந்த வைக்கோல் போரும் களத்து மேட்டு வூடும், யார் யாரோ கொளுத்திய பந்தங்களுடன் சுற்றி ஓடிவர பற்றி எரிந்தது. எரியும் வெளிச்சத்தில் வரப்பு மேடுகளில் ஓடும் நூற்றுக்கணக்கான பள்ளர்களும் பறையர்களும், இருட்டோடு சேர்த்து ஓடும் கரிகோடுகள் போல், அவர்களும் இடுப்பு துணி மட்டுமே அவர்களை மனிதர்களாக அடையாளம் காட்டியது. கரமுண்டாரு பிணம் சினிக் குளத்து படிக்கறையில் வெளியில் வந்து விழுந்ததுதான் இந்த ஜனங்களின் ஓலத்துக்கும் ஓட்டத்துக்கும் காரணம்.

"வேண்டாம் மச்சான் – வுட்டுறு. அவரைக் குத்தாதெ. வெட்டாத" என்று சொன்ன மாஞ்சியை உதறித் தள்ளி காலால்

மிதித்த அவன், ஒவ்வொரு சொல்லுக்கும் ஒவ்வொரு குத்து என்று முதல் குத்துக்கே கீழே சரிந்து முரண்டிய கரமுண்டாரை மறுபடி மறுபடி குத்தியும் வெட்டியும் தள்ளி அவனது ஆத்திரம் அடங்க வெகு நேரம் ஆனது.

“இனிமே என் எதிர நின்னே, ஒன்னையும் கண்டந்துண்டமா வெட்டிப் போடுவேன். ஓடிப் பெய்யிடு” என்று உறுமினான். தெலகராஜு தூரத்தில் மதகடியின் அருகே அவருக்காகவே கட்டிய கொட்டடி குழியில் ராமுகரமுண்டாரை உருட்டித் தள்ளி விட்டு, மறுபடியும் திமு திமு என்று ஓடி வரும் பள்ளர்களின் கண்களில் இருட்டிலும் தென்படாமல் மறைந்து சீனிக் குளத்தில் இறங்கி மறைந்தான். மதகடியின் மேல் நெளிந்து போகும் ஒற்றையடிப் பாதையின் மேலே குருவி விரட்ட போட்ட பரணிமேல் ஏறி ஒளிந்திருந்த நாச்சிக்கு இதெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாய் இருட்டிலும் தெரிந்தது. அன்றிலிருந்து அந்த மூன்று நான்கு மாதங்களின் எத்தனை கஷ்டங்கள்? எத்தனை தடவை? போலீஸ் இன்ஸ்பெக்டர் லத்தியால் மாரிலும், புட்டத்திலுமாக குத்தினார்கள். எத்தனை ராத்திரிகள்... கொட்டடியைவிட மோசமான போலீஸ் ஸ்டேசன் கொட்டடி. இரும்பு கழிகளுக்குப் பின்னால் எத்தனை முறை அவளும் சோணையுமாக–எத்தனை போலீஸ்காரர்களிடம் ராமுகரமுண்டாரைவிட–கேவலமாக எத்தனை முறை? உண்மையைச் சொல்லாமல் தப்பிக்க துணியை அவிழ்த்து கொண்டு அங்கேயும் நிர்வாணப்பட வேண்டியிருந்தது. எல்லா மனுஷனும் மனுஷன்தான், எல்லா காலங்களிலும், வேட்டை வேட்டைதான். நாய்கள் நாய்கள்தான். நாச்சிக்கு தெரியும். ஜாதி நாயானாலும் சாதா நாயானாலும் நாய்தான். இறங்கிப் போக முனைந்தால் நாய்கள் குதறிவிடும். நாய்கள் அவளைக் குதற ஆரம்பித்து, அப்பால் பள்ளர் குடிசைகள் அன்றுதான் எரிய ஆரம்பித்திருந்தன. சாலியத் தெருவிலும், துலுக்கத் தெருவிலும் ஜனங்கள் வெளியே வராமல் கதவை மூடிக்கொள்ள ஆரம்பித்ததும் அன்றுதான். ஆற்றில் கரிக்கட்டை பிணங்கள் மிதக்க ஆரம்பித்ததும் அன்றுதான். சுப்பாக் கரமுண்டாரு, கரமுண்டாரு வூட்டுக்குள்ளே வைத்து வூட்டுக்குள்ளேயே உமாமஹேஸ்வரியை காணாப் பொணமாக்கியதும் அன்றைக்குத்தான். அஞ்சினி என்னும் இந்த ஆற்றோரத்தில் புதைந்த கிராமம் தீ கொண்டு வலையம் புரிந்ததும் அன்றுதான். துலுக்கர்களை ரெண்டே நாட்களில் ஊரைக் காலி செய்யச் சொன்ன நடுவக் கரமுண்டார் புத்திசாலியா? சுத்துவட்ட கிராமம் எல்லாம் பள்ளக்குடிகளெ கொளுத்துன பள்ளனுவ

புத்திசாலியா? கொளுத்தவுட்ட கள்ளனுவ புத்திசாலியா? யோசிச்சா யாருக்கும் பயம்தான் தோணும். யாரும் சொல்லி

செஞ்சது இல்ல இதெல்லாம். நீண்ட காலமா ஒவ்வொரு மனுஷனுக்கும் மனுஷிக்கும் உள்ளே எரிஞ்சு எரிஞ்சு மனசுக்குள்ளே இருந்து, தானே வெளியே வந்து கொளுத்திக்கிட்ட தீ. கொளுத்தி எரிச்சு ஒரு குடியையும் ஒழிக்க முடியாதுன்னு ஒவ்வொரு குடிக்குமே தெரியும். எரிச்சுக்கிட்டும் கொலை பண்ணிக்கிட்டும், குத்திக்கிட்டும் அப்படியே அதையே முழுநேர வேலையா – வாழ்க்கை நடத்த முடியுமா? இதோ ஆத்திரம் தீர்ந்துடுச்சு. என்னா ஆயிடுச்சு? கரமுண்டாரு குடியில அம்பது அறுபது பொண்ணும் தாலி அறுத்துடுச்சு. பத்து இருபது ஆம்பளைகளுக்கு கை, கால் போச்சு. இருபது முப்பது கிராமத்தில் பத்து நூறு பள்ளச்சியுவ புருஷனுவ காணாப் பொணமாயிட்டானுவ. ஆனா பள்ளச்சியுவ தாலி அறுக்க வேண்டாம். கரமுண்டாரு குடியில எவளும் அறுத்த கட்ட கள்ளச்சி இல்ல. அதுவும் சமுதாயம்தான். ஜாதி சனம்தான். கட்டுப்பாடுதான். ஆத்திரம் தீர்ந்ததும் திரும்பி பார்த்தா கள்ளனுவ கள்ளனையே வெட்டியிருக்கான். ஆத்திரம் என்ன செய்யுறோங்கிறது தெரியாம ஆடியிருக்காங்க. இந்த நாளெல்லாம் நாச்சி கொல நடுங்க ஓடியிருக்கா. இஞ்ச இருந்து அஞ்ச, அஞ்ச இருந்து இஞ்சன்னு அவ ஓடாத எடம் இல்லை. ஒளியாத எடம் இல்ல. இந்த அழிமானம் ஆட்டத்திலேயும் தெலகராஜு எங்க இருந்தான்னு யாராலயும் கண்டு புடிக்க முடியலெ. காரணம் நாச்சியும் சோணையும்தான். ஒளிய இடம் இல்லாமல் மறைய வூடு இல்லாமல் திரிஞ்சது இவங்க மூணு பேரும் தானே?

அஞ்சினிய சுத்தி கள்ளனுவ ஒரு பக்கமும், பள்ளனுவ இன்னொரு பக்கமும் தெலகராஜுவை வேட்டையாடுனப்ப, தப்புச்சதே ஆச்சரியம்தான். கடைசில கள்ளனுவளும் விஷயம் தெரிந்ததும் பள்ளனுவளம் உண்மையைச் சொல்ல மாட்டேன்னுட்டானுவ. அதுதான் இன்னைக்கும் ஆச்சரியமாக, விடுகதையாகவும் இருக்கு. ஒரு பக்கம் கள்ளனுவளுக்கு தெலகராஜு ஒரு சவாலா நின்னான். இன்னொரு பக்கம் கள்ளனுவளுக்கும் வெறியாகி உந்தினான். பொணம் ஒண்ணு ஒண்ணா விழுக விழுக ஓடிப்போன காத்தாயிதான் இதுக்கெல்லாம் மூலக்காரணமுன்னு தெரியத் தெரிய அஞ்சினி பூராவும் அடங்கிப்போச்சு.

காத்தாயி வரமாட்டா. சுப்பாக் கரமுண்டாரு காத்தாயி இல்லாம திரும்ப வரமாட்டாரு, அப்படின்னு ஏனோ எல்லாருக்கும் தெரியும். ஆனா தொரச்சியப்பாயியும் சந்தனப்பாயியும் சுப்பாக்

கரமுண்டார பார்க்காம மண்டையப் போடாதுவ. அப்டீங்கிறது மட்டும் எல்லாருக்கும் நல்லா தெரியும். தெலகராஜுவுக்கு ஒன்றுமே பேசமுடியல. என்னைக்கோ மாட்டி தூக்குல தொங்க வேண்டிய தன்னை, என்னத்தக் கண்டு எல்லாருமே சாட்சி சொல்லாம ஒதுங்கிட்டாங்க? யாராவது ஒருத்தர் சொல்லியிருந்தாக்கூட கேசு நின்னிருக்காது. நிச்சயமா தூக்குத் தண்டனைதான். நாச்சிக்குகூட இந்த ஆச்சரியம் உண்டு. அஞ்சினியில் உள்ள எல்லாருக்கும் தெலகராஜு மாப்பிள்ளை. அவுங்க ஊரு மாப்பிள்ளை. தெரிஞ்சோ தெரியாமலோ ஊருல இருக்குற எல்லாருக்குமே காத்தாயிங்கிற சாதாரண கள்ளப் பொண்ண காத்தாயம்பாளா, பெருந்திரு பிராட்டியா? அம்பாளா, மகமாயியா, காளியா, மூலக்கரை கோல விழி அம்மனா எப்படித் தோன ஆரம்பிச்சா? தெலகராஜு தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான்.

ஊருலேயே ஒரு பெரிய வூடு. வூடு பூரா சங்கு சக்கரம், ராமர் பாதம், ஸ்ரீசூரணம், வைஷ்ணவ கலை, வூடு, ஊடா இல்லை, கோவிலா இருக்கு. பெருமாள் அஞ்ச கோயில்ல இருக்காரு இஞ்ச இல்ல, அவ்வளவுதான் வித்தியாசம். பத்து தலைமுறையா, ஆண்டு அனுபவிச்சு பெருமாள் சேவகம் பண்ணின ஒரே குடும்பம் அஞ்சினி கரமுண்டாரு குடும்பம். ஒரு தலைமுறையா? ரெண்டு தலைமுறையா, ஆண் வாரிசு இல்லெ. பொண்ணுவளாப் பொறக்குது. ஒவ்வொரு பொண்ணா கரமுண்டாரு குடி சொத்த பொளந்து எடுத்துகிட்டு போவுதுவ. இந்த நேரத்துலதான் காத்தாயம்பான்னு ஒரே பொண்ண பெத்து எடுத்து திரிசியம்பா எல்லாருமா சேர்ந்து காத்தாயம்பாள கொஞ்சம் கொஞ்சமா உருவேத்தி பூப்போட்டு கும்புட்டு, எட்டு வயசுக் குட்டியா இருக்குற அவளுக்குப் பத்து கரமுண்டார் குடி பொம்பளைவ மொத்தமா மார்ல இருந்து பாலை பீச்சிக் கொடுத்து, பதினைஞ்சு வயசு பொண்ணானப்ப, பால் சோறு ஊட்டி, அவள் நடக்குறதுக்கு பட்டு நடை பாவாடை விரிச்சு பெருமாள் கோவிலுக்கு கூட்டிட்டுப் போயி, "நீ கரமுண்டாரு வூட்டு பொண்ணு இல்லேடி, நீயி அம்மன். நீதான் பெருந்திரு. கரமுண்டாரு குடிக்கி நீதான் குடி விளங்க வந்த லெக்ஷ்மி. அப்படின்னு அவளுக்கு மாலை சாத்தி, சந்தன காப்பு பூட்டி, காத்தாயம்பாள ஆக்கி – அஞ்சினி பூராவுமே இப்படி ஒரு நெனப்ப எழும்பிவிட்டு, காத்தாயம்பாள மனுஷப்பிறவி இல்லேன்னு நம்ப எல்லாருக்குமே, ஏன் இப்படி ஒரு விபரீதமான ஆசை கௌம்பணும்? ஆனா பள்ளச்சியுவ விட்டயும். கள்ளப் பொண்ணுவள்ட்டயும்! அஞ்சினி பூராவும்! இது எல்லாம் ஒண்ணும் இல்ல. காத்தாயம்பா வெறும் பொண்ணுதான். எல்லாப்

பொண்ணுவள மாதிரி அவளும் ஒருத்தன் கிட்ட மடங்கிப் போகிற சாதாரண சதையும் ரத்தம் கொண்ட வெறும் கள்ளக்குட்டிதான். அப்படீன்னு தெரிஞ்சப்ப, அதுக்கோரு காரணம்தான் கலியராஜன். கலியராஜன் இந்த கிராமத்தில் எல்லாருக்குமே பிடிக்காதவனாகிப் போய்விட்டான். இதற்கெல்லாம் காரணம் சொல்லப் போனால் தெலகராஜுவுக்கு சிரிப்புதான் வந்தது. எல்லாவற்றிற்கும் நமக்கு காரணம் வேண்டும். ஆனால் அஞ்சினிக்கு இதற்கெல்லாம் காரணமே வேண்டாம். காத்தாயம்பாளை அவர்கள் இன்னும் வெறுக்கவில்லை. வெறுக்க முடியாது. வெறுக்கும் படியாக அவர்கள் பழகவில்லை. கும்பிட்டார்கள். பூஜித்தார்கள். இப்போதோ அம்பாள் கர்ப்பக்கிரகத்தை விட்டு அஞ்சினியை விட்டு இறங்கிப் போய்விட்டாள். தெலகராஜுவுக்கு நாச்சியை பார்க்கும்போதும் இவளும் ஒரு பெருந்திரு என்றும் மாஞ்சி ஓர் அம்மன் என்றும், மாயி ஒரு காளி என்றும், கிழவிகள் தொரச்சி, சந்தானம், வூட்டுக்குள்ளேயே கரமுண்டாரு வூட்டு சுவற்றுக்குள்ளேயே காணாப்பிணமா உமாமஹேஸ்வரியும், ஆயிரக் கணக்கில் செத்தொழிந்த, தாலியறுத்த, பெண்கள் எல்லாருமே காத்தாயம்பாளைப் போல தெய்வங்களாகவே தோன்றுகின்றனர் என்பது முன்பெல்லாம் அவனுக்குப் பைத்தியக்காரத்தனமாகவே தோன்றும். ஆனா இந்த ஏழை அஞ்சினி மக்கள் ஓடிப்போன காத்தாயம்பாளை இன்னமும் ஆச்சரியத்துடன் கன்னத்தில் போட்டுக் கொண்டு, "பெரிய வூட்டு ஆயிப் பொண்ணா ஓடினது? இருக்காது." என்றனர். செஞ்குளியாண்டி தேவன்கூட இதே கேள்வியை அஞ்சினி பூரா கேட்டுக் கொண்டே திரிந்தது எல்லாருக்கும் தெரியும். இப்போது தெலகராஜுவும் அந்த பாமர மக்களுடன் ஒருவனாக, இப்போது அவர்களுடைய ஆசைகள், வருத்தங்கள் வேகங்கள், துன்பங்கள் எல்லாவற்றையம் தனது துன்பங்களாகவும், உணர்ச்சிகளாகவும் ஏற்றுக் கொண்ட இந்த மாற்றம் யாரால் நேர்ந்தது? என்பது அவனுக்கு மட்டும்தான் தெரியும். காத்தாயம்பாதான். நாச்சி அவனையே பார்த்துக் கொண்டு வியந்து கொண்டிருந்தாள். லேசாக குளிர்காற்று வீச ஆரம்பித்துவிட்டது. நாச்சியை விட்டு தெலகராஜு எழுந்து ஆற்றோரமாக நடக்கலானான்.

"திலும்பி வருவியா" – என்ற குரல் பின்னால் இருந்து கேட்டது. அதை சட்டை செய்யாமல் "வர்றேன்" – என்றபடியே ஆற்றுக்கரை மேட்டோடு நடந்து சரிவில் இறங்கினான்.

ஆறு வழக்கத்தைவிட அதிகமான தண்ணீர் சுழிகளோட பொருமிக் கொண்டு ஓடிக்கொண்டிருந்தது. ஆற்றோரம் நீரில் இறங்கி நீரில் காலை அளைந்தபடியே ஓரமாய் நடந்தான் பாலத்தில் மெல்ல விளக்குகள் எரிய ஆரம்பித்து இருந்தன. பஸ் ஒன்று பாலத்தில் திரும்பி அஞ்சினிக்குள்ளே நுழைந்தது. நிறையப் பேர் இறங்கியதும், கடைசியாக அவனை அதிர்ச்சிக் குள்ளாக்கியபடி கடைசியாக பஸ்ஸில் இருந்து இறங்கியது மாயி. அவன் வேகமாக எதிர்புறமாய் நடக்க ஆரம்பித்தான். பாலத்தில் இருந்து ஆற்றோரமாய் மாயி இறங்குவதில் இருந்து, அவள் அவனைத் தொடரப் போகிறாள் என்பது அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தது. அவளும் ஆற்றோரமாய் நடந்து யாரும் இல்லாத இருண்ட கரையோரமாக அவனை நோக்கி வருவதே போல் வேகமாய் மங்கிய மாலை இருட்டிலும் அவனுக்குத் தெரிந்தான். சிலுவை போல் அவளது உடல் அமைப்பு பாலத்து விளக்கொளியில் ஒளியும் இருட்டுமாய் அவள் உடலை அவன் வெகுதூரத்தில் இருந்தே புரிந்து கொள்ள வடிவமைத்தது.

ஒன்று நன்றாகத் தெரிந்தது கரமுண்டார் வூடு அவனை விழுங்கி விட்டது. கோர்ட்டும், சட்டமும், கொலை கேசுகளும் கலவர வழக்குகளும் இனி அவனை எங்கும் எடுத்துக் கொண்டு போய்விட முடியாது. எல்லாரையும்தான் இன்னும் கவர்ந்திருக்கிற ரகசியம் என்ன? என்பது அவனுக்கு நன்றாத் தெரிந்தது. காத்தாயம்பாளை அம்மனாக்கி பூஜித்தார்கள். அவளுக்கு பக்கத்தில் மூர்த்தியாக இவனை எழுந்தருளப் பண்ணினார்கள். இப்போது இவனை மட்டும் பிரதிஷ்டை பண்ணியிருக்கிறார்கள். மூன்று மாதத்தில் உடலில் குத்து வாங்கிய முப்பத்திரண்டு குத்துகளும், ஆறிவிட்டன. உடம்பிலும் வலு பொங்கி பெருகி விட்டது. அஞ்சினிக் கள்ளனுவளைப் போல இப்பொழுது தெலகராஜு சட்டையை அவிழ்த்து எறிந்துவிட்டான். முன்னைப் போல பேண்ட் போடுவதில்லை. உடம்பு முழுவதும் காயம் இருந்ததால், வேஷ்டி கட்டப் பழகினான். காலைக் கடை ராவுத்தரிடம் கதை பேசினான் - பட்டு வேஷ்டியை மடித்துக் கட்டிக் கொண்டு, வயல்வரப்பில் நின்றுகொண்டு வயலில் வேலை செய்து கொண்டிருந்த எல்லாப் பள்ளக்குட்டிகளோடும் வம்பளத்து வாயடித்தான். தொடை வரை வேஷ்டியை தூக்கிக் கட்டிக்கொண்டு வெற்றுடம்புடன் கரமுண்டாரு தெருவில் வெளியில் உட்கார்ந்து கொண்டு கொத்தனார்கள், கரமுண்டாரு வூட்டு திண்ணையை தாழ்வாரம்

ஒற்றை கான்கிரீட் கட்டிடமாக மாற்றிக் கட்டிக்கொண்டிருப்பதை மேற்பார்வை பார்த்தான். ஒரு மாத காலமாய், உடம்பின் கட்டுகளை அவிழ்த்து தலைக்கு ஊற்றிக் கொண்டு பூரணமாய் சுகமானதிற்கு அதிக சந்தோஷப்படாமல், வெற்றுடம்புடனே ஊர் சுற்றலானான். எல்லாக் கதையும் எல்லாருக்குமே தெரியும். ஆதலால் யாருமே அவனை எதுவுமே கேட்பதில்லை. தஞ்சாவூரு தம்பி என்ற பேருகூட மறைந்து, குட்டி கரமுண்டாரு என்றுகூட பேர் வந்துவிட்டது. மணலில் இறங்கி முழங்கால்களை கட்டிக் கொண்டு ஆறு நிரம்ப ததும்பி ஓடும் தண்ணீரை இருட்டிலும் ரசித்தபடி தனக்குள் பெருமூச்சு விட்டுக்கொண்டு திரும்பிப் பார்த்தான் தெலகராஜு. இருட்டில் அவன் எதிர்பார்த்ததே போல் அவன் அருகே உட்கார்ந்து கொண்டாள் மாயி. இருவரும் பேச முடியாது இருந்தனர். மூன்று மாதமாய் எத்தனை பதைபதைப்புடன் காத்துக் கிடந்த மாயிக்கு எதுவும் பேசத் தோன்றவில்லை என்பது தெலகராஜுக்கு ஆச்சரியம் இல்லை. மாயி பேசுகிற பெண்ணல்ல. எப்படி ஆரம்பிப்பது என்றெல்லாம் கவலைப்படுகிற பெண்ணல்ல அவள். அவன் அவளையும் அவள் அவனையும் பார்த்துக் கொண்டு பேசாத மவுனத்தில் ஆழ்ந்திருந்தாலும் கூட பேச ஒன்றுமில்லை என்று தோன்றியது. நல்ல ஆழ்ந்த இருட்டில் ஒருவர் கை ஒருவரைத் தேடியது. இருவருக்கும் ஆச்சரியம்தான் இருவர் கைகளும் ஒன்றையொன்று இறுகப்பற்றிக் கொண்டன. மாயி அழ ஆரம்பித்தாள். இருளில் அவளதுஅழுகை அவளது சன்னமான குரலுடன் சேர்ந்து லேசாக அவனை அதிர வைத்தது. மூன்று மாதங்களுக்கு முன்னாலேயே அவன் செத்திருந்தால் இன்று இந்த அழுகையை சுகமாக வாங்கிக் கொண்டிருக்க முடியாது. திடீரென்று அவன் முதுகில் சாய்ந்து கொண்டு தன் கண்ணீரைப் பெருக்கிய அவளை மணலில் தள்ளிவிட்டான்.

"அழுகிறதுக்குதான் வந்தியா?"

"அழத்தானே வைக்கிறிங்க"

"நானா அழச் சொன்னேன்"

"அழச் சொல்லணுமா என்ன?"

"அடுத்த வாரம் வாரதா தானே சொல்லியிருந்தே?"

"என்னால அங்கே இருக்க முடியல"

"அஞ்சினிக்கு வராத நிறுத்துன்னு சொன்னேன்"

"ஏன்? நான் வாரது இடைஞ்சலா இருக்கா?"

"ஆமாம்"

"என்னது?"

"ஆஸ்பத்திரியில் நான் கெடந்தப்ப நீ சொன்னியே, அது மாதிரி எல்லாம் என்னால வாழ முடியாது. என்னுடைய வாழ்க்கையை உன் ஒருத்தியாலதான் பரிசோதிக்க முடியும். வேறு யாருக்கும் என்னோட வேற எதுவும் வேண்டாம். கள்ளனா இருந்தாப் போதும். நீ ஒருத்திதான் என்ன திருப்பி திருப்பி சோதனை பண்ணிகிட்டே இருக்கிறவ. இப்ப நான் சொல்றதுக்கும், நீ கேக்குறதுக்கும் வந்துட்டே. ஒனக்குப் புரியுமோ என்னவோ இருபதாவது நூற்றாண்டுல இருபத்தியோராம் நூற்றாண்டை எட்டிப் பாத்துகிட்டு இருக்கிற பொண்ணு நீ. நான் இது வரைக்கும் செஞ்ச காரியம் எதையும் மறுபரிசீலனை செஞ்சதே இல்ல. முன்ன கால வச்ச பின்னால திரும்ப பார்க்கதடான்னு ராமுக் கரமுண்டாருதான் சொல்லுவாரு. இப்ப நான் ஓங்கிட்ட சொல்லப் போறேன், ஆமா. இனிமேல் நானு அஞ்சினிக்காரன். கரமுண்டாரு குடி பொண்ணுவள கட்டிகிட்டு அஞ்சினியோட கரமுண்டார் வூட்டை கையில் எடுத்துக்கிட்டேன், புரியுதா? அதாவது, இனிமே ஒன்னோட எங்கேயும் வர தயாராக இல்லெ. நீ என்ன விட்டுப் போயி ஒசத்தியா ஒரு வாழ்க்கையை அமைச்சுக்க, அப்படின்னு நிறைய தடவ ஒனக்க சொல்லியாச்சு. நீ மாட்டேங்கிறே. ஒன்னே விட்டுட்டும் நான் போக முடியலெ. ஆனால் இந்த கண்ணாமூச்சி இப்படியேதான் இருக்கணும்ன்னா எனக்கத் தடையில்லே. நம்ப ரெண்டு பேருக்கும் எதுவுமே தடையில்ல. நம் ரெண்டு பேரும்தான் தடை. நீ இஞ்ச வருவே இல்லைன்னா ஒன்னத் தேடிகிட்டு நான் அஞ்ச வருவேன். ஒருத்தரை தேடி இன்னொருத்தர் எப்பவும் தேடித் தேடி அலைஞ்சு ஒருத்தர் மடியிலே ஒருத்தர் சாயுறது நமக்கப் போதும். ஒன்ன நான் ஏமாத்தவோ, எனக்காக நீ ஏமாறவோ கூடாது. இதுக்காகத்தான் அஞ்சினிக்கு நீ வரவேண்டாம் அப்படின்னேன் புரியுதா?"

"ஒங்க ஐடியா ஒங்களுக்கு ரொம்ப வசதியா இருக்கு இல்லையா? எனக்கும் வேற வழியில்லெ. என்ன தைரியம் உங்களுக்கு? பதினைஞ்சு வயசுக்கூட நெரம்பாத இரண்டு சின்னப் பொண்ணுங்கள ஓங்க கொழுப்பு அடங்காத ஜாதி திமிர்னால அடிமை மாதிரி தாலி கட்டி, அடிமை மாதிரி நாலு பொண்ணுங்களைப் பெக்க வச்சு, கரமுண்டாரு குடிய ஒசத்தப் போறிங்க பாரு. அப்படியே சுயநலம், கொழுப்பு வேற என்ன?"

"நல்லா பேசு. திட்டு. ஒன்னெ இப்படி தயார் பண்ணினதே நான்தானே... நீ சொல்றது உண்மைதான். நானும் இன்னும் கள்ளன்தான். அதை மீறி என்னால ஒண்ணும் பண்ண முடியலெ. ஒன்னப் போல நான் பத்து வருஷமா யோசிச்சு யோசிச்சு, தீப்போல எரிஞ்சு எரிஞ்சு, இப்ப அடங்கிப் போனேன். இப்ப நான் ஒரு கரமுண்டாரு வூட்டு மருமகன், அவ்வளவுதான். கரமுண்டாரு வூடு என்ன தூக்கி நிமுத்தியா நிறுத்திடுச்சு? இனிமே நான்தான் கரமுண்டான் வூட்டெ தூக்கி நிறுத்தணும். கரமுண்டான் வூட்டு வரவெல்லாம் நின்னு போச்சு. இனிமே பயிர்ச் செலவு பண்ணி கண்டு மொதல் கண்டு, கடனையெல்லாம் அடைச்சு கரமுண்டாரு வூட்டுப் பொண்ணவளுக்கெல்லாம் கல்யாணம் பண்ணி, ஒண்ணு ஒண்ணா கரையேத்தணும். இனிமே நான் தனி மனுஷன் இல்லெ. ஒரு குளத்துக்கு ஒரு நீதிதான். எப்ப காத்தாயி என்னெ தூக்கிப் போட்டு மிதிச்சுட்டு போனாளோ... அன்னையிலிருந்தே நான் எவ்வளவு பலவீனன் அப்படின்னு தெரிஞ்சு போச்சு. ஒன்ன என்னைக்குத் தொட்டு தூக்கிட்டு இந்த ஆத்து மடுவுல எறங்கினானோ அன்னைக்கே நான் ஒரு வேலி இல்லாத–சங்கிலி இல்லாத–காட்டு மிருகம் அப்படின்னு தெரிஞ்சுடுச்சு. இனிமே ஒரு கட்டுக்குள்ள நின்னாதான் நான் தப்ப முடியும். யோசிச்சுப் பார்த்தா, நான் கரமுண்டாரு வூட்டுப் புள்ளன்னு வந்து நின்னாதான், என் தேரு நிலைக்கு வரும். என்னச் சுத்தி வர்ற எல்லாரு மாதிரியாவும் கடைசி வரைக்கும் நீயும் சிதைஞ்சு சிதைஞ்சு, சுக்கு சுக்காத்தான் போவணுமா நீயும்?... முடியுமா?" என்றான் தெலகராஜு.

"நானும் முடிவாத்தான் சொல்றேன் ஓங்கள விட்டுட்டு மறுபடியும் நான் அனாதையா போவத் தயாரா இல்ல. ஆனா நீங்க செய்யிற எல்லாம்..."

வயல் வரப்புகளின்மீது நடந்து கரமுண்டான் தெருவின் வழியாக திரும்பினபோது மாயி கேட்டாள்: "எங்கே?"

"வூட்டுக்குத்தான்"

"எல்லாரும் என்னை அடிச்சு வெரட்டப் போறாங்க"

"மாட்டாங்க"

"ஏன் மாட்டாங்களாம்? அஞ்ச வந்து அவனமானப்படணுமா?"

"எப்பனாச்சு நீ வந்திருக்கியா? இப்ப வந்து பாரு."

"என்ன உள்ளே உடலேன்னா என்னோடயெ நீங்களும் கரமுண்டாரு வூட்டுபடி எறங்கி வந்துடுவீங்களா?"

"ஒன்னுஞ் சொல்லாம ஒன்ன உள்ளே வச்சிகிட்டா, நீ எஞ்சயும் போகாம வூட்டோட இருந்துடுவியா?" என்றான் பதட்டம் மிகுந்த ஆத்திரத்துடன்.

அவன் ஒன்றுமே பேசவில்லை. அவனையே ஏறிட்டுப் பார்த்தாள். அவளது பெரிய விழிகள் இரண்டிலும் நான்கு கண்ணீர்த் துளிகள் திரண்டு வழிந்தன. தெரு முனையில் இருந்து இருளிலும் கரமுண்டாரு வூடு பிரம்மாண்டமாகத் தெரிந்தது. முகப்பையும் வாசலையும், இப்போது மாற்றி கட்டியிருந்தான் தெலகராஜு. கான்கிரீட் உலகம் எங்க பார்த்தாலும் வளர்ந்து வரும்போது, சுண்ணாம்பு காரை வூடு இனிமேல் எதற்கு? ஆற்றுக்குள்ளிருந்து கான்கிரீட் கம்பங்கள் உயர்ந்து நின்றன. பழைய கரமுண்டார் வூட்டைச் சதுரமாக, பிரித்துப் பழைய சுவரை இடிக்காமல் ஆங்காங்கே பள்ளங்கள் குறுக்கும் நெடுக்குமாய் பழைய சுவற்றிலேயே நீண்ட குழிகளாய் மேலும் கீழுமாய் தோண்டி, அவற்றில் கான்கிரீட் தூண்கள் நிறுத்தி, சுற்றிச் சுற்றி இனி ஒரு புது வூடு போல் கான்கிரீட் பெல்ட்டுகள் எனப்படும் இணைப்புகளால் அந்த கட்டடம் முழுவதும் மூன்றாவது மாடி வரை உயர்த்தி இணைத்து இருந்தார்கள். இனி பழைய சுவர் விழுந்தாலும் வூடு விழாது. பழைய தூண்கள் விழுந்தாலும், வூடு சிதையாது. வூட்டின் மூன்று மாடியும், உப்பரிகையும் ஆற்றோட்டத்தில் பொடிந்து கொட்டிப் போனாலும் கான்கிரீட் தூண்களும் பெல்ட்டுகளும் இன்னும் நூறு, எரநூறு வருஷத்துக்கு அப்படியேதான் இருக்கும். ஆஸ்பத்திரியில் இருந்து குத்து காயங்களுடன் தூக்கி வந்து போடப்பட்ட ஓரிரு மாதங்களில், யாரையும் கேட்காமலேயே தெலகராஜு இந்த கட்டுமான வேலையை உடம்பு அசையாமலேயே தொரச்சியம்மாயியையும் சந்தனம்மாயியையும் வைத்துக்கொண்டே இந்த உள்கூட்டை கட்டிவிட்டான். தொரச்சியம்மாயி தன் அவிந்த கண்ணை வைத்துக்கொண்டே தெலகராஜுவிற்கு ஒரு உள் கூட்டை கட்டிக்கொடுத்துவிட்டது.

மாயி வூட்டு வாசலில் நின்று பிரமித்தாள். "இது அதே கரமுண்டாரு ஊடா?" என்றாள். வாசலில் நீண்ட இரட்டைத் திண்ணையைக் காணோம் திண்ணைகளில் நின்றிருந்த பெரிய தேக்கு தூண்களைக் காணோம். பர்மா தேக்கில் கடைந்தெடுத்த,

விட்டங்களையம், விதானங்களையும் அட்டைகளையும் அங்கு தொங்கிய ரச குண்டுகளையும், மணி ஜாடிகளையும், கொத்து விளக்குகளையும், காணாதது மாயியிக்கு ஏமாற்றமாய் இருந்தது. திண்ணையில் இல்லாத பெரிய கரமுண்டாரின் சப்பரமஞ்சக் கட்டில், காலடியில் மினு மினக்கும் வெள்ளி எச்சில் களாச்சியும் காணோம். கீழ் திண்ணையின் குத்து செங்கல் அருகே எப்போதும் நின்று கொண்டிருக்கும் கேணிப்பட்டரை வண்டிகளையும் காணோம், எதிர் சரகில் வலப்புறம் இருந்த குதிரைலாயம் முழுவதும் கான்கிரீட் பெல்ட்டுகள் மூலம் மேலோங்கி எழுந்திருக்கின்றன. மாயிக்கு மூச்சுவிட முடியவில்லை "அடேயப்பா" என்றாள். வாசலில் நின்ற பார்த்தபோது ரெண்டாங்கட்டு முற்ற வெளியில் டியூப் லைட் வெளிச்சத்தில் துளசி மாடத்தில் இருந்த துளசியம்பாள் மட்டும்தான் பழைய கரமுண்டாரு வூட்டை நினைவில் தந்தது. உள்ளே நுழைந்தவுடன் மாயி முன்கூடத்திலேயே நின்று போனாள். மாயி தயங்கித் தயங்கி உள்ளே பார்க்கும் முன் தெலகராஜு வூடு முழுவதும் மணந்து கொண்டிருந்த சிமெண்ட் வாசனையுடன் உள்ளே போய் மறைந்தான்.

"ஏன்டி மாயி அப்படியே நின்னுட்டே? உள்ள வர்றதுக்கு என்ன? இனிமே என்ன? கரமுண்டாரு எல்லாம் போயி சேந்துட்டானுவ. வூடு ரொம்ப வேற குடி பொண்டுவதான் ததும்பிகிட்டு நிக்கிறாளுவ. வா... வா... வெட்கப்படாதே... இது ஒம் வூடுதானே?" என்ற குரல் வந்த திசையில் பார்த்தாள் மாயி.

மஞ்சள் நிற நார்ப்பட்டு உடலைச் சுற்ற, பேரீச்சம்பழம் போல் சுருங்கிய தோல், ஒருவித சாந்தியுடன் மிளிர, தொண்டு கிழங்களுக்கே உரித்தான பஞ்சு பஞ்சாய் நரைத்த முடியுடன் சந்தனம்மாயி அவளை அருகே அழைத்ததும், இழுத்து அணைத்துக் கொண்டதும், ஆச்சரியமாய் இருந்தது. கூடத்தில் ஒரு கணக்குப்பிள்ளை உட்கார்ந்து இருந்தான். அவன் உள்ளே பார்த்து "காத்தான் சின்னம்மாகிட்ட சொல்லு. யாரோ சுமங்கலி வந்திருக்கான்னு" என்றான். ஒரு கணத்தில் உடம்பில் மின்சாரம் பாய்ந்தது மாயிக்கு. சொல்லமுடியாத இன்பமும் சொல்லிக் கொள்ள முடியாத துக்கமும் ஒரே நேரத்தில் அவளுக்கு தொண்டை அடைத்து கண்களில் நீரைக் கலக்கின. இந்தக் கணக்குப்பிள்ளை யாராக இருக்கும்? தெலகராஜுவைப் போல இவனும் வார்த்தைகளை வைத்து உருவக் குத்திவிட்டான் என்று தோன்றியது அவளுக்கு வெறும் சொல்லில் மந்திரம் ஏற்றி விடுகிறார்கள். உள்ளேயிருந்து

வந்த விஜயம் இவளைப் பார்த்ததும் "மாயிக்கா வா... வாங்கக்கா. நீங்கள்லாம் வருவீங்களா எங்க வூட்டுக்கு? பெரிய ஆபசீஸராச்சே?" என்றபடி அவள் தலையில் அவளைக் கேட்காமலேயே இரண்டு முழம் முற்றத்தில் வளர்ந்த குண்டு மல்லிகையை அவளே தொடுத்த சரத்தை சூடிக்கொடுத்து "குங்குமம் எடுத்துக்குங்கக்கா" என்று வெள்ளி குங்குமச் சிமிழை அவள் முன்னே நீட்டினாள் விஜயம். சின்னஞ்சிறிய பெண். ஆனால் விஜயம் மடமடவென்று வளர்ந்திருந்தாள். தொரச்சியப்பாயி வளர்த்த பெண் என்பதுஅவள் தோற்றத்திலேயே தெரிந்தது. மாயி சின்னஞ்சிறு வயதிலேயே கரமுண்டாரு வூட்டை நோக்கக் கற்றவள். அங்கே அவர்கள் எது செய்தாலும் நன்றாகத்தான் இருக்கும். அவளுக்கு சந்திரஹாசக் கரமுண்டார்–அவரது ஆறடி ஒயரம்–பிரம்மாண்டமான கரு கரு என்ற தேகம்–லேசாக நரை படர்ந்த புருவம்–பெரிய பெரிய கை கால்கள் எல்லாமே வியப்பாகத்தான் இருக்கும். இப்போது இந்த அங்கங்களை வியப்புடன் பார்த்தாள் மாயி. காத்தாயம்பாளிடம் இந்த இயற்கை மீறின அழகைப் பார்த்துதான் எல்லாருமே கும்பிடத் தொடங்கினார்கள். விஜயம் பதினைஞ்சு வயசு இருந்தாலும் 20 வயது தோற்றம் கொடுத்தாள். மொத்தத்தில் பூனார் போன்ற மெல்லிய உடல்தான் என்றாலும் தோள்கள், கை, கால்கள், மார்பு, தொடைகள், கணுக்கால், கெண்டை ஆகியவை எல்லாம் தனித்தனியாக மிகப் பெரியவையாக அழகுடன் பொறாமை கொள்ள வைத்தது.

"இந்தாங்கக்கா காப்பி" என்ற குரல் கேட்டு மாயி கண்டது எதிரே காப்பி டம்ளருடன் நின்ற ரங்கத்தைதான். விஜயத்தின் தங்கைகள் இரண்டு பேரும் அடுத்தடுத்து நின்று, "வாங்க" என்றார்கள். உள் கட்டு முற்றத்தில் நின்றபடி நாலக்ஷ்மியம்பா, "வாம்மாடீ மாயி" என்றாள். தூணுக்குத்தூண், முற்றத்தைச் சுற்றிலும் அந்த வூட்டின் பெண்கள் நின்றனர். பெண்கள் நிரம்பிய உள்கட்டு முற்றமும், மாடி வளைவும் இங்கிருந்தே மாயிக்கு வியப்பளித்தது. முற்றத்தை சுற்றிலும் பழைய கரமுண்டாரு வூட்டு சாயல், சுவற்றில் எல்லாம் அஞ்சினி வேணுகோபால் ஸ்தபதி வரைந்த புராதனமான தெய்வப் படங்கள். தஞ்சாவூர் சக்கரபாணி ராஜா செய்த கண்ணன் படம். நீல நிறக் கடலில் பட்டுத்துணியால் வைரம் பதித்த தங்க ரேக்கு ஒட்டி செய்த அற்புதமான படம். எல்லாவற்றையும் அலங்க மலங்க பார்த்துக் கொண்டு நின்றாள் மாயி.

"ஏம்மா மாயி, ஒனக்கு என்ன சம்பளம் கொடுக்குறாங்க?"

"ஒரு எறநூறு முன்னூறு இருக்குமா" என்று காரியத்தைத் தொடங்கியது தொரச்சிப்பாட்டி.

"என்னப்பாயீ நீயி? மாயியக்கா பத்து ஆபீஸுக்கு டைரக்டரு. சம்பளம் மட்டும் மூவாயிரம் ரூபாய்க்கு குறையாது. எப்பேருக்கு ஒத்த படிப்பு தெரியுமா?"

"எனக்கென்னடி எளவு தெரியும்? அதெல்லாம் ஓம் மாமனுக்குத்தான் தெரியும்" என்றது கிழவி.

"கொஞ்ச நேரம் ஆவட்டுங்க்கா. குளிச்சிட்டு சாப்பிடலாம். நல்லா மழையில நனைஞ்சிட்டீங்க போலருக்கே. மாமா ஒங்கள எங்க புடிச்சு இளுத்தாந்தாங்க? இப்படி சேறும் சகதியுமா இருக்கு. ஏய் விஜயம், அக்காவ வெந்நி உள்ளுக்கு அழச்சிகிட்டுப் போயி வெளாவி கொடுத்து புது பொடவை ஒன்ன புதுப்பெட்டியிலருந்து கொண்டாந்து கொடுத்து கட்டிக்கச் சொல்லு" என்றாள் ரங்கம்.

யாருமே மாயியிடம் இருந்து எதையுமே தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லாதது போல் பழகினார்கள். ஜாதி பேச்சோ, முறையோ சடங்கோ எதுவும் குறுக்க வரவில்லை. அவளை கையில் வைத்துத் தாங்கினார்கள். ஆச்சரியத்தில் திக்கு முக்காடினாள் மாயி. எல்லாம் கனவில் நடப்பதுபோல் இருந்தது. வெந்நீர் இதமாகவும், பதமாகவும் இருந்தது. அந்தக் கோடை மழையின் ஈர நயப்புக்கு சுள்ளென்று சுடும் அந்த வெந்நீர் சுகமாய் இருந்தது. முன்பு பத்தாயக் கட்டு இருந்த இடத்தை இடித்து இப்போது எல்லாரும் சாப்பிடும் அறையாக இடித்துக் கட்டி பூசி இருந்தார்கள். அங்கே விருந்துக்கு வருகிறவர்கள் சாப்பிட நீண்ட மேசையும் போட்டிருந்தது. வெள்ளித்தட்டில் குதிரைவாளிச் சோறும், பூண்டு மணக்கும் கீரைக் கடையலும், வத்தல் குழம்பும் வயிற்றையும், மனசையும் நிரப்பின.

கண்களில் ஒரு குரோதம் தொனிக்க, "ராத்திரி ஆயிடுச்சு இனிமே எங்கப் புள்ள போவப்போறெ? இங்க தங்கியிருந்துட்டு... நாளைக்குப் போலாம் புள்ள" என்று கேட்டுக் கொண்டே சுருட்டுப் புகை விட்டுக் கொண்டே அங்குமிங்கும் உலாத்தியது சந்தனப்பாயீ. விஜயம்தான் பரிமாறினாள். ஆவி பறக்க அவர்கள் பரிமாறுவதும், எடுப்பதும், தொடுப்பதும் ஆச்சரியமாக இருந்தது. இந்தப் பெண்களின் பேச்சுக்குப் பின்னால் ஏதோ ரகசியம் பொதிந்திருப்பதாய் மாயிக்கு முதல் முறையாய் பயம் வந்தது. ஒரு

காலத்தில் இதே வூட்டுக்கு முன்னால் அவள் கப்பரை ஏந்திய கோரமான அந்த நாளை தொலைத்திருந்தாலும் இவர்களின் எல்லாரின் பேச்சுக்குப் பின்னாலும் இவர்கள் எல்லாருக்குமே பிடிக்காத ஏதோ ஒன்று தன்னிடம் இருப்பது அவளுக்குப் புரிந்தது. வெந்நீரில் குளித்து உடலெல்லாம் சுகமாக துவட்டி, தனியாக அந்த இன்பத்தை நுகர்ந்து, யாருமே இல்லாத இடத்தில் இருப்பது போல் இருந்த இன்பம், திடீரென்று முறிந்தது. அந்த தூணிற்குபின் இருந்து அவளது நிர்வாணத்தை வெகு நேரமாய் பார்த்து பொங்கிப் போயிருந்த முகத்துடன் ரங்கம்மாள் என்ற ரங்கம் ஒன்றும் நடக்காதது போல், "குளிச்சிட்டிங்கிளா? நேரமாச்சு, பார்க்க வந்தேன்" என்றபடியே அவளையும் அவள் மார்புகளையும், அவள் இடையையும் கால்களின் சீர்மையையும் பார்த்து பாராதது போல் அவளைச் சாப்பாட்டுக்கு அழைத்து சென்றது. அவளுக்கே பயம் தந்தது. ரங்கத்துக்கு அதிகம் இருந்தால் பதினேழு வயது இருக்கலாம். இந்த வூட்டை கை விரல்களில் மடக்கி வைத்திருக்கிறாள் போல் தோன்றியது.

இருமல் சத்தம் கேட்டது. பெண்கள் ஒவ்வொருவராய் கொஞ்சம் கொஞ்சமாய் கரமுண்டாரு வூட்டின் உட்பகுதிகளில் அடங்கிப்போனார்கள்.

பட்டுக் கைலி சுற்றி மேலே ஒன்றுமில்லாமல் துருக்கி துவாலையுடன் ஒரு நவீன இளைஞனைப்போல் சாப்பிட வந்த தெலகராஜுவைப் பார்த்து மாயிக்கி ஆச்சரியம் தாங்கமுடியவில்லை. அவனும் குளித்த வியர்வையை ஒற்றிக் கொண்டான்.

"என்னடீ? நான் சொன்னது சரியாப்போச்சா?"

"ஒன்னெ தொரத்தியாப்புட்டாங்க?" என்று கலகலவென்று சிரித்தான் தெலகராஜு.

"என்னது? தொரத்துறாவளா? யாரு தொரத்த? யாரே? மாயி அம்மா பிள்ளையில்ல? இனிமே நீ எஞ்சயும் போவ வாண்டாம். பாவம் நீயி. அஞ்சயும் இஞ்சயுமா அல்லாட வேண்டாம். அம்மா வூட்டோட வந்துடு. எவ என்னா சொல்லக் கெடக்கு? நம்ப வூட்டுலதான் ஒங்க ஆயி கெடந்தா. ஒப்பனும் அம்மாவோடதான் சுதின்னு கெடப்பான்... நீ யாரு அம்மாபுள்ளெ." என்று வேகமாக புலம்பியபடி குனிந்தும் நிமிர்ந்தும் 'கப் கப்' என்று சுருட்டுப் புகையைச் சுருளவிட்டபடி சாப்பாட்டு மேசையை சுற்றி நடந்தது சந்தனப்பாயீ. அதான் கண்களில் பேச்சில், வடிந்த விஷயம் - விஷம், மாயிக்குப் புரிந்து கொண்டது.

"ஏப்பாயீ என்ன இஞ்சயே தங்கச் சொல்றிங்களே? நாலு பேரு என்னமாச்சு சொன்னா, என்னெ வெரட்டிப்புடுவீங்கல்ல?" என்றாள். அவள் குரல் அவளுடையதாக அவளுக்கே தோன்றாமல் பின்னியது.

"ஹே... ஹே... ஹே..." என்று சிரித்து தொரச்சிப்பாட்டி, "அதெல்லாம் பேசப்புடாதுடா காலம் மாறிப்போச்சு. எல்லாம் ஒன்னக்கொன்னு ஒன்னுன்னு கத்திகிட்டு இருக்கானுவ. ஓம்பாட்டன் காலத்துல இருந்தே நீங்க எல்லாரும் எங்களுக்கு சொந்தந்தான்டிப் பொண்ணே. என்னடா பேசாம இருக்கிற தெலகராஜு? இது என்ன புதுசா.கூட இருந்தா ஒண்ணுக்கொண்ணு ஒத்தாசையா இருக்கும்ல்ல? அந்த பக்கம்தான் மாயி கழுதைக்கு யாரு இருக்கா? நாந்தான் கேக்குறேன்? என்ன இது வரைக்கும் அப்டி இப்டி எப்டியோ இருந்திட்டிங்க. இனிமே அப்படில்லாம் இருக்க முடியாது. ஒனக்கு எதுக்கு ஆபீஸும், வேலையும்? என்னடா கெழவி என்னன்னமோ சொல்றாளேன்னு நெனைக்காதே. நீயும் நாலு பேரைப் பத்தியே பயப்படுறே? இதுக்கு மேலெ எனக்கு என்ன சொல்றதுன்னு தெரியுல. நீயும் கரமுண்டாரு வூட்டுப் பொண்ணுதான்" என்று கட்டை கரகரத்த குரலில் சொல்லியபடி கண்களால் கண்ணீரைப் பொழியவிட மேலெ திறந்திருந்த பத்தாயக்கட்டு மேல் ஜன்னலைப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே எல்லார் முகமும் லேசாக இருண்டு கொண்டது. விஜயம் உதடுகள் லேசாக துடித்தன. 'ணங்'கென்று கையிலிருந்து வெள்ளி கூம்பாவை மேசையில் வைத்துவிட்டு உள்ளே போனாள் விஜயம்.

எல்லாருமே இதை எதிர்பார்த்தது போலவே, மவுனமாக இருந்தார்கள். கடைசியாக தட்டில் இருந்தது பாதி இட்டிலியை வைத்துவிட்டு, அதன் மீதே கை கழுவி, டம்ப்ளரில் இருந்த பாலை குடித்து மேல் துண்டால் முகத்தையும் கைகளையும் துடைத்தபடி தெலகராஜு தொரச்சி அம்மாயியெப் பார்த்து "வெத்தல இருக்காம்மாயி" என்று கேட்டுக்கொண்டு இருக்கும்போதே – "உம்" என்று குரல் கேட்டது. பின்னே விஜயம்தான் ஈரத்துணியால் சுற்றி வைத்த வெற்றிலைக் கவுளியும் வாசனை பாக்குமாக சிவந்த கைகளில் ஏந்திய வெள்ளித்தட்டு அவனை நோக்கி நீண்டது. நிமிர்ந்து பார்த்தான். விஜயத்தின் மிகப்பெரிய கண்கள் இரண்டும் ரத்தம்போல் கலங்கி சிவந்தன. ஒற்றைக்கல் மூக்குத்தி சுடர்விடும் மூக்கு, கோபத்திலும் தாபத்திலும் அழுகையிலும் மிக விரிந்து சிவந்து கொண்டது. அவனுக்கு புரியத்தான் புரிந்தது.

இவர்களுக்கு ஏன் இந்த துக்கம்? யார் கூப்பிட்டு தந்த சுமை இது? ஏன் இந்த கஷ்டம்? ரங்கத்தைக் காணோம்? கல்யாணம் ஆகும் முன்பே என்ன உறுத்து? என்ன கண்டிப்பு? என்ன வருத்தம்? ஏன் இந்த சோகம்? மனித உறவுகளில் இதெல்லாம் என்ன விகிதம்? கனமான அந்தத் தேங்காய்ப்பூ துண்டைத் தோளில் போட்டபடி நாற்காலியில் சாய்ந்து அமர்ந்து கொண்டு விஜயம் மடித்துக் கொடுக்கிற வெற்றிலைகளை ஒன்று ஒன்றாக மென்றபடியே மாயியைப் பார்த்து "என்னடீ மாயி... நான் மேல போகறேன் இவங்களோட எல்லாம் கொஞ்சம் பேசிகிட்டு இருந்துட்டு அப்புறமா மேல வா. நீ வேலையை வுட்டுட்டா என்ன பண்ணலாம்னு யோசிக்கலாம்" என்று விஷயமாக அவளைப் பார்த்தபடியே எழுந்து அவன் பக்கத்திலேயே கைக்கு வாகாக நின்று கொண்டிருந்த விஜயத்தின் காதுகளில் லேசாக குனிந்து, "மாயி கிட்ட கொஞ்சம் பேசணும். சீக்கிரமா மேல அனுப்பிச்சு வைங்க" என்று எல்லாருக்கமாக சொல்லிவிட்டு மாடிப்படி வளைவில் நின்று அவன் பின்னேயே நடந்துகூட வந்த விஜயத்திடம், "சேவை எல்லாம் போதும். கல்யாணம் ஆனவுடனே கரமுண்டாத்தியுவ என்ன செய்வாளுவன்னு தெரியும். நான் கரமுண்டான் இல்ல. கொஞ்ச நாளைக்கி என்னெப் பாத்து பழகி அப்புறமா கல்யாணம் பண்ணிக்கலாமா? வேண்டாமா? அப்படின்னு அக்காளும் தங்கச்சியுமா முடிவு பண்ணுங்க" என்ற போது விஜயத்தின் முகம் ரத்தம்போல் சிவந்துபோனது. தொண்டையை கமறும் தழுதழுத்த குதலில் "இனிமேதான் முடிவு பண்ணப் போறாளாங்களாக்கும்? முடிவு பண்ணிக்கிட்டுதான் பெருமாளு சேவையைத் தொடங்கிகிட்டு இருக்கோம் அக்காளும் தங்கச்சியுமா? எப்ப நீங்க அனுப்பச் சொல்லுறிங்களோ அப்போ மாயி அக்காவ மாடிக்கி அனுப்பிச்சு வைக்கிறேன்" என்று பக்குவமாக விஜயம் அவனுடன் குசுகுசுப்பான குரலில் கூறினாலும், அவள் இன்னும் சிறு பெண்தான் என்பதை அவள் கலங்கிய கண்கள் காட்டிவிட்டன. தெலகராஜுவுக்கு முகத்தில் லேசாக சிரிப்பு வந்தது. அருகில் மாடிப்படி அருகில் நொறுங்கி அவள் கன்னத்தை பிடித்து லேசாகக் கிள்ளியபடி, "ஒன்னே எனக்கு ரொம்ப பிடிச்சிருக்கு" என்றான் தெலகராஜு.

அவள் கைகளைத் தட்டிவிட்டபடி "ஐயே! இனிமேதான் புடிக்க போவுதாக்கும்?" என்று அவன் காதுகளுக்குள் சொல்லி அவனுக்கென்றே வெகு நாளாய் தேக்கி வைத்திருந்த குறுஞ் சிரிப்பொன்றை கலங்கிய கண்களோடு உணர்ச்சி மயமாய் தந்தாள். சற்றே, எல்லாரையும் சுற்றிப் பார்த்துவிட்டு நெளிநெளியாக

மினுங்கிய அவன் முன் நெற்றியில் விரல்களால் கோதியபடி, "பயப்படாதே கண்ணா நானிருக்கிறேன். எனக்கு எல்லாம் தெரியும்" என்று விரல்களால் அவள் சுருண்ட முன் நெற்றி கூந்தலை ஒன்றை விரலால் சுற்றினான். "ஸ் ஆ" என்றபடி "ஓங்களுக்கு எல்லாந் தெரியுமாக்கும்" என்று சொல்லியபடியே அவனிடம் இருந்து ஓடினாள். அதற்கு மேல் அவளால் அங்கு நிற்க முடியவில்லை. தூண்களுக்கு பின் எல்லாம் கரமுண்டாரு குடிப் பெண்கள் எங்கும் இருப்பார்கள். ஒரு வேளை மாடிப்படியில்கூட யாராவது நிற்கலாம் என்ற பயம். ஒரே கணத்தில் எல்லாவற்றையும் மறக்க வைத்து மாயம் செய்த அவனது விரல்களை ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்தாள். அவளைச் சுற்றியிருந்த எல்லாம் மறந்து போகிற அளவுக்கு வெட்கமும் பயமும் எங்கோ வானத்தில் பறப்பது போல் ஒரு சுக அனுபவம். உடனேயே அவளது துக்கத்தை எல்லாம் மறக்க வைத்தது. எதிரே மாயி. ரங்கம், அப்பாயிகள் இன்னும் கரமுண்டாரு குடி பெண்கள் கூட்டம் ஒன்று சுற்றி நின்று மாயியிடம் ஏதேதோ வம்பளந்து கொண்டிருந்தது. எல்லாம் விஜயத்தின் காதுகளிலும் மனதிலும் ஏறவே இல்லை. அவளுக்கு உடனே மாமனுக்கு மாயியைக் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும். அவ்வளவுதான் ஞாபகம் இருக்கிறது. முதலில் கரமுண்டார் குடி பெண்ணாக தன்னை நினைக்க வைத்ததே மாமன்தான். பதின்மூனு பதினாலு வயதிலேயே காத்தாயம்பா இருந்தபோதே - மனசாலேயே அவனை எட்டி தொட்டுப் பார்க்க ஆரம்பித்தவள் இப்படி ஒரு நாள் வரும் - என்று அவள் கனவுகூட கண்டதில்லை. தெலகராஜு நினைத்திருந்தால் இந்த பெருங்கூட்டத்துக்கு காவல் நிற்க வேண்டிய அவசியமே இல்லை. அவனை அழைத்துக்கொண்டு போக வந்தவள்தானே இந்த மாயி? மாமம் போகலெ. போகாது. இனிமே அதுவும் கரமுண்டாராயிடுச்சு. கரமுண்டாரா இல்லேன்னாக்கூட விஜயம் இன்னும் உணர்ச்சி மயமாய் காத்தாயம்பாளை மனசில் பூ விட்டு வழிபட்டாள். நீ தெய்வம்தான். இல்லேன்னா..." என்று மனதுக்குள்ளேயே ரகசியத்தை புதைத்தாள். லேசான செருமலும் இருமலும் கேட்டதும் மறுபடி கரமுண்டாரு குடிப் பொண்ணுங்கள் எல்லாம் ஒண்ணு ஒண்ணாய் உள்ளே மறைந்தார்கள். வந்தது நடுவக்கரமுண்டார். உள்ளே இருந்து கையில் இடியாப்பமும் மறுகையில் வெள்ளி கொண்டியில் தேங்காய்ப் பாலும் எடுத்துக் கொண்டு உள்ளே வந்து தூணோரமாக முற்றத்தில் கால்களை தொங்கப்போட்டுக்கொண்டு "பெருமாளே" என்றபடி உட்கார்ந்தபோது அவர் முன்னே பசுமையான அளம் வாழை

ஏடு ஒன்றை ரங்கம் கொண்டு வந்து விரித்தபோது "யார் வந்திருக்கிறது?" என்றார் தலையைக் குனிந்து கொண்டே.

"தலையை நிமிர்ந்துதான் பாருங்களேன் சித்தப்பா. வந்திருக்கிறது ஒண்ணும் இல்ல. ஓங்க மருமவன் பாவம் பாத்து கூப்பிட்டு வந்திருக்காரு. பாவம் நம்ப கிளியம்பா மவ மாயில்ல? மாயி அக்கா" என்றாள் ரங்கம். மாயி எழுந்து நின்று கொண்டாள். அவர் இருந்த பக்கமாகக் கொஞ்சம் நெறுங்கி, கீழே விழுந்து கும்பிட்டாள். மனதுக்குள் சிரித்துக்கொண்டாள். இந்த விஷயம் எல்லாம் அவளை ஒன்றும் செய்ய முடியாது. கள்ளத் திமிர் இன்னது என்று அவளுக்குத் தெரியாதா? மனதுக்குள் ஒரு வேக வெறி. கிளியம்பா மகளா? இனிமே கிளியம்பா மக மட்டும் இல்லடி நெஜமாகவே 'அவனை' இனிமே நான் தந்ததுதான் நீ வாங்கிக்கணும் – வேலை – சம்பளம் – சமுதாயத்தின் பெரிய ஆபீஸர் டைரக்டர் – படிச்ச பொண்ணு அப்படிங்கிற வெட்டிக் கௌரவம் எல்லாம் 'இதுக்கு' முன்னால தூள் தூளாச்சு, தெலகராஜுவ இனிவிடப் போறதில்லை. நானும் இந்த காலத்துல ஜாதிதான் பாக்குறென். இஞ்சயேதான் இருப்பேன். ஓங்ககூடவே இருந்துதான் இந்த விஷத்த எறக்கப் போறேன் என்றபடி மனதுக்குள் உறுமினாள் மாயி. அவள் உதடுகள் துடித்து, தொண்டை அடைத்து மௌனத்தில் ஆழ்ந்து போனாள் மாயி. "நல்லாரு. அட நம்ப சிலத்தான் மவளா? ஓங்க அப்பன் இப்ப எங்கம்மா இருக்கான்? நீ பெரிய ஆபீஸருன்னுல்ல சொல்லிக்கிட்டானுவ?"

"ஆமாம் நடய்யா. தொரச்சியம்மாயி வேலையை வுட்டுட்டு கரமுண்டாரு வூட்டோட வரச்சொல்லிடுச்சு, ஆண்டெச்சி சொன்னா கேக்காம முடியுமா? அதோட கட்டி கரமுண்டாரு அதான் தஞ்சாவூரு அய்யாவும் இனிமே அஞ்சயே இருக்கப் போறாராம்முல்ல? நானும் இஞ்சயேதான் இருக்கப்போறேன். என்ன சொல்றிங்க நடவையா? நல்லது தானே?"

"இருந்தா என்னம்மா. ஒன்ன மாதிரி எங்களோட சேந்து கஷ்டப்படுறதுக்கு வேற யாருதான் இருக்கா? அப்ப நூறு குடும்பத்தத் தாங்கிட்டு நிக்கிறான் தெலகராஜு. எங்களோட நீயும் ஒன்னு. ஏங் கையில ஒன்னும் இல்ல. இப்ப எல்லாம் இவன்தான் யாருமே கை வைக்க பயந்த கரமுண்டாரு வூட்டுக்கு மறுபடியும் கீழே இருந்து அஸ்திவாரத்த போட்டு இருக்கான். பாத்தியா? சிமெண்ட்டும் கல்லும் இரும்பையும் எங்கிருந்து கொண்டு வந்து குமிச்சானோ? அவனுக்கு இங்கே எல்லாம் தற்குறிதான் சொந்தம்ன்னு இருக்கு. யாராவது பொண்ணுன்னு

– ஒரு பொண்ணு அவனுக்கு வேலைக்கி தொணையா இருந்தா வானத்தையே வில்லா வளைச்சுடுவான். ஏழு கொலை கேசு இருக்கு அவன் மேல. அது போக கலவர கேசு, ஜாதி கேசு, அது வேற மாசத்துக்கு பதினைஞ்சு நாள் ஈரங்கி இருக்கும். கரமுண்டாரு குடியில இப்ப ஆம்பளைக்கும் கொறச்சல்தான். படிச்சு விஷயம் தெரிஞ்ச ஒரு ஆம்பளைகூட கெடையாது. நீ வேணும் அவனுக்கு. உயிரோட அவன் தப்பிச்சதே பெரிசு. எனக்கு அவ்வளவு பத்தாது. பெரிய மலை எல்லாம் இருந்து சரிஞ்சு போச்சுதும்மா. மூணு மாசமா ஆஸ்பத்திரியில சாகக் கிடந்தப்ப நீதான் அவனை தஞ்சாவூருல வெச்சு பக்கத்துலயே இருந்துப் பாத்தென்னாங்க. ஆஹா. கரமுண்டானுவல்ல நான் ரொம்ப சப்பை. பத்தாதும்பாங்க எனக்கு. ஆனாலும் சொல்லுறேன் நீ யாரா இருந்தாலும் தெலகராஜு கொண்டு வந்த சீதனம். காலம் மாறிப் போச்சுங்கிறாங்க. மனுஷனும் மாறத்தானே மாறுவாங்க. இனிமே எங்களுக்கு தெலகராஜுதான் பெரிய கரமுண்டாரு. ஓங்கிட்ட சொல்லக் கூடாது. இருந்தாலும் சொல்லறேன். எந்தக் காலத்திலெயும் நீ எங்களுக்குச் சொந்தம். சொந்தத்த மறக்காம வந்துட்டியே அது போதும். ஒனக்கு ஒரு கொறையும் வராது" என்றபடியே கண்களைத் துடைத்துக் கொண்ட கரமுண்டாரைப் பார்க்க முடியாதபடி, மாயி கண்களை நீர் திரை மறைத்தது. மாயி அழுது கொண்டிருந்தாள். சுற்றிலும் முற்றத்தில் கோடைப்பந்தலில் வெளியே வந்த மழை நிலா வெளிச்சம் அந்த இடத்தையே ஒரு தேவலோகம் ஆக்கியது. முற்றத்தின் நாலு கட்டு நடையிலும் ஒவ்வொரு குடும்பங்களின் ஏகப்பட்ட பெண்களிடையே சாப்பாட்டுக்கடை நடப்பது போல் கூச்சலும் கும்மாளமுமாய் ஒரே ஊரே கலகலப்பதுபோல் காரியம் நடந்து கொண்டிருந்தது. இவ்வளவு நேரமாய் அவர்கள் யாருக்குமே உறைக்கவில்லை. கரமுண்டாரு கீழ்த் திண்ணையில் அமர்ந்து கொண்டு அந்த எல்லாக் குழந்தைகளையும் பரிவோடு பார்த்துக் கொண்டிருந்தார். மேலும் கண்கள் கலங்கி வழிந்தன அவருக்கு. பெரும்பாலும் எல்லாக் குடும்பங்களும்தான், இல்லாத குடும்பங்கள். தெலகராஜு வரலேன்னா அத்தனையும் தெருவுல நின்னு இருக்கும். அதுதான் ஆச்சரியம். மேல்படிப்புக்கு சீமைக்கு அனுப்புறதா இருந்த அப்பனையும், ஆத்தாளையும் ஒதறிப்புட்டு, இஞ்ச வந்து சேத்துக்குள்ள பயிர்ச் செலவு பண்ணிகிட்டு, நிக்கணும்ன்னு கரமுண்டான் குடிய தூக்கி நிறுத்தணும்ன்னு இவனுக்கு என்ன அப்படி என்ன ஒரு விபரீதமாக ஆசை? மூத்தாரு ராமுக் கரமுண்டாரகூட வெட்டித் தள்ளுனது

தெலகராஜுன்னுதானே எல்லாரும் சொல்றாங்க. நியாயமா இப்படி எல்லாம் நடந்து இருந்தா, காத்தாயீ இப்டி மானத்த வுட்டுட்டு ஓடுனதுக்கு இவனுமுள்ள எஞ்சயாவது போயி தொலைஞ்சு இருக்கணும். காத்தாயீ இப்ப என் கண்ணெதிரே வந்தாக்கூட அவளெ தூக்கி வளத்த இந்த கையாலெயே அவளெ சுருளிக் கத்தியாலே கண்டந்துண்டமா வெட்டி போட்டு நான் ஜெயிலுக்கும் போவேனே. இந்த கரமுண்டார் வூட்டு அஸ்திவாரத்தையே பேத்து போட்டுப்போன அவளெ கொலை அறுக்காம சுப்பு வரமாட்டான். சுத்து வட்டம் நூறு நூத்தம்பது கிராமத்துலயும் என்னன்னா பேசுறாங்க. ஆனா எல்லாம் வாயையும் ஒரே அடப்புல அடைச்சாப்பல கரமுண்டார் குடிய முதுவு கொடுத்து தாங்கிபுட்டான் தெலகராஜு. வடுவாயி புள்ளெயில்லெ? திமுறும், கெப்புறும் ஜாஸ்த்தியாத்தான் இருக்கும். இந்த வூட்டு மொதப் பங்கு இனிமே அவனுக்குத்தான். ஆமா... நூறு வருஷமா வுழுந்த வூட்ட ஒரே மாசத்துல முட்டுக்கொடுத்து நிறுத்திப்புட்டான். சிங்கமான பய. கள்ளக்கருன்னா இதுதான். வூடுன்னா ஆயிரம் இருக்கும். வூட்டுக்கு வூடு ஆயிரம் வூடா இந்த காலத்தில் துண்டு துண்டாப் போயி, தனி தனி வூடா லட்சக்கணக்கா பிரிஞ்சு போயி, ஒரு மனுஷனுக்கு ஒரு வூடு அப்படின்னு இடுஞ்சு குறுகிப்போயிட்டு. இருக்குற இந்த காலத்தில் கரமுண்டார் வூடுன்னா எனக்கே சிரிப்பு வருது. ஒரு வூடு அதுல நூறு நூத்தம்பது குடும்பம். அப்படின்னா நம்பமுடியுமா? ஒவ்வொரு புள்ளையும் பொறந்த ஒடனே, வூட்ட ரெண்டா வெட்டணும். அடுத்தப்புள்ள பொறந்தா ரெண்டா வெட்டுன வூட்ட மூணா வெட்டணும். பிரிக்கணும், மறிக்கணும்! இதுக்கு பேரு சொந்தம்? சொத்த தலைக்கி ஒண்ணுன்னு பிரிச்சா, கடைசியில யாருக்காவது எதாவது மிஞ்சுமா? புள்ளைவ பொறந்துகிட்டே இருக்கு பொண்டுவ பெத்துகிட்டே இருக்கு. கோர்ட் இருக்கு பிரிக்க. வக்கீலு இருக்கான் கட்சி நடத்த. காலம் காலமா கள்ளனுவ புத்தி கெட்டுப் போய்ட்டான். சொத்த பிரிச்சிட்டான். எதுவும் மிஞ்சல. எப்படி மிஞ்சும்? மிஞ்சினாலும் ஒரு குழி நெலத்துக்கு நூறு பேரு அடிச்சிகிட்டான். ஒரே உலகம், ஒரே ஜாதி, ஒரே மதம், ஒரே இனம் அப்படிங்கிறானே எல்லா பயலும். மொதல்ல ஒரே வூடுன்னு பொழைக்க முடியுமாடா, பொக்கிப் பயலுவளா? ஒரே வூடுன்னு ஒரே குடும்பம்ன்னு – தெரளமுடியாத பயலுமா ஒரே ஜாதின்னு ஊருக்குள்ள தெரளமுடியாத பயலுவோ நீங்க எஞ்சயிருந்துடா – ஒரே உலகம்ன்னு – மயித்த புடுங்கப்போறிங்க" என்றபடி வாயில் இருந்து கிளறிவிட்டார் நடுவக்கரமுண்டார்.

"என்னப்பா மயிரு கியிருன்னு, யாரை திட்டுறிங்க" என்று மழலையா கேட்டபடி, அவர் இலையில் அடுக்கி இருந்த இடியாப்பங்களின் மேல் கொழ கொழப்பான தேங்காய்ப் பாலை ஊற்றினாள் கிருஷ்ணம்பாள் என்கிற அவரது இன்னொரு மகள். கரமுண்டாரு தேங்காய்ப்பால் ஊற இடியாப்பம் சாப்பிட்டார்.

"ஒப்பன் கிட்ட என்னடி கேளுவி? எப்ப ஓங்கப்பன் பைத்தியம் பிடுச்சு பாயைப்பிராண்டாம இருந்தாரு? சொத்துப் பூராவையும் தூக்கி தஞ்சாவூரான்கிட்ட கொடுத்துபுட்டு, இது மூணு வேளையும் தேங்காப்பாலும் சோறும் தின்னுகிட்டு, இன்னும் தஞ்சாவூர் எங்கே திருச்சி எங்கேன்னு சுத்திகிட்டு வருது. இதைப் பாத்து பயந்து தானே 'இவன்' எங்கு நமக்கு கல்யாணம் பண்ணி வைக்கப் போறான்னு, யாரும் சொல்லாமலேயே தஞ்சாவூரானப் புடிச்சிகிட்டா. ஏன்டி கிருஷ்ணம்மா ஒனக்கு இந்த ஆளு கல்யாணமா பண்ணி வைக்கப் போறான்?" என்று பொரிந்தாள் நடுவக்கரமுண்டாரு பொண்டாட்டி கனகம். கரமுண்டாரு பேசவே இல்லை. பேசமாட்டார்.

பேசியது எரிச்சலோடயா? வேடிக்கையாவா? வினையத்தோடயா? இல்ல வெடி வெடிச்சா? அப்படின்னு சொல்லவே முடியாது. நடுவக் கரமுண்டாரு மாதிரி ஒரு மனுஷனுக்கு வாழ்க்கைப்பட்டா எந்தப் பொம்பளைக்கும் இப்படித்தான். ஒரு ரெண்டுங் கெட்டான் நிலை வரும். எந்தப் பொண்ணாக இருந்தாலும் அலுத்துப் போவும். ஆனால் எல்லா வாயையும் அடச்சுட்டான் தெலகராஜு. என்னா மந்திரம் பண்ணினானோ, தெரியாது. எல்லாரும் ஒத்துக்கிட்டு அவன் சொல்றதெல்லாம் கேக்குற ராசி அவனுக்கு. ஊரை விட்டே கலவரத்துக்கு பயந்து ஓடிப்போன துலுக்கக் குடியெல்லாம்கூட திரும்பி கொண்டு வந்து சேத்துட்டான். முறுக்கிட்டுப் போன பள்ளன், பறையன் எல்லாம்கூட திரும்பி வேலைக்கு கொண்டு வந்துட்டான். கூலிக்குப் பணத்தையும் வூட்டுக்குச் செலவுக்கு பணத்தையும் எஞ்சருந்து எப்படிக் கொண்டாறான்? என்று யாருக்கும் தெரியல. ராமுக் கரமுண்டாரோட சுத்திச் சுத்தி வந்ததுல பள்ளக்குடி கைக்கு அடங்கிப் போச்சு. ஊர் கலவரத்துல யாரையும் காட்டிக் கொடுக்காம, எதையும் வெளிய உடாம, ரகசியமாகவே பொதச்சுக் காட்டி, எல்லார் வாயையும் இழுத்து அடச்சுப்புட்டானே தெலகராஜு. இந்த வித்தையை யாருகிட்ட கத்துகிட்டான்? ரெண்டுபட்ட வூடு இப்ப திரும்பி ஒன்னுபட்டுக்கிட்டே வருது. "யாரும் யாரையும் காட்டிக்

கொடுக்கிறது இல்ல." அப்படின்னு பறையனுவகூட முடிவுக்கு வாரதுக்கு இவனத்தான் பஞ்சாயத்துக் கூட்டிகிட்டு போவானுவ. ஊருக்கு மத்தியில மத்தக் கள்ளக் குடிவள்ள எல்லாருக்கும் இன்னும் கொஞ்ச நாள்ல தெலகராஜு பெரிய கரமுண்டார் பேரு சொல்லிடுவான்னு இப்பயே எல்லாருக்கும் தோணுது. ஆனா தெலகராஜு காத்தாயம்பாளதான் எதிர்பார்த்துகிட்டு இருக்கான். ஆனா அடியோட மாறி நிக்கிறதுக்கு காரணம் அவள்தான். அவனால எதையும் நம்ப முடியாமல் போனதுக்கும் காத்தாயம்பாதான் காரணம். எட்டு வயசில் மனசில அவள குடியேத்திக்கிட்டு, இன்னும் அவள் அவன் மனதில் தீயாக எரிகிறாள். எல்லாப் பொண்ணும் அவனுக்கு ஒண்ணாகிப் போனதற்கும் காத்தாயம்பாதான் காரணம். எல்லாப் பொண்ணும் அவனுக்கு அழகாகிப் போனதற்கும் காத்தாயம்பாதான் காரணம். மேல்சட்டை, பேண்ட் எல்லாவற்றையும் சுழற்றி எறிந்து விட்டு இடுப்பில் மடித்துக் கட்டிய வேட்டியோடு அஞ்சினி சேற்றில் முழங்கால் அளவு நாள் பூராவும் கார்வாரி பண்ணுகிறான் என்றால் கரமுண்டாரு குடியில் இப்பொழுது அதட்டி மிரட்டி, உருட்டி, நிமிர்த்தி அவனைப் போலவே எல்லாரையும் சேற்றில் நிறுத்தியிருக்கிறான் என்றால், அதற்கும் காரணம் காத்தாயம்பாதான். அப்பொழுதெல்லாம் கரமுண்டாரு குடிப்பெண்கள் முன்னைப் போல வூட்டுக்குள் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டு, மஞ்சள் பூசி அலங்காரம் செய்து கொண்டு, மெத்தனமாய் சொகுசுப் பண்ணிக் கொண்டு, இருக்க முடியாது. காலையில் ஐந்து மணிக்கு, ஆறு மணிக்கெல்லாம் இருக்குற கொஞ்ச ஆண்களும் எல்லாப் பெண்களும் வயலில் இறங்கியிருக்க வேண்டும். எல்லாரும் பண்ணயம் பார்க்க வேண்டும். பள்ளர்களும் பறையர்களும் களத்தில் நிற்க வேண்டும். பேங்கில் இருந்து ஏராளமாக கடன்கள் வாங்கி டிராக்டர், டிரில்லர் என்று ஏராளமான விவசாயக் கருவிகளும், எந்திரங்களும் இறக்கியிருப்பதால் வேலைக்கும் மேற்பார்வைக்கும் வூட்டிலிருந்த பெண்கள் தேவைப்பட்டார்கள். அம்மாவும், அத்தையும், சின்னம்மாவும் வயலில் வேலை செய்வதைப் பார்த்தால் மகனும், மக்களும் மட்டும் சும்மா இருப்பார்களா? கரமுண்டாரு வூட்டுப் பெண்கள் எல்லாருக்கும் மனம் கனத்துப் போயி ஓடவில்லை. "அவ அவ அப்பன் வூட்டுக்கு போறதுன்னா போயிடலாம். புள்ளையுவளயும் இழுத்துகிட்டுப் போயிடலாம். நான் வேண்டாங்கல்ல. ஆனா கரமுண்டாரு வூட்டோட இருந்த மானத்தக் காப்பாத்தனும்ன்னா – நான் சொல்றதைக் கேக்கனும்.

ஏன் எதுக்குன்னு கேட்கக்கூடாது. கஷ்டத்தப் பார்க்கக்கூடாது. கவலையை நெனைக்கக் கூடாது. கோலு, குண்டுனி, பொறாமை, எரிச்சல், பொச்சரிப்பு இதெல்லாம் ஆவாது. யாருகிட்டயும் உதவி கேட்கக் கூடாது. உதவி தந்தா வாங்கக் கூடாது. நெஞ்சுல ஒரே நெனைப்பா கரமுண்டாரு வூடு மட்டும்தான் இருக்கணும். நான் மோசமான கொலைகாரன். என் வாயில் நல்ல வார்த்த வராது. இதுக்கெல்லாம் பயந்தா இஞ்ச இருக்காதிங்க. என்னைக்காவது ஒரு நாள் ஓங்களையெல்லாம் இந்தக் கதிக்கு ஆளாக்குன அந்த முண்டச்சி காத்தாயி தேவ்டியா இஞ்ச வந்தே தீருவா. அவளெ வெட்டிப்புட்டு கருமாதி பண்ணுற வரைக்கும் நான் கரமுண்டாரு வூட்ட வுட்டு போவமாட்டேன்" என்று உடம்புல முப்பத்திரண்டு குத்துக் காயங்களோடு, அவை ஆறாத பச்சைப் புண்ணாய் இருந்தபோதே அவன் கதறியது, அந்த வூட்டு ஒவ்வொரு தாலி அறுத்த பெண் அடி வயிற்றில் தீக் கொளுத்தியதை எந்தப் பெண்ணும் மறக்கவில்லை. இன்னும் வயிற்றில் இருந்து, இன்னும் ஆடி படர்ந்து, அந்தத் தெலகராஜுவை சுற்றிப் படர்ந்தது, அவனைக் காத்துக் கொண்டிருந்தது.

இன்னும் யாரும் உறங்காத அந்த நடு இரவில் இன்னும் விழித்திருந்த அவனிடம் மாடிப்படி ஏறி போன மாயிக்கு முன்பு எப்போதும் இல்லாத பயமும், வெட்கமும், பரிதவிப்பும், அவமானமுமாய் இருந்தது. அந்தப் பெண்களின் அவலம் அர்த்தமற்றது என்ற தெலகராஜுவிடம் வாதாடியவள் அவள். கூட்டுக் குடும்பங்களால் தாயாதி, பங்காளி குடும்ப முறைகளினால் இந்த சமுதாய குட்டிச் சுவராகி இருக்கிறது; ஜாதி திமிரினால் என்று முன்பெல்லாம் வாதாடியவன். இவளும் இன்று வழியில் அவனைத் துரத்தி கொண்டு ஓடுகிற அவளது ஓட்டம் உண்மையிலேயே அவளை நடுக்கியது.

மூன்றாவது மாடியில் ஒற்றைக் கட்டிலில் உட்கார்ந்திருந்தான் தெலகராஜு. மாடிப்படி ஏறிப் போன போது கூடவே வந்த தொரச்சியப்பாயி, "நொண நொணன்னு பேசிகிட்டே இருப்பான். சீக்கிரமா பேசிப்புட்டு வந்துரு. இஞ்ச ஒண்ணும் தூங்காதுவ. அதக்காவ போன ஒடனே ஓடியாந்துறாதே பேசிப் பேசி நேரம் போகாம விடியும் முன்னே வந்து" என்ற கிழவியின் கண்களை கூர்ந்துப் பார்த்தாள் மாயி. கீழே முற்றத்தில் அப்போதும் தூக்கம் வராமல் குறுக்கும் நெடுக்குமாய் நடந்து கொண்டு புகை விட்டுக் கொண்டிருந்த சந்தனப்பாயீயின் சுருட்டு புகை நெடி மாடிப்படியிலும் நெடியேறியது.

"அவன் அப்படித்தான் புள்ளெ இருப்பான். நாமதான் வழிக்கு கொண்டு வரணும், போயி தூங்க வச்சிட்டு பாக்கு கடிக்கிற நேரத்துல வந்துடு" என்றது அந்தக் கிழவி.

மாடிப்படியின் கடைசியில் மூன்று மாடிகளையும் கடக்கும்போதுதான் கரமுண்டாரு வூடு எவ்வளவு பெரியதென்று லேசாகத் தெரிந்தது. ஏராளமான ஜன்னல்கள், சுற்றுவட்டத் தாழ்வாரங்கள், நீண்ட ஆலோடிகளெல்லாம் நிலைகுலைந்த அந்த குடும்பம் தூங்கி உருண்டு கிடந்தது. மாயிக்கு ஆச்சரியமாய் இருந்தது. இது இவளோ பெரிய குடும்பமா?

ஒவ்வொரு தளத்திலும் ஆள் கூட்டம் நெறுங்கி அடித்து சுருண்டு கிடந்தது. வூட்டைப் பூட்டிக் கொண்டு கலவரத்தின் போது தப்பிய பெண்கள், குழந்தைகள், போரிட்டு தப்பிய கொஞ்சம் ஆண்களும் கூட இருந்தார்கள். பள்ளக் குடிப் பெண்களும் இதைவிட அதிகமாகச் செத்தார்கள். அவர்களெல்லாம் பெண்களில்லையா? இவர்களுக்கு மட்டும்தான் புருஷர்கள் செத்தார்களா? ஆனாலும் பெண்களை கொட்டடியில் அடைத்து வைக்கிற ஜாதி என்ற தோன்றியது அவளுக்கு. அவளையே எதிர்பார்த்திருந்த அவன், "என்னடி மாயி, எப்படி கரமுண்டாரு வூடு? மூச்சு முட்டுதா? இல்ல ஓடிப்பொய்டலாமன்னு தோணுதா? வேலைய வுட்டுபட்டு இஞ்ச உள்ள வந்து அடயிறதுக்கு உன்னால முடியாதுன்னு தெரியும். சோசலிஸம், சமத்துவம்ன்னு கனவு காண்றவன்தான். ஆனா இப்ப எனக்குக் கனவுகளே இல்ல. சொல்லப் போனா எனக்கு முன்னால இருக்கிற ஒரே விஷயம், கரமுண்டாரு வூடு மட்டும்தான். ஒனக்கு இது புரியாட்டி நீ போயிடலாம். ஒன்னக் கட்டாயப்படுத்த என்னால முடியாது. ஆனா ஒன்னோட இந்த ஆச்சரியமான மாறுதல் எனக்குப் பயமா இருக்கு. நீ இங்கேயிருந்துதான் அத நெறவேத்திக்கணும்ன்னு இல்ல. ஒன்னோட இந்த ஆச்சரியமான ஒடம்பு. என்னைக்கும் அது எனக்குத்தான் சொந்தம். நீ எங்க போனாலும் அதுக்கு என்னைத் தர நான் அங்க வருவேன். எனக்காக நீ அந்தக் கழுதைக்கிட்ட அவுசப் பேச்சு வாங்கிட்டு உன்னுடைய பொஸிஷன் எல்லாத்தையும் உட்டுப்புட்டு இருக்கணும்ன்னு அவசியம் இல்ல. தெரியுதாடி? ஆமாம்."

"இல்ல மாமா. இனிமே நான் ஓங்களோடதான் இருப்பேன். இன்னும் பத்து மாசத்துல இந்த வூட்டுல எல்லாருக்கும் முந்தி ஒரு வாரிசு பெத்து எடுப்பேன். இங்கிருந்து ஓங்களோடயே நின்னு இந்தக் கூட்டத்தோட நானும் உழைப்பேன். என்

பொஸிஷன் சம்பளம்ங்கிறிங்களே? இந்த ஆறேழு வருஷமா, நான் அனாதையாதான் இஞ்சயும் இல்லாம, அஞ்சயும் இல்லாம என்னத்துக்கு வாழ்றேன்னு தெரியாம, வாழ்ந்துகிட்டு என்னோட கூட்டத்துலயும் சேர முடியாம ஓங்களோட கூட்டத்துலேயும் சேர்த்துக்க முடியாம... ஆ! அஞ்சு வயசில் என்ன தெருவுல வுட்டுப்போன என்னோட ஆயி. எல்லாரையும் மறந்து பெரிய கரமுண்டாரய்யா தூக்கி எடுத்து, வூட்டுப் பள்ளியா சேத்து படிக்க வச்சு, அப்புறம் இன்னைக்கி நீங்க திரும்பியும் கொண்டாந்து சேத்தப்பறமா போகப்போறேன்? எங்கப் போக? வூட்டுக் கெழவிகள் ரெண்டும் ஓங்ககிட்ட பயந்து கிட்டு என்ன சேத்துக்கிடுச்சுவோ. இந்த வூட்டுப் பொண்ணுவ ஓங்கள நினைச்சு வாயப் பொத்திக்கிட்டு பேசாம இருக்குதுவ. ரங்கம் நேரம் கிடைச்சா என்ன வெட்டிப் போடுவா, விஜயம்பாவும் கழுத்த நெரிச்சுப் போடலாம்ன்னு நெனைக்கிற. ஆனா ரெண்டு பேரும்தான் நான் இங்கே தங்கறத்துக்கு காரணம். அவளுக ரெண்டு பேரும் இல்லேன்னா எனக்கு இஞ்சத் தங்கணும்ன்னு புடிவாதமே வந்திருக்காது. அதுலயும் விஜயம் இருக்காளே அவ ஓங்கள எவ்வளவு நேசிக்கிறா? ஓங்க பொண்ணுவள நெனச்சா இப்படி பைத்தியமாவா உயிரெ வெக்யும்? என்னமோ காத்தாயி காத்தாயிங்கிறிங்க, இந்தப் பொண்ணு விஜயம் உங்கள பேயாத்தான் ஆட்டப் போறா, அப்படின்னு தோணுது. நான் ஓங்கள தூங்க வச்சிட்டு சீக்கிரம் கீழே போவணுமாம். எப்படி இருக்கு கதெ?" என்று கலகலவென்று சிரித்தாள் மாயி. அவள் சொன்னதில் உள் அர்த்தம் அவனுக்கு விளங்கியது. அவளைப் பிடித்து தன் அருகே அமர்த்திக் கொண்டான். "கீழே மாடிப் படியிலேயே தொரச்சியப்பாயி நிக்கும். கொஞ்சம் நேரமானா கூப்புடும். விடுங்க நா போவணும்."

"சாஸ்திரத்துக்கு தொட்டுக்கவா? அது முடியாது? முதல்லயே விட்டுட்டியின்னா – அப்பறம் – மாஞ்சி மாதிரி பள்ளக்குடிக்குதான் போகணும். என்னால அவள வுட்ட மாதிரி ஒன்ன வுட முடியாது. ஏன்னா ஒன்ன வுட்டா புடிக்க முடியாது. அவள தேடிப் போக வேண்டிய அவசியம் இல்லை"

"ஓங்களுக்கு ரொம்பதான் கொழுப்பு"

"பத்து மாசம் அப்படின்னு டைம் கொடுத்தது யாரு? நீதானடி. அப்பறம் இந்த சிலுப்பு சிலுப்பறே."

"இருங்க மொட்டை மாடி படிக்கட்டு கதவை சாத்தி தாழ்ப்பாளாவது போட்டுட்டு வர்றேன். அப்பறம் ஓங்க அக்ரமத்தை பண்ணுங்க"

அவன்விடவில்லை. சுதந்திரமான அந்த நேரத்தை யாருக்கும் பங்கு தர அவனுக்கு இஷ்டமில்லை. எண்ணத்துக்குள் காத்தாயி சிரித்தாள். அவள் உருவத்தை மனதில் இருந்து ஒழிக்க, அவன் மாயியை இறுக அணைத்துப் பின்னிக் கொண்டான். படிக்கட்டுப் பக்கம் திரும்பியபடி "கதவு, கதவு" என்று புலம்பிய மாயியெ முழுவதுமாக மூடிக்கொண்டான் தெலகராஜு. சில்லென்னு இன்னும் தோயாத மழைக்காற்று ஆற்றுக்கப்பால் புனவாசல் தென்னந்தோப்புகளுக்கு இடையில் இருந்து வீசியது. தலையணை உறை கழற்றி தலையணைப் போல் பூரணமாக அவள் உடல் முழுவதும் அவன் நெஞ்சில் பதிந்து புரண்டது அவள் உடல். கூர்மையான அவளது பற்களின் கூர்மையை அவன் தோள்களில் முரட்டுத் தனமாகப் பரிசோதித்தாள். கண் சிவந்து, வாய் வெளுத்து, உதடுகள் அவன் உதடுகளுக்குள் புதைந்து போயின. காற்றின் குளிர்ச்சி அவர்களைச் சுற்றி இறுகி, இருவர் இடையில் இல்லாமல் போய்விட்டது. அவள் திடீரென்று தலையணைத் தூக்கி "அஞ்சு பாருங்க" என்று கூறியபடியே வழுவிய பட்டுப்புடவையை இழுத்து மூடிக்கொள்ள இனைந்தாள். மாடிப்படியின் மேல் விளிம்பின் இருட்டில் ரங்கத்தின் உருவம் முழு இருட்டாக இருந்தும்கூட வெளிச்ச சிதைவில் தென்பட்டது. வாரி சுருட்டிக்கொண்டு எழ முனைந்த மாயியை நேராக நெஞ்சிலேயே அணைத்து அமுக்கிக் கட்டிக் கொண்டு தெலகராஜு, அங்கிருந்தே கத்தினான். "ஏய். இஞ்ச என்னடீ வேடிக்கை? இது ஒன்னும் புதுசு இல்ல. கீழப் போ. கல்யாணம் ஆகட்டும். ஓட்டிகிட்டு எட்டிப்பாக்காத, மாயிக்கா காலையிலதான் வருவா. கீழப் பொயி அப்பாயிக்கிட்ட சொல்லு" என்று கத்தினான். அடுத்த கணம் மாடிப்படியில் யாரையும் காணோம். மாயியின் கண்களிலிருந்து கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. வெட்கத்திலும் அவமானத்திலும் அழும் அவளை கவனிக்காமல் தொடர்ந்து அணைத்து இயங்கிக் கொண்டிருந்தான்.

# கரமுண்டார் வூடு - 13

ஆற்றில் என்றும் காணாத பெரிய வெள்ளம். நேரத்துக்கு நேரம் வெள்ளம் ஏறிக் கொண்டிருந்தது. பத்து நாளாக பரிசல் துறை ஓய்ந்து கிடந்தது. தஞ்சாவூரைச் சுற்றி புயலும் மழையும் அடித்து விளாசிக் கொண்டிருந்தது. வானம் நாள் முழுவதும் கறுத்து இருண்டு கிடந்தது. இருண்ட வானத்தில் சூரியனும் எரித்தது. பள்ளக்குடியும், பறச்சேரியும் தண்ணீரில் மூழ்கி விட்டது. மோட்டார் போட்டுகளில் இராணுவ போலீஸார் ஜனங்களை மேடான பகுதிகளுக்குக் கொண்டு போய்க் கொண்டிருந்தார்கள். காவிரியில் மட்டும் இல்லாமல் வெண்ணாறு, வெட்டாறு, கொள்ளிடம், திருமலைராஜன், வீரசோழன், ஜம்புகாவேரி, அரசலாறு இப்படி எல்லாக் கிளை ஆறுகளின் அபாய எல்லையைத் தாண்டி தண்ணீர் எகிறி வடிகிறது. திருத்துறைப்பூண்டி, மன்னார்குடி போன்ற பகுதிகளிலும் சோளாறு, பாமணி, புள்ளவாய்க்கால், மண்ணையர் தளப்பு போன்ற கால்வாய்களிலும் பல இடங்களிலும் பாலங்களை அரித்து பெயர்த்துக் கொண்டு போய்விட்டது. மூன்று நான்கு நாட்களாக அஞ் சினிப் பள்ளத்திலும், பாலத்துக்கு மேல் தண்ணீர் ஏறி வழிகிறது. சொல்லி வைத்தாற்போல் கரமுண்டாரு வூட்டின் ஐந்தாம் கட்டு முற்றத்தின் வெளிச் சுவர்களும், உள் அறைச் சுவர்களும் தண்ணீரில் நிரம்பி ஊறிச் சாய்ந்தன. நாலா புறங்களிலும் அந்த் புராதன வூட்டின் சுவர்களில் தண்ணீரில் சாயும்

சப்தம், அந்தக் கிராமத்தையே கலக்கியது. கூட்டம் கூட்டமாக ஆடுகள், மாடுகள், கோழிகள், கன்றுகள் செத்து தண்ணீரில் மிதந்து வந்தன. பள்ளத் தெரு, பறத்தெரு ஜனங்கள் முழுவதும் கரமுண்டாரு வூட்டு மூன்றாம் மாடியில்தான் நின்றனர். புயல் வேறு அடிக்கும் என்று ரேடியோக்களில் எச்சரிக்கை வேறு தரப்பட்டுக் கொண்டிருந்தது. மூன்றாம் மாடியின் மேல் நின்று வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தனர். பள்ளர்களும், பறையர்களும் ஐந்தாம் கட்டிலிருந்து எட்டாம் கட்டு வரை இருந்தனர். சக்தி வாய்ந்த கரமுண்டாரு வூட்டு ஆலைச் சுவர்கள் பத்து பதினைந்து நாட்களாக வுடாது பெய்யும் மழையிலும் வெள்ளத்திலும் ஊறி, ஒவ்வொரு சுவராக, பெரும் சத்தத்துடன் ஊடெ விழுந்து விடுமோ என்று எண்ணும்படியாக தண்ணீரை பிளந்துகொண்டு சாயும் ராட்சசனாக 'தொமீர் தொமீர்' என்று பேரொலி எழுப்பி விழும்போதெல்லாம் இரண்டாம் கட்டில் படுக்கை அறையில் தெலகராஜுவின் அருகே படுத்திருந்த ரங்கம் பயத்தில் அவனை இறுக கட்டிப் பிடித்துக் கொள்வாள். "ஏய் மச்சாம் அம்ம வூடு இப்படியே பத்து நாளா இடிஞ்சு விழுவுதே நம் தலையிலேயே இடிஞ்சு வுழுந்துருமா? என்னன்னமோ கஷ்டப்பட்டு, எப்படியப்படியோ தாங்கித் தூக்கி நிறுத்துனீங்களே மச்சான் என்னாவுமோ" என்று கலங்கினாள் ரங்கம். கல்யாணம் ஆகி ஒரு மாதத்தில் ரங்கமும், விஜயமும் குறுக்கும் நெடுக்கமாக அவனை நெருக்கமாகவே பின்னியிருந்தார்கள். யோசித்துக் கொண்டிருக்கும்போதே "தொமீர்" என்று பேரோசைக் கேட்டது.

உளளூர பயமிருந்தாலும், மணலில் இருபதடி ஆழத்திற்கு மேல் கான்கிரீட் கம்பங்கள் எழுப்பி பெல்ட் இணைப்புகள் முடுக்கி, இரும்பு கான்கிரீட் போட்டு இருக்கிறது. அதனால், அவனுக்குப் பயம் இல்லை. புத்தம் புதிய பழச்சாறு போல் மது வீரியம் கொடுத்தவள் விஜயம். கட்டிலின் அருகே கீழே விரித்த மெத்தையில் அசைவில்லாமல் நிச்சலனமாக பட்டுப்புடவை கசங்காமல் புதுமணம் மாறாமல் தூங்கிக் கொண்டிருந்தாள். ரங்கம் தோற்றத்தில் முரடு, தொட்டால் பஞ்சு. அப்படியே அவனுடன் அமுங்கி போய் இருந்தாள். பத்து நாட்களாக வேறு உலகம் தெரியாது. அல்லும் பகலும் ரங்கமும், விஜயமும்தான் கரமுண்டாரு வூட்டை ஆறு கொண்டு போகுமோ? மழை கொண்டு போகுமோ, புயல் அடித்துச் செல்லுமோ அதையெல்லாம் பார்க்க அவர்களுக்கு நேரமில்லை. ஓயாமல் கொட்டிய மழையில் நிற்காமல் பாய்ந்து, தஞ்சை மாவட்டத்தையே வெள்ளக் காடாய் ஆறுகளும், வாய்க்கால்களும், 'ஹோ' வென்று பாயம் சூரைக்

காற்றும் நெஞ்சத்தைப் பதைபதைக்க வைத்து, விஜயத்தையும், ரங்கத்தையும் அவன் கட்டிலிலே போட்டனவே. கல்யாணம் என்னவோ நடந்தது போல் இருக்கிறது. எளிமையாக செலவே இல்லாமல் பெருமாள் சன்னதியில் வெறும் ரெண்டு மஞ்சள் கயிறுகளை தங்கத் தாலி கோர்த்து மந்திரங்கள் கூட லேசாக ஒலிக்க, குடும்பம் சூழ, கட்டினான் மேளம் முழங்க. ரெண்டு பேரும் ஒரே நேரத்தில் தாலி கட்டிக் கொண்டார்கள். கரமுண்டார் வூடு இரண்டாங்கட்டு சுப்புக் கரமுண்டார் இருந்த பத்து அறைகளும் ரங்கத்துக்கும், விஜயத்துக்கும் தெலகராஜுக்குமாக மூடிக் கொண்டது. எப்போதுமே அவர்கள் அந்தப்புரம் மூடியே கிடந்தது. தெலகராஜுவின், அந்தப் புரம் எப்போதும் திறந்து கொண்டது. ரங்கமும் விஜயமும் எந்த நேரத்தையும் அவனுக்கு விடுவதில்லை. அவனது வேலைகள் எல்லாவற்றையும் மாயிப் பெண் வாங்கிக் கொண்டாள். சம்மதத்துக்கும், கையெழுத்துக்கும் பணத்துக்கு மட்டும்தான் தெலகராஜு தேவைப்பட்டான். 'தொமீர்' என்று எட்டாங்கட்டு மாட்டுக் கொட்டகை ஆற்றில் பெயர்ந்து ஆற்றின் நடுவில் பூதம் வாயப் பிளந்தாற் போல் 'தொபக்கடீர்' என்று நிலை விலக்கி மூழ்கியது.

மழை நிற்காமல் 'ஜோ' வென்று பெய்து கொண்டிருந்தது. ஆறு ஆறாகவே இல்லை. கண்ணுக் கெட்டிய தூரம் வரை வெள்ளக்காடு. வயல்கள் பெரும்பாலும் அழிந்துவிட்டன. வரப்புகள் சிதைந்து கண்ணுக்கெட்டிய தூரம்வரை ஒரே வெள்ளக்காடுதான். ரங்கத்துக்கும் விஜயத்துக்கம் மனசு நெறைய வெள்ளம். கல்யாணத்துக்கு வடுவாம்பா வர்றாளா. எப்படி வருவா? தெலகராஜு அப்பா தலைகீழா ஆடி பார்த்தாரு. நூறு வேலின்னா சும்மாவா? வடுவாம்பா விடலெ. அவன் எம் மவனே இல்லே. மவனா பிறந்தவனே இல்லெ. இப்படி எவனாவது இருப்பானா? பொறக்காத வூட்டுக்கு புள்ளையா போன பய மலைமலையா செலவு செஞ்சு படிக்க வச்சதுக்கு மண்ண வாரி தூத்திப்புட்டான். இனிமே மொகத்துலேயே முழிக்கமாட்டேன், புள்ளையில்லாத சொத்தா யாருக்காவது வாரி வுடுறதுக்கு? கரமுண்டார் குடிய காப்பாத்தறதுக்கு ஏன் மொவன்தான் அம்புட்டானா? இனிமே அவன் எம் மொவனேயில்லெ. நூறு வேலி நெலத்துக்கு மேல கேச போட்டு ஒண்ணும் இல்லாம ஆக்குறேனா, இல்லையா பாரு? யாரு என்னா சொன்னாலும் சரி, என்னோட நெலமில்லையா இது? கடைசி வரைக்கும் ரெண்டுல ஒண்ணு பார்க்கத்தான் போறேன்" என்று கல்யாண வூட்டிலேயே வானுக்கும், பூமிக்குமாக ஆடினாள் வடுவாம்பா.

"தொபக்கடீர்" என்று குதுரை லாயம் இருந்த சுவர் கீழோடு தண்ணீரில் மல்லாந்து விழுந்த சப்தம் கிராமத்தையே கிடுகிடுக்க வைத்தது. ஏனென்றால் இருபது இருபத்தைந்து அடி உயரமுள்ள சுவர் அது. இந்த சுவர்களெல்லாம் ஏற்கனவே கீறல் விட்ட சுவர்கள் முன்னூறு வருட காலத்துப் பழமையும், சாந்து, சுண்ணாம்பு, மணல், கருப்பட்டி, முட்டை வெள்ளக்கரு, கடுக்காய் எல்லாம் சேர்ந்து சன்ன செங்கல், வேர்காடு இல்லாத ராமர் கற்களால் கட்டிய சுவர்கள். இத்தனை காலம் தண்ணீர் ஊடருத்து ஓடியும்கூட வீறல் விட்டு நின்று இருந்தாலும், பிளவுண்ட சுவர்களின் ஊடே காலப் பழக்கத்தால் செங்கல் பொடிந்து கொட்டி இடுக்குகள் நிரம்பி இருந்தன. ஓயாத பத்துநாள் வெள்ளத்திலும் மழையிலும் சுவர்கள் ஊற ஆரம்பித்தன. ஏன் விழுகிறது என்று யாருக்கும் சொல்ல முடியவில்லை. செல்லப்பக் கொத்தன் இந்த மழையிலும் வந்து பார்த்துவிட்டு "வூடு வுழுவாதுங்க பயப்புடாதிங்க. இவ்ளோ நாள் பூசாம வுட்டது தப்புங்க" என்று மட்டும் சொல்லிவிட்டு போய்விட்டான். 'தொபீர்' என்று இப்போது சாய்ந்த சுவர், உள்ளே ரங்கத்தின் மடியில் படுத்திருந்த தெலகராஜுவையும், குனிந்து அவன் காதுகளில் கீழே படுத்திருந்த விஜயம் காதில் விழுந்துவிடக் கூடாது என்று எச்சரிக்கையுடன் ஏதோ கொச்சையான சிரிப்பு பேசிக் கொண்டிருந்த ரங்கத்தையும் திடுக்கிடச் செய்தது. "என்ன ஆச்சு?" என்றான் தெலகராஜு புரியாமலேயே ஒரு கணம் இருவரும் புரியாமலேயே உற்றுக் கேட்டார்கள். 'ஹோ'வென்று தண்ணீர் ஓடும் அலை ஓட்டத்தின் மோதல்தான் கேட்டுக்கொண்டே இருந்ததே தவிர, வூடு முழுவதும் நடுங்கிக்கொண்டிருந்தார்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது. இந்த சப்தத்தில் விஜயம் அரக்க பரக்க எழுந்து உட்கார்ந்தாள். மலங்க மலங்க விழித்தாள். பளிச்சென்று எழுந்து ஓடி வந்து தெலகராஜுவின் அருகில் உட்கார்ந்து அவன் கழுத்தைச் சுற்றி கைகளைப் போட்டபடி, "கரமுண்டாரு வூடு வுழுந்துடுச்சா மாமா? மழை நிக்கல போல இருக்குதே. பயமா இருக்கே." என்ற ரங்கத்தையும் சேர்த்து நெறுக்கினான். பதினைந்து நாட்களாக எங்குமே போகமுடியவில்லை. ஒரு புறம் மழை இன்னொரு புறம் இரு பெண்களின் சாகசம். ஒரு புறம் புயல் என்றால் இது தெரியாமல் மறுபுறம் விஜயம்.

குடும்பம் குடும்பமாக அது தெரியாமல் ஏறிக் கொண்டிருந்தார்கள். கரமுண்டாரு வூடு முழுவதும் நாலு தெரு ஜனங்கள் புகுந்திருந்தார்கள். வெள்ளத்தால் காவிரி பாலம் தண்ணீருக்கு அடியில் போய்விட்டதால், எங்குப் பார்த்தாலும்

வெள்ளம்தான் தெரிந்தது. வெள்ளத்துக்கு நடுவில் ஒரு மலைபோல் கரமுண்டார் வூடு இன்னும் நின்று கொண்டிருந்தது. பக்கு பக்காக ஆங்காங்கே சுவர்கள் விழத் தொடங்கியபோது பேரோசை எழும்பியது. ஆறு நாட்களாக ஒவ்வொரு சுவராக துண்டு துண்டாக ஊறி விழுந்து கொண்டிருந்தது. முதல் மூன்று நாட்கள் மழை தாரை தாரையாக ஊற்றிய பொழுது, கரமுண்டார் வூட்டு முன் கதவுகளெல்லாம் ஜனங்களுக்காக திறந்துவிடப்பட்டது. வெளியில் வந்து ஒவ்வொரு குடும்பத்தையும் விசாரித்து, ஆறுதல் சொல்லி சாப்பாடு போடச் சொல்லி, பார்த்து கொண்டிருந்தான். இப்போது கரமுண்டார் வூடு ஊர் ஜனங்களால் நிரம்பி வழிந்தது. கரமுண்டார் தெருவில் இரண்டு ஆள் உயரத்துக்கு வெள்ளம் ஏறிக்கொண்டிருந்தது. இவ்வளவையும் தன் அறைக்குள் இருந்தே பார்த்துக்கொண்டிருந்தான் தெலகராஜு. வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை. ரங்கமும் விஜயமும் அவனையே நெருங்கி அடர்ந்திருந்தார்கள். காரணம், அவன் எந்தக் கணத்திலும் இறங்கி விடுவானோ என்ற பயம்தான். வெளியே எப்போதும் நிற்காத மழை வூட்டுக்குள் போக முடியாதபடி, ஒவ்வொரு மூலையிலும் ஜாதி ஜாதியாக கிராமத்து ஜனம். கதவை நன்றாக அடைத்து அந்த அறைக்குள்ளேயே தங்கள் உலகத்தை யாரும் பாதிக்காதபடி தெலகராஜுவுக்கு மட்டும் வாரிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். விஜயம் முழுக்க வெட்கத்தை இழந்திருந்தாள்.

"ஏ மச்சான் இன்னைக்கி ஒங்களுக்கு கோர்ட்டாச்சே போகலன்னா வாரண்ட் புடுச்சுகிட்டு போயிடுவாங்களாமே? வுட்டுட்டு போயிடுவீங்களா?" என்று காதுக்குள் அருகே தொண்டை அடைக்கும் குரலில் குசுகுசுப்பது ஆச்சரியமான அழகாய் இருக்கும். ரங்கம் பக்கத்தில் நின்று "ஆறுதான் புட்டுகிட்டு போயிடுச்சே. அப்பக் கூடவா கோர்ட்டுல கூப்புடுவாங்க"

"ஏ மாமா ஏதாவது ஒரு கேசுல நீங்க தோத்து ஒங்களப் புடிச்சுகிட்டுப் போயி, வுடலேன்னா நானும் விஜயமும்..." என்று சொல்லும்போதே குமுறி அழுதபடி, "உயிரோட இருக்கமாட்டோம்" என்று வாய்விட்டுக் கதறினாள்.

"ச்சி... சீ... கள்ளச்சியாடி நீ. நெஞ்சுல கெப்புறு இல்லாம என்னத்தடி நீங்க பொழைக்கப் போறிங்க? என்னைக்காவது ஒரு நாள் போப்போற உயிர், இன்னைக்கே கள்ளகருதான்னு நிரூபிக்கிறதுக்காக இன்னைக்கே இப்பவே போகலாம். ஒங்க ரெண்டு பேரையும் நான் கட்டிக்கிட்டதுக்கே அந்தக் கள்ளக் கருதான் காரணம். எங்க அம்மாவுக்கு அது இல்ல. ஆனா

ரெண்டு பேருக்கும் அது இருக்கணும். ஒரு வேளை நாளைக்கே, சுப்பர்க் கரமுண்டாரு காத்தாயம்பாள வெட்டிப்புட்டு, கலியனெ குத்திப்புட்டு வந்துப்புட்டா, அதுக்கும் சேர்ந்து ஒங்க புருஷன தான் கொண்டு போவாங்க. பயந்துகிட்டு, அழுது கிட்டு காலத்த கழிச்சுகிட்டு இருந்தா, ஒன்னும் பண்ணீட முடியாது. மாமனே எப்போ குத்தி, யார சரிச்சுட்டு வந்தாலும், அதே கத்திவை மாமன் கிட்டேயிருந்து வாங்கி மிச்சம் மீதியுள்ள மாமனோட எதிரிகளையெல்லாம் நீங்களே குத்தி சாய்க்கணும்டி. சும்மா ஊழெ அழுவ அழுதுகிட்டு நிக்கக்கூடாது. உயிரோட இருந்து அதுதான் பிரயோசனம். இன்னைக்கு ஒருத்தனுக்கு நடக்கிறது நாளைக்கு ஒரு குடும்பத்துக்கு நடக்கும். இன்னைக்கு ஒரு குடும்பத்துக்கு நடக்கிறது நாளைக்கு ஒரு ஊருக்கு நடக்கும். அப்புறம் உலகத்துக்கே அதுதான். இதுதான் ஜாதியே. பயம், அழுகை, சந்தேகம் நடுங்கிறது, ஒளியிறது, ஒடுங்கிறது இதெல்லாம் கள்ளச்சிவளுக்கு லாயக்கில்லெ. நம்ப பகையாளு என்னெ வெட்டிப் போட்டாலும், பொணத்த தூக்கிகிட்டு அவன மல்லாத்தி குத்தணும். அவன் குத்துனாலும் எம் மவன வுட்டு அவன் பரம்பரையே வெட்டணும். இதுதான் நம்ம ரெத்தம் தெரியுமாடீ" என்றான் ரங்கத்தைப் பார்த்து. "விஜயம் இந்த ஜன்னலைத் திற" என்றான் தெலகராஜு. பதினைந்து நாட்களாக இந்த ஜன்னல் வழியாகத்தான் அவர்கள் இந்த உலகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். விஜயம் ஜன்னலைத் திறந்ததும் வெளிச்சுவருக்கு அப்பால் ஜன்னல் கம்பிகளை தொட்டுக் கொண்டு தண்ணீர் வெளியே கடல்போல் ஓடிக்கொண்டிருந்தது. இன்னும் கொஞ்சம் வெள்ளம் கூடினால் ஜன்னல் வழியே உள்ளே வழியும்.

"வெள்ளம் உள்ளே வந்துரும்போல இருக்கே. ஆறு ஏது தரை ஏதுன்னு தெரியலெ மாமா. இஞ்ச பாருங்க மாடுவ நீந்தி போவுது அம்பது அறுபது மாடுவ இருக்கும்" என்றாள் விஜயம். தெலகராஜு எழுந்து வந்து ஜன்னல் ஓரமாக வந்தான். ஜன்னலுக்கு வெளியே தெற்குச் சுவர் அப்படியே கழண்டு, நாலாபுறமும் அகழியாக்கி விலக்கி பேரொலி எழுப்பியபடி தண்ணீரில் விழுந்து நாலாபுறமும் தண்ணீரை வாரி அடித்தது. பெரிய ஜன்னல்களை இமைக்கும் நேரத்துக்குள் மூடினாள் விஜயம். அவளை ஆச்சரியமாக பார்த்தான் தெலகராஜு. இந்த உறவே ஆச்சரியம்தான். ஆலைச் சுவர்கள் விழுந்து வூட்டின் அடித்தரை நீருக்குள் புதைந்து, வூட்டின் தாய் சுவர்கள் இற்று விழுந்து கொண்டிருந்தன. கரமுண்டாரு வூட்டு நாலாம் கட்டு முற்றத்தில் இருபதடி நீளத்திற்கு கோடை அடுப்பு போட்டு பெரிய பெரிய கங்காளங்களில் உலை வைத்து

சோறும், கறியும் வெந்து கொண்டிருக்கிறது. ஆக்கிய கறியையும், சோறும் படைத்து முடிக்கும்முன், அடுத்த பந்தி வந்து ஜனங்கள் சாப்பிட உட்கார்ந்தார்கள். கரமுண்டாரு வூட்டுப் பெண்கள் இடுப்பில் தூக்கி செறுகிய தாவணியுடன் ஆவி பறக்க, அடுத்த ஈடு கங்காளங்களை முற்றத்தில் கஞ்சி நீர் வடிய கவிழ்த்தன. கொட்டும் மழையில் முற்றத்தில் ஓலைப்பாயில் சோற்று கங்காளங்களை மிதந்து வரும் மரக்கிளைகளில் இருந்து, மாங்காய், முருங்கை மரங்களிலிருந்து முருங்கைக் கீரைகள் எல்லாவற்றையும் ஜனங்கள் நீந்தி போய் காய்கறிகளைக் கொண்டு வந்து கொடுத்துக் கொண்டே இருந்தார்கள். பொழுது முழுவதும் ஜனங்கள் வெள்ளத்தோடு போராடிக் கொண்டே இருந்தார்கள் பக்கத்தில் இருந்து கரைக்கட்டு அக்ரஹாரத்தில் இருந்து நிறைய பிராமணர்கள் நீந்தி தப்பி வந்தார்கள். அவர்களும் அந்தக் கூட்டத்தோடு வந்து சேர்ந்து கொண்டார்கள். வெளியே கூட்டமும் கலவரமாக இருந்தது. ஊர் முழுவதும் வெள்ளத்தில் அல்லாடி கொண்டிருக்கும்போது யாரும் ரங்கத்தையும் விஜயத்தையும் தொந்தரவு பண்ண முடியாமல் செய்து விட்டிருந்தாள் மாயி என்கிற பிடிவாதக்காரி. இடையில் அவளைத் தாண்டித்தான் யாரும் தெலகராஜுவிடம் போக முடியும். கல்யாணம் ஆனதிலிருந்து இப்படி ஒரு மந்திரம் செய்திருந்தாள் மாயி. தெலகராஜு எதிர்பாராத இந்த சாமர்த்தியம் நிஜமாக விஜயத்தினுடையது. வேலைகள் எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக மாயியிடம் காட்டிக் கொண்டுத்ததே அவள்தான். மாயியை சரியாக அவள் புரிந்துகொண்டாள். கொஞ்சம் கொஞ் சமாய அவளாகவே எடுத்துக் கொள்ளப் போகும் உரிமைகளையும் முன்னதாகவே விட்டுக் கொடுத்து விட்டாள். அது போலவே மாயியும், விஜயத்தின் கூர்மையை நன்றாகத் தெரிந்து கொண்டு அவளது இரவுகளை இடைஞ்சல் செய்யாமல் வளர்த்துக் கொடுத்தாள். இப்போது தெலகராஜுவின் அந்தப்புரம் ரங்கத்தின் கைகளிலும், வெளி அரங்கம் மாயி கையிலும் மாறிப் போக தெலகராஜுவின் அந்தரங்கம் முழுவதும் விஜயத்தின் கையிலும் ஆயிற்று. வூட்டின் சுவர்கள் இடிந்து விழும்போதெல்லாம் ஒரு கணம் பயமாக இருந்தாலும், வெளியே மாயி இருக்கிறாள். உள்ளே ரங்கம் இருக்கிறாள் என்று கவலையில்லாமல் விஜயத்துடன் ஆழ்ந்திருந்தான் தெலகராஜு. இடையிலேயே நான்காம் மாடி ஏறி வெள்ளத்தைப் பார்க்கும்போது கொஞ்சம் கொஞ்சமாக தண்ணீருக்குள் புதையும் கரமுண்டாரு வூட்டின் பின்கட்டை பார்க்கும்போது பயமாக இருந்தாலும் இந்தப் புயலிலும், மழையிலும் வெள்ளத்திலும் தெலகராஜு திட்டமிட்டு கட்டிய கான்கிரீட்

பெல்ட் கட்டிடம் எலும்புக்கூடு போல் தண்ணீருக்குள் இருந்து இன்னும் கரமுண்டார் வூட்டை இறுக கோர்த்துப் பிடித்திருந்தது என்பதையும், வூட்டையே மூடுகிற அளவுக்கு வெள்ளம் ஏறினாலும், கான்கிரீட் பெல்ட்டுகள் விட்டுக் கொடுத்துவிடாது என்பதும் நன்றாகத் தெரிந்தது. தொரச்சியப்பாயியும், சந்தனப்பாயியும் விடாமல் ஆட்களைத் திரட்டிக் கொண்டு, எங்கிருந்தோ சம்பாறம் கற்களை தண்ணீரின் மோதலைத் தவிர்க்க கொண்டு வந்து போடுவதில் முனைந்திருந்தார்கள். தெலகராஜு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். கரமுண்டார் வூடு பின்னால இருந்து மூன்று கட்டுகள் வரை முற்றங்களையம் தான்டி ஏறி வந்து விட்டது. ஒவ்வொரு முறை சுவர் இடிந்து விழும்போது தலையில் விழுவது போல் ஒவ்வொருவரும் ஓடிப் பதுங்கினார்கள். ஓடுவதற்கு வேறு இடம் இல்லை. நாலுபுறமும் தண்ணீர்தான். ஆற்றின் கரையிலிருந்து பள்ளக்குடி ஜனங்கள் மேடேறி எங்கே போனார்களோ, வெள்ளம் வடிந்தால்தான் தெரியும். மேடேறி உயிர் தப்பின மனிதர்கள் தப்பிவிட்டார்கள். பைத்தியங்கள் சில கரமுண்டார் வூட்டைத் தேடி ஓடி வந்து ஏறிக்கொண்டன. எல்லாம் எதையோ தெலகராஜுவுக்கு ஓயாமல் நினைவூட்டிக்கொண்டிருந்தன. வூட்டுக்குள்ளேயே தன் அறையிலேயே அடங்கிக் கிடந்தான் தெலகராஜு. மாஞ்சி எங்கே போனாளோ...?

வெள்ளத்தில் பிணங்கள் நாளு நாளாக மிதந்து வந்துகொண்டே இருந்தன. உடலில் துணியில்லாத நிர்வாணமான மழையில் ஊறிக் கறுத்துப்போன ஆண், பெண்கள் விறைத்தப் போய் மிதந்து போனது ஞாபகம் வந்தது. இந்தப் பிணங்களில் அவனை அறியாமல், யார், யாரையோ ஜன்னல் வழியாக தேடித் துளைத்து கொண்டிருந்தான்.

“என்ன மாமா யாரெப் பாக்குறிங்க. மாஞ்சியெயா? அவதான் நல்லா நீயுவாள” என்றபடி பின்னில் இருந்து தன் கரங்கள் மூலமாக அவன் மார்பில் சுற்றிப் பரவிக் கொள்வாள் விஜயம். அவளைப்போல ஒரு சிறு சப்தம்கூட இல்லாத பின்னிரவுதான் ரங்கத்துக்கு வேண்டும். துணிச்சல், வேகம் நிறைந்த வெறி ரங்கத்துக்கு இல்லை. ஒரு வெளிச்சம் உதவாது. எந்தக் குறுக்கீடும் இல்லாது, படுக்கை இருட்டு மட்டும்தான் அவளுக்கு சோபனம். ஆக விஜயம் ஜெயித்துக் கொண்டேயிருப்பாள். பகல் முழுவதும் மழை, இடி, புயல் நடுவில் விஜயத்தின் கொடி பறக்கும் வேளைகளில் தங்கையின் கணவனின் வேகத்தையும், மோகத்தையும் கண்ணை மூடி உள்ளே இருந்தே ஒளிந்து பார்க்கும் நேரங்களில், ஜன்னல்

வழியே பாய்ந்து கொண்டிருக்கும் வெள்ளத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதுதான் அவளுக்குப் பொழுதுபோக்கு. மழையின் வீழ்ச்சியைப் பார்ப்பதற்கு என்றே யாராவது கூப்பிட்டு, அவன் வெளியே போனால் அவன்கூடவே கிளம்பி விடுவாள் விஜயம். ரெண்டு பொண்டாட்டிக்காரன் கெண்டேறி சாகாமல் மழை வலுத்து பெய்து கொண்டே இருந்தது. வேறு எங்கும் கவனம் திரும்பாமல் இரவுகளில் ரங்கம் கண்ணீராலேயே அவனை ஜெயித்துக்கொண்டாள். சுவர்கள் விழுந்து நிர்வாணமாக நின்றது கரமுண்டார் வூடு. நாலாபுறமும் தண்ணீரில் மூழ்கி கரமுண்டார் வூடு வினோதமாக தண்ணீர் மூழ்கிய கப்பலைப் போல் காட்சி அளித்தாலும், அதன் கான்கிரீட் பெல்ட் இறுக்கிய வெளிக்கூட்டு தெலகராஜுவின் சாமர்த்தியத்தை எடுத்துக் காட்டிக் கொண்டிருந்து. அந்த வெளிக்கட்டு கான்கிரீட் கட்டுமானம் உள் கூட்டை இறுகப் பிடித்திருந்தது. வெள்ளம் தெற்கு நோக்கி வடிந்து கொண்டிருந்தது. மிதந்து வந்த மாடுகள் அழுகி காவிரி பாலத்தின் பாதையில் சிக்கிக்கொண்டு இரவு முழுவதும் நாறின. கரமுண்டாரு வூட்டில் நாற்றம் இல்லாமல் இருக்க பெரிய பெரிய காரைச் சட்டிகளில் நெருப்புப் போட்டு குங்கிலியமும் சாம்பிராணியும் புகைத்து நாற்றத்தை விரட்டப் பார்த்தார்கள். பாலத்தின் மேலே மேலும் ஆடுகளும், மாடுகளும் மனித சடலங்களும் ஒதுங்கி ஒதுங்கி சிக்கிக் கொண்டு வெள்ளத்தோடு போகாமல் "போகமாட்டேன், போகமாட்டேன்" என்று நீரில் ஆடி ஆடி இங்குமங்குமாக மிதந்துகொண்டே தாங்கமுடியாத நாற்றத்தைப் பரப்பிக் கொண்டிருந்தன. படகுகளில்–மோட்டார் படகுகளில்–வெள்ள நிவாரண அதிகாரிகளும் இராணுவத்து உதவியாளர்களும் அஞ்சினியை சுற்றி வந்து மேலும் கரை இடியாமல் விமானத்திலும், மணல் மூட்டைகள் கொண்டு வந்து போட்டு வைத்து வெள்ளத்தின் போக்கினை மறித்துக் கொண்டிருந்தார்கள். வேதாரண்யம் கோடியக்கரை வரை வடக்கு நோக்கி வெள்ளம் வயல்களையும், பயிர்களையும் அறுத்துக் கொண்டு வரம்பு கடந்து வெள்ளம் வடிந்து கொண்டிருந்தது. ரோடுகள் பாதைகள் எல்லாம் அறுந்து தொடர்புகள் அற்றுப் போனது. தொரச்சியப்பாயி விடியற்காலையில் நாலாம் மாடியில் ஏறி தன் அவிந்த கண்ணால் எவ்வளவு தூரம் பார்க்க முடியுமோ அவ்வளவு தூரத்திற்கு கண்ணைத் துருவிக்கொண்டு பார்த்தது. "ஏய்யப்பா இவ்வளவு தண்ணி! என் ஆயிசுல பாத்தது இல்லெ. எந்த மலையில இருந்து ஊத்துதுடி தண்ணீ இவ்வளவு தண்ணீ, எஞ்சயிருந்து வந்தது?" என்று கண்களை அகற்றிக்கொண்டு

கத்தியது. மாடியில் வெறும் உடம்புடன் நின்ற பள்ளர்கள், திடீரென்று தண்ணீரில் 'தொமீர் தொமீர்' என்று பாய்ந்து மேலிருந்து அந்தர் அடித்து குதித்தனர்.

"எஞ்சேடா போறிங்க, ஏய்... சுழியில போய்த் தொலையாதீங்க எஞ்சனாச்சும் போயி சொருவிடும். இது ஆறு இல்லடா. மழை வெள்ளம் ஆமா." என்று கத்தியது தொரச்சியப்பாயி.

அப்பாயியை யாரும் சட்டையெல்லாம் செய்யவில்லை. தண்ணீரில் மிதந்த ஏதோ ஒரு பொருளை நோக்கி பள்ளர்கள் பாய்ந்து நீந்தினார்கள். அந்த பொருள் இங்கிருந்தே தெரிந்தது. நாலுபுறம் இருந்தும் மிதந்து வந்த அந்த பொருள் இன்னது என்று தெரிந்ததும் 'ஓ' வென்று கத்தினார்கள் அந்தப் பள்ளர்கள். இங்கிருந்து மேல் மாடியிலிருந்து பார்த்துக் கொண்டு நின்ற ஆண் பெண் அடங்கலும் பீதியுடன் அந்தக் குரலை நோக்கி எதிர்வாங்கி இவர்களும் 'ஓ'வென்று இன்னது என்று புரியாமலேயே பயத்துடன் கத்தினார்கள். கரமுண்டார் வூட்டு வெளித்தாழ்வாரத்தில் நின்ற கள்ளர்களும், துலுக்கத்தெரு குடிகளும் திடும், திடும் என்று தண்ணீரில் குதித்து இந்த மிதந்து வந்த பொருளை நோக்கி நீந்தினார்கள். அதே நேரத்தில் அந்த வூட்டில் தாய்ச் சுவரின் மேல்பகுதி ஒரு பாதியாக பிண்டு தண்ணீரில் சரிந்து தொபக்கடீர், என்று பேரொலி எழுப்பி விழுந்தது. மூன்றடிக்கு குறையாத குறுக்களவு உள்ள அந்த சுவர் விழும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. பாதி சுவர்தான் விழுந்தது. மற்ற பாதியை கான்கிரீட் பெல்ட் நாலுபுறமும் இறுக அணைத்திருந்ததால் விழ முடியவில்லை. மேலிருந்துஐ கீழே பலமாக திறந்து கொண்டதால் வெள்ளம் வூட்டிற்குள்ளும் நுழைந்தது. குழந்தைகள் பெண்கள் எல்லாம் 'ஓ' என்று கிளப்பிய சத்தம், தண்ணீரின் அலையொலியை மீறி எங்கும் பறந்தது. தூரத்தில் இருந்து மிதந்த அந்த மனித உடலை பள்ளர்கள் இழுத்து வர சுற்றிலும் சப்தம் கசமுசக்க மற்றவர்களும் நீந்தி வந்தார்கள். வெள்ளம் இன்னும் பேரோவை விடாமல் தன் போக்கில் இருந்தது. விஜயம் பின் தொடர இடிந்த கரமுண்டாரு வூட்டின் தாய்ச்சுவர் பிளவின் வியே தெலகராஜு தண்ணீரில் குதித்து நீந்தினான். பிணத்தின் அருகே போனபோதுதான் விஜயம் குதித்து நீந்தி வருகிறாள் என்பதைப் பார்த்தான். "மாமா" என்று கதறினான் தெலகராஜு. அது சுப்பாக் கரமுண்டார் பிணம்.

# கரமுண்டார் வூடு - 14

வெள்ளம் வடிந்து கொண்டிருந்தது. வெள்ளம் குறையக் குறைய நீரின் வேகமும், இழுப்பும் அதிகமாக இருந்தது. மெதுவாக மிதந்த பிணங்கள் இப்போது வேகமாக இமைக்கும் வேகத்தில் மிதந்து பறந்தன. அழுகிய நாய்களின் சடலங்கள் தண்ணீரில் தனித்தனியே ஒன்றையொன்று துரத்தின. அடித்த புயலில் விழுந்த மரங்கள் மிதந்து போனவை போக மீதம் இருப்பவை ஆங்காங்கே குறுக்கும், மறுக்குமாக கிடந்தன. மனிதர்களின் சடலங்களை கூடியவரை மீட்டுக் கொண்டிருந்தார்கள். மழை முற்றாக நின்று போய்விட்டிருந்தது. ஆற்றில் இன்னும் நீர் குறையவில்லை முற்றாக. வெள்ளம் வடிந்து தரை தெரிய இன்னும் பத்துநாள் ஆகலாம் என்று பேசிக்கொண்டார்கள். தரை மார்க்கமாக யாரும் எங்கும் போக முடியாது. இன்னும் வயல்களெல்லாம் தண்ணீருக்குள்தான் முங்கிக் கிடந்தன. ஜனங்களும் இன்னும் யாரும் வெளியே வராமல் பாதுகாப்பாக உள்ளடங்கிக் கிடந்தார்கள். ஆற்றில் தண்ணீர் குறையாததால் கரமுண்டார் வூடு எலும்புக்கூடு தண்ணீருக்கு மேல் தலை தூக்கி ஏதோ ஒரு பிராணி வெள்ளத்தில் தன் உடலையெல்லாம் இழந்து வெறும் கூடு நிற்பதுபோல் முன்னூறு வருட பாரம்பரியத்தை ஆற்றில் கரைத்து, தண்ணீரோடு தண்ணீராய் போய்விட்டதே போல், பெருமையை எல்லாம் இழந்து தண்ணீருக்குள் இருந்து மேல் நோக்கி எழுந்தது போலிருந்தது.

வெள்ளம் குறையாமல், மழையும் குறையாமல் இருந்தால் வூட்டின் பின்கட்டு ஆற்றோடு போனதுபோல் முன்கட்டும் பெயர்த்துக் கொண்டு போயிருக்கும். முன்கட்டு தெலகராஜு கட்டிய முன் அறைகளும் கான்கிரீட் பெல்ட்டுகளுடன் நிறுத்தப்பட்ட தூண்களும் வெள்ளத்தில் கரமுண்டார் வூடு நகராமல் இறுக்கி அதே இடத்தில் நிறுத்திவிட்டன.

வூடு என்றால் வூடு தானா? உயிர், பாரம்பரியம், உணர்ச்சி, நீண்டகால நம்பிக்கை குவிந்து கிடக்கும் ஆசைகள், காலம் காலமாக தேங்கி கிடக்கும் பெண்களின் ஏக்கங்கள், சாகாமல் இன்னும் வாழ்வோடு போராடிக் கொண்டிருக்கும் அமங்கலிகளின் ஏக்கங்கள், தள்ளாத கிழவிகளான நெஞ்சுரம் கொண்ட வயோதிக உயிரை ஆவலாதிகள் பிடித்துக் கொண்டிருக்கின்ற கிழவர்களின் அபிலாஷைகள், இளம் பெண்களின் குமுறல்கள், விஜயம், ரங்கம் போன்ற பெண்களின் அரும்புவிட்ட பேராசைகள் என்று இப்படி எத்தனையோ கலந்து திரண்டு ஓரே இலட்சியமாய் அந்த தண்ணீருக்கள் இருந்து எழுந்து நிற்பதுதான் கரமுண்டார் வூடு. அதற்கு வாரிசு ராதையம்பா வயிற்றில் நின்று கர்ப்பமாய் வெளிவர காத்திருக்கிறது. கரமுண்டார் வூடு வாரிசற்றுப் போய்விடுமா? என்ற ஓரே பயத்தில் அந்த வூட்டுப் பெண்கள் எல்லாரும் கடந்த முப்பது ஆண்டு காலமாக பயந்து பயந்து செத்துக் கொண்டிருந்தார்கள். அந்த நம்பிக்கை எல்லார் மனதிலும் செத்துவிட்டிருந்தது. தெலகராஜுவிற்கு முதலில் எல்லாம் இதை எல்லாம் கேட்டால் கேலியாகவும், எகத்தாளமாகவும், சிரிப்பாகவும் இருந்தது. ஜாதி, மரபு, ஐதீகம், அனுஷ்டானம், பூஜை, புனஸ்காரம் எல்லாமே கேலியாக இருந்தது. இப்போது அவனுடைய அவ நம்பிககைகளை எல்லாம் இந்த வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டது. அவன் ஆசைப்பட்ட காத்தாயம்பா கூட பழைய கரமுண்டார் வூட்டு பெண்தான். அவளது ஆசைகளை அவன் நம்பினான். அவன் அவளை, நேசித்த அளவு மிக அதிகம். எட்டு வயதில் அறியாப் பருவத்தில் அவளை அவன் தன்னறியாமல் தேர்ந்தெடுத்துக் கொண்டான். இந்த கரமுண்டார் குடிப் பெண்கள் காத்தாயியை அம்பாளாக்கி, வூட்டை கோவிலாக்கி, அதில் அவளைத் தெய்வமாக உட்கார வைத்து விழுந்து கும்பிட்டு பூவால் அலங்கரித்து, பொன்னாலும், பட்டாலும் மூடி, 'காத்தாயம்பாள் காத்தாயம்பாள்' என்று ஜபம் செய்து உருவேற்றி, "நீ மனுஷப் பெண் அல்ல. நீ மனிதப் பெண் அல்ல..." என்று அவளுக்கு தெய்வப் பெருமிதத்தையும், கண்

கொள்ளா அழகினையும் மனம் கொள்ளாத் திண்மையினையும், தான் என்கிற திமிரையும், உருவகித்து கொடுத்தனர். அவளும் இந்த வூட்டில் ஒரு ராணியைப் போல உலவி அவன் நெஞ்சத்தை அள்ளிக் கொண்டாள். நல்ல துளுத்த சிவந்த நிறம். பொன்னை உரைத்துப் பூசியது போன்று, மஞ்சளை பரலி பரலியாக அரைத்து பூசிக் கொண்ட மஞ்சளின் கமறலும் வாசனையும், கோலப்பொடிகளும் ஸ்நானப் பொடியும், கந்தமும், சந்தனமும், சாந்தமும், பூசி குளித்து நெய்த் திரண்ட கூந்தலோடு வந்தபோது, விழுந்து கும்பிடத் தோன்றியது. தெலகராஜுவுக்கும்கூட இந்த எண்ணம் தோன்றினாலும், அவன் அவளை அள்ளிக் கொள்ளவே விரைந்தான். கல்லூரிகள், பள்ளிக்கூடங்களில் படிக்கின்ற காலங்களிலேயே காத்தாயம்பாளை நினைத்தாலே நெஞ்சில் நெருப்புச் சுடர் ஏறும் அவனுக்கு. கொஞ்சம் கொஞ்சமாக நெருங்க வந்து வூட்டில் நுழைந்து அந்த வூட்டு மாப்பிள்ளையாக அவளைத் தொட முனைந்த போதெல்லாம், விரல்களால் தட்டிவிட்டும், கைகளால் மறித்தும் உதறியும், அவள் தூர விலகியது. அவன் நெஞ்சைப் பிளந்தது. அவன் கண்களின் சுனைகளில் அந்த வெறுப்பின் காரணத்தையும் ஆராய்ந்த போதெல்லாம் காத்தாயி அவனுக்கு வாரி விதைத்தது வெறுமைதான். அந்த வூட்டிற்கு அவள்தான் வாரிசு இனி அவளுக்கு அவன்தான் அதிகாரி என்று அந்த வூட்டில் எல்லாரும் சொன்னபோது காத்தாயி வெட்கத்துடன் சிரித்துக்கொண்டாளே ஒழிய, ஒத்துக் கொள்ளவில்ல. ஏனென்று புரியா அந்தப் பாலைவனத் தனிமை காத்தாயி தந்த அந்த சவுக்கடி மீண்டும் மீண்டும் அவனை எழுப்பியது. ஊருக்குப் போக முனைந்த போதெல்லாம் அந்த மெல்லிய, குளித்த மணம் அவனை சுற்றிச் சுற்றி வந்தது. அவள் உடலின் சாந்தி, அவன் நெஞ்சில் பாய்ந்து கத்தியாய் உள்ளே சொருகிக் கொண்டது. கிழவிகள் இரண்டும், அவள் உனக்கு, அவள் உன்னவள் என்று ஊக்கின. அந்த ஊரே அவனை மாப்பிள்ளை என்று கூறி அழைத்து, தலை மேல் தாங்கியது. யாரும் அற்ற வேளைகளில் அவன் அவளை நெருங்க கட்டிப்பிடிக்க முனைந்த போதெல்லாம் காத்தாயி, விசிறி அடித்தாள் என்ற கோரம் நேற்று வரை புரியாமல்தான் இருந்தது தெலகராஜுவுக்கு. அவள் இருந்த வரை வேறு எந்த கள்ளப் பெண்ணும் அவனைத் திரும்பிக் கூட பார்க்கவில்லை என்பதை அவன் ஜாக்கிரதையுடன் நினைவு கூர்ந்தான். இதனால்தான் கரமுண்டார் வூடு அவன் தலைமேல் எப்போதும் கனத்தது.

இந்த இருபத்தோராம் நூற்றாண்டில் நவீன சிந்தனைகளை எல்லாம் கரைத்து குடித்திருந்த அவன் முற்போக்கு நெஞ்சை, காத்தாயம்பா பிளந்து தள்ளிவிட்டாள். காத்தாயம்பாதான் இந்த கரமுண்டார் வூடு என்று புரிந்து கொள்ளத்தான் இத்தனை காலம் ஆயிற்று தெலகராஜுவுக்கு. இப்போது காத்தாயம்பா இந்த ஊடாகி விட்டாள் என்று புரிந்து கொண்டபோதுதான் தெலகராஜு அடியோடு உருமாறிப் போனான். தன்னை ஒதுக்கியது ஏனென்று புரிந்தது. தன்னை விட்டொழித்து போனது சரி என்று தெரிந்தது. ஒரு முன்னறியா சிறுமைக்கு ஆளானதும் தானே அச்சிறுமையாய் மாறி, கரமுண்டார் வூட்டை விட்டோடிப் போன அந்தப் பெண், எத்தனை அற்புதமானவள் என்பது புரிந்தது. காலம் மாறிவிட்டது. உலகம் புரண்டு கொண்டிருக்கிறது. வேற்றுமைகளும், ஒற்றுமைகளும்கூட நெருங்கி வருகின்றன என்று தெலகராஜு அறிவான். காத்தாயம்பா அவனைக் காலடியில் போட்டு மிதித்து இன்னொருவனுடன் ஓடிப்போனதே கரமுண்டார் வூட்டை நேராக்கத்தான். ஒருபுறம் ஓர் ஆண் பிள்ளையை பெற்று விட்டால் இந்தக் குடிவிடிந்துவிடும் என்று மூடத்தனமாகவும், மூர்க்கத்தனமாகவும் நம்பும் இந்த கரமுண்டார் வூட்டின் வயோதிகர்களும், சந்திரஹாச கரமுண்டாரும், கரமுண்டார் வூட்டின் செல்வத்தை வாரி இறைத்து மறுபுறம், இந்த வூட்டை தூக்கி நிறுத்த வந்திருக்கும் தூதனாய் தெலகராஜுவை எண்ணி அவனை நம்பிக் கொண்டிருக்கும் இந்த வூட்டின் இளைஞர்கள் கூடி நிற்க, தேவையற்ற பெருமைக்கும், வீண் ஆடம்பரங்களுக்கும், அர்த்தமற்ற தர்மங்களுக்கும் கரமுண்டார் வூட்டின் சொத்துக்களை வாரி இறைத்து விட்டு, வருமானம் ஒன்றும் இல்லாமல், பேருக்கு ஊரைச் சுற்றும் நடுவக் கரமுண்டாரும், சுப்பாக் கரமுண்டாரும் மற்றொரு பக்கம் ஆடி ஒழிந்து கொண்டிருக்க, வேளை தவறாமல் பூஜையும், பெருமாளுக்கு அபிஷேகமும், சேவையுமாய், திண்ணைலேயே கட்டிவிட்டு, திண்ணையையே அந்தப்புரமாக்கி தன் சப்பரக்கூட மஞ்சத்தில் நாலு மனைவியருடன் உல்லாசித்து, எப்படியாவது ஒரு பிள்ளை, எங்கனமாவது ஒரு வாரிசு என்று எப்படியோ வாழ்ந்து கனவுகளில் லயித்து கிடக்கும் பெரிய கரமுண்டார்... தேய்ந்தொழிந்த பாரம்பரியத்தின் கடைசி சொத்தையும், கடைசியாக தன் தங்கை வடுவாம்பாளுக்கு, சொன்ன சொல்லுக்காக தூக்கி காலடியில் எறிந்த அவரது வேகத்தையும், காலம் எனும் அரக்கன் அடித்து, துவைத்து, மிதித்து கரமுண்டார் வூடு என்னும் இலட்சியத்துடன், சேர்த்து பிணைத்த

அதிசயத்தையும், சரியாகப் புரிந்து கொண்டவன் தெலகராஜு மட்டும்தான். காத்தாயியைதான் யாரும் மன்னிக்கவில்ல. கரமுண்டார் வூடு மட்டும் அல்ல. அந்த அஞ்சினி கிராமம் முழுவதுமே அவளை இனி எப்போதுமே மன்னிக்கத் தயாராய் இல்லை. கண்டந்துண்டமாக வெட்டிப் போட்டு மிதிக்கவே ஆசித்தது. ஆனால் காத்தாயம்பா கலியராஜனுடன் ஓடிப்போன பின்னர்தான் தெலகராஜன் கரமுண்டார் வூட்டை–அதன் மூலம் பாரம்பரியத்தை–சரியான அர்த்தத்தில் புரிந்து கொள்ள முடிந்தது. இப்போது தெலகராஜுவுக்கு கரமுண்டார் வூடு வெறும் கல்லாலும் சாந்தாலும் இரும்பாலும் கட்டப்பட்ட ஊடல்ல. அது ஓர் ஆத்மாவை தனக்குள் அடக்கி கொண்டு இருக்கிறது. காத்தாயம்பாளைப் போல அதற்கும் உயிர் இருக்கிறது. நூற்றுக்கணக்கான குடும்பங்களின் ஆத்மாவில் உயிரும் மூச்சும் ஆசையும், தாபமும், கோபமும், பழியும், பொறாமையும், பேதமையும் அதற்கும் இருக்கிறது. என்றைக்கும் ஒருவனுக்குத் தரும் காதலும் இருக்கிறது. எனவேதான் கரமுண்டார் வூட்டைப் போன்ற வூடுகள் முன்னூறு ஆண்டுகளாக இந்த கள்ளர் சமுதாயத்தை கட்டின. இந்த குலத்து நீதி இன்னும் அழியவில்லை. குலம் அழிந்தாலும், இந்த கொள்கைகள்தாம் நாடாகவும், தேசமாகவும், உலகமாகவும் இன்று உலகத்தின் சிந்தனைகள் எல்லாவற்றிலும் பேசப்பட்டு வருகின்றன. இதற்கு பழமை என்றும், புதுமை என்றும், வேதமும், போமும், பிரிவினையும், எந்தப் பெரும் சிந்தனையாளனும் செய்து காட்ட முடியாது. ஓடிப்போன காத்தாயி இதைத்தான் அவனுக்கு வெறுப்பால் வாரித் தந்து விட்டுப் போயிருக்கிறாள். காத்தாயி எனும் ஒரு பெண்ணின் நேசம். ஒரு குலத்தின் நீதியாய் ஓர் உலகத்தின் நியதியாய், மாற்றும் இந்த ரகசியத்தை காத்தாயியால்தான் அவன் புரிந்து கொள்ள முடிந்தது. அந்த அர்த்தத்தில்தான் அவனால் எல்லாப் பெண்களையும் தன்னோடு அணைத்துக் கொள்ள முடிந்தது. யாரையும் அவன் சுயநலத்தோடு சேர்த்துக் கொள்ளவில்லை. நிறையப் பெண்களை அவன் கலந்து கொண்டபோதும், அவன் யாரையும் வஞ்சிக்கவில்லை. அத்தனை பேரையும் அவன் சுய நலத்துடன் கட்டிக் கொண்டாலும்கூட, எல்லாரையும் தன்னுடன் இணைத்துக் கொள்ள முடிந்தது. கரமுண்டாரு வூடு என்னும் இந்தப் பொது நலம், பலருக்கும் கேலியாக இருந்தாலும், இந்தக் காலத்துக்கே புரியாது போனாலும், பல கரமுண்டார் வூடுகள் இது போலவே அந்த கிராமாந்தரங்களில் இன்னும் எத்தனை

புது அலைகளும் புது வெள்ளங்களும், புது வயல்களும், புது சூறையாடல்களும், நிகழ்ந்தாலும் தொடர்ந்து கரமுண்டார் வூட்டை போலவே புதிதாக உதித்து கொண்டுதான் இருக்கும் என்பதை இங்கு வந்து பார்த்தால்தான் தெரிந்து கொள்ள முடியும்.

அவள் காத்தாயம்பாள்—அவளுக்கு மன்னிப்பு இல்லை என்றாலும்கூட இந்த வூட்டை அவனுக்குப் பரிசாகக் கொடுத்துவிட்டுப் போய்விட்டாள் என்கிற ஒரு காரணத்தையே அடிப்படையாகக் கொண்டு அவன் இந்த கரமுண்டார் வூட்டின் ரகசியங்களை எல்லாம் ஊகித்துவிட்டான். அவன் படித்த படிப்பு, பட்டங்கள் அவன் சிந்தனைகளில் சேர்ந்த கேள்விகள் இந்தக் கிராமத்தின் பிற்போக்கு, அவன் கொண்டு வந்த எண்ணங்கள் சமுதாயத்தையே மாற்றி அமைக்க வேண்டும் என்று அவன் எண்ணிய எண்ணங்கள் யாவும், காத்தாயம்பா ஓடிய ஓட்டத்துடன் கலந்து, மறைந்து விட்டன. வெள்ளத்தில் இருந்து கொண்டு வந்தது ஊதி, உப்பி, நீலம் பாரித்து அழுகி, தோல் உரிந்த சுப்பாக் கரமுண்டாரின் பிணம் இன்னும் அவன் மனக்கண் முன் நின்றது. யாரும் எதிர்பார்க்கவில்லை. அந்தப் பிணம் அனாதைப் பிணமாக ஒரு யுகத்தின் பதிலாக வந்ததுபோல் இருந்தது. சவத்தை எரிக்கவும், புதைக்கவும்கூட இடம் இல்லாமல் கிராமமே நீரில் மூழ்கி இருந்தது. அதனால் பிணத்தை தூக்கி தண்ணீரிலும் நடு முற்றத்தில் ஐந்தாம் கட்டில் கட்டைகளை அடுக்கி அதன் மேல் பிணத்தை வைத்து ஈர மண்ணை சுற்றிலும் பூசி, நடு வூட்டிலேயே பிணத்திற்கு தீ வைத்த போது கரமுண்டார் வூட்டு பெண்கள் முழுவதும் 'ஓ'வென்று அலறி சத்தம், சுற்றிலும் எதிரொலித்தது இப்போதும் ஞாபகம் இருந்தது தெலகராஜுக்கு. மழைத்தூரல் இடையே அந்தப் பிணம் ரகசியத்தையும் வெளியிடவில்லை. வூட்டுக்குள் இருந்த நூற்றுக்கணக்கான கேள்விகளுக்கும் பதில் சொல்லவில்லை. பெண்களின் பெரு மூச்சுகளுக்கும், அமங்கலிகள் கதறல்களுக்கும், காத்தாயம்பாளைப் பற்றி அந்தப் பிணம் எதுவுமே பேசாமல் நெருப்பில் நீலமும், சிவப்புமாய் நிறம் விட்டு எரிந்து கொண்டேயிருந்தது. வூட்டுக்குள் இப்படி பிணத்தை எரிக்கலாமா? என்ற ஐதீகத்தைக்கூட யாரும் எழுப்பாமல் அழுது கொண்டேயிருந்தார்கள். எரியும் பிணத்தின் கைகள் இரண்டும் மேல நோக்கி விரைத்து நின்றிருந்தன. அதை அமுக்கி உடலோடு சேர்த்து வைத்துக் கட்டப் பலமுறை முயன்றும் முடியவில்லை. தண்ணீரிலேயே விரைத்த பிணம் அல்லவா அது? பிணம் எரியும்போதும், எரிந்த பின்னர் நடந்த சடங்குகளும் யாரும்

அணுகாத தனிமையிலேயே நடந்தது. சடங்குகள் முடிந்து கருமாதியும் கூட வழக்கத்திற்கு மாறாக, ஆறாம் நாளிலேயே செய்து, முற்றத்திலேயே கல் நட்டார்கள். ஊர் முழுவதும் வடிந்து, தலைகாட்டும்வரை காத்திருக்க முடியாது. வூடு முழுவதும் ஆலை போல் வேலை நடந்தது. முழுவதும் தண்ணீரிலேயே நின்றார்கள். நீந்திச் சென்று எங்கிருந்தோ சம்பாரைக் கற்களைத் தேடி எடுத்து தலையில் சுமந்து வந்து போட்டார்கள். சிறு குழந்தைகளிலிருந்து கிழவர்கள் வரை தண்ணீரிலேயே ஊறி கிடந்தார்கள். எட்டுக்கட்டு வூடு இப்போது தண்ணீர் வடிந்தாலும்கூட நாலு கட்டுதான் தண்ணீருக்கு மேல் இருந்தது. மற்றக் கட்டுகள் பாதி இடிந்து தண்ணீரில் குவிந்துவிட்டன. பின் கட்டு தளங்கள் யாவும் அப்பொழுது வெறும் கான்கிரீட் பெல்ட்களில் மட்டுமே இனம் காண முடிந்தது. மாயி பத்து அம்பது பள்ளர்களுடன், வூட்டின் இடிந்த பகுதிகளையெல்லாம் செப்பம் செய்து கொண்டிருந்தாள். கரமுண்டார் வூட்டின் பின் பகுதி, இடிந்த விழுந்தும்கூட மாடிப்படிகள் அப்படியே அந்தரத்தில் நின்றன. நீரின் உயரம் குறையக் குறைய, அதைவிட வேகமான துணிச்சலில், மாயி ஆட்களை வைத்துக் கொண்டு, மேலும் வூடு விழாதபடி உத்திகளைக் கையாண்டு கொண்டிருந்தாள். அவளுக்கு ஓய்வே இல்லை. அரிப்பெடுக்கும் இடங்களிலெல்லாம் மணல் மூட்டைகளையும் செம்பாறம் கற்களையும் உபயோகித்து வெள்ளத்தின் போக்கை கரமுண்டார் வூட்டை நோக்கி வரும் வெள்ளத்தின் போக்கைத் திருப்பிவிட்டுக் கொண்டிருந்தாள். விஜயமும் மொட்டை மாடியில் நின்று தெலகராஜுவுன் கீழே நடக்கும் வேலைகளைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தாள். விஜயம் கேட்டாள் "ஏன் மச்சான் காத்தாயம்பாளையும் கலியனையும் சுப்பு சித்தப்பா கண்டுபுடிச்சு வெட்டித் தள்ளிருக்குமா? இல்லையா? இந்த வூட்டுல வந்து பிறந்ததே மானங்கெட்ட முண்டெ."

"காத்தாயி இந்த வூட்டவுட்டு போகலேன்னா கரமுண்டாரு வூடு இந்த வெள்ளத்தோட போயிருக்கும். நானும் அஞ்சினியை விட்டே போயிருப்போன். உன்னையும், ஓங்க அக்காளையும் ஆதிரியாரு மொவன் சுந்தரம்தான் கட்டியிருப்பான்"

"ஏம் மச்சான் இப்படிச் சொல்றிங்க, அப்பக்கூட நானும் ரங்கமும் ஓங்களோடதான் வந்திருப்போம். ஓங்க ஆசையில நெருப்புக் கொட்டிப்புட்டு என்னைக்கி காத்தாயம்பா ஓடுனாளோ அன்னைக்கே ரங்கமும் நானும் முடிவு கட்டிட்டோம்."

“நான் ஒத்துக்காம இருந்திருந்தா?”

“என்ன மச்சான் நீங்க, எங்களப் புடிக்கலேன்னா ஓங்களுக்குப் புடிச்ச வேற ரெண்டு பொண்ணு கரமுண்டாரு வூட்டுல இல்லாமயா போயிடும்? பொண்ணு பெரிசில்ல மச்சான் பொண்ணு போற போக்குத்தான் பெரிசு. ஓங்கள இஷ்டப்பட இஞ்ச யாருதான் இல்ல”

“ஒனக்கு ரொம்ப வாயி நீளுதுடி, அஞ்சப் பாத்தியா அக்கரையில” என்று கையைச் சுட்டிக்காட்டினான் எதிர் கரையை நோக்கி. எதிர் கரையில் கூட்டம் கூட்டமாக அஞ்சினியை நோக்கி தண்ணீரில் இறங்கிக் கொண்டிருந்தனர் ஏராளமான பேர்கள். எல்லாருமே அத்தனை தூரத்தில் இருந்தும்கூட அடையாளம் தெரியும்படியாக அஞ்சினி ஜனங்களாகவே இருந்தார்கள்.

“எல்லாம் நம்ப ஊரு ஜனங்க வெள்ளத்துக்குப் பயந்து மேட்டுக்கு ஓடுதுவ. சாலியகுடி ஜனங்க இதுவல்லாம் ஏன் இப்பவே வருதுவோ? இன்னும் தண்ணீ வடியலெ.நெலமெல்லாம் தண்ணிக்கு அடியில போயிடுச்சு. வயல், வரப்பு, வாய்க்கால், எல்லாம் ஒண்ணடி மண்ணடியா மேடேறி சாஞ்சு போச்சு. இனிமே திரும்பி வயலாவுறதுக்கு எப்படிப் பார்த்தாலும் ஆறு மாதமாவது ஆவும். பயிரை ஏத்துறதுக்கு யாருகிட்டேயும் பணமில்லை. பத்து பதினைஞ்சு நாளா ஊருக்கே வடிச்சுக் கொட்டிகிட்டிருக்கோம். எங்கம்மா கேட்டாளே, எஞ்ச நெலம் எஞ்ச இருக்கு காட்டுங்கன்னு. இப்ப வந்து பார்த்தா யாராலயும் யாரு நெலம் யாருதுன்னு இப்பக் காட்டவே முடியாது. ஊரு ஜனம் திரும்பியும் அஞ்சினிக்கு வருதுவ. ஏன் நெலம் ஓன் நெலம்ன்னு இனிமே அடிதடிதான். எல்லைக் கல்லெல்லாம் எகிறிப் போச்சு. மறுபடி அளந்து, பிரிச்சு, ஒருத்தன ஒருத்தன் வெட்டிக்கிட்டு, குத்திக்கிட்டு, என்னன்னவெல்லாம் அவதி இருக்கோ? கவரமேடு மட்டும் தண்ணீரில் முழுகாமல் எப்போதும் போல் சரிந்து கிடக்குது.

கூட்டம் கூட்டமாக தண்ணீரில் ஜனங்கள் சாமான்களையும் கூடைகளையும் தூக்கி கொண்டு அஞ்சினியில் அவரவர் தம் வூடு தேடி தெருக்களைத் தேடி, மூலஸ்தலம் தேடி வருவது தெலகராஜுவுக்கு ஆச்சரியமாய் இருந்தது. மனுஷன் தன் மூலத்தைத் தேடுறத எந்தக் காலத்துலேயும் வுடமாட்டான். ஏன்னா அவனுக்கே தெரியும் நாளைக்கே அவன் போய்டுவான்னு. காவிரி வற்றி, ஊற்றிறங்கிக் கொண்டிருந்தது. அவன் நிமிர்ந்து விஜயத்தைப்

பார்த்தான். ஆச்சரியமாக அவனை மயக்கினாள் அந்தச் சின்னப்பெண். திருப்பித் திருப்பி யோசிக்கும்போது, இவளிடம் வந்து சிக்கிக் கொண்ட தன்னைப் பற்றி யோசிக்கும்போது, ஒரு காத்தாயம்பா இல்லே தன்னை ஆள்வதற்கு, பல காத்தாயம்பாக்கள் சுற்றிலும் இருப்பது அவனுக்கு ஞாபகம் வந்தது. ரங்கம்கூட படியேறி மேல வந்தாள். இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

"அட நாளு முச்சூடுமா ரெண்டு பேரும் இப்படி மாடியிலியே நிப்பிங்க, பசி கிசி இல்லையா? கீழ வர்லெ? அப்பாயிவ ரெண்டும் கத்திக்கிட்டே இருக்கு. வாங்க கீழே போகலாம்..." என்று அவர்கள் ரெண்டு பேரையும் கண்டித்தாள் ரங்கம்.

ரங்கம் இப்போதெல்லாம் முன்னைப் போல இரவோடு நிற்பதில்லை; பகலையும் கேட்கிறாள். விஜயத்தின் நேரங்களில் வழுவாக குறுக்கிடுகிறாள். விஜயமும், ரங்கமும் தனிமையில் பகை கொள்வதும், மோதுவதும் மூளுவதுமாக மோதி மொரலுகிறார்கள். ரெண்டு பேருடன் ஒரே அறையில் படுத்துக் கிடப்பது சிரமமாகவே இருந்தது. விஜயம் எப்போதும் அவனுடன் இருக்கவே விரும்பினாள். ரங்கம் பெரிய பெண். முதிர்ச்சி. அதனால் தனி இடமும் நேரமும் கேட்டாள். கொஞ்ச நாள் கழித்து தனியறை கேட்டாள். ஒரு குழந்தையைப் பெற்று எடுக்கிற வேகம் தெரிந்தது. மடியில் பிள்ளை விழுந்தால் நிச்சயம் வேறு வூடு கேட்பாள் என்று தோன்றியது. எனவே, தனி ஊருக்குப் போகவும் வழி சொல்ல வேண்டி வருமோ? என்று லேசாக அச்சம் அவனுக்கு இருந்தது. வூடு முழுவதும் இருந்த ஜனங்கள் இன்னும் ஒரு வாரத்தில் தங்கள் தங்கள் மேடுகளுக்கு போக ஆரம்பித்து விடுவார்கள். ஆனால் விஜயம் விலகவே மாட்டாள் என்று பயமாகவும் இருந்தது தெலகராஜுவுக்கு. "என்ன மாமா அப்படி பாக்குறிங்க... இன்னும் இவளக் கொஞ்சிக்கிட்டே இருக்கணும்மாக்கும்..." என்றாள் சுருக்கென்று.

கல்யாணம் ஆயி இந்த ரெட்டை இனத்தக் கூட்டிக் கொண்டு வந்து ஒரே அறையில் அடைத்த தொரச்சியம்மாயி சொன்னது ஞாபகம் வருது. "சந்திரஹாசனுக்கு நாலு, ஒனக்கு ரெண்டாடா? நாலா இருந்தா தும்பம் இல்ல; ரெண்டுன்னா எப்பவும் புடுங்கல்தான். எனக்கு இல்லேன்னா ஒனக்குன்னு ஒழுங்கா இருந்தாளுவன்னாப் பாரு. இல்லெ இன்னும் ரெண்டு இருக்குல்ல கிருஷ்ணம், துளசி அதுவ ரெண்டையும் கட்டிக்க. ஊர் மேயுறது போதும். அப்பதான் சொத்தும் சொகமும் பிரியாது"

"ச்... சீ... சீ... அதெல்லாம் வாண்டாம்." என்றான் தெலகராஜு. விஜயம் சிரித்துக் கொண்டே, "வாங்க கீழே போகலாம்" என்றாள். இருவரும் பின்தாங்க கீழே இறங்கி வந்தான் தெலகராஜு. முற்றத்தில் சாப்பாட்டுக் கடை ஆரம்பம் ஆகியிருந்தது. இனி இது ஓய இரவு பதினோரு, பனிரெண்டு மணி ஆகவும், நிலைமைகள் மோசமாக இருந்தன. இருக்கும் நெல் இன்னும் எத்தனை நாளைக்குத் தாங்கும்? என்று தெரியாது. மாயிதான் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருக்கிறாள். ரங்கமும் விஜயமுமாக அவனை அந்தப்புரத்துக்கு இழுத்தார்கள். அறைக்குள் நுழைந்ததுமே கதவை இறுகத் தாளிட்டாள் விஜயம். அறையின் மெல்லிய நீல வெளிச்சத்தில் அவர்களின் மூர்க்கம் விரிந்தது. இந்த ரெண்டு பெண்களும் காத்தாயம்பாளாவே மாறிக் காட்டினார்கள். மதிய வேளை நெருங்கும்வரை காதலின் மூர்க்கம் அடங்கவேயில்லை. ஜன்னல் வழியே வெள்ளத்தைப் பார்த்தபடியே இரண்டு கடல்களின் நடுவே குமரிமுனைபோல, நிலத்தின் முனைபோல கூர்படக் கிடந்தான் தெலகராஜு. வெளிச்சம் அவர்களுக்கு தூரமாகிவிட்டது. அவ்வப்போது சின்னச் சிணுங்கல்களும் அவனது கரத்த குரல் அழைப்புகளுமாய் நேரம் அவர்களிடையே கொஞ்சம் கொஞ்சமாய் இல்லாமல் போனது. "வெக்கங்கெட்டவ" என்றாள் ரங்கம்.

"எத வச்சுச் சொல்றே" என்று அவள் காதுகளில் முனகினான் தெலகராஜு.

"போறாளே பாருங்களேன்" என்று அழுத்தியபடி, அவனை மூடிக்கொண்டாள் ரங்கம்.

பின்னால் இருந்து அவனைத் தழுவிக்கொண்ட விஜயத்தின் 'கலீர்' என்ற வெட்கமற்ற துணிச்சலான சிரிப்பு அவனை எழுப்பவிடவில்லை.

"பசிக்கலையா" என்று பின்னால் இருந்து எழும்பிய விஜயத்தின் கேள்விக்கு "நீ வேணா போய் சாப்புடுடீ" என்றான் முன்னால் இருந்து. ரங்கத்திடமிருந்து எழும்பிய பதில் அவனை திக்குமுக்காட வைத்தது.

"அசிங்கம்" என்று கூறியபடியே அவனை மேலும் இறுக்கிக் கொண்ட விஜயத்தின் காதுகளில் "நீ பின்னால் இருந்து பண்றது அசிங்கமில்லையா?" என்று குத்தல் கேட்டு வெடுக்கென்று எழுந்து "என்ன பேச்சு இது?" என்று கூறியபடியே ஓங்கி அறைந்தான்.

கைக்கு எட்டியவளைப் பிடித்து மீண்டும் ஓங்கி அறைந்தான். 'பளீர், பளீர்' என்று இருவருக்கும் அறைகள் விழுந்தன. முரட்டுத் தனமாகவே முடியைப் பிடித்து மீண்டும் வாயில் அறைந்தான் தெலகராஜு. இருவரும் அவனது அடிகளை வாங்கியபடி மௌனமாக வாயை அமுக்கியபடி அழலானார்கள். இரண்டு பேரையும் விலக்கி தனித்தனியாகவே ஏதும் வாய் பேசாமல் மீண்டும் மீண்டும் வாயில் அறைந்தபடியே "தேவடியா நாய்ங்க அடக்கமில்லாத கழுதங்க" என்று கத்தியபடியே ரங்கத்தை காலால் எட்டி உதைத்து, அவள் சுருண்டு விழுவதைப் பார்த்தபடியே காலால் கீழே கிடந்த கைலியைத் தூக்கி இடுப்பில் வரிந்து சுற்றியபடி, "நாயிங்களா வந்து பேசிக்கிறேன் ஒங்கள" என்று போனான் தெலகராஜு. முன்கட்டு முழுவதும் ஜனங்கள் ஒரே கூட்டமாக சப்த படுத்திக் கொண்டிருந்தார்கள். 'என்னா ஆச்சு' தெரியவில்லை. கைலியை மடித்துக் கட்டிக்கொண்டு "ஏய் மாயி என்னடி அங்க" என்று கத்தினான். யாரும் சொல்லவில்லை. மாயி அங்கேதான் நின்றாள். ஆனால் அவனைத் திரும்பிப் பார்க்கவில்லை. எல்லாரும் முன் கட்டில் ஓர் அறையை நோக்கிக் கொண்டிருந்தார்கள். தொரச்சியப்பாயியும், சந்தனப்பாயியும் உரத்தக் குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

"ஏய் மாயி. முண்டெ. என்ன அங்கேன்ல்ல" என்று கத்தினான் மீண்டும். ஜனங்கள் போய்க்கொண்டும், வந்துகொண்டும் இருந்தார்கள். வருகிறவர்கள் ஆச்சரியத்தால் அகல கண் விரித்து, மூக்கின் மேல் விரலை வைத்து நடந்து கொண்டிருந்தார்கள். மாயி பார்வைக்கு இப்போது கள்ளப் பெண் போல் கரமுண்டாத்தி மாதிரி, ஆகியிருந்தாள். கழுத்தில் நகைகள் அவளது லேசான மாந்துளிர் மாதிரி நிறத்திற்கு நிரம்ப அருமையாக இருந்தது. கைகளில் அடுக்கு வளையல்கள், அவள் கட்டியிருந்த பட்டுப்புடவை. நல்ல உயரமான அவள் ஒரு கணத்தில் அழுத்தி எழுதிய அம்மன் படம்போல் இருந்தாள் ஜன்னல்களின் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு நின்ற குழந்தைகள். உள்ளே எட்டிப் பார்த்து "அழகு பாப்பாடோய்" என்று கத்தின. அப்படியே முற்றத்தில் கிடந்த சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டான் தெலகராஜு. வாசற் குறட்டில் இருபது, முப்பது பள்ளர்கள், பஞ்சாயத்துப் போர்டு ஆட்கள், சர்வேயர் எல்லாரும் கிளம்பத் தயாராக நிற்கிறார்கள். தெருவிலும் தண்ணீர் வடிந்திருந்தது. அனேகமாய் சாயங்காலத்துக்குள் தரை கண்டு வரும். தலை காணும் முன் யாருக்கும் அடங்மாட்டாத ஆவல். புது நிலம், புது மண் பார்க்கப் போகிற வேகத்துடன் எல்லாரும்

நடுவக் கரமுண்டாருடன் கிளம்பத் துடித்துக் கொண்டிருந்தார்கள். நாலைந்து நாளாக வெயிலும் கடுமையாக இருக்கிறது. நிலத்திலிருந்து எழும் நீராவி படலம் படலமாக மேலேறிக் கொண்டிருந்தது. நீராவி மண்ணின் மணத்தை நாலாபுறமும் எடுத்துக் கொண்டு பரவியது. உள்ளே இருந்து புதுக்குரல் புதுப்பிறப்பின் அழுகுரல் எழும்பியது. மாயி கையில் குழந்தையை ஏந்தி அவனிடம் தர, வாசலில் இருந்த பள்ளர்கள் உட்பட அத்தனை பேரும் உள்ளே வந்து எட்டிப் பார்த்தார்கள். மாயி, குழந்தையை அவள் மடியில் வைத்து அவனைப் பார்த்து சிரித்தாள். அவள் உடலும் கட்டுவிட்டு இருந்தது. அவளது சீர்த்த மார்பகங்கள் குழைந்தது போல் ஆகியிருந்தது. கை, கால்களில் ஒரு மெருகும், தளர்ச்சியும் தெரிந்தன. ரொம்ப சந்தோஷமாக அவனைக் குனிந்து அவன் காதுகளில் ஏதோ சொன்னாள். அவளையே வைத்தக் கண் வாங்காமல் அவன் பார்த்து, "நீயும் ஜெய்ச்சுட்டே" என்றான். மடியில் கிடந்த குழந்தை வீறிட்டு தன் இருப்பைக் காட்டியது. "மச்சினப்புள்ளெயெ கையிலெ தூக்குங்க" என்றாள் மாயி.

முன்னைவிட இன்னும் வெட்கம் கொண்ட அவள் முகத்தில் திருப்தியும் அமைதியும் சுடர் விட்டது.

"கையிலெ காசு இல்லாட்டியும் கரமுண்டாரு வூட்டுக்கு ராஜா பெறந்துட்டாரு" என்றான் தெலகராஜு.

"ஏங்க நம்ப நெலம் எங்கேயிருக்கு? எப்படியிருக்குன்னு பார்க்கப் போலாங்களா?" என்ற குரல் கேட்டு பின்புறம் திரும்பிப் பார்த்தான் தெலகராஜு. அப்படி அழைத்தது விஜயம். முகத்தில் எந்த மாறுதலும் இல்லாமல் சகஜமாக சிரித்தபடி அவளுக்கும் பின்னால் ரங்கம். ரங்கத்துக்குப் பின்னால் நடுவக் கரமுண்டார் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார். எல்லாரும் குழந்தையை கை விரல்களால் தொட்டுக் கொஞ்சினார்கள். சொடக்கு விட்டார்கள். ரங்கம் குழந்தையை கையில் எடுத்து, "கொழந்தை ஓங்கள மாறியே இருக்கு மச்சான்" என்று சொன்னபோது, எல்லார் கண்களும் மீண்டும் குழந்தையை ஆய்ந்தன. ரங்கம் சொல்வது உண்மைதான். குழந்தையின் சாயலில் அவள் அவனைக் கண்ட சந்தோஷம், எல்லாரையும் பிடித்தது.

"டேய் வாங்கடோய் போவலாம்" என்று கூறியபடி நடுவக்கரமுண்டார் பள்ளர்களோடு தெருவில் இறங்கியபோது பள்ளர்கள் அத்தனை பேரும் தெலகராஜுவின் உத்தரவிற்கு காத்து அப்படியே நின்றார்கள். பள்ளர் கூட்டம் முழுவதும் இப்போது

அவன் கையில் அல்லவா? மாயிதான் இந்த மந்திரத்துக்கு மூலகாரணம்.

"ம்... ம்... போங்கடா. அப்படியே பார்த்துகிட்டு நிக்கிறானுவ போயி வேலையைப் பாருங்க" கம்பீரமாக தெலகராஜுவின் குரல் கேட்டதும்தான் பள்ளப் பெண்களும், ஆண்களும் மண்வெட்டி, கடப்பாறையுடன் கூட்டமாக தெருவில் இறங்கி நடந்தார்கள்.

"ஏன் நீங்க போவல்லியா" என்றாள் ரங்கம்.

"வேண்ணா நீ போ. பத்து நாளா மண்ணரிச்சுப் போயி சேறும், சகதியுமா கெடக்கு. அதுல போயி பாக்குறதுக்கு என்ன இருக்கு?"

"ஏன் இல்லியாம், நம்ப நெலம் எங்கேன்னு பாக்க வாண்டாமா?" என்றாள் விஜயம் பின்னாலிருந்து.

"நெலம் எஞ்சயும் போயிடாதுடி. அஞ்சதான் இருக்கும். ஓடிப்பொய்டாது. ஆயிரம் வேலி கட்டி ஆண்ட வூடு கரமுண்டாரு வூடு தெரியும்ல்ல. எல்லாத்தையம் வித்து சுட்டு தின்னாச்சு. இப்போ வெளயுற நெலமா அம்பது வேலிகூட தேறாது. ஒன்னும் மிச்சமில்லே. வெள்ளம் வந்து அத்தனையும் கரம்பையா அடிச்சுகிட்டுப் பெய்ட்டு. கரமுண்டார் வூடும் சுத்தமா வுழுந்திருந்துதுன்னா எல்லாம் ஒரு வழியா தெருவுக்கு வந்திருக்கலாம். போங்கடி ஆனா வூடு நிக்கிது. வாரிசும் பொறந்து முழிச்சுகிட்டு இருக்கு. சிங்கக்குட்டி. இனிமே என்னா கவலை? அதது நெலத்தெ அததுவளே சாகுபடி பண்ணி அததுவளே கவனிச்சுக்கும்" என்றபடி எழுந்து நின்ற ரங்கத்தையும் குழந்தையுமாக கோர்த்து சேர்த்து பிடித்து "டேய் சிங்கம் வாடா போலாம். ஒரு பய நம்மள ஒண்ணும் பண்ண முடியாது இனிமே" என்று கொஞ்சினான். ரங்கம் வெட்கத்தில் முகம் சிவந்தாள்.

வெளியில் குழந்தையுடனும், ரங்கத்துடனும் நடந்தான் தெலகராஜு.

"சீக்கிரம் வந்துடுங்க" என்று குரல் கேட்டு தெலகராஜு திரும்பிப் பார்க்க நிறைந்த சிரிப்புடன் அவனுக்கு உத்தரவுவிட்டுக் கொண்டிருந்தது மாயிதான். வேறு யாருமில்லை.

குழந்தையுடன் மெல்ல முற்றத்தில் இறங்கிப் பட்டுப் போல் மணம் படிந்த பூமியில் வழுக்கி விடாமல் மெல்லக் கால் வைத்து வாசலில் போய் நின்றபோது, பூமி எப்படியெல்லாம் தண்ணீரால்

உருமாறி இருந்தது என்பது ஆச்சரியமாய் இருந்தது. எங்கு பார்த்தாலும் மேடு பள்ளமுமாய் தரையை அறுத்து மரங்களும், மரங்களை அறுத்து மண்ணும், குவிந்தும், குழியாடியும் கிடந்தன. ஆற்றங்கரையோரம் ஏராளமான மண் அரித்து கரையெல்லாம் கத்தியால் அறுத்து எடுத்தது போல் பாளம் பாளமாகத் துண்டுபட்டுக் கிடந்தன.

"ந்தா யாரங்க? கொழந்தையைக் கொண்டு போயி ராதா அத்தைக்கிட்ட கொடுங்க" என்று கொழந்தையை கொடுத்தபடி "ஊர் பஞ்சாயத்துக்கு ஏற்பாடு பண்ணணும். ஏலே ஏய் சாம்பான் யார்ரா அஞ்ச? தமுக்குப் போட்டு சொல்லிட்டு வரச்சொல்லுங்க. தெரியுதாடா?" என்று பின்னால் திரும்பி "ஏய் ரெங்கம். போனாத் திரும்பி வர நேரமாகும். பசிக்குது. ஏதாவது சாப்பிடக் கொண்டா" என்று கத்தியபடி திண்ணைக் குறட்டில் ஏறி உட்கார்ந்து கொண்டு "பத்தே நாள்ல நம்ப வயலெல்லாம் தெரிய தெரிய வரப்பு புடிச்சாகணும் என்னடா மருத முடியுமாடா?" என்றான் தெலகராஜு. உள்ளேயிருந்து விஜயம் ஒரு தட்டில் நாலு தோசையும் அதன் மேல் ஊற்றிய ஆவி பறக்கும் கொழம்புமாக தழையத் தழைய வந்தாள். "பத்து நாள்ல முடியாதுங்க. ஆளுவ பத்தாது"

"ஏன்டா முடியதுன்னே, ஏன்டா பத்தாதுன்னே? அம்ப வூட்டுப் பொம்பளைவளையும் இறக்குனாப் போவுது. இஞ்சயும் "கரமுண்டாரு குடி பொண்டுவ அம்பது, அறுபது தேருவாளுவடா, வூட்டுக்குள்ள உக்காந்துகிட்டு, தின்னுகிட்டு கெடக்குதுவ. இன்னமும் என்னடா"

"என்னாங்க ஆண்டெ நீங்க? அம்ப வூட்டுப் பொம்பளைவள வயல்லயா? ஒப்புறானே"

"ஏய் கரமுண்டாரு குடி எப்பவும் ஓழச்சுதான் தின்னுச்சு. இப்ப மட்டும் என்னா? நாஞ் சொன்னா எல்லாம் எறங்கும் இரு கூப்புடுறேன்."

"ஒப்புறான்னெ ஒங்களுக்கு தெரியாதுங்களா? பெரியதம்பி ஒங்களுக்கு தெரியாதுங்களா? வரப்புக்குள்ற எறங்கி வேலை செய்யிறது வேற, வரப்பையே வெக்கிறது வேற இல்லீங்களா?"

"எல்லாம் வேற வேறதான்டா. கண்ணு பாத்தா கையி செய்யணும்டா தெரியும்ல்ல? இனிமே கரமுண்டாரு வூடு அது... இது... ன்னு சொல்லிக்கிட்டு தின்னுக்கிட்டு இருக்க முடியுமா?

இருந்த நெலத்தையும் ஆறு மேஞ்சுட்டு போயிடுச்சு. ஆறு இல்லாம, ஊரு இல்லாம, ஆளுவ இல்லாம, வூடு இல்லெ. வூடுவ இல்லாம ஊரு இல்லெ. ஊர இல்லாமெ ஒலகம் இல்லடா. தெரிஞ்சது தான்டா மருத. ஆத்தோட கோவிச்சுகிட்டு என்னா பண்ண" என்றபடி மறுபடியும் கரமுண்டாரு வூட்டு உள்பக்கம் திரும்பி கத்தினான் தெலகராஜு, "யாரங்க எல்லாத்தையும் பொறப்புடச் சொல்லு. ஒருத்தியும் வூட்டுக்குள்ள இருக்கப்புடாது. ஏய் மாயி, பதினஞ்ச நாளா உக்காந்து தின்னாச்சு. எல்லாப் பொண்டுவளையும் களத்தல எறக்கு. இனிமே வூட்டுக்குள்ள ஒக்காந்து இருக்க முடியாது. வூட்டுல ஒருத்தி இருக்கப்படாது எல்லாம் சேத்துல எறங்கணும். பத்தே நாள்ல கரம்பையா சாவியா போன நெலமெல்லாம் சாகுபடிக்கு ஏத்தாப்போல வரப்பு புடிச்சு மேடு ஏத்தணும்" என்று கண்டபடி இறைந்தான் தெலகராஜு. எல்லாம் சாகக் கொடுத்துவிட்ட கரமுண்டாரு குடிப்பெண்கள் ஒவ்வொருவராக யாரும் குரலெடுத்து கூப்பிடும் முன்பாகவே சந்தோஷமாகவும், அமைதியாகவும், வெள்ளம் உருக்குலைந்த அஞ்சினி மண்ணில் இறங்கி ஓடினார்கள். வேலைக்குப் போகும் அந்தக் காட்சியைப் பார்த்து திண்ணையில் நின்று வயிறு எரிந்தது தொரச்சியப்பாயி. குழி விழுந்த அந்த கண்களில் தீ.

எதைப்பற்றியும் கவலைப்படாது திண்ணையில் உட்கார்ந்தபடி தோசையை முடித்து கைகழுவி விட்டு எழுந்து நின்றான் தெலகராஜு. கூட்டம் கூட்டமாக சேற்றில் இறங்கி, திக்கற்று நடந்து போகும் அந்த அமங்கலிப் பெண்களைப் பார்த்து, மனதுருகிப் போனான் தெலகராஜு. இப்படி அப்படி எப்படியாவது பிழைத்து விட்டால் போதும் என்ற நினைப்போடு வாழ்வது என்றால் மற்றவர்களுக்கு சுலபம்தான். ஆனால் இந்தக் கரமுண்டாரு குடிப்பெண்கள் அவனைப் போலவே இந்தக் காலத்திலும் குடி பைத்தியங்கள். வாழ்க்கையில் வேறு எப்படியும் அவர்கள் வாழத் தயாராய் இல்லை. வாழ முடியாது. இத்தனை நாசங்களுக்கும் இடையில் கரமுண்டாரு வூட்டில் இத்தனைக்கும் நடுவில் பெண்கள் சிரிக்கிறார்கள். குழந்தைகளைத் தூக்கிக் கொஞ்சுகிறார்கள். கரமுண்டார் குடி அடியோடு பெயர்ந்து போன நேரத்திலும் இவனோடு நின்றார்கள். இனிமேல் மண்ணில் விழும் வரையிலும் இந்த ஒரம் எல்லாம் இந்த வூட்டுக்குத்தான் இந்த மரமெல்லாம் இந்த மண்ணில் பூக்கத்தான். இடி விழுந்தாலும் மறுபடியும் துளிர்க்கத்தான் என்று நினைத்தபோதே அவன் கண்கள் சிவந்து கலங்கின. பின்னாலிருந்து அவனை முதுகிலும்,

தோள்களிலும், கைகளிலும் ஆக மெல்லிய உயிருள்ள கரங்கள் நான்கு ஸ்பரிசிக்கவும் அந்தக் கரங்களின் சொந்தக்காரிகள் ஆன ரங்கமும், விஜயமும் அந்த கரங்களாலேயே பேசினார்கள். அவன் என்ன நினைக்கிறான் என்று 'சுளீர்' என்று புரிந்து கொள்ளும் கரங்கள் அவை. கண்ணுக்கெட்டிய தூரம் வரை தென்னை மரங்களும், புளியமரங்களும் வேருடன் சாய்ந்து கிடக்கும் தோப்புகளையும், மேடிட்டு கிடக்கும் வயல்களையும், அறுப்புண்டு கிடக்கும் பாதைகளையும் சரி செய்ய போகும் முனைப்பு ரத்தத்தை வேர்வையாகக் கேட்டது. கைலியை மடித்துக் கட்டியபடி வெற்றுடம்பாய் தோளில் துண்டை வீசியபடி மண்ணில் இறங்கி நடந்தான் தெலகராஜு. அவன் எதிர்பார்க்கவே இல்லை அவனை ஒட்டினாற்போலவே நடந்து வந்த விஜயம் எப்போதும்போலவே இப்போதும் ஆச்சரியத்தில் ஆழ்த்தினாள். 'வராதே போடீ' என்று சொல்ல அவனால் முடியவில்லை. ரங்கம் வூட்டோடு நின்று போனாள். விஜயம் அவனுடன் நடந்தாள். முழங்கால் அளவு சேற்றிலும் உலையிலும் அவளும் நடந்தாள். வெகுதூரம் நடந்தபின் திரும்பி நின்று கரமுண்டாரு வூட்டை ஒருமுறை பார்த்தான் தெலகராஜு. கரமுண்டார் வூடு விழவில்லை. எப்போதும் போலவும் அது இல்லை. பின் இடிந்து முன்பகுதி தூக்கலாக ஏராளமான கான்கிரீட் தூண்களும், பெல்ட்டுகளுமாக ஒரு புதிய கட்டடம் நிர்மாணம் ஆவதுபோல் அற்புதமான இந்த காலை வேளையில் சூரிய வெளிச்சக் கோணத்தில் அருமையான காட்சியாக இருந்தது. ஆறு உள்ளடங்கி ஓட ஆரம்பித்திருந்தது. அணைகளில் சுத்தமாக அடைந்திருந்தும் ஆற்றில் பரிசல்கள் இறக்க நேரம் பார்த்துக் கொண்டிருந்தனர். கனவுபோல் மயக்கிய வாழ்க்கை மண்ணில் வந்துவிட்டது புரிந்தது தெலகராஜுவுக்கு. தூரத்தில் பள்ளர்கள் தங்கள் குடி மேட்டை வயல் நடுவே மீட்டு எடுத்துக் கொண்டிருந்தனர். இவனைக் கண்டதும் "ஆண்டெ, வாங்க ஆண்டெ, நம்பக் குடிக்கி வந்துட்டு போங்க ஆண்டெ" என்றனர். முழங்கால் சேறும், சேறு மேலேறிய பாவாடையுமாய் வரிந்து சுற்றிய அரக்கு நிற புடவையுமாய் கூடவே வந்தாள் விஜயம். பள்ளம் கண்ட இடமெல்லாம் கையில் இருந்த மண் வெட்டியால் வெட்டி நிரப்பி, பாதையின் கறுக்குகளை சரி செய்தபடியே நடந்தான் தெலகராஜு. கூடவே கையில் இருந்த மண்வெட்டியால் வெட்டிவிட்டுக் கொண்டும், கொத்தி விட்டுக்கொண்டும் அவன் பாதையோடு நடந்தாள் விஜயமும். அறுப்புண்டு போன வயல்களில் வெகுநேரம் இறங்கி பள்ளங்களை நிரப்பி, மேடுகளை கலைத்து

வேலை செய்து கொண்டிருந்தான் தெலகராஜு. கூடவே நின்று கொண்டு அவனுடன் வாய் தோறாமல் தொணதொணத்துக் கொண்டே வியர்வை காடாய் வழிய, அவளும் வேலை செய்தாள். வெகுநேரம் வேலை செய்த பின்னும் யாரும் கரையேறவில்லை. கரையேறமாட்டார்கள் போல இருந்தது. சாரிசாரியாக அந்த ஊர் ஜனங்கள் ஒவ்வொரு பள்ளத்திலும், மேட்டிலும் யாராவது ஓர் ஆணோ அல்லது பெண்ணோ நின்று கெண்டு வெட்டிக் கொண்டிருந்தார்கள். எங்கு பார்த்தாலும் ஊறிய மண்ணின் வாடை, தண்ணீரின் கவுச்சி, மீனின் நாற்றம், தேங்கிய நீரில் ஒரு வயலில் மூலையில் சேற்றில் சலசலப்பு கேட்டது.

"மாமா இஞ்ச பாருங்களேன்" என்று கத்தினாள் விஜயம். வேர்த்து, விருவிருத்து, நனைந்து, தனி மெருகோடு வெயிலின் மினுமினுப்பில் அற்புதமான அழகாய் இருந்தாள் அவள். அவள் மேல் திடீர் என்று அதுவரை இல்லாத ஒரு மோகம் பிறந்தது அவனுக்கு. ஆனாலும் அவள் அழகை ருசித்தபடியே "என்னது?" என்றான்.

"இந்த பள்ளத்துல கெடக்குற தண்ணீல சேத்துக்குள்ள ரெண்டு மீனு இருக்கும் போல இருக்கு. எறச்சா புடிக்கலாம் குறைவையாத்தான் இருக்கும்" என்றாள் அவள். இருவருமாக மேட்டில் நீரை கைகளால் வாரி இறைத்தனர். நீர் முழுவதும் இறைந்த பின் சேற்றில் பெரிய மீனின் இரண்டு முதுகுகள் தென்பட்டன. இப்போது சேற்றையும் மண்வெட்டியால் மீனோடு சேர்த்து புல் சரிவில் வீசினான் தெலகராஜு. பச்சை புல்கள் இடையே பெரிய கரிய மூன்று விறால் மீன்கள் விழுந்து நெளிந்தன. பக்கத்தில் இருந்த தென்னங்கீற்றை ஒடித்து ஒரு சிறகு பின்னினான் தெலகராஜு. நான்கே பச்சை இலை கீற்றுகளால் பின்னிய அந்த சிறகு கூடையில் அந்த மூன்று மீன்களையும் கைகளால் எடுத்துப் போட்டாள் விஜயம். இருவரும் நிமிர்ந்தபோது இருவரும் வியர்வையில் குளித்திருந்தார்கள். ஆயாசத்துடனும், பெருமூச்சுடனும் சுற்றும் முற்றும் பார்த்தபோது மாலையாகி இருந்தது தெரிந்தது. நாணல் புதரோடயே நடந்து இருவரும் மேடேறியபோது, பரிசல்கள் நிறைய ஆட்கள், ஊரை நோக்கி ஆற்றில் வந்து கொண்டிருப்பது தெரிந்தது. இருவருமாக கைகளை பிடித்தபடி மேடேறியபோது அதற்கு அடுத்த மேட்டில் குடிசை ஒன்றைக் கட்டுவதில் தீவிரமாக மூழ்கியிருந்த மாஞ்சியையும் அவள் அப்பனையும், ஆயியையும் பார்த்தனர். குடிசையில் மேலே புதிதாக அவசர அவசரமாக வேயப்பட்ட புதிய கீற்றுகள்

துருத்திக்கொண்டு நின்றன. மேலேயிருந்து கீழிறங்கி வந்த மாஞ்சி "வாங்க மச்சான், வா ஆயி நம்ப ஊடெல்லாம் போச்சு, போனா என்ன? போனது எல்லாம் போவட்டும், திலும்பி கட்டியுடுவோம். இதோ பாருங்க காலையில இருந்து நானும் எங்க அப்பனுமா மண்ணு வெச்சோம். எங்க ஆயியும் ஆயியோட அண்ணனும் கீத்து கொண்ணாந்து மொடஞ்சாங்க. ராத்திரிக்கி படுத்துடலாம். திண்ணையில குந்துங்க, நான் போயி டீ வாங்கியாரவா?"

"டீயா ஏது கடை? எங்க வாங்குவ?" என்றாள் விஜயம். "ரோட்டு மேல புது மலயாளத்தான் ஒருத்தன் காலையில இருந்து கடைபோட்டு இருக்கான். வாங்கியாரட்டா?" என்றாள். தெலகராஜுவை ஓரக் கண்ணால் பார்த்து, தெலகராஜு பதில் ஏதும் சொல்லாமலேயே எப்போதும் அவனுக்கு வெறி தருகிற அந்தக் குழந்தையை பாயிலிருந்து அள்ளி, நெஞ்சோடு அணைத்துக் கொண்டு பால் மணம் ஊறும் அந்தக் குழந்தையின் உதடுகளை தன் உதடுகளால் அகட்டி தன் இதழ்களால் 'மொச் மொச்' என்று முத்தம் கொடுத்தான். அதை பார்த்த விஜயம், ஒருவித அருவருப்புடன் ஆனால் அதே நேரத்தில் தனது அனுபவங்களின் திளைப்பில் தெலகராஜுவின் உதடுகளை கூர்ந்து பார்த்தபடி சிரித்துக் கொண்டாள்.

"போகலாமா?"

"போகலாமே, நேரமாச்சு வர்றோம் மாஞ்சி"

வரப்பில் இறங்கி நடந்தார்கள் இருவரும். வயல்களில் வேலை பார்த்து வியர்வையில் ஊறிப்போய் சேறும் சகதியுமான கால்களுடன் களைத்த கரமுண்டார் வூட்டுப் பெண்கள், கண்ணுக்கு எட்டிய தூரம்வரை வயல்களில் வரப்பு பிடித்து நீண்ட ஆண்களுடன், பள்ளர்களுடனும் ஒன்றாக கரை ஏறி நடந்தார்கள். கூடவே எல்லாரும் ஒன்றாகிவிட்ட இன்றைய சமூகத்தில் தாங்கள் மட்டும் தனியாகிப் போகாத தெளிவுடன் நடந்தனர். தூரத்தில் அவர்களுடன் வந்து கலந்து கொள்ள போகிற தெலகராஜுவை, வரம்பற்ற இந்த உலகத்தின் போக்கை தீவிரப்படுத்த, வரப்புகட்டி விவசாயம் செய்யும் அவனைப் பரிவோடும், களைப்போடும் பார்த்தனர். தெற்கில் வெகுதூரம் படர்ந்து கிடந்த மாலை வெயிலின் மஞ்சள் கிரகணங்கள் வெள்ளத்தால் சிதைந்து போன அஞ்சினியை எல்லாப் பகுதிகளையும் அணைத்து படர்ந்தது போல் இருந்தது. தூரத்தில் இன்னும் விழுந்துவிடாமல், அவர்களுக்காகவே காத்திருந்த கூடுபோல், சூரிய ஒளியில்

புதிதாய் கட்டப்படும் புதிய நம்பிக்கையான ஆலை போல், தன் கான்கிரீட் கம்பங்களை நீட்டி நிமிர்த்தி நின்றபடி எழும்பி சுற்றிலும் கான்கிரீட் பெல்ட்டுகளாலும் இறுக காத்து நிற்கும் புதிய கரமுண்டார் வூடு அவர்களை என்றும் போல் பரிவுடன் எதிர்பார்த்து நின்றது.

அவர்களுடன் வந்து சேர்ந்து கொண்ட தெலகராஜு அவர்கள் ஒவ்வொருத்தியின் பேரையும் சொல்லி கூப்பிட்டு குசலம் விசாரித்தபடி விஜயத்துடனும், அவர்களுடனும் கொஞ்சியபடி இந்த ஊளை சேற்றில் காலூன்றியபடி அவர்களையும் கடத்திவிட்டு, கொண்டிருந்தான். தூரத்தில் எப்போதும் நிற்கும் இலட்சியம் போல என்றைக்கும் புதிதாகவும், தொன்மையுடன் அந்த பழைய கரமுண்டார் வூடு பெருமிதத்துடன் நின்று கொண்டிருந்தது.

* * *

மின்னூலாக்கம்
முரளிதரன்



ஆண் வாரிசே இல்லாமல் பெண் குழந்தைகளாகவே பிறந்து கொண்டிருந்த கரமுண்டார் வூட்டில் பெரிய கரமுண்டாருக்குப் பிறந்த காத்தாயம்பாள்தான் இந்த நாவலின் பிரதான பாத்திரம். நாவலை விவரிப்பதும் அவள்தான். அதுவும் நேரடியாக அல்ல. நாமேதான் புரிந்து கொள்ள வேண்டும். கிட்டத்தட்ட ப்ரகாஷே காத்தாயம்பாளாக மாறித்தான் கதை சொல்கிறார். சுமார் 300 பக்க நாவலில் காத்தாயம்பாவும் உமா மஹேஸ்வரியும், காத்தாயம்பாவும் செல்லியும் இணைகின்ற அந்தப் பெண்களின் தேகங்கள் சங்கமித்துப் பிரளயம் புரள்கின்ற பக்கங்கள் ஏராளம், ஏராளம். இந்தப் பூமியில் பிறந்த அத்தனை பெண்ணும் படிக்க வேண்டிய ஒரு நாவல் கரமுண்டார் வூடு.

பெண்ணின் தேகமும் அதன் தாபமும் மொழி வழியே இத்தனை உக்கிரமாக வெளிப்படுவதை பெண்களின் எழுத்தில் கூட இதுவரை நான் வாசித்ததில்லை.

ப்ரகாஷே சொல்கிறார்: "கரமுண்டார் வூடு நாவலை நான் எழுதியபோது என் அருகே இருந்து ஒவ்வொரு அத்தியாயமாக நான் எழுத எழுத வியப்புடனும், பயத்துடனும் அவைகளையும் என்னையும் படித்துக் கண்ணீர் விட்டுக் கலைத்து என்னுடன் கூடவே எழுத்தில் பங்கு காட்டிய என் தாயார் இன்று இல்லை. நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் கரமுண்டார் கோட்டை என்ற எனது பூர்விக கிராமத்தை விட்டு ஓடி வந்த எனது தந்தையாரின் தந்தை பற்றி என் பாட்டியும், பூட்டியும் சொல்லி அழுத ஓலங்கள் இன்றும் எனக்குள் இருந்தாலும் இவைகளுக்கு சாட்சியாய் இருந்து கதை காவியமாய் சொன்ன எனது அப்பாயிகள் சமாதானத்தம்மாள், துரச்சியம்மாள், மங்களத்தம்மாள் ஆகிய கிடைத்தற்கரிய மனுஷிகள் இன்று இல்லை"

ஆக, இதை எழுதியது ஒரு ஆணாக இருந்தாலும் அந்த ஆணிடம் இந்தக் கதைகளைச் சொன்னது எத்தனையோ ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மூன்று கிழவிகள்தான். அவர்கள்தான் ப்ரகாஷின் அப்பாயிகள். அதனால்தான் சொல்கிறேன், இதை ஒவ்வொரு பெண்ணும் படித்தே ஆக வேண்டும் என்று.

**- சாரு நிவேதிதா**



₹ 300




ISBN 978-93-84301-83-5
9 789384 301835

www.discoverybookpalace.com